# பாவலர்மணி ஆ.பழநியின் காப்பியப் புனைதிறன்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph,D.,) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**பா.ஸ்ரீவித்யாபாரதி**

(பதிவு எண்: 0353)

நெறியாளர்

பேராசிரியர். **சே.செந்தமிழ்ப்பாவை**






தமிழ்ப்பண்பாட்டு மையம்

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+ (CGPA: 3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள
மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது.)

காரைக்குடி – 630 003.
தமிழ்நாடு – இந்தியா

**செப்டம்பர் - 2019**

**முனைவர் சே. செந்தமிழ்ப்பாவை** எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்., பிஎச்.டி.,
பேராசிரியர் & இயக்குநர்
தமிழ்ப்பண்பாட்டுமையம்
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003.

நாள்:

## நெறியாளர் சான்றிதழ்

**"பாவலர்மணி ஆ.பழநியின் காப்பியப் புனைதிறன்"** என்னும் தலைப்பில் **பா.ஸ்ரீவித்யாபாரதி** அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டுமையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு வழங்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

(சே. செந்தமிழ்ப்பாவை)
நெறியாளர்

**பா.ஸ்ரீவித்யாபாரதி** எம்.ஏ.,பி.எட்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்ப்பண்பாட்டுமையம்
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003.

நாள்:

## ஆய்வாளர் உறுதிமொழி

**"பாவலர்மணி ஆ.பழநியின் காப்பியப் புனைதிறன்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வேடு, எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

(பா.ஸ்ரீவித்யாபாரதி)
ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் சே. செந்தமிழ்ப்பாவை** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,
பேராசிரியர் & இயக்குநர்
தமிழ்ப்பண்பாட்டுமையம்
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003.

## நன்றியுரை

"பாவலர்மணி ஆ. பழநியின் காப்பியப் புனைதிறன்" எனும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த அழகப்பா பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் மற்றும் பதிவாளர் ஆகியோருக்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேடு செம்மையாக அமைவதற்குத் தன்னலம்பாராது தாயுள்ளத்துடன் முயன்று என்னை நெறிப்படுத்திய ஆய்வு நெறியாளர் பேராசிரியர் **சே. செந்தமிழ்ப்பாவை** அம்மா அவர்களுக்கு எனது நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு தொடர்பாக நூல்கள் கொடுத்துதவிய தொலைதூரக் கல்வி இயக்க இயக்குநர் பேரா. சு. இராசாராம் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமது நூல்களை ஆய்வு செய்வதற்கு அனுமதி நல்கியதோடு நேர்காணலும் நல்கி உதவிய பாவலர்மணி ஆ.பழநி அய்யா அவர்களுக்கும் எனது பணிவான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வு செம்மையாக அமைவதற்கு ஊக்கமளித்து உதவிய எனது கல்லூரியின் தலைவர் திரு.பெரி.பெரியகருப்பன் அவர்களுக்கும், செயலர் திரு.பெரி.வீரப்பன் அவர்களுக்கும் கல்லூரி முதல்வர் முனைவர் சே.கணேசன் அவர்களுக்கும் இருபால் பேராசிரியர்களுக்கும் நூலகருக்கும் என் நன்றி உரியது.

ஆய்வின் தொடக்கம் முதல் இறுதி வரை உடனிருந்து உதவிய எனது கணவர் திரு.க.ஆனந்தகிருஷ்ணகுமார் அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்காக நூல்கள் தந்துதவிய அழகப்பா பல்கலைக்கழக நூலகத்தார்க்கும் பல்கலைக்கழக அலுவலர்களுக்கும் என்னை ஊக்கப்படுத்திய எனது தாய், தந்தையருக்கும் குடும்பத்தாருக்கும் எனது நன்றி என்றென்றும் உரியது.

இவ்வாய்வேட்டினைச் செம்மையாக அச்சிட்டுத் தந்த காரைக்குடி ஆர்எம்கேவி மற்றும் பூச்சரம் கணினி நிறுவனத்திற்கும் எனது நன்றி உரித்தாகும்.

மேலும் இவ்வாய்வேடு செம்மையாக வெளிவர உதவிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றியுடன்,

(பா. ஸ்ரீவித்யாபாரதி)

# பொருளடக்கம்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அன்.மக.அ.க. | - | அன்னிமகள்-அங்கம்-களம் |
| அனி.அடி.அ.க. | - | அனிச்ச அடி-அங்கம்-களம் |
| ஆ.இ. | - | ஆண்டு இல்லை |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| கா. | - | காதை |
| கார.மார்.கா. | - | காரல் மார்க்சு காப்பியம் |
| சாலி.மைந்.காண்.பட | - | சாலி மைந்தன்-காண்டம்-படலம் |
| தண்டி. | - | தண்டியலங்காரம் |
| திருக். | - | திருக்குறள் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பா. | - | பாடல் |
| புறநா. | - | புறநானூறு |

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டினை ‘இலக்கிய உலகின் மறுமலர்ச்சிக் காலம்’ என்பர். இந்த நூற்றாண்டில் உரைநடை, புதினம், நாடகம், சிறுகதை, கவிதை என்னும் பல்வேறு புதிய இலக்கிய வடிவங்கள் தோன்றி மொழிக்கு வளம் சேர்த்தன. மரபார்ந்த இலக்கிய வடிவங்களும் கவிஞர்களால் புனையப் பெற்றன. இதில் காப்பிய வடிவம் தனித்த இடம்பெறுகின்றது. அவ்வகையில் பண்டைக் கதைகளை எடுத்துக் கொண்டு காலத்திற்கேற்ற வகையில் காப்பியங்களைப் புனைந்ததில் பாவலர்மணி ஆ. பழநி அவர்களுக்கு தனித்த ஓர் இடம் உண்டு.

## ஆய்வுத் தலைப்பு

பொதுவாக ஆய்வானது படைப்பாளியையும் அவரது அறிவாகிய கருவில் உருவான படைப்பையும் சிறப்பிக்கும் விதத்தில் செய்யப்படுவதாகும். எண்ணற்ற படைப்பாளிகளுக்கான அங்கீகாரம் நூல் வடிவில் பதிவு செய்யப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. அந்த வகையில் பாவலர்மணி ஆ. பழநியின் படைப்புகளை ஆய்வு செய்யும் நோக்கில் “பாவலர்மணி ஆ. பழநியின் காப்பியப் புனைதிறன்” என்பது ஆய்வுத் தலைப்பாக அமைந்துள்ளது.

## ஆய்வு நோக்கம்

இருபதாம் நூற்றாண்டில் ஏராளமான காப்பியங்கள் தோன்றியுள்ளன. இதில் பாவலர்மணி ஆ. பழநி அவர்களின் காப்பியம் மற்றைய காப்பியங்களிலிருந்து தனித்து விளங்கும் முறையை விளக்குவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

பாவலர்மணி ஆ.பழநி அவர்களின் காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள், சாலி மைந்தன் ஆகிய நான்கு காப்பியங்கள் இவ்வாய்வின் எல்லையாகும்.

## ஆய்வு அணுகுமுறை

படைப்பாளியின் படைப்புகளைத் தொகுத்தும் பகுத்தும் விளக்கும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும் காப்பியங்களில் உள்ள மார்க்சியச் சிந்தனைகளை வெளிப்படுத்தும் நிலையில் மார்க்சிய அணுகுமுறையும் கவிஞர் தம் படைப்பாக்கச்

சிறப்புகளை விளக்கும் நிலையில் அழகியல் அணுகுமுறையும் இவ்வாய்வின் அணுகுமுறைகளாக மேற்கொள்ளப்பெற்றுள.

## சான்றாதாரங்கள்

பாவலர்மணி ஆ. பழநி அவர்களின் காப்பியப் புனைதிறன் குறித்த ஆய்வாதலால் அவர்தம் படைப்புகள் முதன்மை ஆதாரமாகவும் காப்பியங்கள் தொடர்பாக வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், கட்டுரைகள் போன்றவை துணைமை ஆதாரமாகவும் கொள்ளப்பெற்றுள.

## இயல் பாகுபாடு

பாவலர்மணி ஆ. பழநியின் காப்பியப் புனைதிறன் என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

1. காப்பியங்கள் - கதைக் கட்டமைப்பு
2. கதை மாந்தர் படைப்பு
3. காப்பிய உத்திகள்
4. மார்க்சிய, சமூகவியல் சிந்தனைகள்

என்பனவாகும்.

## இயல் ஒன்று

காப்பியங்கள் - கதைக் கட்டமைப்பு என்பது முதலாவது இயலாகும். காப்பியப் புலவன் தான் கூற வந்த கதையினை முறைப்படுத்தி நிரல்படத் தொகுத்து வழங்கும் திறமே கதைக் கட்டமைப்பு ஆகும். ஆழமான கதையை அழகுற எடுத்தியம்பும் பாங்கில்தான் படைப்பாளரின் படைப்பாளுமை புலப்படும். கதையானது கட்டமைக்கப்படும் விதத்தில்தான் வாசகர்களின் வரவேற்பைப் பெறும் இலக்கியமாக படைப்பாக மாறும். வாசகர்களின் உள்ளத்தில் உயிரோட்டம் நிறைந்த கதையாக ஓர் இலக்கியம் உருப்பெறுவதற்கு கதைக் கட்டமைப்பு தான் உயிர்நாடி ஆகும். எனவே பாவலர்மணி ஆ. பழநி அவர்கள் படைத்த நான்கு காப்பியங்களின் கதைக் கட்டமைப்பினை ஆராய்வதாக முதலாவது இயல் அமைந்துள்ளது.

## இயல் இரண்டு

கதை மாந்தர் படைப்பு என்பது இரண்டாவது இயலாகும். ஓர் இலக்கியத்தின் உயர்விற்கும் தரத்திற்கும் உரைகல்லாக அமைவது கதை மாந்தர் படைப்பாகும். படைப்பாளிகள் அன்றாட வாழ்வில் தாம் சந்தித்த அல்லது தனது நற்பண்பின் பதிவுகளாகக் கதை மாந்தர்களைத் தமது படைப்பில் உருவாக்குகின்றனர். எண்ணற்ற உயர்ந்த விழுமியங்களைப் படைப்பாளி படிப்பாளிக்குப் போதிக்கப் பயன்படும் சாளரமாக இது பயன்படுகிறது. கதை மாந்தர்களின் தோற்றம், வளர்ச்சி, போராட்டம், வெற்றி அல்லது வீழ்ச்சி ஆகிய இவையே காப்பியமாக உருக்கொள்கின்றது. அந்த வகையில் தலைமைக் கதை மாந்தர், எதிர்த் தலைமைக் கதை மாந்தர், துணைமைக் கதை மாந்தர் ஆகிய மூன்று வகைப்பாடுகளின் அடிப்படையில் பாவலர்மணியின் படைப்பில் உள்ள கதை மாந்தர்களை ஆராயும் விதமாக இரண்டாவது இயல் அமைந்துள்ளது.

## இயல் மூன்று

காப்பிய உத்திகள் என்பது மூன்றாவது இயலாகும். கவிஞர் வாசகர்களின் மனதினைத் தூண்டிலிட்டு இழுப்பதற்குப் பயன்படும் கலையே உத்தியாகும். இலக்கியம் தன்னைச் சுவைக்கும் வாசகனுக்கு இன்பத்தை நல்க உத்தி பயன்படுகிறது. வாசகனுக்கு ஏற்படும் சலிப்பினையும் களைப்பினையும் போக்க உறுதுணை புரிகின்றது. சமூகத்தின் மீது ஈடுபாடு கொண்டு படைப்பாளி உரைக்கும் செய்திகள் எளிதாக வாசகர்களின் உள்ளத்தைச் சென்று சேர்வதற்கு உத்தி சிறந்த கருவியாகும். அவ்வகையில் பாவலர்மணி அவர்கள் கையாண்டுள்ள குறிப்பு மொழி, ஒலி நயம், சொற்கள் அமைப்பு முறை, கற்பனையாற்றலை மிகுவிக்கும் வண்ணம் முன்னைய நிகழ்ச்சிகளைச் சான்று காட்டுதல், சொற்றொடர்களை மாற்றியமைத்தல் போன்ற காப்பிய உத்திகளை ஆராயும் விதமாக மூன்றாவது இயல் அமைந்துள்ளது.

## இயல் நான்கு

மார்க்சிய, சமூகவியல் சிந்தனைகள் என்பது நான்காவது இயலாகும். காரல் மார்க்சு சமுதாயத்தை வேறு புதிய கோணத்தில் கண்டு அதன் அவலங்களையும் சீர்கேடுகளையும் உற்றுநோக்கி அதற்குச் சிறந்த தீர்வினை வழங்கிய மாமனிதர் ஆவார். அத்தகைய மாமனிதரின் வாழ்வைச் சித்திரமாக வடிக்கும் பொழுது அவர் மொழிந்த சீர்மிகு கருத்துகளையும் இயம்ப வேண்டியது படைப்பாசிரியரின் தலையாய கடமை ஆகும். மேலும் படைப்பாளி என்பவன் சமூகத்தைத் தனது

படைப்பில் வடித்து அதன் மூலம் புதுமையான சமூகத்தைப் படைக்கும் சிற்பி ஆவான். சமூகத்தில் உள்ள இருண்ட பகுதிகளை வாசகர்களுக்கு அறிமுகம் செய்து அச்சிக்கல்களுக்குத் தீர்வு காணும் பெரிய பொறுப்பு கவிஞனுக்கு உரியது. அந்த வகையில் ஆ. பழநி அவர்கள் தமது காப்பியங்களில் வெளிப்படுத்தியுள்ள மார்க்சிய, சமூகவியல் சிந்தனைகளை ஆராயும்விதமாக நான்காவது இயல் அமைந்துள்ளது.

இதனைத் தொடர்ந்து ஆய்வில் கண்ட முடிவுகள் முடிவுரையில் இடம்பெற்றுள்ளன. இதையடுத்து துணைநூற்பட்டியலும், பின்னிணைப்பும் இடம்பெற்றுள.

## இயல்-1
## காப்பியங்கள் - கதைக் கட்டமைப்பு

காப்பியப் புலவன் தான் கூற வந்த கருத்துகளை நிரல்படத் தொகுத்து, முறைப்படுத்தி வழங்கும் திறமே கதைக் கட்டமைப்பு. ஒரு காப்பியத்தின் சீவநாடி இதுவே. அவ்வகையில் ஆ.பழநியின் காப்பியங்களின் கதைக்கட்டமைப்பு அமைந்திருக்கும் முறை குறித்துக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### காப்பிய இலக்கணம்

தண்டியலங்காரம் என்னும் இலக்கண நூல் பெருங்காப்பியங்களின் அமைப்புக் குறித்து,

**“பெருங்காப்பியநிலை பேசுங் காலை**
**வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றினொன்று**
**ஏற்புடைத் தாகி முன்வர இயன்று**
**நாற்பொருள் பயக்கு நடைநெறித் தாகி**
**தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்**
**மலைகடல் நாடு வளநகர் பருவம்**
**.......................................................................**
**கற்றோர் புனையும் பெற்றிய தென்ப”**[1]

என்றுரைக்கின்றது. இவ்விலக்கணப்படி,

வாழ்த்து, தெய்வ வணக்கம், வரும்பொருள் கூறல் ஆகியவற்றுள், ஒன்றோ, பலவோ காப்பியத்தின் தொடக்கத்தில் இடம்பெறல் வேண்டும். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் காப்பியம் பயத்தல் வேண்டும். தனக்கு ஒப்பாரும், மிக்காரும் இல்லாத தலைவனைக் கொண்டிருத்தல் வேண்டும். மலை, கடல், நாடு, நகர், பருவம், கதிரவன் தோற்றம், திங்களின் தோற்றம் போன்றவற்றின் வருணனைகள் இடம்பெறல் வேண்டும். மணம் புரிதல், முடி சூடுதல், பொழில் விளையாட்டு, புனல் விளையாட்டு, மதுவுண்டு களித்தல், சிறுவரைப் பெறுதல், ஊடலில் முனிதல், கூடலால் களித்தல் முதலியவற்றைப் புனைந்துரைக்கும் நன்னடை அமைதல் வேண்டும். அமைச்சருடன் ஆய்தல், தூது விடுதல், பயணம், போர் செய்தல், வெற்றி எய்தல் முதலியன நாடகத்தில் அமைவன போல் நன்கு வளர்ந்து முற்றுதல் வேண்டும். சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் முதலிய பாகுபாடுகளுடன் விளங்கல் வேண்டும். கற்போர் விரும்புமாறு; நகை, அழுகை முதலான எண்வகைச் சுவையுணர்வும், மெய்ப்பாட்டுக் குறிப்பும் புனைந்துரைக்கப்பட

வேண்டும். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பொருளில் ஒன்றோ பலவோ குறைந்து வருவது காப்பியம் ஆகும்.[2]

## கதைச் சுருக்கம்

## காரல் மார்க்சு

செருமனி நாட்டின் மேற்கு எல்லையும் பிரான்சும் சேரும் இடத்தில் அமைந்துள்ள திரியர் என்ற நகரில் காரல் மார்க்சு 1818 ஆம் ஆண்டு மே மாதம் ஐந்தாம் நாள் பிறந்தார். இவர் தம் பெற்றோர் என்ரிகு மற்றும் என்ரிட்டே ஆவர். என்ரிகு சமனியத்தில் (கம்யூனிசம்) அதிக ஈடுபாடு கொண்டிருந்தார். இதன் விளைவாக காரல் மார்க்சிற்குத் தந்தையிடம் இருந்த நெருக்கம் தாயிடம் இருந்ததில்லை. படிப்பினைப் பொறுத்தவரை காரல் மார்க்சு ஒருநாளும் முதல்வனாக இருந்ததில்லை. ஆனால் துடிப்பாக விடையளிப்பதிலும் கவிதை நூறு வடிப்பதிலும் வல்லவனாகத் திகழ்ந்தார்.

காரல் மார்க்சு சற்றுப் பெரியவனாக வளர்ந்ததும் தமது குடும்ப நண்பரான வெட்பாலன் மகள் சென்னி மீது காதல் கொண்டார். பின்னர் மேற்படிப்பிற்காக செர்மனியின் பான்நகர் பல்கலைக்கழகத்திற்குச் சென்றார். அங்கு ஹெகல் என்னும் அறிஞர் மிகப் பெரும் தத்துவஞானியாக விளங்கினார். இவர் பெர்லின் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றினார். செர்மனியின் பண்டைய தத்துவங்கள் அனைத்தையும் ஆய்வு செய்து எல்லாமே மாறுதலுக்குட்பட்டவை என்பதை எகல் விளக்கியிருந்தார். காரல் மார்க்சும் இதன் மீது ஈர்ப்புக் கொண்டு எகலியவாதியாக மாறினார். காதலுக்கும், எகலியர் தத்துவத்திற்கும் இடையில் சிக்கித் தவித்த காரல் மார்க்சு படிப்பில் வெற்றி காண இயலவில்லை. தந்தையின் மரணம் ஏற்படுத்திய தாக்கம் காரல் மார்க்சை தத்துவத்தில் முனைவர் பட்டம் பெற வைத்தது. ஒரு சமூகத்தில் மாபெரும் புரட்சியை ஏற்படுத்தும் வலிமை பேனா முனைக்கு மட்டுமே உண்டு என்பதை உணர்ந்த காரல் மார்க்சு பத்திரிகைத் துறையினைத் தேர்ந்தெடுத்தார். இதற்கிடையில் தாயிடம் ஏற்பட்ட கருத்து வேற்றுமையால் வீட்டை விட்டு வெளியேறினார். பின்னர் இருமனம் ஒன்றிய திருமணமாய்ச் சென்னியை மணந்தார். ரைன்லாந்து கெசட், செர்மன் பிரெஞ்சு மலர் போன்ற இதழ்களின் ஆசிரியராகவும் முன்னேற்றம், திரிபூன் போன்ற இதழ்களில் கட்டுரை எழுதுபவராகவும் விளங்கினார்.

வீறுகொண்ட இவரது எழுத்து கேடு செய்பவரை நடுக்கமுறச் செய்தது. இதன் விளைவாகச் செருமனி, பாரிசு, பெல்சியம் எனப் பல்வேறு நாடுகளுக்கு காரல் மார்க்சும், சென்னியும் பந்தாடப்பட்டனர். இறுதியில் இலண்டன் மாநகரம்

அவர்களுக்கு ஆதரவுக் கரம் நீட்டியது. வறுமையின் கோரத் தாண்டவமும் தொற்று நோய்களும் காரல் மார்க்சின் மூன்று குழந்தைகளைத் தனது கொடூரப் பசிக்கு இரையாக்கிக் கொண்டது. அதனைத் தொடர்ந்து அன்பு மகன் எட்காரும் மாண்டான். நீதி வேண்டுவோர் சங்கம், சகோதர சனநாயகச் சங்கம், அனைத்துலகத் தொழிலாளர் சங்கம் எனப் பல்வேறு சங்கங்களுடன் காரல் மார்க்சிற்குப் புத்துறவு ஏற்பட்டது. சங்கங்களின் தோற்றமும் எழுச்சியும் பாரிசில் புரட்சியை வெடிக்கச் செய்தது.

ஆயிரக்கணக்கான நூற்கடலில் மூழ்கித் திளைத்து 'மூலதனம்' என்னும் முகத்தினை காரல் மார்க்சு உலகிற்கு அளித்தார். ஏங்கல்சிடம் அவர் கொண்ட ஆழமான நட்பு அவரது வறுமையைச் சற்று அகலச் செய்தது. ஆனாலும் அன்பு மனைவி சென்னியின் மரணம் அவரை நிலைகுலையச் செய்தது. காரல் மார்க்சு என்னும் பொதுவுடைமைப் பகலவன் 1883ஆம் ஆண்டு மார்ச் 14 அன்று இம்மண்ணை விட்டு மறைந்தான்.

## அனிச்ச அடி

சேரநாட்டுப் படைத் தலைவன் ஆய் எயினன் என்பவன் தன் மகள் சுரும்பார் குழலியை தமது படையின் துணைத் தலைவன் அருளாழிக்கு மணமுடித்து வைத்தான். சுரும்பார் குழலி கருத்தரித்து இருப்பதையறிந்து எயினனும் அவன் மனைவி அணிவளையும் மகிழ்ந்திருக்கும் வேளையில், அங்கு வந்த அருளாழியும், சுரும்பார் குழலியும் துளுநாட்டு மன்னன் நன்னன் பிறந்தநாள் விழாவைக் காண நறவுப்பட்டினம் செல்ல விழைவதாகக் கூறினர். அதைக் கேட்ட எயினன் துளுநாட்டுப் படைத் தலைவன் மிஞிலி தன் மகளை மணமுடிக்க வேட்டுப் போர் தொடுத்ததையும் அதில் எயினன் தனது அருந்தவமைந்தனை இழந்ததையும், பின்னர் மிஞிலி தோற்றோடியதையும் எடுத்துக் கூறியதுடன் மிஞ்லி மாறாச் சினமுடையவன்; ஆதலால் செல்ல வேண்டாம் என்று தடுக்கின்றான். குழலி விழாவைக் காண்பதற்கு வற்புறுத்த அங்கு வந்த பரணர் வயிறு வாய்த்த நிலையில் பெண்ணின் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுமெனவும், மோசிக் கீரனாருக்குத் தான் கடிதம் தருவதாகவும் கூறினார். அதற்கு உடன்பட்ட எயினன் துளுநாட்டில் தங்களை இன்னார் எனக் காட்டிக் கொள்ளக் கூடாது, வாய்மை பேசுதல் தகாது என்ற நிபந்தனைகளுடன் அவர்களை அனுப்பி வைத்தான்.

நறவுப்பட்டினத்தில் பல காட்சிகளைக் கண்டு மகிழ்ந்த அருளாழியும் சுரும்பார் குழலியும் இரவில் இல்லத்திற்கு மீள்கின்றனர். மறுநாள் காலைப் பொழுதில் குழலி சில பெண்களுடன் சேரந்து நீராடச் செல்கின்றாள். அப்பொழுது இயற்கை அழகில் ஈடுபட்ட பெண்கள் மலை, ஆறு, செங்கோல் ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடிப் பின்னர் நீராடச் செல்கின்றனர். அப்பொழுது சுரும்பார் குழலி அயலில் உள்ள மாந்தோப்பில் கட்டுக்காவல் மிகுந்திருப்பது குறித்து வினவ,

அப்பெண்கள் அந்த மாந்தோப்பு அரசனுக்குரியது என்றும், அதன் மாங்காய் நிலத்தில் கிடந்தாலும், நீரில் மிதந்து வந்தாலும் அதனை உண்ணக் கூடாது என்றும், அத்தவறினை இழைத்தால் அதற்குரிய தண்டனை மரண தண்டனை என்றும் கூறுகின்றனர். பின்னர் நீராடுகின்றனர். அப்பொழுது ஒரு மாங்காய் குழலியின் கையில் அகப்பட பிறரறியாமல் உண்டால் துன்பம் வராது என்று கூறி உண்ண முற்படுகின்றாள். அப்பொழுது ஒரு பெண் உண்ணாதே என்று உரக்கக் கூவ மற்ற பெண்களும் உண்ணாதே என்று உரக்கக் கூவினர். அப்பொழுது அங்கு வந்த காவலர்கள் சுரும்பார் குழலியை அரண்மனைக்கு அழைத்துச் சென்றனர்.

நன்னன் திருவோலகத்தில் குற்றம் தொடர்பாக குழலியை வினவுகின்றான். அப்பொழுது அவள் உண்மையை ஒப்புக் கொண்டு தான் யார் என்பதைக் கூற மறுத்து விடுகின்றாள். சுரும்பார் குழலி யார் என்பதை அறிந்து கொண்ட மிஞிலி அவளுக்கெதிராக சூழ்ச்சி செய்து நன்னனை ‘கொலைத் தண்டம்’ விதிக்கச் செய்கின்றான்.

சுரும்பார் குழலியை இழந்த அருளாழி அவளை எரித்த புறங்காட்டில் நின்று புலம்புகின்றான். அப்பொழுது அங்கு வந்த கணியன் கீரன் அவனுக்கு ஆறுதல் கூறுகின்றார். அப்பொழுது அருளாழி மாமரத்தை அடியோடு அழிக்காது அந்நாட்டை விட்டு அகலமாட்டேன் என்றும், மிஞிலியைக் கொன்று அவனது எலும்பைக் குழலியின் ஈமத்தில் தூணாக நட்டு கூரை வேய்வதாகவும் வஞ்சினம் கூறுகின்றான். இதைக் கேட்ட கணியன் கீரன் மாமரத்தை அழிக்க சூழ்ச்சி ஒன்றை விவரித்து அவனைத் தன் இல்லத்திற்கு அழைத்துச் செல்கின்றார்.

மகளுக்குற்ற கொடிய முடிவினைக் கேட்ட எயினன் ஆறாத்துயரில் உழல, சேரநாட்டு மன்னன் ஆறுதல் கூறி, துளுநாட்டின் வடக்கேயுள்ள புண்ணாட்டாருக்கு உதவுவதன் மூலம் நன்னனைத் தான் அழிக்கப் போவதாகக் கூறினார். அதைக் கேட்ட எயினன், செய்குட்டுவன் தலைமை ஏற்றுச் செல்லும் இப்போரில் தன்னை ஒரு படைவீரனாகவாவது அனுப்புமாறு கோரினான். அவனது கோரிக்கையை நார்முடிச் சேரல் ஏற்றுக் கொண்டான். இப்போரில் எயினன் மாண்டான். எயினன் இறப்பினைக் கேட்ட அளவிலேயே அணிவளையும் மாண்டாள்.

கணியன் கீரனும், அருளாழியும் போர் யானையை மதங் கொள்ளச் செய்து மாமரத்தை அழிக்கின்றனர். அழிவை மறைவாகக் கண்டு இரசித்த அருளாழி, வெளிப்பட யானையால் தூக்கி வீசப்படுகின்றான். அதனால் நினைவிழந்த அருளாழியைக் கணியன்கீரன் தனது இல்லத்திற்குக் கொண்டு செல்கின்றார்.

அருளாழி தனக்கு நேர்ந்த துன்பங்களை நினைத்து வருத்தமுற கணியன் கீரனின் மகள் ‘அனிச்ச அடி’ அவனுக்கு ஆறுதல் கூறுகின்றாள். அப்பொழுது துறவி வேடத்தில் அங்கு வந்த செங்குட்டுவன் சுரும்பார் குழலியின் பெற்றோருக்கு

நேர்ந்த முடிவினைக் கூறி நன்னனிடமிருந்து பூழி நாட்டை மீட்கவும், நன்னனை ஒழிக்கவும் போர் தொடுக்க விரும்புவதாகக் கூறி பௌவத் தீவில் நடைபெறும் ஆலோசனைக் கூட்டத்தில் பங்கேற்குமாறு கூறுகின்றான்.

இதற்கிடையில் அனிச்ச அடியும், அருளாழியும் ஒருவரை ஒருவர் விரும்பினாலும் தமது உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்தாமல் மறைத்து விடுகின்றனர். நன்னனும் மிஞிலியும் பவளத் தீவின் அரசனும் குறும்பர் தலைவனுமாகிய வேங்கைமுகன் துணைகொண்டு சேரநாட்டினை வீழ்த்தத் திட்டமிடுகின்றனர். நன்னன் கழிந்த நாளில் தான் இழைத்த தீமையினையும் தனக்கு அடிக்கடி ஏற்படும் கனவினையும் எண்ணி வருந்துகின்றான். இந்நிலையில் கணியன் கீரன், வஞ்சி நகரம் சென்று மீண்ட அருளாழியிடம் பௌவத் தீவில் எடுக்கப்பட்ட கொள்ளை முடிவுகள் குறித்து வினவுகின்றார். அதற்கு அருளாழி வேங்கை முகனும் பிறரும் அறியாத வண்ணம் மாந்தைத் துறையில் மரக்கலப் பயிற்சிகள் நடப்பதையும், சோழனை தமக்கு உதவுமாறு கேட்டு வந்ததையும், அதற்கு சோழன் மறுத்து முடங்கல் தந்ததையும் கூறுகின்றான். அதைக் கேட்ட கணியன் கீரன் சோழனைத் தான் எவ்வாறாவது போருக்கு இழுத்துவிடுவதாகக் கூறிச் சென்று விடுகின்றார். அப்பொழுது அரசியலால் உறவும் கூட ஒழிதலை எண்ணிய அருளாழி, உறவினால் ஏற்படுவது ஒழிக்க முடியாத துன்பம் தான். இறப்பினால் எண்ணற்ற இன்பத்தை அடைய முடியும் என்று கூறுகின்றான். அதைத் தவறாகப் புரிந்து கொண்ட அனிச்ச அடி அருளாழியிடம் ஊடல் கொள்கின்றாள்.

கணியன் கீரன் திட்டப்படி; மிஞிலியின் கையில் போலி முடங்கல் கொண்டு சென்ற அருளாழி அகப்பட்டுக் கொள்கின்றான். சிறையில் அடைக்கப்பட்ட அருளாழிக்கு உணவின் மூலம் ஆலோசனை அனுப்பி கணியன் கீரன் அருளாழியை சிறையிலிருந்து தப்பிக்கச் செய்கின்றான். அப்பொழுது கணியன் கீரனுக்குப் பதில் அனிச்ச அடி அங்கே காத்திருக்கின்றாள். மீண்டும் இருவருக்கும் இடையில் ஊடல் ஏற்படுகின்றது. அதனை நினைத்து வருந்தியபடி வந்த அனிச்ச அடியை பவளத் தீவின் அரசனும், குறும்பர் தலைவனுமாகிய வேங்கைமுகன் வழிமறித்து கலத்தில் ஏற்றி பவளத் தீவிற்கு அழைத்துச் செல்கின்றான்.

வஞ்சி நாட்டில் நார்முடிச் சேரல் யுத்த தந்திரம் குறித்து அமைச்சர் உள்ளிட்ட அனைவருடனும் கலந்துரையாடி, பின்னர் அருளாழியினை வேங்கைமுகனின் கலப்படைப் பெருக்கத்தைப் பார்த்துவர பவளத் தீவிற்குச் செல்லுமாறு கூறுகின்றார். அவருடைய கட்டளையின் பேரில் பவளத்தீவு சென்ற அருளாழி, அனிச்ச அடியை வேங்கை முகனின் மகன் கோட்புலியுடன் காண்கிறான். கோட்புலியை மணக்க அனிச்ச அடி மறுத்து அவனது குறும்பர்

குலத்தைப் பற்றி இழிவாகப் பேசுகின்றாள். கோட்புலி அவளைத் தாக்க முற்படும் வேளையில், அருளாழி அவளை மீட்கின்றான். இருவருக்கும் ஏற்பட்ட போரில் அருளாழி வென்றுவிடுகின்றான். அருளாழியும், அனிச்ச அடியும் கடற்கரை நோக்கித் திரும்பும் பொழுது, குத்துப்பட்ட கோட்புலி தன் கையிலிருந்த குறுவாளால் எறிய அது அனிச்ச அடியின் கழுத்தில் பாய்ந்தது. இதனால் அனிச்ச அடியின் குருதிக்குழல் சேதமடைகின்றது. அனிச்சத்தை பரணர் வீட்டில் அருளாழி விட்டுச் செல்கின்றான்.

அனிச்ச அடி தன் உள்ளத்தில் புதைந்த காதலை அருளாழி வெற்றி பெற்று மீண்டு வந்ததும் வெளிப்படுத்த எண்ணுகின்றாள். அப்பொழுது போர் பற்றிய செய்திகள் பலவாறு வந்து கொண்டிருக்கின்றன. அருளாழியின் போர்த்திறத்தை விவரித்துக் கூற அனிச்ச அடி உணர்ச்சி வசப்பட அவளின் தொண்டைப் பகுதியில் குருதி கசிகின்றது. அருளாழி வெற்றி பெற்று மிஞிலியின் எலும்பினால், சுரும்பார் குழலியின் ஈமத்தில் கூரை வேய்ந்து தனது சூளுரையை முடிக்கின்றான். வெற்றிக் களிப்புடன் மீண்ட அருளாழி, அனிச்ச அடியின் மரணச் செய்தியைக் கேட்டுத் துடிதுடிக்கின்றான். அனிச்ச அடி, இறப்பதற்கு முன் ஏதேனும் கூறினாளா? என்று அருளாழி கேட்க, அதற்குப் பரணர் "உறவினால் உறுவது ஒழிகலாத் துன்பமே. இறவினால் பெறுவது எண்ணிலா இன்பமே" என்று அனிச்ச அடி கூறியதாகக் கூற அருளாழியும் மடிவதாகக் கதை முடிகின்றது.

## அன்னி மகள்

புகாரில் நடைபெறும் இந்திர விழாவைக் காண குறுக்கையில் வாழ்ந்த ஆயர் குலத் தலைவன் அன்னி, அவனது மகள் அன்னி மிஞிலி மற்றும் அவளது தோழி மாதரி ஆகிய மூவரும் புகாருக்குச் செல்கின்றனர். அப்பொழுது எதிர்பாராத விதமாக அன்னி மிஞிலியும், அழுந்தூரில் வாழ்ந்த வேளிர் குலத் தலைவன் திதியனும் சந்தித்துக் காதல் கொள்கின்றனர். அன்னி மிஞ்லி திதியனை நினைத்து இரங்க திதியன் அன்னி மிஞிலியின் தோழி மாதரியிடம் கையுறை கொடுத்து அவள் மூலம் அன்னி மிஞிலியைக் காண்கின்றான்.

முல்லை நில மக்களின் குல ஒழுக்கப்படி அன்னியின் ஆளுகைக்குட்பட்ட குறுக்கையில் ஏறு தழுவும் விழா நடைபெறுகின்றது. இவ்விழாவில் அன்னி மிஞிலியின் வெண்காற் காரியைக் கோசர் குலத்தினைச் சேர்ந்த கதக்கண்ணன் அடக்க முயற்சித்துத் தோல்வியைத் தழுவுகின்றான். அப்பொழுது திதியன் வெண்காற் காரியை அடக்கி வெற்றி வாகை சூடி விடுகின்றான். ஆனால் அன்னி பழம் பகையைக் காரணம் காட்டி மகள் மறுக்கின்றான்.

நீடுரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட வேளிர் தலைவன் வேள் எவ்வி தமிழ் மீதும், தமிழினத்தின் மீதும் மிகுந்த பற்றுடையவன். அவன் களமருக்கும் (உழவருக்கும்), பரதருக்கும் இடையே நேர்ந்த பூசலைத் தீர்த்து வைத்து இன ஒற்றுமையை வலியுறுத்துகின்றான்.

அன்னியின் மீது சினம் கொண்ட திதியன் குறுக்கையை முற்றுகையிடுகின்றான். அன்னி அரணம் அடைத்து உள்ளிருக்கின்றான். அப்பொழுது அமைச்சர் எதிர்வரும் இன்னலை எடுத்துக் கூறி திதியனுக்கு அன்னி மிஞிலியை மண முடித்து வைக்குமாறு கூறுகின்றார். அன்னி அது தன் வீரத்திற்கு அழகல்ல என்று கூறி மறுத்து விடுகின்றான். இந்நிலையில் வேள் எவ்வி திதியனைக் கண்டு இன ஒற்றுமையை எடுத்துக் கூறி முற்றுகையை நீக்கக் கோருகின்றான். முதலில் மறுத்த திதியன் பின்னர் உடன்படுகின்றான். கூடலூரில் நெய்தலங்கானலின் கோசர் குலத் தலைவன் சினவாழியும் அகுதையும், இளவல் கதக்கண்ணனும் சோழநாட்டைக் கைப்பற்றத் திட்டமிடுகின்றனர். முன்னரே ஒருமுறை வேள்எவ்வியிடம் தோல்வியுற்ற அகுதை அவனைக் கொல்லத் திட்டமிடுகின்றான். இச்சூழ்ச்சியின் படி திதியனை பாண்டிய நாட்டெல்லை செல்லுமாறு செய்து, தனிமைப்படுத்தப்பட்ட வேள் எவ்வியை புலர்காலைப் பொழுதில் அகுதை வந்து தாக்குகின்றான். பெரும்போர் நிகழ்கின்றது. அப்போது அகுதை வஞ்சனையாக வேள் எவ்வியைக் கொன்றுவிடுகின்றான். பாணர்கள் யாழை முறித்துப்போட்டு எவ்வியின் இறப்பிற்காகப் புலம்புகின்றனர்.

குறுக்கையை அடுத்த மேய்ச்சற் காட்டில் தத்தனும், ஆயர்களும் அன்னியின் ஆநிரைகளை மேய்க்கின்றனர். கோசர் புலத்துப் புகுந்த வெண்காற் காரி, பற்ற வந்த கோசர்களைக் குற்றிக் கொன்றுவிடுகின்றது. சினம் கொண்ட கோசர்கள் தத்தனைக் கொன்று ஆநிரைகளைக் கவர்ந்து செல்கின்றனர்.

அன்னியும், அமைச்சரும் ஆநிரைகளை மீட்டு வரத் தேவையான செயல்முறைகள் குறித்து ஆலோசிக்கின்றனர். சமரச உடன்பாட்டிற்கு அன்னி, அமைச்சர் மற்றும் கீரன் போன்றோர் நெய்தலங்கானல் செல்கின்றனர். அங்கு அன்னி, சினவாழியாலும், கதக்கண்ணனாலும் அவமானப்படுத்தப்பட்டு கண் களையப்படுகின்றான்.

அன்னியின் கண் களையப்பட்டவுடன் அன்னி மிஞிலி சினத்தால், "கண் களைந்த கோசரைப் பழிவாங்காது, கலத்தில் உண்ணேன், மாற்றுடை உடுத்தேன்; பூம்புனல் ஆடேன்; தேமலர் சூடேன்" எனச் சூளுரைக்கின்றாள். நீடூரில் வேள் எவ்வியின் மனைவி ஏலங்குழலி எவ்வியின் நடுகலை வழிபடுகின்றாள். இதுகண்ட புலவர் வெள்ளெருக்கிலையார் துன்புறுகின்றார். ஆணுடை தாங்கிய அன்னி

மிஞிலியும், மாதரியும் ஊர் அம்பலத்தில் நின்று கோசர்களுக்கு எதிராக மக்களைத் திரட்டுகின்றனர். முதியவன் உருவில் வந்த திதியன் அன்னி மிஞிலியோடு உரையாடுகின்றான். எவ்வியின் அரண்மனையில் கோசரை அழிக்க ஆவன செய்வதாகத் திதியன்; அன்னி, ஏலங்குழலி, அன்னி மிஞிலி ஆகியோரிடம் கூறுகின்றான். அன்னி மிஞிலியை அழைத்து அவளது சூளுரையைத் தான் நிறைவேற்றுவதாகக் கூறி வாட்படையை ஏந்த வேண்டாம் எனக் கூறுகின்றான். உறையூரில் சோழன் இளஞ் சேட் சென்னி, அமைச்சர் மற்றும் திதியன் போர் குறித்து ஆராய்கின்றனர். நெய்தலங்கானலைத் திதியன் முற்றுகையிடுகின்றான். கடல் வழியாகவும், தரை வழியாகவும் தாக்குதல் புரிகின்றான். அகுதை மற்றும் பாண்டிய மன்னனின் உதவி கிடைக்காது சினவாழியும், கதக்கண்ணனும் தவிக்கின்றனர். கோசரின் கோட்டையைத் திதியன் எரிக்கின்றான். கோசர் அனைவரும் மடிகின்றனர். நெய்தலங் கானல் செல்லும் வழியில் வழிப்போக்கனுடன் அன்னி மிஞிலியும், மாதரியும் உரையாடிப் போர் நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொள்கின்றனர். பாண்டியன் உதவி கிடைக்காமையால் அகுதை இளஞ்சேட் சென்னியிடம் பணிகின்றான். போர் முடிந்தும் திதியன் வராமையால் அன்னி மிஞிலி தவிக்கின்றாள். பின்னர் திதியன் மிஞிலியைக் காண வருகின்றான். புத்துடை அணிந்து, புதுமலர் சூடி சூளுரை நிறைவேறிய மகிழ்ச்சியில் புனமயில் போலத் திதியன் முன் அன்னி மிஞிலி வருகின்றாள். தன் வீரத் தோள்களுக்கு அவளை மாலையாக்கித் திதியன் மகிழ்வதாகக் கதை நிறைவு பெறுகின்றது.

## சாலி மைந்தன்

கங்கையாறு பாயும் வாரணாசியில் வேதம் ஓதும் அறிஞனாக விளங்குபவன் அபஞ்சிகன் என்னும் அந்தணன் ஆவான். அவன் தன் பெற்றோரின் வற்புறுத்தலுக்காக அழகும் இளமையும் நிரம்பிய சாலி என்ற பெண்ணை மணந்து கொள்கின்றான். ஆனால் அவளைத் திரும்பியும் நோக்காது வேள்விச் சாலை ஒன்றையே தனது விருப்பமாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றான். இல்லற இன்பம் எய்தப் பெறாத சாலி தனது அன்பை பறவைகளிடத்தும் முதுநாய் ஒன்றிடத்தும் வெளிப்படுத்தி உணவினை ஈந்து வருகின்றாள். அபஞ்சிகன் இது அந்தணர் ஒழுக்கத்திற்கு முரணானது என்று கூறிக் கண்டிக்கின்றான்.

“நீ என்மீது அன்பு காட்டி இருந்தால், நான் இவைகள் மீது அன்பு காட்டி இருக்க வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டிருக்காது” என்று சாலி கூறியதோடு ‘என்னை வெறுக்கும் நீ ஏன் என்னைத் திருமணம் செய்து கொண்டாய்’ என்று வினவுகின்றாள். அதற்கு அபஞ்சிகன் தன்னுடைய பிறந்தநாள் குறிப்பின் படி

தனக்கு பிள்ளை இல்லை என்பதை அறிந்து திருமணம் செய்ய விருப்பம் இல்லாமல் இருந்ததாகவும், பெற்றோரின் வற்புறுத்தலுக்காக சாலியைத் திருமணம் செய்து கொண்டதாகவும் கூறுகின்றான். பின்னர் மேலும் அவன் திருமணத்திற்குப் பின்னர் சாலி மண் பூத்த நாட்குறிப்பைப் பார்த்த போது அதிர்ச்சி அடைந்ததாகவும், சாலிக்கு மகன் ஒருவன் உண்டென்றும், அவன் இறுதிச் சடங்கைத் தனக்குச் செய்ய மாட்டான் என்றும் கூறுகின்றான். அதனால் சாலியை வெறுப்பதாகவும் கூறியதுடன் பறவைகள் மற்றும் நாயைத் துரத்தும்படிக் கூறுகின்றான்.

அபஞ்சிகன் கூற்றால் மனமுடைந்த சாலி தற்கொலை செய்து கொள்ள எண்ணி கங்கையை அடுத்த காட்டின் ஒரு புறத்தே வருகின்றாள். சாலி ஆல மரக்கிளையில் ஏறி விழுதைத் தன் கழுத்தில் சுற்றும் நேரம் அவளைத் தொடர்ந்து வந்து முதுநாய் குரைக்க, அதனால் பறவைகள் பேரொலி செய்ய இயற்கையழகை இரசிப்பதற்காக அங்கு வந்த இளஞ்சாத்தன் வாளினை எறிந்து அவளைக் காப்பாற்றுகின்றான். சாலியை மணவாக்கன்னி என எண்ணிய இளஞ்சாத்தான் பிழை செய்கின்றான். சாலியும் சூழலால் பிழை செய்கின்றாள். சாலி நாளை வருவதாக் கூறிச் செல்ல; தான் நாளை சாவகம் செல்லப் போவதாகக் கூறினால் சாலி உடன்பட மாட்டாள் என்று கருதிய இளஞ்சாத்தன் கூறாது செல்கின்றான்.

நாட்கள் செல்லச் செல்ல சாலி கருவுற்றிருப்பதை அறிந்த அபஞ்சிகன் உண்மையை உணர்ந்து வீட்டை விட்டுச் செல்லுமாறு கூறுகிறான். சாலி எவ்வளவு எடுத்துரைத்தும் அபஞ்சிகனும் வேதியர்களும் அதனை ஏற்கவில்லை. அப்பொழுது அவர்களில் ஒருவன் கோபத்தால் சாலியை அடித்துத் துன்புறுத்த அதனை பொறுத்துக் கொள்ள முடியாத நாய் அவனது கழுத்தைப் பற்றுகின்றது. அப்பொழுது அங்கு கூடி இருந்தவர்கள் நாயை எவ்வளவு அடித்தும் அது தன் பிடியை விடவில்லை. நாயும் அவனும் ஒன்றாக மடிகின்றனர். இதனால் சினம் கொண்ட வேதியர்கள் சாலியை வாயால் உமிழ்ந்தும், கற்களால் தாக்கியும் விரட்டுகின்றனர். அஞ்சியோடிய சாலி துறவி ஒருவரைக் கண்டு தன் கதையைக் கூறி தனக்கு கழுவாய் உண்டா? என்று வினவுகின்றாள். அவர் சௌமினியின் வரலாற்றைக் கூறி 'நீ விடும் கண்ணீரால் நின் பாவங்கள் யாவும் கழியும்' என்று கூறி குமரியாடச் செல்லுமாறு பணிக்கின்றார். சாலியும் தெற்கு நோக்கி வருகின்றாள்.

தமிழ்நாட்டின் வளத்தையும் தமிழரின் பண்பாட்டையும் கண்டு வியக்கும் சாலி செல்லும் வழியில் உள்ள சேரியில் ஒரு மகனைப் பெற்றெடுக்கின்றாள். பின்னர் அங்கிருந்து சென்ற சாலி வேதியர்கள் அதிகமாக வாழும் வயணங்கோடு என்னும் ஊருக்கு அருகில் உள்ள கொல்லையில் தன் மகவைக் கிடத்தி மறைந்து

இருந்தாள். அப்பொழுது பசு ஒன்று தன் குழந்தைக்குப் பால் கொடுப்பதை எண்ணி மகிழ்கின்றாள். பசுவைக் காணாமல் தேடி வந்த இளம்பூதியும், அஞ்சனையும் பசுவையும் குழந்தையையும் காண்கின்றனர். பிள்ளைப் பேறு இல்லாத அவர்கள் குழந்தையை எடுத்து ஆபுத்திரன் எனப் பெயரிட்டுத் தூக்கிச் செல்கின்றனர். அப்பொழுது சாலி ஆபுத்திரன் என்ற பெயரை நினைத்தவாறே குமரியாடச் செல்கின்றாள்.

இளம்பூதியின் மனையில் ஆபுத்திரன் எல்லாக் கலைகளையும் கற்று இளைஞனாக விளங்குகின்றான். அப்பொழுது ஊரில் பஞ்சம் ஏற்பட்டதால் ஆவினைக் கொண்டு வேள்வி செய்ய வேண்டும் என்று அந்தணர்கள் முனைகின்றனர். வேள்விக்குப் பலி கொடுக்க யார் வீட்டிலும் பசு இல்லாமையால் இளம்பூதியின் பசுவைப் பலி கொடுக்கலாம் என்று முடிவு செய்து அவனிடம் கேட்கின்றனர். அப்பசு ஆபுத்திரனுக்குப் பால் கொடுத்த பசுவின் சேய் என்பதால் இளம்பூதி தயங்குகின்றான். 'நீ ஆவைத் தரவில்லையேல் நின்னைத் தள்ளி வைப்போம்' என்று கூற வேறு வழியின்றி இளம்பூதி உடன்படுகின்றான்.

வேள்வி நடைபெற்றுக்கொண்டிருக்கின்றது. பசு யூபத்திலே கட்டப்பட்டு நிற்கின்றது. வேள்வி இயற்றுவோர் சிலரிடம் எரியோம்பும் பொறுப்பினைக் கொடுத்துவிட்டு உணவு உண்ணச் செல்கின்றனர். எரியோம்புபவரின் கண்களில் சோமபானம் படவே ஆவல் மிகுதியால் மிகுதியாக உண்டு மயங்கி விழுகின்றனர். ஓம்ப வேண்டிய வேள்விக் குண்டத்து எரி அவிந்து எங்கும் இருள் சூழ்கின்றது. இவ்வமயத்தைப் பயன்படுத்தி ஆபுத்திரன் பசுவை அவ்விடத்தில் இருந்து அகற்றுகின்றான். உணவு உண்டு மீண்ட வேதியர்கள் பசுவைக் காணாமல் திகைப்படைகின்றனர். இது ஆபுத்திரன் செயலே என்று உணர்ந்து தேடிச் செல்கின்றனர். ஆபுத்திரனையும், பசுவையும் காட்டில் காண்கின்றனர்.

அதமயன் என்னும் அந்தணன் ஆபுத்திரனைக் கோலால் தாக்க வெகுண்ட பசு அதமயனின் வயிற்றைக் குற்றிக் கிழிக்கின்றது. ஆபுத்திரன் பல நீதிகளைப் போதிக்கின்றான். வேதியர்கள் அவனையும், அவனது பிறப்பையும் பழித்துப் பேசி உடலைத் தூக்கிக் கொண்டு செல்கின்றனர்.

வீட்டிற்கு வந்த ஆபுத்திரனை இளம்பூதி வேறு வழியின்றி வீட்டை விட்டு அனுப்பி விடுகின்றான். பிச்சைப் பாத்திரம் ஏந்தி ஆபுத்திரன் வரும் வேளையில் வேதியர்கள் அவனைக் கல்லால் அடித்துத் தாக்குகின்றனர். பின்னர் மதுரை வந்த ஆபுத்திரன் பசியின் கொடுமையைத் தான் உணர்ந்ததால் அக்கொடுமையினைப் போக்கி உயிர்களை உய்விப்பதும், கொலை வேள்வியைத் தடுப்பதும் தனது தலையாய பணியாகக் கொண்டு செயல்பட்டான்.

குமரியிலிருந்து மீண்ட சாலி வாரணாசி செல்ல விரும்பாமல் மதுரையிலேயே தங்கி அப்பவாணிகம் செய்து வருகின்றாள். சாலி தங்கியுள்ள தெருவில் ஆபுத்திரன் பிச்சைப் பாத்திரம் ஏந்தி வருகின்றான். ஆபுத்திரனின் அவல தோற்றம் கண்டு சாலி வினவ அதற்கு ஆபுத்திரன் ஒன்றும் கூறாது சிரித்துவிட்டு செல்கின்றான். அவனுடைய பெயர் என்னவென்று மற்றவர்களிடம் வினவ ஆபுத்திரன் எனக் கூறுகின்றனர். அவன் தன் மகனாக இருப்பானோ என அறிய விரும்பிய சாலி பலவகையான பண்ணியங்களுடன் கலைமகள் கோட்டத்திற்குச் செல்கின்றாள்.

கலைமகள் கோட்டத்தில் மறைந்து நின்ற சாலி ஆபுத்திரன் மூலகனிடம் பேசிய பேச்சிலிருந்து தனது மகன் என்பதைத் தெரிந்து கொண்டாள். ஆனால் ஆபுத்திரன் தன்னை அன்னை என்று கூறுவதற்கு நாணுகின்றான் எனத் தவறாகப் புரிந்து கொள்கிறாள். அப்பொழுது மழையில் நனைத்தவாறு சிலர் உணவு வேண்டிகலைமகள் கோட்டத்திற்கு வருகின்றனர். அவர்களுக்கு வழங்க உணவு இல்லையே என கலைமகளின் முன் வருந்துகின்றான். அப்பொழுது சாலி தான் கொண்டுவந்த பண்ணியங்களை அங்கே வைத்துவிட்டு செல்கின்றாள். கலைமகள் தனக்கு அளித்த கொடை என்று மகிழ்ந்து ஆபுத்திரன் அப்பாத்திரத்திலேயே பிச்சை பெறத் துவங்கினான்.

வேதியர்களின் வேள்வியினை ஆபுத்திரன் நிறுத்தியதால் கோபம் கொண்ட வேதியர்கள் இந்திரனிடம் முறையிட்டனர். இந்திரன் ஆபுத்திரனிடம் சென்று இறைவன் வேதபுரிக்கு அழைத்து வருமாறு கூறுயதாகவும் பின்னர் அங்கிருந்து துறக்கத்திற்குச் செலுத்தப்படுவாய் என்றும் கூறி அழைக்கின்றான்.

தொண்டுக்கு வாய்பில்லாத துறக்க உலகத்தை விட இவ்வுலகமே மேலானது என்றும் இறைவன் ஏன் தன்னிடம் நேரடியாகக் கூறவில்லை என்றும் மறுத்துவிடுகின்றான் ஆபுத்திரன். பின்னர் இந்திரன் அங்கிருந்து கோபத்துடன் வெளியேறுகின்றான்.

வேதியர்கள் இந்திரன் தலைமையில் கூடி ஆபுத்திரனை அழிக்க வழியினை ஆராய்கின்றனர். அப்பொழுது மூலகன் ஆபுத்திரனை அழிக்க முடியாதென்றும் அவனது தொண்டினை அழிப்பதன் மூலம் அவனை ஊரிலிருந்து வெளியேற்றலாம் எனவும் கூறுகின்றான். பசியுடன் வருபவர்களுக்கு அறுசுவை உணவு வழங்க இந்திரன் ஏற்பாடு செய்கின்றான். இதனால் ஆபத்திரனிடம் உணவு வேண்டி வருபவர்கள் யாரும் இல்லை என்ற நிலை ஏற்படுகின்றது. தொண்டுக்கு வாய்ப்பில்லாத காரணத்தினால் ஆபத்திரன் வேற்றூரிற்குச் செல்கின்றான்.

ஆபுத்திரன் எந்த ஊருக்குச் சென்றாலும் வேதியர்கள் அவனது தொண்டிற்கு இடையூறு செய்கின்றனர். இறுதியாக ஆபுத்திரனும், அவனது நண்பர்களும் கீழைக் கடற்கரையை அடுத்துள்ள வலக்கூரை அடைந்தனர். அங்கும் ஆபுத்திரனின் தொண்டுக்கு இடையூறு வரவே அவன் வருந்தினான். அப்பொழுது அவ்வூருக்கு வந்த வாணிகக் கூட்டத்தில் இளஞ்சாத்தனும் ஒருவன் ஆவான். ஆபுத்திரனைக் கண்ட பொழுதெல்லாம் இளஞ்சாத்தனுக்கு இனம்புரியாத மகிழ்ச்சி தோன்றவே அவனிடம் தனது வரலாற்றைக் கூறுகின்றான். ஆபுத்திரன் தன் வரலாற்றைக் கூற இளஞ்சாத்தன் சாலியைக் கூடியதையும் பின்னர் அங்கிருந்து சாவகம் சென்றதையும் சாவகத்திலிருந்து திரும்பிய போது சாலி மணமானவள் என்பதை அறிந்ததையும் தனது மனத்திரையில் ஓட்டிப்பார்த்தான். பின்னர் ஆபுத்திரன் தன்னைத் தந்தையாக ஏற்றுக்கொள்வானா? என்ற ஐயத்தில் கூறாமல் விட்டுவிட்டான். சாவகத்தில் தொண்டுக்கு வாய்ப்பிருப்பதாகக் கூறி இளஞ்சாத்தன் ஆபுத்திரனை அழைக்க; மூலகனின் சூழ்ச்சியின் காரணமாக தனது நண்பர்களைவிட்டுச்செல்ல முடிவு செய்தான். நண்பர்கள் அனைவரும் வருந்தினர். நண்பர்கள் மூலமாக ஆபுத்திரன் சென்றதை அறிந்த சாலி தானும் சாவகம் செல்கின்றாள்.

ஆபுத்திரன் ஏறிய கலமானது கடலில் சென்று கொண்டிருக்கும் பொழுது அனைவரும் தூங்கிக் கொண்டிருக்கும் ஓர் இரவில் மூலகன் தனது குறுவாளை பாய்மரத்தில் உள்ள பாய் மீது எறிகின்றான். காற்றின் காரணமாகப் பாயானது கிழிய அதனைத் தொடர்ந்து கலம் செல்ல முடியாமையால் மணிபல்லவத் தீவில் ஒதுங்குகின்றனர்.

மீகாமர் கலத்தில்பாயைச் செப்பனிட ஆபுத்திரன், இளஞ்சாத்தன், மற்றும் செட்டியார் எண்மரும் கோமுகி ஆற்றங்கரையின் அழகைக் காணச் செல்கின்றனர். பின்னர் கலத்திற்கு திரும்ப முயன்ற போது சூழ்ச்சியே உருவான மூலகன் ஆபுத்திரனைத் தனிமைப்படுத்த நினைக்கின்றான். கலைமகள் அளித்த பிச்சைப் பாத்திரத்தை கோமுகி ஆற்றங்கரையில் வைத்து விட்டதாகவும் அதனை எடுத்து வரச் சொல்வதாகவும் கூறுகின்றான். அப்பொழுது ஆபுத்திரனும் உடன்வர கோமுகி ஆற்றங்கரையில் தீவதிலகையைக் கண்டு தன் வரலாற்றினைக் கூறுகின்றான். பின்னர் கலத்திற்கு செல்ல முயன்ற போது பருந்து ஒன்று பாம்பைத் தூக்கிச் செல்லும் காட்சியினை மூலகன் ஆபுத்திரனிடம் காட்டுகின்றான். உயிர்படும் துன்பத்தினைக் காணப் பொறுக்காத ஆபத்திரன் குனிந்து கொள்கின்றான். இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி மூலகன் ஆபுத்திரனைக் குறுவாளால் குத்தப் போகின்றான்.

பின் தொடர்ந்து வந்த தீவதிலகை காடே அதிருமாறு கூச்சலிடுகின்றாள். பதறிய மூலகன் வாளைத் தவறவிட, பற்றிய பருந்து பாம்பினை விட பாம்பானது மூலகனைத் தீண்டுகின்றது. இந்திரனின் சூழ்ச்சியினால் தான் செய்த தீமைகளையெல்லாம் மூலகன் எடுத்துக் கூறுகின்றான். பிச்சைப் பாத்திரத்தை ஈந்தவள் ஆபுத்திரனின் தாயான சாலி என்பதையும் எடுத்துரைக்கின்றான். மூலகன் உயிர்விட கலத்திற்குச் சென்ற ஆபுத்திரன் கலம் சென்றதை அறிந்து உயிர்துறக்க நினைக்கின்றான். தீவதிலகை அடுத்த கிழமை வரும் கலத்தில் உன்னை அனுப்பி வைப்பேன் என உறுதி கூறுகின்றாள்.

நாள்கள் பல சென்றன. கலமொன்றும் வரவில்லை. வருந்திய ஆபுத்திரன் ‘‘இத்தீவில் முடங்கிக் கிடப்பதைக் காட்டிலும் மலையில் ஏறி உயிர் துறப்பதே மேல்’’ என்று ஓலையில் எழுதிவைத்துவிட்டு உயிர்துறக்க முடிவு செய்கின்றான். அப்பொழுது கலம் ஒன்று வரவே ஆபுத்திரன் கூவுகின்றான். எவ்வளது அழைத்தும் கலமானது நிற்காததால் கடலில் நீந்தி கலத்தைப் பற்றி சாவகம் நோக்கிச் செல்கின்றான்.

ஆபுத்திரன் கலத்தில் இல்லாததை அறிந்த இளஞ்சாத்தன் கலத்தினைத் திரும்புமாறு மீகாமரிடம் கூறினான். காற்று வீசும் திசை சாதகமாக இல்லாததால் மீகாமர் மறுத்துவிடுகின்றார். பின்னர் சாவகம் சென்ற இளஞ்சாத்தன் ஆபுத்திரன் பெயரால் அறச்சாலை ஒன்றினை நிறுவி பின்னர் தனது நண்பர்களுடன் மணிபல்லவத் தீவிற்குச் செல்கின்றான். அங்கு தீவதிலகையை சந்தித்து நடந்ததை வினவுகின்றான். ஆபுத்திரன் உயிர் துறந்ததாகக் கூறி தீவதிலகை ஓலையைக் காட்டுகின்றாள். அதனால் மனமுடைந்த இளஞ்சாத்தன் தனது நண்பர்களுடன் வடக்கிருக்கின்றான்.

சாவகம் சென்ற ஆபத்திரன் தன் பெயரால் அறச்சாலையினை நிறுவியது யார் என்று வினவுகின்றான். இந்த அறச்சாலையினை நிறுவியது இளஞ்சாத்தன் எனவும், அவன் தன்னைக் காண மணிபல்லவம் சென்றிருப்பதாகவும், தனக்கு ஏதேனும் நேரும் பட்சத்தில் உயிர் துறக்க முடிவு செய்திருப்பதாகவும் அறிந்து மணிபல்லவம் செல்ல எண்ணுகின்றான். ஒரு திங்கள் கழித்து வந்த கலத்தில் ஏறி மணிபல்லவம் செல்கின்றான். தீவதிலகையைக் கண்டு நிகழ்ந்ததை அறிய விரும்புகின்றான். அப்பொழுது தீவதிலகை என்புக்குவியலைக் காட்டி உனது முடங்கலால் இவர்களைக் கொன்றுவிட்டேன் என அழுகின்றாள்.

இறக்கும் பொழுது இளஞ்சாத்தன் ஏதேனும் கூறினாரா என வினவ “சாலியின் மூலம் எனக்கு பிறந்த மகன் ஆபுத்திரன். இதனை உரைக்கும் முன்னரே

அவன் இறந்து போனான்” எனக் கூறியதாகக் கூற ஆபுத்திரன் அழுது துடிக்கின்றான். அப்பொழுது அங்கு வந்த சாலி; ஆபுத்திரனைக் கண்டு ஏன் அழுகின்றாய்? என வினவ என் தந்தை இறந்துவிட்டார் என்று கூற உன் தந்தையின் பெயர் என்ன என்று சாலி வினவுகின்றாள். இளஞ்சாத்தன் எனக் கூற அவளும் அவனது என்பில் விழுந்து மடிகின்றாள். அவள் கையில் சாலி என்று எழுதியிருக்க ஆபுத்திரன் துடிக்கின்றான். பின்னர் கோமுகி ஆற்றங்கரையில் தனது பிச்சைப் பாத்திரத்தை எறிந்து தானும் மடிகின்றான்.

## வாழ்த்து

காப்பியத்தின் தொடக்கம் வாழ்த்தாக அமைய வேண்டும் என்பதற்கு இணங்க கவிஞர் அனிச்ச அடி மற்றும் அன்னிமகள் காப்பியங்களில் தமிழினை வாழ்த்தித் துவங்குகின்றார். தமிழின் எண்ணற்ற சிறப்புகளை விரித்துரைக்கும பாங்கில் இதனை அமைத்திருக்கின்றார். ஆனால் காரல் மார்க்சின் தொடக்கம் பாயிரமாக அமைகின்றது. காரல் மார்க்சு என்னும் மாமனிதனின் வாழ்வை எடுத்தியம்பும் வகையில் இது பாங்குற அமைக்கப்பட்டுள்ளது. அன்னி மகள் காப்பியத்தில் “காம்பு களையாத மலர் போன்ற சொற்களால் தொகுக்கப்பட்ட மாலையை நின் காலுக்கு இட்டேன். தீமையை அறியேன் என்றாலும் திருத்தமில்லாத என் சொற்கள் நின் திருப்பாதங்களை நோகச் செய்யுமானால் என் மீது சினம் கொள்ளாது அணைத்துக் கொள்வாயாக! தான் ஈன்ற குழவி செய்யும் தவற்றிற்காக எத்தாயர் தனது குழவியினை தள்ளி வைத்தார்?”[3] என்று தமிழை அன்னையாகப் பாவித்து ஆ.பழநி அவர்கள் அழகான வாழ்த்தினை தொடுத்திருக்கின்றார்.

‘அனிச்ச அடி’ காப்பியமும் தமிழ் வாழ்த்தினைத் தொடக்கத்தில் கொண்டு இலங்குகின்றது. எண்ணற்ற சொற்புலமையினை, தனது கவிதைகளில் பொழிந்து காப்பியம் படைப்பதில் வல்லவர் ஆ.பழநி அவர்கள் என்பதை அவர் தம் வாழ்த்து பறை சாற்றுவதனைக் காண முடிகின்றது. தமிழ்த் தாயிற்கு அவர் நெய்து வந்த சிற்றாடையில் அவர் தம் பேராற்றல் வெளிப்படுவதை “ஐம்பெரும் காப்பியமும் எல்லையற்ற தொகைப்பாட்டும், அறத்தின் மாந்தர் உய்ந்து ஒளிரும் திருக்குறளும் ஓங்காத சிறப்புடைய தொல்காப்பியமும், உரையும் நின்றன் பசுந்தளிர் போன்ற திருவடிக்கு எம்முன்னோர் படைத்தளித்ததை அறிந்த நான் சிற்றாடை நெய்து வந்தேன். நினது இடையில் நெஞ்சு உவந்து அணிந்து அருள்வாய்”[4] என்னும் வரிகள் நமக்கு உணர்த்துகின்றன. மேலும் தொன்மை மற்றும் இனிமை நிறைந்த நம் தமிழின் தனித்தன்மையினை “ஆலமரம் போல் வேரூன்றி விளங்கும் நின்

மேன்மையினைக் கண்டு போராடி நினைவீழ்த்தப் புகுந்தமொழி பலவற்றைப் புறங்கண்டாய் நீ!”[5] என்று சீருற எடுத்தியம்புகின்றார்.

‘காரல் மார்க்சு’ காப்பியமானது காரல் மார்க்சின் வாழ்க்கையை விரித்துரைக்கும் பாயிரத்துடன் விரிகின்றது. காரல் மார்க்சின் குழந்தைகள் வறுமையின் கொடூரப் பிடியில் சிக்கிப் பலியானதை, “தத்துவப் போர்க்களத்தில் வெற்றியை மட்டுமே தந்தான். ஆனால் வாழ்க்கையைக் கொன்றிடும் வறுமைப் போரில் கொத்தாக மூன்று பிள்ளைகள் செத்தனரே! சென்னியின் வாழ்வை நோய் நாளும் தின்னக் கண்டு பித்தான போதும் கூடப் பிறழாதான் வாழ்க்கை தான் என்னே!”[6] என்றுரைப்பர்.

பாயிரம் முழுவதும் காரல் மார்க்சின் வாழ்க்கைப் பாடுகளையும், வேதனைகளையுமே பேசுகின்றன. காரல் மார்க்சு வாழ்வில் நடந்த துயர சம்பவங்களில் காரல் மார்க்சிற்கு இணையாக ஆ.பழநி அவர்கள் வாட்டமுறுவதை “பணம் செய்யும் செயல்களை எல்லாம் அஞ்சாது பகர்ந்தான். ஆனால் பணம் செய்யும் வழியை மட்டும் பயின்றிலன். சிரித்து நின்று மணம் பரப்பும் மலர்போல் பெற்ற மக்களை கொடுநோய் வந்து பிணம் செய்து இழந்த போது எப்படிப் பேதலுற்றானோ?”[7] என்னும் வரிகள் உணர்த்தும்.

## வருபொருள் உரைத்தல்

சாலி மைந்தன் காப்பியத்தில் காப்பியத் தொடக்கமானது வருபொருள் உரைக்கும் வகையில் அமைந்துள்ளது. ஆற்று வருணனையின் போது, “கதிரவன் புறத்தார் காண்குறாத வண்ணம் கடல் மகள் தன்னைப் புணர்ந்து அதனால் முதிர்வுறும் நிறைசூல் உற்ற மாமுகில் வானில் மோதியே காற்றினால் எற்றுண்டு அதிர்வுற மழையைப் பொழிந்தால் பெருகி ஆறென உருக்கொண்டு நடந்து எதிர்கொள்ளும் நாட்டில் உறைபவர்களுக்கெல்லாம் இன்னமுதம் ஊட்டும் கங்கை”[8] என்பதில் கதிரவன் கடல் மகளைப் பிறர் காணாமல் கூடினும் முகிலாகிப் புறத்தார்க்குப் புலப்பட்டாற் போலச் சாலி இளஞ்சாத்தனைக் கூடியது அவள் சூலால் வெளிப்பட்டது. முகில் காற்றால் எற்றுண்டு அலைந்தாற் போலச் சாலி தன் கணவனால் எற்றுண்டலைந்தாள். முகில் பயந்த மழை ஆறாகி உலகத்திற்கு ஊட்டினாற்போல் சாலி பயந்த மகன் உலகுக்கு ஊட்டுவான் என்று உள்ளுறையாக வருபொருளானது உரைக்கப்பட்டுள்ளது.

## நாற்பொருள் பயத்தல்

காப்பியம் என்பது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் வாழ்க்கைக்கு உதவும் நாற்பொருளைப் பயக்க வேண்டும் என்பது காப்பிய இலக்கணம் ஆகும்.

ஆ.பழநி அவர்களின் காப்பியங்களில் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று மட்டுமே இடம்பெற்றுள். வீடு பேசப்பெறவில்லை.

## அறத்தின் அரங்கேற்றம்

ஒரு சிறந்த காப்பியப் படைப்பாளியின் நோக்கம், எண்ணற்ற அறங்களைத் தனது காப்பியத்தில் வலியுறுத்தி, வாசகனின் அகத்தில் அரும் மாற்றங்களை உருவாக்குவதாகும். அவ்வாறு அறங்களை அமைக்கும் பொழுது அது கட்டளையாக இல்லாமல், இயல்பாக எடுத்துரைக்கும் விதமாக அமைதல் நன்று. அவ்வகையில் ஆ.பழநி அவர்கள் எண்ணற்ற அறங்களைத் தம் காப்பியங்களில் கையாண்டுள்ளார்.

## அறம் - விளக்கம

அறம் என்பது வரையறைக்கு உட்பட்டது அல்ல. அது இடத்திற்கு ஏற்ப, சூழலுக்கு ஏற்ப மாறும் தன்மையுடையது. அதனால் தான் வள்ளுவப் பெருந்தகைஇனியவை கூறல், இல்வாழ்க்கை, புறங்கூறாமை, அன்புடைமை எனப் பல்வேறு அதிகாரங்களில் அறத்திற்குரிய விளக்கங்களை வரையறுத்துக் கூறுகின்றார். மனத்தூய்மை தான் மனிதன் கடைபிடிக்க வேண்டிய மாபெரும் அறம் என்பதைத் திருவள்ளுவர்.

**“மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்துஅறன்**
**ஆகுல நீர பிற.”**[9]

என எடுத்துரைக்கின்றார். மனத்தூய்மையை இங்ஙனம் அறத்தின் அளவுகோலாக வடித்தெடுத்த திருவள்ளுவர் பொறாமை, பேராசை, கோபம், தீச்சொல் ஆகிய மனதின் நோய்களைப் பட்டியலிட்டு அதிலிருந்து நீங்குவதே அறம் என்றும் அழகாகக் கூறுகின்றார். இதனை

**“அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்றது அறம்.”**[10]

என்ற அடிகளால் அறியலாம். அதேபோல் மலர்ந்த முகம் காட்டி மகிழ்ச்சி தரும் இனிய சொற்களைக் கூறுவதே சிறந்த அறம் என்பதை,

**“முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானாம்**
**இன்சொ லினதே அறம்”**[11]

எனவே அறம் என்பது சமூகத்தால் ஏற்கக்கூடிய, சமூகத்திற்கும், சக மனிதருக்கும் பயன் விளையக்கூடிய செயல்களைச் செய்வதாகும். மனிதனை மனிதத் தன்மை

வாய்ந்தவனாக அடையாளம் காட்டுவது அறம் ஆகும். சமூகத்தால் இகழக் கூடிய, சமூகம் ஏற்காத இழிச் செயல்களைச் செய்யாமல் இருப்பதும் அறமாகும்.

## பிறர் நலம் நாடும் பெருங்குணம்

மிகப் பெரும் அருங்குணங்களை உடைய மனிதர்கள், தன்னலம் நாடாத மாமனிதர்களாக இருப்பர். அத்தகைய சீரிய மனிதர் காரல்மார்க்சு என்பதை "மற்றவர்களின் துன்பத்தைப் போக்கியே பெற்ற மகிழ்ச்சியினால் தம் குடும்பத்துள் உற்றதோர் வறுமைத் துன்பத்தினையும் மறந்தான். உத்தமர்களுக்கு இது குணம் போல!"[12] என்னும் வரிகள் புலப்படுத்தும்.

## வறுமையிலும் செம்மை

வறுமை என்பது மனிதனின் அருங்குணங்களையும் சீரிய கொள்கைகளையும் சூறையாடும் ஒரு கொடூர சூறாவளியாகும். எத்தகைய வறுமையிலும் தனது தனித்துவத்தையும் கொள்கைகளையும் இழக்கக் கூடாது என்பது சீரிய அறமாகும். காரல் மார்க்சு கடும் வறுமைப் போராட்டத்தில் துன்பம் அடைந்த போது அவரது நிலையை அறிந்த நண்பன் இலாசலே அவருக்கு ஒரு பெரிய தொகையைத் திரட்டித் தர எண்ணி செயலில் இறங்குகின்றான். அதனை அறிந்த காரல் மார்க்சு

**"அச்சுறச் செய்வ தான**
**வறுமையில் அழிந்த போதும்**
**பிச்சை நான் எடுக்க மாட்டேன்**
**பேதைமை விடுக"** (கார.மார்.கா.பா.234:3-6)

என்றுரைப்பர். இது வறுமையிலும் செம்மை எனும் அறத்தை விளக்கும்.

## தன் குற்றம் உணர்தல்

தான் செய்த தவறை ஒப்புக் கொள்வது தான், அதனை திருத்திக் கொள்வதற்கான முதற்படியாகும். குற்றத்தை ஒப்புக் கொள்வதற்கு மிகப்பெரிய தைரியமும், அசாதாரண மனமும் வேண்டும். 'அன்னி மகள்' காப்பியத்தில், நீடூரில் வேள் எவ்வி களமருக்கும் பரதருக்கும் நேர்ந்த பூசலைத் தீர்த்து வைக்கும் இடத்தில், களமர் பரதருக்கு தாம் இழைத்த தீமையினை ஒப்புக் கொள்கின்றனர். அதுகேட்ட எவ்வி "குற்றம் புரிவது சிறுமையான செயல்தான் எனினும் அக்குற்றத்தினை உணர்ந்து நாணம் கொள்ளுதல் பெருமைக்குரிய செயல் என்று பேசுவர் அறநூல் வல்லுநர்"[13] என்றுரைப்பது இதற்குச் சான்றாகும்.

## அன்பறம்

உலகினை அழகாக்கும் பலவற்றுள் அன்பே முதன்மையானது. அதனால் தான் வள்ளுவர்,

> **“அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
> **வற்றல் மரந்தளிர்த் தற்று”**[14]

என்று அன்பில்லாத வாழ்க்கையை பாலை நிலத்தில் காய்ந்தமரம் தளிர்த்ததற்கு ஒப்பாகக் கூறுகின்றார். உலகத்தில் தோன்றிய அனைத்து உயிர்கள் மாட்டும் அன்பு செலுத்துவது அறமாகும். அதனால் தான் அறத்திற்கு அன்பு சார்பாக அமையும் என்கிறது திருக்குறள். பகையை வெல்வதற்கும் அன்பே துணை ஆகும்[15] என்றும் விளக்குகின்றது.

இத்தகைய அன்பின் மேன்மையை ஆ.பழநி அவர்கள் தமதுகாப்பியங்களில் அழகுற வெளிப்படுத்துகின்றார். ‘அன்னி மகள் காப்பியத்தில் அன்னி மிஞிலி, “தந்தையே! தந்தையே! நடுவுநிலைமையற்ற விலங்குகள் தந்தனவோ இந்தத் தணியாத துன்பத்தை! பகைக்கும் அன்பையே பாராட்டும் உந்தன் தகுதிக்கோ இப்பெரும் தவற்றினை இழைத்தார்கள். பார்க்க முடியாத துன்பத்தினால் நெஞ்சம் கலங்கி வாழ்நாள் முழுவதும் வருந்த நேர்ந்ததே! நன்றல்லதினைக் காண்பதில் நான் குருடன் என்பாயே! என்றும் பார்வையற்றவனாக இருக்க வைத்தனரே!”[16] என்று அழுது துடிக்க,

> **“கண்ணே! நீ என் கண்ணா யிருக்கக்**
> **கண்ணிலான் என்றெனைக் கருதுவார் உளரோ?”**
>
> (அன்.மக.அ.3.க.4, 68-69)

என்று அவளுடைய தந்தை கூறும் சமாதானம் அன்பின் எல்லையைத் தொடுகின்றது. மேலும் ‘அனிச்ச அடி’ காப்பியத்தில் சுரும்பார் குழலியை இழந்த அருளாழி புலம்பி அழும் காட்சி அன்பின் உன்னதத்தைப் பறைசாற்றுவதாகும். குழலியை இடுகாட்டில் இட்ட அருளாழி; குழலியின் இறப்பிற்குக் காரணமான பகைவர்களை அழிப்பதற்கு வஞ்சினம் உரைக்கின்றான். அப்பொழுது அவன், “கொடிய வாயினையுடைய கூற்றுவனைப் போல கோபம் கொண்டு பகைவரை அழிப்பேன். அப்போரில் வென்றால் மகிழ்வேன். வீழ்ச்சியுற்று இறந்து என்னுயிர் உடலை விட்டு நீங்கினால் குழலியைச் சேர்வதை எண்ணி மகிழ்வேன்.”[17] என்றுரைப்பது அன்பின் வழியது உயர்நிலை என்பதைப் புலப்படுத்தும்.

## விருந்தோம்பும் அறம்

**“உண்டால் அம்மஇவ் வுலகம் இந்திரர்**
**அமிழ்தம் இயைவ தாயினும் இனிதுஎனத்**
**தமியர் உண்டலும் இலரே”**[18]

என்னும் சீர்மிகு மனிதர்களின் வழித்தோன்றல்கள் தமிழர்கள். தமிழர்களையும் விருந்தோம்பலையும் பிரிக்க இயலாது. ‘அனிச்ச அடி’ காப்பியத்தில் அருளாழியும் சுரும்பார் குழலியும் நறவு பட்டினத்தில் நடைபெறும் நன்னனின் பிறந்தநாள் விழாக் காண வருகின்றனர். அங்கு நன்னனின் விருந்தோம்பலால் அகமகிழ்ந்த குழலி,

**“எம்மொழி பேசினும் எதிர்கொண் டினியவாம்**
**செம்மொழி உணவொடு சேர்த்துண் பிக்கும்**
**இவரே விருந்தின் இயல்புணர்ந் தோரே”** (அனி.அடி,அ.1,க.2,29-31)

என்றுரைப்பது விருந்தறத்தை விளக்கும்.

## பசியினைப் போக்கும் அறம்

உலக மக்களின் இயக்கத்திற்கும் துன்பத்திற்கும் ஒருங்கே காரணமாக அமைவது பசிப்பிணி என்னும் பாவி ஆகும். அந்த நோயைக் களைவதே மிகச் சிறந்த அறமாகும். மக்களின் மாண்பினை அழியாமல் காக்கும் ஒப்பற்ற அறமாகும். சாலி மைந்தன் காப்பியத்தின் அடிநாதமாக இது போற்றப்படுகின்றது. மக்கள், தேவர் என்ற இரு சாரார்க்கும் ஒத்த முடிவு உடைய அறமாக மணிமேகலையும் பசிப்பிணி போக்குவதையே கூறுகின்றது. இதனை

**“மக்கள் தேவர் எனஇரு சார்க்கும்**
**ஒத்த முடிவின் ஓர் அறம் உரைக்கேன்,**
**பசிப்பிணி தீர்த்தல்’ என்றே, அவரும்**
**தவப்பெரு நல்அறம் சாற்றினர்”**[19]

என்னும் அடிகள் விளக்கும். இத்தகைய பசியினைப் போக்கி பாரில் உள்ளவரைக் காக்கும் அரும்பணியினை ஆபுத்திரன் சாலி மைந்தன் காப்பியத்தில் செய்து வருகின்றான். அவனது சீரிய கொள்கையினை “கொடும் பசியினால் அல்லலுறுவார்க்குக் அன்பினால் உணவினை ஈந்து கடியபசி என்னும் நோயைப் போதலுறச் செய்து முகப்புன்னகையைக் காண்பதனை சாதலினை எய்தும் வரை தலை அறமாகக் கொள்வேன்”[20] என்னும் கூற்று புலப்படுத்தும். இதன் மூலம் பசிப்பிணியைப் போக்குதல் என்னும் உயர் அறம் உரைக்கப்படுகின்றது.

## உயிர்வதை செய்யாமை

வாயில்லாத உயிர்களை வதைப்பது என்பது மிகவும் கொடிய செயலாகும். ஒன்றும் அறியாத ஜீவன்களை சுய லாபத்திற்காக அழிப்பது என்பது மனிதத்தன்மைக்குப் புறம்பானது ஆகும். அதனால்தான் எவ்வுயிர்களையும் வதைக்காமல் இருப்பதே சிறந்த அறம் என திருக்குறளும் உரைப்பதை,

> **"அறவினை யாதெனின் கொல்லாமை கோறல்**
> **பிறவினை எல்லாம் தரும்"**[21]

என்ற குறளால் அறியலாம். சாலி மைந்தன் காப்பியத்தில் "பேசத் தெரியாத ஊமைக்கும் நிகராக வாழும் உயிர் தம்மைத் தீயெரியின் வாயிலுறச் செய்யும் கொடிய வேள்வி என்னும் நோயில் அகன்றோட ஊர் மக்களின் நோக்கினைத் திருப்பிப் போய் எதிர்த்தல் வாழ்க்கையதனில் போற்றுகின்ற அறமாகக் கொள்வேன்."[22] என்ற ஆபுத்திரன் கூற்றால் அறிய இயலும்.

இங்ஙனம் ஆ. பழநி அவர்களின் காப்பியங்களில் பிறர் நலம் நாடும் பெருங்குணம், தன் குற்றத்தைத் தானே உணர்தல், அன்பு, பசிப்பிணியைப் போக்குதல், உயிர் வதையைத் தடுத்தல் போன்ற அறச் செயல்கள் பாங்காக இடம்பெறுகின்றன. இவ்வாறு காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள், சாலி மைந்தன் காப்பியங்களில் அறத்தின் அரங்கேற்றம் நடைபெறுகிறது.

## பொருளின் ஆட்சி

மனிதனைப் பண்படுத்துவது அறமென்றால், அவனைப் பக்குவப்படுத்தி வெற்றியாளனாக வெளிப்படச் செய்வது பொருளாகும். பொருள் இல்லாதவர்க்கு இவ்வுலகம் இல்லை என்பது வள்ளுவர் வாக்கு. "அன்பு என்னும் தாய் பெற்ற அருள் என்னும் குழந்தை பொருள் என்னும் வளர்ப்புத் தாயினால் பெருமையுறும்"[23] என்கின்றது திருக்குறள். பொருள் என்பது நிறைந்த செல்வத்தை மட்டும் குறிக்காது. வாழ்வைத் தன்னிறைவுடன் வாழ்வதற்குத் தேவையான எண்ணங்களையும், ஆக்கப்பூர்வமான சிந்தனைகளையும் குறிக்கும். தான் படைக்கப்பட்டதற்கான உள்ளார்ந்த நோக்கத்தையும், அர்த்தத்தையும் ஒரு மனிதன் பூரணமாக உணர்வதாகும்.

## தேசப் பற்று

ஒவ்வொரு மனிதனின் உணர்விலும் உயிரிலும் இரண்டறக் கலந்தது தேசப்பற்று ஆகும். இம்மாறாப் பற்றினை தனது 'அன்னி மகள்' காப்பிய வழி ஆ.பழநி அவர்கள் அழகாக விளக்குகின்றார். நீடூரில் போர்க்களத்தில் வேள் எவ்விக்கும், அகுதைக்கும் இடையே போர் நிகழவுள்ளது. அப்போது எதிரி நாட்டின் படைப் பெருக்கத்தைக் கண்டோர் ஒருவர் எவ்வியிடம் கூறி அச்சமுறுகின்றார்.

அதற்கு வேள் எவ்வி “பிறந்தவர் எல்லோருக்கும் பெருமை எய்துமோ! இறந்தவருக்கும் அப்புகழ் எய்துமோ! பிறந்த நாட்டிற்குப் பெரும்பணி ஆற்றி இறந்தவருக்குத் தான் அப்புகழ் எய்துமோ!”[24] என்று கூறுவதன் வாயிலாக தேசப்பற்று எடுத்துரைக்கப்பெறுகிறது.

## உழவும் பொருளும்

**“பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்**
**பசிப்பிணி என்னும் பாவி”[25]**

என்று பசியின் கொடுரத்தை மணிமேகலை விவரிக்கின்றது. அத்தகைய கொடிய நோயைக் களைய வல்ல மருத்துவத் தொழில் புரிபவர் உழவர் ஆவார். அவர் தம் சிறப்பினை ஆ.பழநி அவர்கள் “உலகம் முழுமையும் வணங்கும் ஓர் நற்றொழில் உண்டெனின் அத்தொழில் உழவுத் தொழிலே! உணவுப் பண்டங்களை உண்டாக்கிப் படைக்கும் கைகளுள் தொழத் தகுந்த ஒரு கை உண்டெனின் அக்கை உலகத்திற்கு படைப்பதற்காக ஓர்முனை ஊன்றிய உழவுசால் மருக்கில் உணவினை உண்டாக்கும் ஒப்பிலா கைகளே!”[26] என்று அன்னி மகள் காப்பியத்தில் வேள் எவ்வியின் வாயிலாக விவரிக்கின்றார்.

## அரசியலின் ஆட்சி

பல இராஜ தந்திரங்கள் நிரம்பியது அரசியல் ஆகும். ஒரு முடிவினை எடுக்கும் பொழுது பல கோணங்களில் ஆராய்ந்து யாருக்கும் தீங்கு நேராமல் பார்த்துக் கொள்வதே வெற்றிக்கனியினைத் தட்டிப் பறிப்பதற்கான வழிமுறையாகும். ‘அன்னி மகள்’ காப்பியத்தில் அன்னி, பழம்பகையைக் காரணம் காட்டி திதியனுக்கு அன்னி மிஞிலியை மணமுடித்துக் கொடுக்க மறுக்கின்றான். இதனால் திதியன் குறுக்கையை முற்றுகை இடும் வேளையில் அன்னியிடம் அமைச்சர்;

**“அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுதற்**
**கஞ்சுவ தஞ்சல் அறிவார் தொழிலெனும்**
**அரசியல் நெறியும் அறிந்தனை யன்றோ!”**

(அன்.மக,அ.2,க.2,60-62)

இவ்வாறு கூறுகிறார். இதன் வாயிலாக ஆ.பழநி அவர்கள் தேர்ந்த அரசியல் நெறியினை விரித்துரைக்கின்றார்.

## சூழ்ச்சிப் பகைவரை வீழ்ச்சியடையச் செய்தல்

மிகப்பெரிய சாம்ராஜியங்கள் வீரத்தால் வீழ்ந்ததைவிட சூழ்ச்சியினால் வீழ்ந்ததே அதிகம் என்பர். 'அன்னி மகள்' காப்பியத்தில் ஒற்றர் தலைவன் சூழ்ச்சியின் மூலம் அன்னி, திதியன், வேள் எவ்வி ஆகிய மூவரையும் வீழ்த்தும் வித்தையினை எடுத்தியம்புகின்றான். "ஒற்றுமை சிதையுமானால் ஒவ்வொரு பகுதியாகக் கைப்பற்றுதல் எளிது"[27] என்று ஒற்றன் இயம்புவதிலிருந்து ஒற்றுமையைத் தகர்ப்பதன் மூலம் கோட்டைகளின் வலிமையினையும் தகர்க்க முடியும் என்பதை ஆ.பழநி அவர்கள் விளக்குகின்றார்

## வலியறிதல்

"ஒரு செயலைச் செய்யும் போது செயலின் வலிமையும், தன் வலிமையும், மாற்றானது வலிமையும், துணைசெய்வோன் வலிமையும் ஆராய்ந்தே செய்ய வேண்டும்"[28] என்பது வள்ளுவர் வாக்கு; 'அன்னி மகள்' காப்பியத்தில் அன்னியின் வெண்காற் காரி கோசரின் புலத்தில் புகுந்து மேயும் போது, பற்ற வந்த கோசர்கள் வெண்காற் காரியினால் குற்றப்படுகின்றனர். இதனால் சினம் கொண்ட கோசர்கள் தத்தனைக் கொன்று ஆநிரைகளைக் கவர்ந்து செல்கின்றனர். இதனால் அன்னி வெகுண்டெழ "சினத்தினால் ஒருவனை வெல்லுதல் மிகுபுகழ் அன்று. சினத்தினை வெல்வதே மிகுபுகழ் ஆகும். மேலும் தன்வலிமை, மாற்றான் தனக்குள வலிமை ஆகிய இரண்டினையும் அறிந்து, காலம், இடத்தினை ஆராய்ந்து வினைபுரிவதே அறிவாகும்"[29] என்று அமைச்சர் அமைதிப்படுத்துகின்றார். இங்ஙனம் வள்ளுவரின் வலியறிதலை ஆ.பழநி அவர்கள் எடுத்தியம்புகின்றார்.

## மன்னரைச் சேர்ந்தொழுகுதலும் மாறாத அன்பும்

மன்னரும், மக்களும் இணைந்து வாழ்கின்ற நாடு, எல்லா வளங்களையும் உடையதாக இருக்கும். மன்னன் மீது மக்கள் கொண்ட அன்பு தாய் மீது சேய் கொண்ட அன்பிற்கு இணையானது. 'அனிச்ச அடி' காப்பியத்தில் சுரும்பார் குழலி நறவுப் பட்டினத்தில் பெண்களுடன் நீராடச் செல்கின்றாள். அப்பொழுது பெண்ணொருத்தி, "சிவந்த வானின் ஞாயிற்றைச் செழுமையான மலர்கள் நோக்குவது போல மக்களெல்லாம் அறத்திலிருந்து திரியாத மன்னனின் செங்கோலை நோக்குவர். வானினை நோக்கி வளருமுயிர் குடிகளெல்லாம், கோனினை நோக்கி வாழ்கின்ற குறிப்புடையவர் ஆவர். சிறகுகள் வளராத குஞ்சுகள் தாயின் சிறகுகளில் தங்குதல் போல் குடிமக்கள் அனைவரும் குற்றம் இல்லாத செங்கோலின் குளிர்நிழலில் தங்குவர்"[30] என்று கூறுவதிலிருந்து ஆ.பழநி அவர்கள் மன்னரைச் சேர்ந்தொழுகும் மக்களின் மாறாத அன்பினை எடுத்துரைக்கின்றார்.

## அரசனுக்கும் குறையவில்லை நேசம்

ஒரு நல்ல அரசன், குடிகளை வருத்தாமல் ஆட்சி செய்பவன் ஆவான். குடிகளின் மீது ஆழமான ஈடுபாடும், அக்கறையும் உடைய அரசனே மக்களின் மனதில் உயரிய இடத்தில் அமர்வதற்குத் தகுதியுடையவன் ஆவான். அதனால் தான் வள்ளுவர்,

**“முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறைஎன்று வைக்கப் படும்”**[31]

இவ்வாறு கூறுகின்றார். ஆ.பழநி அவர்கள் அரசனின் கருணையினை ‘அனிச்ச அடி’ காப்பியத்தில் ஆய் எயினன், தன் மகள் சுரும்பார் குழலியை இழந்த கொந்தளிப்பில் நன்னனைப் பழிவாங்கத் துடிக்கின்றான். அவனுடனான போரில் செங்குட்டுவன் படைத் தலைமை ஏற்றதை அறிந்து வருத்தமுற்று, முதியவன் என்பதால் எனக்கு அவ்விடத்தை அளிக்கவில்லையா? என்று வாடுகின்றான். தன்னை ஒரு படைவீரனாகவாவதும் அனுப்புமாறு நார்முடிச் சேரலிடம் வேண்டுகிறான். அப்பொழுது அவன் “மிக உயர்ந்த தோளினையுடைவனே! மென்மையான இயல்பினையுடைய மகளால் நோய்வாய்ப்பட்டு உள்ளம் நொந்து இருப்பதனால் ஓய்வினையும் அமைதியையும் உனக்கு தருவதை விரும்பியதெல்லாமல் காரணம் வேறொன்றும் இல்லை”[32] என்னும் கூற்று அரசனின் ஆழமான கருணையைப் புலப்படுத்தும்.

## நட்பு

நட்பு என்பது மிகவும் உயர்வானது. அத்தகைய உயர்ந்த நட்பானது காரல் மார்க்சு காப்பியத்தில் பேசப்படுகின்றது. “வாழ்ந்திடும் பொழுதும் கூடவே வாழ்ந்தான். வஞ்சகரின் சூழ்ச்சியினால் வீழ்ச்சியடைந்து தாழ்ந்திடும் பொழுதும் கூடவே தாழ்ந்தான். தணல் போன்ற வறுமையினுள் இடறி வீழ்ந்திடும் போதும் கூடவே வீழ்ந்தான். வீறுடன் சாவு என்னும் ஓர் வாள் பிளந்திடும் போதும் காரல் மார்க்சின் அரும்பணி முடித்து இறந்தவன் போன்றுளர் யாரே!”[33] என்று கூறுவதிலிருந்து ஆ.பழநி அவர்கள் உயர் நட்பினைச் சிறப்பிப்பதை அறிய இயலும். சாலி மைந்தன் காப்பியத்திலும் நட்பானது சிறப்பிக்கப்படுகின்றது. அறிவுடையவர்களின் நட்பானது வளர்பிறை போல நாளும் வளர்வதாகவும் பேதையரது நட்பானது தேய்பிறை போல நாளும் தேய்ந்து இறுதியில் இருண்டு விடும் தன்மையினை உடையது என்றும் திருவள்ளுவர் நட்புக் குறித்து உரைப்பர்.[34]

அத்தகைய உயர்ந்த நட்பானது இளஞ்சாத்தனுடன் செட்டியார் எண்மரும் கொண்ட நட்பாகும். நட்பின் ஆழத்தை அவர்களின் செயலால் அறிய முடிகின்றது. நட்பிற்காக உயிரையும் கொடுக்கும் உன்னத உணர்வினை, ''கடப்பதற்கு அரிய கடல் தாண்டிச் சாவகக் கரையில் தொடங்கிய நம் நட்பானது சாவினும் தொடர்க என்று நண்பர் அவனை மடக்கினர்''[35] என்று செட்டியார்கள் எண்மரும் கூறுவதிலிருந்து அறியலாம். வாய்மொழியுடன் நில்லாது சொன்னவாறு உயிர் துறந்த அவர்களின் செயல்பாடு நட்பினைச் சிறப்பிப்பதனை இதன் மூலம் அறிய இயலும்.

**பண்பு**

பண்பு என்னும் சொல்லுக்கு இலக்கணமாக ஆபுத்திரன் திகழ்வதைச் சாலி மைந்தன் காப்பியத்தில் காண முடிகின்றது. எண்ணற்ற நற்பண்புகளின் திருவுருவமாக ஆபுத்திரன் காப்பியம் முழுவதும் காட்சி அளிக்கின்றான். எண்ணற்ற நல்லறங்களுடன் திகழும் ஆபுத்திரன் தன்னுடைய அறச் செயல்களுக்கு பாதகம் வந்ததை உணர்ந்து வேறு இடத்திற்குச் செல்ல நினைக்கின்றான். அப்பொழுது அருகில் உள்ள நண்பர்கள் "செவியினில் கேட்ட பொழுதே கையினால் செவியைச் பொத்தி எம் ஆவி இப்பொழுதே அழிந்தது என்று கூடினர். முன்னர் சூழ்ந்து கையினால் பாதம் பற்றிப் புவிமிசை நின்றன் கால்கள் போகும் வழி தொடர்வோம்"[36] என்று கூறுகின்றனர். இதன் மூலம் ஆபுத்திரன் தனது நற்செயலுக்கும் பண்பிற்கும் பாராட்டாக அன்பினைப் பெறுவதை அறியலாம். இங்ஙனம் பண்பின் மேன்மை சாலி மைந்தன் காப்பியத்தில் பறைசாற்றப்படுகின்றது.

இங்ஙனம், தேசப்பற்று, உழவு, அரசியல், சூழ்ச்சி, வலியறிதல், மன்னர் மக்கள் உறவுநிலை, நட்பின் சிறப்பு, பண்பின் மேன்மை முதலான பொருளின் ஆட்சி காப்பிய மாட்சியினை நன்கு உணர்த்துகின்றது.

## இன்பம்

ஆ.பழநி அவர்களின் காப்பியங்களில் காதலின் பூரணத்தை நுகர முடிகின்றது. புற அழகினை வருணிக்கும் போதை அடிகளில் இல்லை. அக அழகினை இரசிக்கும் கண்ணியமான பாதை இவர் தம் அடிகளில் காணப்படுகின்றது. காதல் ஆற்ற வேண்டிய கடமைக்குத் தடையாக இல்லாமல் படியாகச் செயல்படுகின்றது. இவருடைய காரல் மார்க்சு, அன்னி மகள், அனிச்ச அடி ஆகிய மூன்று காப்பியங்களிலும் இன்பச்சுவை சிறப்புறப் பாடப்பெற்றுள்ளது.

## வருபொருள் உணர்த்தும் இன்பம்

'காரல் மார்க்சு' காப்பியத்தில் காரல் மார்க்சுக்கும் சென்னிக்கும் இருமணம் ஒன்றிய திருமணம் நடைபெறுகின்றது. அதன்பின் அவர்தம் இன்ப வாழ்வினை விரித்துரைக்கும் பொழுது அவர்கள் எதிர்கொள்ளப் போகும் துன்பங்களையும் ஆ.பழநி அவர்கள் விளக்குகின்றார். "இன்ன வண்ணமே வாழ்க்கையின் போக்கென்பது இறுதியானதால் காரலின் நெஞ்சிலே வண்ண வண்ணமாய் இனிய கனவு ஊர்வலமாய் வந்து வந்து தோன்றிடச் சென்னியை நன்மணம் புணர்ந்து எல்லையில்லாத இன்பத்தில் நாளும் மூழ்கினான். இனிவரும் நாளெல்லாம் சொல்ல முடியாத துன்பம் தான் என்பதைப் பார்தறிந்தவர் போல் நலம் துய்த்தனர்."[37] என்று ஆ.பழநி அவர்கள் தமது காப்பியத்தில் உரைப்பதிலிருந்து வருபொருள் உணர்த்தும் வகையில் காதலை அமைத்திருப்பது சுட்டத் தக்கது.

## பண்பாடு நடனம் புரியும் அடிகளும் காதலும்

காரல் மார்க்சுக்கும், சென்னிக்கும் இடையேயான காதல் தனிச்சிறப்பு வாய்ந்தது. அதனால் தான் அது கொடிய வறுமையினாலும் கொடூர இழப்புகளினாலும் துளி அளவும் குறையாது நிலைத்திருந்தது. வறுமைக்கு வறுமையினை வழங்கிவிட்ட அவர்களது வாழ்வானது காதலுக்கும், கனிவான அன்பிற்கும் ஒருபோதும் வறுமைதனை வழங்கவில்லை. "மனைவியின் மகிழ்ச்சியைக் கண்டு கணவன் இன்புறுதல்; கணவனுடைய மகிழ்ச்சியைக் கண்டு மனைவி இன்புறுதல்; மனைவியின் வருத்தத்தைக்கண்டு கணவன் துன்புறுதல்: கணவனுடைய வருத்ததைக் கண்டு மனைவி துன்புறுதல்: இவ்வளவே காதலரின் வாழ்வு"[38] என்ற மு.வரதராசனின் வார்த்தைகளுக்கு இருவரும் இலக்கணமாகத் திகழ்ந்தனர். அத்தகைய புனிதமான காதலைப் பாடும் பொழுது கவிதை வரிகளும் கண்ணியத்துடன் அணிவகுக்க வேண்டும். பொதுவாக தலைவன், தலைவியின் இன்ப வாழ்வினைப் பேசும் பொழுது கவிஞன் கண்ணியத்தின் எல்லைக் கோட்டினைத் தாண்டி நிற்பதும் உண்டு. நளவெண்பாவில் நளன், தமயந்தியின் இன்ப வாழ்வுதனைப் புகழேந்திப் புலவர்,

**"ஒருவர் உடலில் ஒருவர் ஒதுங்கி**
**இருவர் எனும் தோற்றம் இன்றிப் - பொருலெங்**
**கனற்கு ஏயும் வேலானும் காரிகையும் சேர்ந்தார்**
**புனற்கே புனல்கலந்தாற் போன்று"**[39]

என்று விரித்துரைக்கின்றார். ஆ.பழநி அவர்கள் "உணர்ச்சியும், உயிரும் ஒத்த ஆழ்ந்த அன்புடையவரானார். அவரே புணர்ச்சியும் உடையவராயின் அவரின் நிலையைப் புகலல் உண்டோ? கொத்து மலரும், தேனை எடுத்துண்ணும் வண்டும் ஆனார். குணத்தினால் சிறப்பினையுடைய சென்னிக் கொடி காரல் என்னும்

மரத்தினைச் சேர.”[40] என்று காரல் மார்க்சு, சென்னியின் காதலை உரைப்பதிலிருந்து காதல் அடிகளிலும் பண்பாடு நடனமிடுவதை அறிய இயலும்.

## காதலின் சீவநாடியை எடுத்துரைக்கும் பாங்கு

'அனிச்ச அடி' காப்பியத்தில் அருளாழிக்கும் அனிச்ச அடிக்கும் இடையேயான காதல், காதலின் சீவநாடியை எடுத்துரைக்கும் விதமாக அமைந்துள்ளது. ஆழமான காதலின் நிலைப்பாட்டினால் இருவருக்குமிடையே நிகழும் சிறு சிறு ஊடலும் காவியமாகின்றது. வெளிப்படையாக இருவரும் காதலை உரைக்காவிடினும் அவர்களது காதலின் உன்னதம், படிப்பவரை மெய்சிலிர்க்கச் செய்கின்றது. ஒன்றைப் பிரிந்து ஒன்று வாழாத அன்றில் பறவையென அருளாழியும், அனிச்ச அடியும் நம் நெஞ்சில் நிலைக்கின்றனர். அருளாழியின் வெற்றிச் செய்தி விண்ணை எட்டி பிளக்கச் செய்தது மட்டுமன்றி, அனிச்ச அடியையும் விண்ணை அடைய வைத்தது. அவளது நிலையினைப் பரணர், "காளையின் கைகளின் ஆற்றலால் காற்றினால் உதிர்ந்த பூளையும் பறந்து போனது! போனது! வெற்றிச் செய்திகள் செவியினில் விழவிழ ஏற்பட்ட பேராசையினால் மூண்டெழும் மனத்தாளாய் 'அருள நீ யாண்டுள' என்றவள் அடங்காக் குரலாற் கூவினாள். ஆதலின் குருதி வாய்வழிப் பெருகிட வஞ்சியாள் நம்மை விட்டுப் போயினாள்"[41] என்கிறார். அப்பொழுது அருளாழி அனிச்ச அடி தன்னிடம் உரைக்குமாறு கூறிய செய்தியினைக் கேட்கின்றான். அதற்குப் பரணர்,

**"உறவினால் உறுவது ஒழிகலாத் துன்பமே**
**இறவினால் பெறுவது எண்ணிலா வின்பமே**
**இவையே அனிச்சம் இசைத்தன"** (அனி.அடி,அ-5,க-5,89-91)

என்றுரைப்பர். அருளாழி தனது வாயில் வெளிப்பட்ட சொல் அம்புகள் அனிச்ச அடியின் நெஞ்சில் தைத்ததனை எண்ணி நொடிப்பொழுதில் உயிர் துறக்கின்றான். இதன்வழி காதலின் சீவநாடியை அறிய முடிகின்றது.

## கண்களின் வழி மனம் ஒன்றிய காவியம்

அன்னி மகள் காப்பியத்தில் திதியனும். அன்னி மிஞிலியும் முதல் சந்திப்பிலேயே தங்கள் உள்ளத்தைப் பறிமாறிக் கொள்கின்றனர். அந்தக் காதலின் இனிமை பாவலர்மணியின் வைர வரிகளில் நடனம் புரிவதைக் காண முடிகின்றது. பொதுவாக காதலில் உணர்வு மயங்கிய நிலையினைக் காணலாம். சான்றாக திருக்குறளில் ஒரு தலைவன் தனது தலைவியின் அழகு குறித்துக் கூறும்போது விண்மீன்கள் வானத்து நிலவிற்கும் தலைவியின் முகத்திற்கும் வேறுபாடு காண முடியாமல் கலங்கித் திரிவதாகக் கூறுகிறார். இதனை,

**“மதியும் மடந்தை முகனும் அறியா**
**பதியிற் கலங்கிய மீன்.”**[42]

என்ற குறளால் அறியலாம். இதற்கு இணையான ஒரு காட்சி அன்னி மகள் காப்பியத்தில் இடம்பெறுகின்றது. அன்னி மிஞிலியிடம் தன் மனதினைப் பறிகொடுத்த திதியன், “அசையாத ஓவியம் அசைதலும் உண்டோ! விசையினால் இயங்கும் இயந்திரமென உள்ளம் தொடருதல் என்னே! பகைவர் சூழ்ந்த போர்க்களத்தில் அழிக்கும் வெம்படைக்கு அஞ்சாத நெஞ்சம் விழியுரைக்கும் மொழிக்கு அழிவதென்ன புதுமை! யானைகள் சினத்தாலும் கலங்காத என் மனம் சுருண்ட கூந்தலுக்கு இன்று தோற்கவும் நேர்ந்ததே! பகைவர்க்கு பணியாத என் நலமும், பெருமையும் இசை போன்ற சொல்லினையுடையவளுக்குப் பணிந்ததும் உண்டுகொல்! அவள் யாரென்று அறியேன். எனது ஆசையையும் மொழியேன்! தேரென்று வந்தாள் மனமும் தேர்கிலேன்! எவ்வூரினளோ? எந்நாட்டினாளோ?”[43] இவ்வாறு உரைக்கின்றான். இங்ஙனம் காதல் அளிக்கும் இனிய சுமைகளை ஆ.பழநி அவர்கள் பட்டியலிடுகின்றார்.

## சிறையை நாடும் இனிய கைதியாக திதியன்

பெரும்பாலான மனிதர்கள் நாடுவது, அன்புக்குரியவர்களின் மனதில் பெறும் ஒரு சிறிய இடத்தைத் தான். இந்த உலகிலேயே விலைமதிப்பில்லாத இடமானது, தன் உள்ளம் கவர்ந்த கள்வர்களின் கள்ளமற்ற இதயம் ஆகும். அத்தகைய இனிய இடத்தினையே தான் வசிக்க விரும்பும் சிறையாகத் திதியன் கூறுகின்றான். அன்னி மிஞிலியின் மனச்சிறையில் தங்க விரும்பும் திதியனின் காதலின் ஆழத்தினை “புதிதாகப் பூத்த இளங்கொடி போன்றவளே! நின் தோள் கிடக்கும் மென்மையான பூமாலையாய் என் தோள் கிடக்க ஏன் இந்த தயக்கம்? தாழ்வில்லாத நின்னுடைய மனச்சிறையில் தங்கி நாளும் இன்பத்தில் மூழ்குவேன். முடிவில்லாக் காலம் விடுதலையினை விரும்பாத கைதியாகக் கிடப்பேன் குற்றம் இல்லாதவளாகிய நின்னை நாளை மணம் புரிந்தே இங்ஙனம் வாழ்வேன்”[44] இவ்வாறு திதியன் மிஞிலியிடம் உரைப்பதன் வழி அறியலாம்.

## அறியாப் பிழையில் விளைந்த இன்பம்

சாலி மைந்தன் காப்பியத்தில் இளஞ்சாத்தன், சாலியின் இணைவின் மூலம் இன்பம் குறித்த செய்தி உரைக்கப்பட்டுள்ளது. இந்த இன்பம் இயல்புக்கு மீறிய இன்பமாக அறியாப் பிழையால் விளைந்த இன்பமாக இடம்பெறுகின்றது. துன்பமே வாழ்க்கையாகக் கொண்ட சாலி தன் வாழ்க்கையை முடித்துக்கொள்ளச் செல்லும் பொழுது எதிர்பாராத விதமாக இளஞ்சாத்தனுடன் இணைகின்றாள். இந்நிகழ்வினைப்

பாவலர்மணி அவர்கள் “புனலோடும் வழியினில் புல் சாய்ந்து கிடப்பது போல் நினைவோடு செயல் யாவும் நீங்கினாளாய்க் கிடக்கின்றாள். அனலோடு நெய்யானது உருகும். அதுபோல நெஞ்சமானது உருகி இன்பத்துள் புனலோடு புனல் கலந்தது போலானார்?”[45] என்பர். இங்ஙனம் இன்பச் சுவையானது சாலி மைந்தன் காப்பியத்தில் இடம்பெறுகின்றது.

இங்ஙனம் ஆ.பழநி அவர்களின் காப்பியங்களில் காதல் தனிப்பெரும் இடத்தினைப் பெற்றுள்ளமையைக் காண முடிகின்றது. காதலுக்கான சரியான இலக்கணத்தை அவர் தம் காப்பியமாந்தர்கள் மூலம் உலகிற்குத் தெரியப்படுத்துகின்றார். இளங்கோவடிகள் குறித்து ம.ரா.போ. குருசாமி, “இளங்கோவடிகள் காதலை வருணிக்கின்றபோதுகூட நாகரிக வரம்பு இகவாத பெருமிதப் பண்பாளர். பிற இலக்கியங்களில் தலைவன்-தலைவியர் சேர்க்கையை விதந்தோதும் புலவர்கள் பாடித் திளைப்பதையும், பயில்வோர் நெஞ்சத்தில் நரகப் புழு நெளியச் செய்வதையும் பார்த்து உணர்ந்தால்தான் இளங்கோவடிகளின் சான்றாண்மை புலனாகும்.”[46] என்று கூறுவார். இக்கூற்று பாவலர்மணி அவர்களுக்கு முற்றிலும் பொருந்துகின்றது.

## வீட்டினைத் தேடாத காப்பியப் படைப்புகள்

அறம், பொருள், இன்பத்தினைத் தனது காப்பியங்களில் புனைந்துள்ள ஆ.பழநி அவர்கள் வீடுபேற்றினை இயம்பவில்லை. அவரது காப்பியங்களில் அவர் தம் சீர்மிகு இலக்கியத் தேடலே காணப்படுகிறதே தவிர இறைத்தேடல் காணப்படவில்லை. எனினும் காப்பியத்திற்கான பூரண அடையாளத்தினைப் பெற்றுள்ளன.

## தன்னிகரில்லாத் தலைவன்

ஆ.பழநி அவர்களின் காப்பியங்களில் படைக்கப்பட்டுள்ள காப்பியத் தலைமகன்கள் எண்ணற்ற பயனுள்ள விழுமியங்களைப் பெற்று தன்னிகரில்லாத அசாதாரண மனிதர்களாய்த் திகழ்கின்றனர். தன்னிகரில்லாத் தலைவன் என்ற சொல்லாடலுக்கு இவர்கள் மிகவும் பொருத்தமாக அமைகின்றனர்.

## காரல் மார்க்சு காப்பியத்தில் காரல் மார்க்சு

நன்றியறிதல், பொறுமை, இன்சொல், இன்னா செய்யாமை, கல்வி, ஒப்புரவு, அறிவு, நட்பு ஆகிய எட்டும் ஆசாரமாகிய ஒழுக்கத்திற்கு வித்து என்கிறது. ஆசாரக் கோவை[47] தொழிலாளர்களும் எங்கல்சும் செய்த உதவிகளுக்கு நன்றி மறவாமல் இருத்தல், தன் வாழ்க்கை தன்னை நோக்கி விடுக்கும் சவால்களுக்கு பொறுமையையே எதிர் அம்புகளாகத் தொடுத்தல், அன்பு நிறைந்த மனைவியிடமும், குழந்தைகளிடமும் இனிய சொற்களையே கனிவாகப் பேசுதல்,

எவ்வுயிருக்கும் ஊறு நினையாமல் நல்லவற்றையே செய்தல், பரந்து விரிந்த அனுபவக் கல்வியுடன் விரிந்து அகன்ற ஏட்டுக் கல்வியையும் பெற்றிருத்தல், தொழிலாளர்களின் ஒற்றுமையைப் பேணுதல், எங்கல்சுடன் மிகவும் புனிதமான உன்னத நட்பு ஆகிய எண்குணங்களையும் தன்னகத்தே கொண்டு மாமனிதராக காரல் மார்க்சு திகழ்கின்றார்.

## தன் குற்றத்தினை எண்ணிக் கலங்கும் காரல் மார்க்சு

தன் குற்றத்தைத் தான் உணர்தல் தான் அகிலத்தில் உயர்ந்தது ஆகும். சமூகம் தந்த கொடூர வறுமைப் போராட்டத்தினால் காரல் மார்கசு கடன் வாங்குகின்றார். அதனைச் செலுத்துவதற்கான வழிமுறையும் அவரிடம் இல்லை. வீட்டினை முற்றுகையிடும் கடன்காரர்களைக் குழந்தைகள்,

> **“அப்பாவீட் டினில்இல்லை. அவசரமாய்**
> **ஒருவர்வந் தழைத்துப்போனார்;**
> **எப்பொழுது வருவேனென் றிசைத்திடவும்**
> **இல்லை”** (கார.மார்,கா.பா-279:3-6)

என்று பொய்மொழி கூறி அனுப்புகின்றன. இச்சம்பவத்தின் போது பிரச்சினை தீர்ந்ததென காரல் மார்க்சு மகிழவில்லை. மாறாக மாறாத்துயர் கொள்கின்றார். “பிள்ளைகளின் பொய்மொழியினால் பிரச்சினை சற்று ஒதுங்கியது பெரும்பேறு என்னும் குள்ளமனம் அவருக்கு இல்லை. குழந்தைகள் தம் வாயால் கூறுகின்ற மெய்மொழிகளைக் கேட்டுக் கேட்டு வெள்ளம் என மகிழ்ச்சியுற வேண்டிய நான் பொய்மொழியை விரும்பிக் கேட்கும் கள்ளன் என ஆனேனே!”[48] என்று காரல் மார்க்சு புலம்புவதிலிருந்து அரசு மனசாட்சியின் ஆட்சி அவரது நற்பண்பிற்குச் சாட்சி சொல்வதை அறிய முடிகின்றது.

## அன்னி மகள் காப்பியத்தில் திதியன்

வீரம், காதல் இரண்டையும் தமது இருகண்களாக உடையவன் திதியன். ஆண்மகனுக்குத் தேவையான அரும் குணத்தைத் தன்னகத்தே கொண்டு சீர்மிகும் தலைவனாக அன்னி மகள் காப்பியத்தில் உலா வருகின்றான்.

## பிறரின் துன்பத்திற்காக இரங்கும் திதியன்

வேள் எவ்வியை இழந்த ஏலங்குழலி வாட்டமுற்றுத் தவிக்கின்றாள். அவளுடைய துன்பத்தினைத் திதியனால் பூரணமாக உணர முடிகின்றது. ஏனென்றால் அன்புக்கினியவர்களின் இழப்பு, இறந்தவரை விட இருப்பவர்களுக்குத் தான் அதிகம் என்பதைத் திதியனால் உணர முடிந்தது. அதனால் ஏலங்குழலியை

நினைத்து வருந்தி, “ஆறுதலை இழந்தாய். நினக்கு எத்தகைய அருஞ்சொல்லால் தேறுதல் மொழிகுவேன் அருந்துயர் அன்றோ நின்னை அலைக்கழித்தது”[49] என்று கூறுகின்றான். இதன் மூலம் பிறர் துன்பத்திற்கு இரங்கும் திதியனின் சீரிய குணத்தை அறிய இயலும்.

## வீரத்தின் விளைநிலம் திதியன்

திதியனுக்கும் கோசர்களுக்கும் இடையே கடும்போர் நிகழ்கின்றது. திதியனின் வீர முழக்கம் விண்ணைத் தொடுகின்றது. கோசர்களைக் கூண்டோடு அழிக்க அவர்களின் கோட்டைக்குத் தீயூட்டுகின்றனர். அப்பொழுது கோசர்கள் “வெம்மையான நெருப்பிற்கு அஞ்சி வாயிலை நோக்கி விரைபவர் கண்களையே நெருப்பாக உடைய திதியனைக் காணும் தோறும் இருதலைக் கொள்ளி எறும்பாகி வருதலும் பின்னர் பெயர்தலும் என்று அலமரலுற்றனர். அப்பொழுது நெருப்பினால் சிலர் உடல் கருகினர்; பலர் மயக்கமடைந்தனர்; திதியனால் சாதலைக் காட்டிலும் தீயினால் சாதல் இனியதாமென எண்ணினர்”[50] இவ்வாறு செய்ததாக ஆ.பழநி அவர்கள் கூறுவதிலிருந்து திதியனின் வீரத்தினை அறியலாம்.

## காதலில் கசிந்து உருகும் திதியன்

அன்னி மிஞிலியின் மீது தூய்மையான அன்பும், ஆழமான காதலும் கொண்டவன் திதியன். அவ்விரண்டும் தான் அன்னியின் கண்களைப் பறித்த பகைவர்களைச் சூறையாடச் செய்தது. அதனால் நெகிழ்ந்த அன்னி மிஞிலி “கண்ணைக் கெடுத்த கயவர்களைக் கெடுத்தனை! என்னைக் கொடுப்பதல்லாமல் இனியொரு கைம்மாறு என்ன காட்டுவேன்?” இவ்வாறு கூற அதற்கு திதியன் மறுமொழியாக “ஒரு கை மற்றொரு கையின் உதவிக்காக பெருகவும் நன்றி பேசுதல் உண்டோ? நினக்கு நேர்ந்த பழியை எனக்கு நேர்ந்த பழியாக எண்ணுதல் அன்றோ என்கடன்”[51] என்று உரைப்பதிலிருந்து அவனது ஆழமான காதலை அறிய இயலும்.

## அனிச்ச அடி காப்பியத்தில் அருளாழி

அன்பே வடிவானவன் அருளாழி. ஆழமான காதல், நாட்டுப்பற்று, வீரம் போன்ற நற்பண்புகளின் உறைவிடமாக அருளாழி திகழ்கின்றான். காதலுக்காக உயிரையும் கொடுத்த உத்தமன்.

## மனைவியின் மீது மாறாத நேசம் உடையவன் அருளாழி

அருளாழி மனைவியின் மீது ஆழமான அன்பு வைத்திருந்தவன். சுரும்பார் குழலி இறந்தவுடன், இடுகாட்டில் இருந்து புலம்பும் காட்சி இரும்பு மனத்தாரையும் கரையச் செய்வதாகும்.

**"முந்தித் தவம் கிடந்து முந்நூறு நாள் அளவும்**
**அந்தி பகலாச் சிவனை ஆதரித்துத் - தொந்தி**
**சரியச் சுமந்து பெற்ற தாயார் தமக்கோ**
**எரியத் தழல் மூட்டுவேன்…."[52]**

என்ற பட்டினத்தாரின் அடிகள் தாயின் மேன்மையினை நமக்கு உணர்ந்துகின்றன. தாய்க்கு நிகரான தாரத்தின் மேன்மையினை அனிச்ச அடியில் அருளாழி உரையின் வழி உணர்த்துகின்றார். குழலியைக் கிடத்திய இடுகாட்டில் அருளாழி "நீல விழிகளும், நெய்யணிந்த கூந்தலும், தூயபல் தோன்ற வழங்கிய நகையும், ஏழிசையினையும் நாணமடையச் செய்த இன்சொல்லும், தாழிசையும் அஞ்சும் தளர்படு நடையும், அன்பென்று உரைக்கப்படும் அளப்பில்லாத தன்மையினை கண்முன் வாழ்ந்து காட்டிய திறனும், தன் பெற்றோர் மற்றும் குழலியின் பெற்றோர் ஒரு மன முடையவராகி பெருநலக் குறுமகள் இவளென்று பேசும் வகையில் இல்லறம் போற்றிய எழிலும் விருந்தோம்பலோடு சொல்லறம் பேணுவதில் சோர்விலாத் தகைமையாளை என்று நான் காண்பேன்! இனி எந்த உலகம் சென்று நான் காண்பேன் சேயிழாய் அம்மாவோ!"[53] இவ்வாறு புலம்புவதிலிருந்து மனைவி மீது அருளாழி கொண்ட ஆழமான காதலை அறிய இயலும்.

## நாட்டுப்பற்று நிரம்பிய அருளாழி

துளு நாட்டின் அரசன் மற்றும் அவனுடைய படைத் தலைவன் மிஞிலி ஆகிய இருவரையும் அழிக்க அருளாழி நார்முடிசேரல் மற்றும் செங்குட்டுவனுடன் சேர்ந்து திட்டம் தீட்டுகின்றான். போர்த் தந்திரம் மற்றும் போர்க்கள உத்திகளை ஆராய்கின்றான். அப்பொழுது அருளாழி "பிறந்த மண்ணின் பெரும்பழியினைத் துடைக்காதவர் இறந்தவர் என்பதே இப்பெரிய நிலத்தின் வழக்கெனக் கொண்ட மறக்குல மைந்தர் நிலத்தின் சுமையென நிற்க விரும்பாதவர்"[54] என்று கூறுவதிலிருந்து அவனது நாட்டுப்பற்றினை அறிய இயலும்.

## வீரத்திருமகன் அருளாழி

சுரும்பார் குழலியின் மரணத்திற்குக் காரணமான மிஞிலியை அருளாழி அழித்த விதம் அவனது வீரத்திற்குச் சான்றாகும். மிஞிலியின் உயிரைக்

கொய்வதற்கு அருளாழி போர்க்களத்தில் போராடுகின்றான். இறுதியில் வெற்றி தேவதை அவனை முத்தமிடுகின்றாள். வீரமும், துடிப்பும் நிரம்பிய அருளாழியின் போர்த் திறனை, ''ஈரிரு நாழிகை இடைவிடாது போர்செய்தும் போரின் முடிவு புலப்படவில்லை. ஆர்வம் குறையாது அரும்போர் அருளாழி இயற்றச் சோர்வினால் மிஞிலியின் சுடர்வாளினையுடைய கையில் ஓர் நடுக்கம் கண்ட நாயகன் அருளன் முன்னினும் விரைவினை இரட்டிப்பாக முடுக்கினான். வேலும், கேடயமும் வீழ்ந்தது கண்டு நெடுவேலினைப் புகுத்தவே மண்ணில் மலையென மிஞிலி கிடந்தனன்''[55] என்ற அனிச்ச அடியின் அதிரும் காட்சியின் வழி அறிய இயலும்.

## சாலி மைந்தனில் ஆபுத்திரன்

சாலி மைந்தன் ஆபுத்திரன் எண்ணற்ற நற்பண்புகளைத் தன்னகத்தே கொண்டு தன்னிகரற்ற தலைவனாகத் திகழ்கின்றான். உலகத்து உயிர்களின் பசிப்பிணியினைப் போக்குதல், வாயில்லாத உயிர்களை வதை செய்வதைத் தடுத்தல், எண்ணற்ற செயல்களுக்கு முன்னோடியாகத் திகழுதல், வாழ்நாளைப் பயனுள்ள வகையில் கழிக்க விரும்புதல், தாய் தந்தையர் மீது அளவற்ற நேசம் கொண்டிருத்தல் என ஆபுத்திரன் அழகான வாழ்க்கைக்கு அரிச்சுவடியாகத் திகழ்கின்றான்.

## பசிப்பிணியைப் போக்கி உயிர் வதையைத் தடுப்பவன்

உயிர்களின் பசிப்பிணியைப் போக்குதலே தலையாய அறமாகும். உலகம் இயங்க பசி என்னும் உணர்வே அடிப்படையாகும். எண்ணற்ற இழிகுணங்கள் மானிடரின் மனதில் புகவும் பசியே அச்சாணியாகச் செயல்படுகின்றது. உயிர்களை வதைக்காமல் காப்பது மேலான அறமாகும். இந்த இரண்டு அறங்களும் ஆபுத்திரனை அணிசெய்யும் பாங்கினை, ''கொடும்பசியால் அல்லலுறுவார்க்குக் காதலினால் உணவீந்து கடியபசி நோயைப் போதலுறச் செய்து முகப் புன்னகையைக் காணல் சாதலினை எய்தும் வரை தலை அறமாகக் கொள்வேன். பேசத் தெரியாத ஊமைக்கு நிகராக வாழும் உயிர் தம்மைத் தீயெரியின் வாயிலுறச் செய்யும் கொடிய வேள்வி என்னும் நோய் அகன்றோட ஊரவரின் நோக்கினைத் திருப்பிப் போய் எதிர்த்தல் வாழ்க்கைதனில் போற்றும் அறமாகக் கொள்வேன்''[56] என்ற ஆபுத்திரன் கூற்றலிருந்து அறியலாம்.

## அருஞ்செயல்களின் அடித்தளமாகத் திகழ்பவன்

எந்தவொரு நற்செயலுக்கும் துவக்கம் என்பது அடிப்படை அத்தகைய துவக்கமாகத் திகழ்பவர்கள் அரிய மனிதர்களாக என்றும் நிலைத்து

நிற்பவர்களாவர். அத்தகைய தனித்தன்மை வாய்ந்தவன் ஆபுத்திரன் என்பதை அவனது அரிய செயல்களின் மூலம் அறிய முடிகின்றது. இதனை ‘‘உழைத்துண்ண முடியாதுள்ளோர் பலரையும் அழைத்துண்ணச் செய்யும் அன்புறு வாழ்க்கையினையுடையவன். அறமும் கலையும் கலைமகள் அகத்தில் புறமாகக் கிடந்த சிறுமையை மாற்றிக் கல்வியும், கலையும், கருதும் நன்னெறியும் பொருந்துமாறு செய்த நல்லறிவாளன்”[57] என்ற பாடலால் அறியலாம்.

## பயனுள்ள வகையில் வாழ்பவன்

மனிதர்களின் பிறப்பானது அவர்களின் செயல்களால் அர்த்தம் அடைகின்றது. எந்தவொரு சுவடும் இன்றி மறைந்து விடுபவர் பலர். சமூகத்திற்கு தீமையைத் தந்து மோசமான விளைவை ஏற்படுத்துவர் சிலர். முழுமையான நன்மையின் மூலம் சமூகத்தை வளப்படுத்துபவர் ஒரு சிலரே ஆவர். அத்தகைய உயரிய உள்ளத்தைக் கொண்டவன் ஆபுத்திரன் என்பதை, ‘‘காதலினால் பன்னாடும் சுற்றிப் பார்க்கும் கருத்துடையேன் அல்லேன் யான்; உயிர்க்குலத்தின் தீது அகலத் தொண்டு செய்யும் நாளே வாழ்நாள். செய்யாத நாளெல்லாம் செத்த நாளே. ஈதெனது குறிக்கோளாம். குறிக்கோள் நீங்கி எவ்வாறு நான் வருவேன்’’[58] இங்ஙனம் இளஞ்சாத்தனிடம் அவன் கூறுவதிலிருந்து அறியலாம்.

## தாய்-தந்தை மீது கொண்ட உன்னத அன்பு

உலகத்தில் உள்ள அனைவருக்கும் தாய்-தந்தையர் மீது கொண்ட நேசமானது பொதுவான பண்பாகும். தாய்-தந்தையின் அரவணைப்பின் வளராத போதும் ஆபுத்திரனிடம் முகிழ்ப்பது தான் அதிசயமான ஒன்றாகும். கண்ணால் காணாத தாயை இழிவாக அவன் ஒருபோதும் கருதியது இல்லை. “நூல்வழியொழுகும் அபஞ்சிகனின் மகனென்று நுவல்வதிலும் சாலி மகன் என்று சொல்லல் உயர்வல்லாமல் தாழ்வில்லை. திரட்டிய பன்னூல் கற்ற அபஞ்சிகனார் கொடுமையின் முன் வினைவயத்தால் செய்ததனைப் பாவமெனச் சொல்வார் யார்”[59] என்று ஆபுத்திரன் கூறியதிலிருந்து அறியலாம். மேலும் அவனது தந்தை இளஞ்சாத்தன் இறந்த போது “என்னை அவன் தன் மகனென்று எப்படியோ கண்டதுபோல் தன்னையும் என் தந்தையெனல் தானறியாது ஒழிந்தேனால்; மின்னை உமிழ்கின்ற பொற்புதையல் என்னருகில் தோன்றியும் அப்பொன்னை அறியாதவொரு வன்குருடாகப் போனேனே”[60] என்று துடித்து தாய் தந்தையாரியின் இறப்பைத் தாங்க முடியாமல் இறந்து போகின்றான். இங்ஙனம் உயிரைக் கொடுக்கும் உன்னத மைந்தனாக ஆபுத்திரன் திகழ்கின்றான். இங்ஙனம் எண்ணற்ற நற்பண்புகளை தன்னகத்தே கொண்ட தலைசிறந்த தலைமகன்களை நான்கு காப்பியங்களும் கொண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## மலை, கடல், நாடு, வளநகர் வருணனைகள்

மலை, கடல், நாடு, நகர் போன்றவற்றின் வருணனைகள் காப்பியத்திற்கு அழகு சேர்க்கும் அணிகலன்களாகத் திகழ்கின்றன. காப்பியத்தின் கட்டமைப்பினை காத்து நிற்பதற்கும் இவ்வருணனை துணை செய்கின்றன. மலை மற்றும் கடல் வருணனைகள் 'அனிச்ச அடி' காப்பியத்திலும் நாடு, நகர் வருணனைகள் காரல் மார்க்சு மற்றும் அனிச்ச அடி காப்பியங்களிலும், அன்னி மகள் காப்பியத்தில் கடல் மற்றும் நாட்டு வருணனைகளும் நாடு, நகர், ஆற்று வருணனைகள் சாலி மைந்தன் காப்பியத்திலும் இடம்பெற்றுள்ளன.

### மலை வருணனை

மலையில் பொதிந்து கிடக்கும் எண்ணற்ற வளங்களை எவ்வித மிகைப்படுத்துதலும் இன்றி, ஆ.பழநி அவர்கள் மிக இயல்பாக வருணிக்கின்றார். 'அனிச்ச அடி' காப்பியத்தில் நறவுப்பட்டினம் செல்லும் சுரும்பார் குழலி நன்னனின் பிறந்தநாள் விழாவினைக் கண்டு மறுநாள் நீராடச் செல்கின்றாள். அப்பொழுது மலை "நெல் இருக்கும். தேன் இருக்கும். நீர் இருக்கும். நீல மணி போன்று கல் இருக்கும். இங்கா! வறுமையிருக்கும்? பல்லுயிர்களுக்கும் வாழிடம் என விளங்கி வற்றாத வளங்கொழிக்கும் எழில் மலை இ∴தென்பேன். சந்தனம் இருக்கும். மலைச் சரிவில் தினை இருக்கும். ஏந்து கிளையில் இனிய கனியிருக்கும். பூந்தாதில் புகுந்து ஆடி வெளியில் போகாத வண்டு இருக்கும். எத்தனை முறை வழங்கினாலும் குறையாத எண்ணிலா வளம் இருக்கும். ஏலம் இருக்கும். இருங்கறியின் நல்விளைவினால் உலகம் விலைபேச நல்ல பொருள் குவிக்கும். வேண்டாமை வாய்ந்த விழுமிய புகழினையுடையோர் பாட்டிலெல்லாம் தூண்டா விளக்காகத் துலங்கிப் பொலிந்திருக்கும். தாழ்ச்சியில்லாத புகழைத் தனக்கே உரிமை கொள்ளும் ஏழில் மலையி∴தென்பேன்."[61] என்று வருணிக்கப்பட்டுள்ளது.

### ஆற்று வருணனை

## இருவகைக் கூத்தும் பாங்குற ஆடும் குமரி ஆறு

ஆற்று வருணனை கற்போரின் நெஞ்சினைக் கொள்ளை கொள்ளும் வகையில் 'அனிச்ச அடி' காப்பியத்தில் அமைந்துள்ளது. குழலி நீராடச் செல்லும் பொழுது பெண்ணொருத்தி "கயலாகிய கண்களால் நோக்கியும், அலையாகிய கைகளை வீசியும், செயற்படு தாளச் சீரோடு நடந்தும், மெல்லமாகக் குதித்தும், விரைவாக இழிந்தும், பல மலர்களால் ஆன ஆடையைப் பாங்குற அணிந்தும், நீர்த்துறையில் அழகுற விளங்கியும் வெகுளாமல் அமைதி விளங்கத் தோன்றியும் நெளிந்தும் வளைந்தும் நிமிர்ந்தும் கண்படாமல் ஒளிந்தும் தோன்றியும் உருக்கரந்து ஒடுங்கியும் நடந்தும் படர்ந்தும் நல்லவர் உள்ளத்தைக் கடந்தும் ஓடும் இந்த

கானாறு வேத்தியல் என்னும் அரசர் ஆகும். கூத்தினையும், பொதுவியல் என்னும் மக்கள் ஆடும் கூத்தினையும் ஒருங்கே சேர்ந்து ஆடும் கூத்தில் வல்லுநரான குமரி ஆறு."[62] இங்ஙனம் வருணிக்கின்றார்.

## கங்கையின் சிறப்பை நவிலும் பாங்கு

ஆறைப் பெண்ணாகக் கருதி சாலி மைந்தன் காப்பியத்தில் "புல்லினை வளர்த்தாள்; வாழப் பொருத்தமான இடம் இல்லாதவராய் இருந்து இவ்விடம் வந்தவர் பலரும் நெல்லினையும் கரும்பையும் விளைவித்து உடன் உண்ணும் நிலைபெற்ற வாழ்க்கையையும் தந்தாள்; கல்லினைப் பிசைந்து கனியெனக் கொடுக்கும் கலைகளையும் பற்பல விரித்தாள், சொல்லுறும் நாகரிகமென்னும் செம்பொற் சுடரையும் ஏற்றியே வைத்தாள்."[63] என்று பாராட்டி வருணிப்பர்.

## நாட்டு வளம்

பொதுவாகப் புலவர்கள் தமது காப்பியங்களில் நாட்டு வருணனை பாடும் பொழுது அதில் நிறைந்த ஏற்றமிகு வளங்களைப் புகழ்ந்து பாடுவர். இதனை,

**"வண்மை இல்லை ஓர் வறுமை இன்மையால்**
**திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்**
**உண்மை இல்லைபொய் உரை இலாமையால்**
**ஒண்மை இல்லைபல் கேள்வி ஓங்கலால்"**[64]

என்று கம்பராமாயணப் பாடல் புலப்படுத்தும். ஆ.பழநி அவர்கள் 'காரல் மார்க்சு' காப்பியத்தில் காரல் மார்க்சு பிறந்த நாட்டினை வருணிக்கும் பொழுது அவருடைய பிறப்பினால் பெருமையுற்றதாக வருணிக்கின்றார். இதை "செருமனி நாட்டின் மேற்கு எல்லையும் பிரான்சும் சேரும் இடத்தில் உள்ள நிலப்பரப்பில் புகழ் பெற்ற திரியர் என்னும் நகர் உள்ளதாம். அந்த ஊரில் தான் காரல் மார்க்சு பிறந்தனன். அவன் பிறந்ததாலே பெருமை பெற்று விளங்கியது அவ்வூர்"[65] என்று கூறுவதிலிருந்து இதனை அறிய இயலும்.

## தரணி போற்றும் தமிழ்நாடு

சாலி மைந்தன் காப்பியத்தில் சாலி குமரியாடுதற்காகச் செல்கின்றாள். அப்பொழுது தமிழ்நாட்டு வளம் "சுள்ளெனவே சிள்வண்டு ஒலிக்கும் ஓசை சுதி சேர்க்கும் இசைக்கருவி போல் ஒலிக்கச் சேற்றில் உறைகின்ற பச்சை நிறத் தவளை பாடும் பாட்டுக்கு அணிகிளையின் மீதேறிக் கடுவன் ஆடும்; கள்ளொழுகும் மலர்களிலே வண்டு பாடப் புள்ளினங்கள் கண் உறங்கும்; பசுவானது புல்லினை மேய்ந்து துள்ளி எழும்; மான் ஆடும்; ஆட்டத்தைக் கண்டு துணைவிழியில் தேவாங்கு வியப்பினைக் காட்டும்"[66] என்று விரித்துப் பாடப்பெற்றுள்ளது.

## ஏதிலார் போல் வந்த ஆழிப் பேரலை

ஆ.பழநி அவர்களின் கடல் வருணனை கற்போரின் கண்களில் காட்சியாக விரிகின்றது. நில மகளின் மேல் நீலப் போர்வையாய் விரித்த கடல் என்னும் கன்னி கவிஞரின் கைவண்ணத்தில் களிநடனம் புரிகின்றாள். 'அன்னி மகள்' காப்பியத்தில் அன்னி, அன்னி மிஞிலி, மாதரி புகார் துறையில் நின்று இந்திர விழாவினை இரசித்துக் கொண்டிருக்கின்றனர். அப்பொழுது அன்னி "திருமலர் போன்றவளே! நீலத் திகழ்கடலில் மோதுகின்ற அலை எழுந்து பொங்கியும், சீறியும் அடைந்துள்ள கரையினை உடைக்கும். மிகப்பெரிய ஒலியோடு சினந்தும் படையென வந்து மண்ணைப் பகைப்பது காணுங்கள். எண்ணிக் கொள்ள இயலாத பகைவர் நம்மேல் மண்கொள்ள வந்து தம் மனக்கோள் இழந்து வடிவம் சிதைந்து உள்வாங்குவது போல உருவம் சிதைந்த பனிக்கடல் பேரலை ஓடுதல் காணியர்!"[67] என்று கூறுவதிலிருந்து கடல் வருணனை கவினுற அமைவதை அறிய இயலும்.

## ஆட்சித் திறனை விளக்கும் நகரின் வளம்

'அன்னி மகள்' காப்பியத்தில் இந்திர விழாவைக் காணவந்த அன்னி, அன்னி மிஞிலி. மாதரி ஆகிய மூவரும் நகர்வலம் வருகின்றனர். அப்போது அவர்கள் கண்ட நகரின் வளம் சென்னியின் ஆட்சித் திறனை விளக்குவதை,

**"உலகப் பொருளெலாம் ஒருங்குவந் தாலென**
**பலபல வாகிய பண்டத் தொகுக்குச்**
**சுங்கம் வாங்குநர் சோர்வில ராகித்**
**தங்குதல் இலராய்த் தங்கடன் ஆற்றலில்**
**சென்னியின் ஆட்சித் திறம்விளங் கிடுமால்;**
**நன்னெறி அரசியல் நயன்சிறந் திடுமால்"** (அன்.மக.அ.1,க.1,67-72)

என்ற வரிகளால் அறியலாம்.

## நகர் வளம்

## மண்ணுலக சொர்க்கம் வாரணாசி

சாலி மைந்தன் காப்பியத்தில் சாலி பிறந்த ஊரான வாரணாசியின் சிறப்பானது பலவாறாகப் புகழப்படுகின்றது. "இளைத்தல் இன்றியே தம் ஊரில் வாழ்பவர் துய்ப்பதற்கு உள யாவும் தொகுத்தெடுத்து உய்த்த தாமென்னும் ஒண்ணகர் மண்ணிடத்துப் பொய்த்தல் இல்லாத ஒரு சொர்க்கம் போன்றதாகும்."[68] என்னும் செய்தி இதனை நன்கு விளக்கும்.

### மணம் புரிதல்

திருமணம் என்பது சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். வெவ்வேறு வாழ்வியற் சூழலில் வாழ்ந்த இருவரைப் பிரிக்க இயலாத அளவிற்குப் பிணைக்கும் பந்தம் திருமணம் ஆகும். அதனால் தான் அது 'திரு என்னும் அடையுடன் புனையப்படுகின்றது. அத்தகைய 'மணம் புரிதல்' ஆ.பழநி அவர்களின் சீர்மிகுந்த நடையில் பாங்குற அமைக்கப்பட்டுள்ளது. மணம் புரிதல் காரல் மார்க்சு அன்னி மகள் மற்றும் சாலிமைந்தன் காப்பியங்களில் இடம்பெறுகின்றது. அனிச்ச அடியில் இடம்பெறவில்லை.

## இருமனம் ஒன்றிய திருமணம்

தந்தையின் மரணம், தாயின் வெறுப்பு, சூழ்ந்திருப்பவர்களின் சூழ்ச்சி போன்ற எல்லையற்ற துன்பங்களினால் துயருற்ற காரல் மார்க்சு சென்னியைக் கரம் பற்றிய நிகழ்வு நெகிழ்விற்குரியது. காரல் மார்க்சு காப்பியத்தில் காரல்மார்க்சு மற்றும் சென்னியின் திருமணம் "இன்ன வண்ணமே வாழ்க்கையின் போக்கென்பது இறுதியானதால் காரலின் நெஞ்சிலே வண்ண வண்ணமாய் இனிய கனவு ஊர்வலமாய் வந்து வந்து தோன்றிடச் சென்னியை நன்மணம் புணர்ந்து எல்லையில்லாத இன்பத்தில் நாளும் மூழ்கினான். இனிவரும் நாளெல்லாம் சொல்ல முடியாத துன்பம் தான் என்பதைப் பார்த்தறிந்தவர் போல் நலம் துய்த்தனர்"[69] இவ்வாறு வருபொருள் உரைக்கும் விதமாகவும் அமைந்துள்ளது. இந்த நிகழ்வு

**"காதலர் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்**
**தீதறு கெனஏத்திச் சின்மலர் கொடுதூவி"[70]**

என்று சிலப்பதிகாரத்துடன் இயைந்து வருபொருள் உரைப்பதனை அறிய இயலும்.

## இனிய சிறையினை நாடும் திருமணம்

திருமணத்திற்குப் பின் வாழ்வினைப் பூரணமாக்குவது எல்லையற்ற அன்பும், பரஸ்பர புரிதலுமே ஆகும். அன்பிற்குரியவர்களின் மனச்சிறையில் நீங்காத மனிதர்களே, திருமண வாழ்வில் வெற்றிக் கனியினை எட்டிப் பறித்தவர் ஆவார். அதனால் தான் அந்த பெருமைக்குரிய இடம் மிகவும் புனிதமான ஒன்றாகக் கருதப்படுகின்றது. எனவே அத்தகைய புனிதம் நிறைந்த சிறையை திதியன், அன்னி மிஞிலியிடம் நாடுவதை

**"......பூத்த இளங்கொடி அணையாய்!**
**நின்தோள் கிடக்கும் மென்பூ மாலையாய்**

**என்தோள் கிடக்க ஏனிந் நினைவு?**
**தாழ்விழா நின்றன் மனச்சிறைத் தங்கி**
**மூழ்குவென் இன்பில்; முடிவிலாக் காலம்**
**விடுதலை விரும்பாக் கைதியின் கிடப்பென்**
**வடுவிலாய் நாளை மணவினை புரிந்தே!"** (அன்.மக,அ.5,க.3,93-99)

என்னும் அடிகள் புலப்படுத்தும்.

## இருமனம் ஒன்றாத் திருமணம்

சாலி மைந்தன் காப்பியத்தில் அபஞ்சிகன், சாலியின் திருமணம் இடம்பெறுகின்றது. இருவரின் மனமும் பூரணமாக ஒன்றாத மணமாக இக்காப்பியத்தில் இடம்பெறுகின்றது. சாலி சந்திக்கும் அவல வாழ்வின் தொடக்கமாக மண நிகழ்வானது அமைந்துள்ளது. இம்மண நிகழ்வினை பாவலர்மணி அவர்கள் "அண்ணத்தை நாணச் செய்யும் அழகிய நடையினை உடைய பெண்கள் மேடை முன்னர் சென்று ஒருங்கே சூழ்ந்தனர்; அகவையின் மூத்தோர் வாழ்த்துச் சொல்லுதற்கு முன்னர் சென்றார்; அட்சதையினை அங்கையில் பற்றி நெருங்கி சென்று அமர்ந்தார். தூய மண நிகழ்வினைத் தொடங்கி விட்டார்."[71] என அழகாகச் சுட்டுகின்றார். அபஞ்சிகனின் எண்ணம், பேச்சு முழுவதும் மறையில் தான் நிரம்பியுள்ளது. மங்கையின் மீது இல்லை என்பதை "காமனின் படைக்கருவிகள் போல் கதித்தெழும் உறுப்பினாளைத் தாமரை பல பூத்துள்ள தடம் போன்ற உடம்பினாளைத் தூய மறையை அன்றி வேறோர் சொல்லையும் கூறாத நாவினையுடையவன் மாமறை முழங்கி நிற்ப மணநிகழ்வினை முடித்துக் கொண்டான்"[72] என்பர்.

## சிறுவரைப் பெறுதல்

**"பெறுமவற்றுள் யாம அறிவது இல்லை அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற"**[73]

என்று இல்லறத்தான் ஒருவன் அடைய வேண்டிய பேறுகளுள் மிகச்சிறந்த பேறு அறிவுடைய பிள்ளைகளைப் பெறுவதே என்று திருக்குறள் மக்கட்செல்வத்தின் மாண்பினைச் சிறப்பிக்கின்றது. குழந்தைச் செல்வம் பெறுகின்ற பொழுது தான் ஒரு மனிதனின் வாழ்வானது நிறைவு பெறுகின்றது. 'பிறருக்காக வாழ்தல்' என்ற பேரறமும் குழந்தையுடன் சேர்ந்து பிறக்கின்றது. சுயநலம் அழிந்து தியாகம் பிறப்பது குழந்தைப்பேற்றினால் ஆகும். எல்லையற்ற இன்பத்தையும், இனிய கர்வத்தையும் ஒரு மனிதனுக்கு வழங்குவது குழந்தைச் செல்வமே ஆகும். ஆ.பழநி

அவர்களின் காப்பியங்களில் காரல் மார்க்சு, சாலிமைந்தன் ஆகிய இரு காப்பியங்களில் மட்டுமே ‘சிறுவரைப் பெறுதல்’ என்ற நிகழ்வு அமைந்துள்ளது. அனிச்ச அடி மற்றும் அன்னி மகள் காப்பியத்தில் இந்நிகழ்வு இடம்பெறவில்லை.

## வறுமையினால் விளைந்த சிறுமை

உலகிலேயே மிக இனிமையான மொழி குழந்தைகளைக் கொஞ்சி மகிழும் அன்பு மொழி ஆகும். சாதாரண செயல்களும், அசாதாரண செயல்களாக அங்கீகாரம் பெறுவது குழந்தைகளால் தான் என்றால் அது மிகையாகாது. பெற்றோர்களால் தன் குழந்தைகளின் சிறு குறும்பும் விந்தைமிகு செயல்களாகப் பேசப்படுகின்றன. பெரியாழ்வார் தனது பாடலில் தன்னைத் தாயாகவும், கண்ணனை சேயாகவும் வைத்து அம்புலியை அழைக்கும் காட்சி மிகவும் நயமானது. தன் குழந்தையின் அழகிய முகத்திற்கு இணையாகாத அம்புலியே அவனின் கைத்தலம் நோவதற்கு முன் விரைந்து ஓடிவா என்று பொயாழ்வார் அழைப்பர்.[74] ஆனால் வறுமை என்னும் கொடிய நோய் வாழ்வின் இனிய தருணங்களையும் இரசிக்க முடியாமல் செய்துவிடும் என்பதை காரல் மார்க்சின் வழி அறிய முடிகின்றது.

**“பிள்ளைகளோ நால்வருளர் எலன்டெ மூது**
**பெரியவர்கள் இருவரொடும் எழுவ ரானார்.**
**உள்ளுறையும் பாம்புடனே வாழ்தல்கூடும்;**
**ஒருநாளும் வறுமையுடன் வாழ்தல்ஆமோ?**
**விள்ளமுடி யாதபணத் தேவை யோடு**
**வியாதிகளின் படையெடுப்பும் சேர்ந்து கொள்ள**
**அள்ளலிலே பாரவண்டி அழுந்தல் போல**
**அழுந்தியதே அவன்வாழ்க்கை துன்பம்! துன்பம்”**

(கார.மார்,கா,பா:260)

என்ற வரிகளில் வறுமையின் கோரப்பிடிக்கு எல்லையற்ற மழலை இன்பமும் இரையாகிவிடும் என்ற செய்தி இடம்பெறுகின்றது. இங்ஙனம் சிறுவரைப் பெறுதல் என்னும் பகுதி காரல் மார்க்சு காப்பியத்தில் இடம்பெறுகின்றது.

## ஆபுத்திரன் என்னும் அருளாளனை ஈன்ற சாலி

அகிலம் அனைத்தையும் பசித் துன்பத்திலிருந்து காக்கும் உன்னதப் பண்பாளனான ஆபுத்திரன் ஆயர் சேரியில் பிறந்த நிகழ்வானது சாலி மைந்தன் காப்பியத்தில் இடம்பெறுகின்றது. மனிதன் அனுபவிக்கக் கூடிய அதிகபட்ச வலியானது பிரசவம் என மருத்துவர்களால் பகரப்படுகின்றது. அத்தகைய வலியின் கொடுமையினையும் பிஞ்சு முகமானது மறக்கச் செய்கின்றது. ஆனால் சாலி பூரண

இன்பத்தைத் துய்க்க முடியவில்லை. இழைத்த தவறினால் விளைந்த குற்ற உணர்வானது வாட்டுகின்றது. சாலி ஆபுத்திரனை ஈன்றெடுத்த நிகழ்வினைப் பாவலர்மணி அவர்கள் “அரிய குணங்கள் நிரம்பிய கோவலர்கள் வாழும் சேரி முற்றத்தினை நெருங்கும் போது கருவானது உயிர்க்க மூண்ட வலியினால் சாலி துடிப்பதைக் கண்டோர் இல்லினுள் அழைத்துச் சென்று துணை செய்யக் கீழ்க் கடலில் எழும் சுடர் போல ஒரு மகனைப் பெற்றெடுத்தாள்”[75] இங்ஙனம் கூறுகிறார். இவ்வாறு காரல் மார்க்சு, சாலி மைந்தன் காப்பியங்களில் சிறுவரைப் பெறுதல் என்னும் நிகழ்வானது இடம்பெறுகிறது. அனிச்ச அடி,அன்னி மகள் காப்பியங்களில் இந்நிகழ்வு இடம்பெறவில்லை.

## ஊடலில் முனிதல்

ஊடல் என்பது மிதமிஞ்சிய காதலின் வெளிப்பாடு ஆகும். எப்பொழுதும் இனிமையான சொற்களையே பேசும் காதலை விட அவ்வப்பொழுது ஊடிக் கொள்ளும் காதலுக்குத் தான் சுவை அதிகம். ஏனெனில் ஊடலுக்குப் பின் வரும் கூடலில் அன்பு இரட்டிப்பாகும். அதனால் தான் வள்ளுவர்,

**“ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்”[76]**

என்று கூறுகின்றார். ஊடலில் முனிதல் என்னும் நிகழ்வு ‘அனிச்ச அடி’ காப்பியத்தில் இடம்பெறுகின்றது. அன்னி மகள், காரல் மார்க்சு சாலிமைந்தன் போன்ற காப்பியங்களில் இடம்பெறவில்லை.

## மனத்தினை நொந்து உரைக்கும் ஊடல்

மனதிற்கினியவரைக் காணாத பொழுது எண்ணிக் கவலை கொள்ளுதலும், காணும் பொழுது கடிந்து கொள்ளுதலும் மனதின் இயல்பாகும். இம்மனவியல்பு ஊடலின் வெளிப்பாடு ஆகும். ‘அனிச்ச அடி’ காப்பியத்தில் பாவலர்மணி அவர்கள் இதனை அழகாகப் பதிவு செய்திருக்கின்றார். அருளாழிக்கும், அனிச்ச அடிக்கும் இடையேயுள்ள காதலினால் ஊடல் ஏற்படுகின்றது. அப்பொழுது அனிச்ச அடி, “காணாத போது உருகுதலும், காணின் மாட்சிமை இல்லாதன மொழிதலும், மனமே நின் செயற்கு எளிதாகும். ஆயினும் ஏழை என் நலம் அளியதாமென நீ அறியவில்லையோ?”[77] என்று தன்னையே நொந்து கொள்கின்றாள். இங்ஙனம் பாவலர்மணி அவர்கள் தனது காப்பிய வழி அழகாக ஊடலை வெளிப்படுத்துகின்றார்.

## நன்றியினை விரும்பாத ஊடல்

நன்றி என்னும் உயர்ந்த சொல் காதலுக்கு வேண்டாத சொல்லாக அமைகின்றது. ஏனெனில் அச்சொல் உள்ளத்தால் ஒருவரான காதலர்களை பிரித்து வேறுபடுத்திக் காட்டுவதாகக் காதலர்கள் உணர்கின்றனர். அருளாழிக்கும், அனிச்ச அடிக்கும் இடையே ஒருவர் மீது ஒருவருக்கு ஆழமான காதல் இருப்பினும் அதை அவர்கள் சொல்லால் வெளிப்படுத்திக் கொள்ளவே இல்லை. ஒருமுறை அனிச்ச அடி தன்னைக் காண வந்ததன் நோக்கம் குறித்து அருளாழியைக் கேட்கின்றாள். அப்பொழுது அருளாழி சுரும்பார் குழலியின் மீது கொண்டுள்ள நீங்காத அன்பினால் தன் உள்ளக்குறிப்பினை வெளிப்படுத்தாமல் நன்றி தெரிவிக்கும் பொருட்டு வந்ததாக மாற்றிக் கூறிவிடுகின்றான். இதனால் அனிச்ச அடி மிகவும் வருத்தமடைகின்றாள்.

இந்த வருத்தம் பல இடங்களில் வெளிப்படுகின்றது. கணியன் கீரன் திட்டப்படி மிஞிலியின் கையில் போலிமுடங்கல் கிடைக்குமாறு செய்த அருளாழி சிறையில் அடைக்கப்படுகின்றான். பின்னர் கணியன் கீரன் உணவின் மூலம் அளித்த ஆலோசனையின் பேரில் அவன் சிறையிலிருந்து தப்பி விடுகின்றான். அனிச்ச அடி அவனுக்காக் காத்திருக்கின்றாள். அப்பொழுது அவர்களிடையே ஊடல் ஏற்படுகின்றது. அருளாழி தனக்குத் துணையாக அனிச்ச அடி வந்த காரணத்தினை வினவுகின்றான். அப்பொழுது அனிச்ச அடி ‘‘துணையாக நான் வந்தால் தலைவனாகிய நீ எந்தன் மனைநாடி வருவாய். மனைநாடி வந்து செந்தமிழில் ‘நன்றி’ எனுமோர் நறுஞ்சொல் கூறுவாய். அன்று என் இருசெவி அளப்பில்லா இன்பத்தினை எய்தும். ஆதலின் உனக்கு துணையாய் வந்துள்ளேன்’’[78] இவ்வாறு கூறுவதிலிருந்து நன்றியினை மறைமுகமாக கடிந்துரைக்கும் ஊடலை அறியலாம்.

## அலவனோடு அனல் பறக்கும் ஊடல்

‘அனிச்ச அடி’ காப்பியத்தில் சிறையில் இருந்து தப்பிய அருளாழியை அழைத்துச் செல்ல கணியன் கீரனுக்குப் பதில் அனிச்ச அடி காத்திருக்கின்றாள். அப்பொழுது அருளாழி கணியன் கீரனுக்கு பதில் அனிச்ச அடி காத்திருப்பதைத் தவிர அனைத்தும் தான் எதிர்பார்த்தபடி நடந்ததாகக் கூறுகின்றான். அப்பொழுது தன்னுடைய காத்திருப்பை அருளாழி விரும்பவில்லை என்று அனிச்ச அடி தவறாகப் புரிந்து கொள்ள ஊடல் பிறக்கின்றது. அவளை சமாதானப்படுத்த எண்ணிய அருளாழி “ஆழியின் அலை வந்து போதலால் வந்த புள்ளிகளால் மாட்சிமை பெற்ற அலவன் நின் வளையொலிக்கு அஞ்சி தன் சுற்றத்தோடு ஓடுவதைக் கொளை நேர் நடையாய் காண்பாயாக!”[79] என்று கூறுகின்றான். அதற்கு

அனிச்ச அடி “குளிர்ந்த கடல் வாழும் நண்டும் அஞ்சி நடுங்கி ஒதுங்கக் கண்டும் வாழும் நிலை நேர்ந்ததை எண்ணி நோவதே அல்லாமல் வேறென்ன நுவல்வது”[80] என்று தவறான புரிதலால் தன்னையே நொந்து கொள்கின்றாள். அப்பொழுது அனிச்ச அடியை சமாதானம் செய்ய அருளாழி, “இங்கே ஓர் அலவனின் எழில் மிகுந்த முகம் நோக்கி தன்னுடைய கிளை தன்னை விட்டு மீண்டதுணராமல் நிற்பது காண்க!”[81] என்று கூற அனிச்ச அடி உறவினால் பெறுவது துன்பமே! பிரிவினால் பெறுவது எண்ணிலா இன்பமே! என்பதை அறிந்த ஆண் அலவன் பெண் அலவனை விட்டு நீங்கியதாக ஊடுகின்றாள். இவ்வாறு அனிச்ச அடி காப்பியத்தில் ஊடலில் முனிதல் இடம்பெறுகின்றது.

## கூடலில் களித்தல்

இரு மனங்களின் ஆத்மார்த்த சங்கமம் தான் கூடல் ஆகும். எல்லையற்ற அன்பும் ஈடு இணையற்ற புரிதலும் இந்த வகையான கூடலினால் தான் நிகழ்கின்றது. கூடலில் களித்தல் என்னும் காப்பியக் கட்டமைப்பு காரல் மார்க்சு மற்றும் அன்னி மகள் காப்பியங்களில் இடம்பெறுகின்றது. அனிச்ச அடி காப்பியத்தில் இடம்பெறவில்லை. சாலிமைந்தன் காப்பியத்தில் பொருந்தாக் கூடல் என்பதால் அது களிப்பினைத் தரவில்லை.

## பிறவியினை நாளும் நனி நல்கும் கூடல்

‘காரல் மார்க்சு’ காப்பியத்தில் காரல் மார்கசு, சென்னி இருவரும் ஒருவர் மீது ஒருவர் மாறாக் காதல் கொண்டனர். அதனால் தான் ‘வறுமை என்னும் கொடூர நெருப்பிற்கு அவர்களது அன்பு இரையாகவில்லை. வறுமையின் உச்சம் அவர்களது காதலுக்குக் கல்லறை கட்டவில்லை. இலட்சிய தம்பதியின் உன்னத காதல் பாவலர்மணியின் கைவண்ணத்தினால் உருப்பெறுதலை “என் அரும் அன்புச் சென்னி! எனக்கு உன் காதலை அருள்வாயாக! உன் காதல் ஒன்றினால் மீண்டும் மீண்டும் மனிதனாக உருக்கொள்கின்றேன்! நின்னொரு முத்தத்தினால் பார்ப்பவர் நிகழ்த்துகின்ற இன்னொரு பிறவி பற்றி எடுத்தவர்க்கு உரைப்பேன்”[82] என்று காரல் மார்க்சு சென்னியிடம் உரைப்பதின் வழி உணரமுடிகின்றது.

## மாறாத அன்பில் திளைக்கும் கூடல்

பொதுவாகப் புலவர்கள் கூடலைப் புனைந்துரைக்கும் பொழுது இலக்கியச் சுவைக்காக அதில் காமரசம் அதிகமாகத் ததும்பும்படி புனைந்திருப்பர். சான்றாக சீவக சிந்தாமணியில் சீவகனும், பதுமையும் கூடலில் களித்ததை திருத்தக்கத் தேவர்,

**“வாளும் வேலும் மலைந்தரி யார்ந்தகண்**
**ணாளும் வார்கழல் மைந்தனும் ஆயிடைத்**
**தோளும் தோளும் பிணைந்துரு வொன்றெய்தி**
**நாளும் நாகர் நுகர்ச்சி நலத்தரோ”**[83]

என்கிறார். ஆனால் பாவலர்மணி அவர்கள் இதிலிருந்து சற்று மாறுபட்டவர். தகுதியான இலக்கியத்தினை நிறைவாகத் தர முனையும் சீரிய கொள்கையுடையவர். ‘அன்னி மகள்’ காப்பியத்தில் கோசர்களை வென்ற வெற்றிக் களிப்புடன் திதியன், அன்னி மிஞிலியைக் காண வருகின்றான். அப்பொழுது அவனது விழிகள் இமையாது அன்னி மிஞிலியை இரசிக்க, அன்னி மிஞிலி அவனிடம் “குறுக்கைக் கோட்டையினை கூர்மையான வேல் படையினால் அந்நாளில் அழித்தாய்; நீள்விழிப் படையினால் இன்றெனை முற்றுகின்றாய்! என்ன நினைத்தாய்?”[84] என்று வினவ அதற்கு திதியன் “ஒன்றும் நினைத்திலேன்! உண்மையினை மொழியின் மன வலிமையினை முற்றிலுமாக இழந்துள்ளேன். புனையாத ஓவியம் போன்றவளே! நின்னை கண்ணை இமைக்காமல் நோக்குவதால் என்னுடைய இமைகள் உன்னை எடுத்துண்ணல் அல்லாமல் வேறெதுவும் மொழிதல் வேண்டிலேன்.”[85] என்று கூறுகின்றான். இங்ஙனம் தலைவன், தலைவியின் கூடலை மிகவும் நயமாக பாவலர்மணி விளக்குகின்றார். கூடலை மனங்களின் சங்கமமான அகக் கூடலாக வருணிக்கின்றார். இவ்வாறு கூடலில் களித்தல் என்னும் காப்பியக் கட்டமைப்பு பாவலர்மணியின் காப்பியங்களில் இடம்பெறுகின்றது.

## புனல் விளையாட்டு

புனல் விளையாட்டு என்னும் காப்பிய நிகழ்வு இலக்கியச் சுவைக்காகவும், இயற்கை வருணனைக்காகவும் பொதுவாக இலக்கியங்களில் எடுத்தாளப்படும். அவ்வகையில் சுரும்பார் குழலி நீராடும் முன் ஆற்றின் சிறப்பைப் பலபட புகழ்ந்து பாடுகின்றாள். அப்பாடல் அவளுக்கு நேரப் போகும் துயரை எடுத்துரைப்பதாக உள்ளது. சுரும்பார் குழலி “மேல் நிலத்தின் எப்பொருளும் நின்னை வந்து மேவுமேயானால் தாழ்நிலத்தில் கொண்டு உய்க்கும் தன்மை கண்டு நல்ல நிலத்தில் நீரேற்றி மாந்தர் நெறியேற்றலால், ஆறே! உன்னை ஊரேற்றிப் பாடும் உவந்து.”[86] என்று கூறுகின்றாள். இப்பாடலில் தன்னைச் சேர்ந்த மேல்நிலப் பொருள் எதனையும் நிலத்தில் கொண்டு தள்ளும் இயல்புடையது ஆறு ஆதலில், இதில் நீராடும் மேற்குடிப் பிறந்த குழலியையும் பழிவயப்படச் செய்து அழிக்கப் போகிறது என்பது குறிப்பாக இடம்பெறுகின்றது. இங்ஙனம் வருபொருள் உரைக்கும் விதமாக பாவலர்மணி அவர்கள் புனல் விளையாட்டினை அமைத்திருக்கின்றார்.

## அமைச்சருடன் ஆய்தல்

**"படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு"**[87]

என்று திருக்குறள் சிங்கம் போன்ற அரசனுக்கு அமைய வேண்டிய பண்புகளுள் அமைச்சரையும் ஒன்றாக வரையறுத்துக் கூறுகின்றது. ஒரு நாடு எதிரிகளை வெற்றி கொண்டு பாதுகாப்பு அரணுடன் சீர்பெற்றுத் திகழ அமைச்சர்களின் பங்கு அளப்பரியது. அமைச்சருடன் ஆய்தல் என்னும் காப்பியக் கட்டமைப்பு அன்னிமகள், அனிச்ச அடி காப்பியங்களில் இடம்பெறுகின்றது. காரல் மார்ச்சு சாலிமைந்தன் ஆகிய காப்பியங்களில் இடம் பெறவில்லை.

## காலம் கருதி செயல்படத் தூண்டும் அமைச்சர்

'அன்னி மகள்' காப்பியத்தில் அன்னி மிஞிலியின் வெண்காற் காரி கோசர்களுக்குரிய நிலத்தில் உள்ள பயிரை மேய்கின்றது. அதை பற்றிக் கட்ட வந்த இருவரை அவ்வெண்காற் காரி குற்றிக் கொன்று விடுகின்றது. இதனால் சினமுற்ற கோசர் அன்னியின் ஆநிரை காப்பாளன் தத்தனைக் கொன்று ஆநிரைகளைக் கவர்ந்து செல்கின்றனர். இதனால் சினம் கொண்ட அன்னியின் நண்பர் கீரண்,

**"தமிழரை மதியாத் தருக்கர் தலைகளை**
**உமியெனக் களத்திடை ஊதித் தூற்றுவோம்;**
**ஊரெலாம் கூட்டி ஒன்று படுத்துவோம்,**
**காரெலாம் பொழியும் கடுமழை இடியெனத்**
**தாக்குவம் கோசரைத் தங்கிய பழியெலாம்**
**போக்குவெம்; இனியென் புகல்வது?"** (அன்.மக,அ.3,க.2,119-124)

என்று கூறுகின்றார். அப்பொழுது அன்னியின் அமைச்சர் காலம் கருதிச் செயல்பட வேண்டியதன் அவசியம் குறித்து "சினத்தினால் வெற்றி கொள்வது சீர்த்தியோ? அன்று. சினத்தினை வெற்றி கொள்வதே சீர்த்தி ஆகும். மேலும் தன் வலி, மாற்றான் வலி ஆகியவற்றை அறிந்து காலம், இடம் போன்றவற்றை தேர்ந்து வினைபுரிவதே அறிவாகும். இவை நன்றாக இல்லாத போது முனைப்பினை அகற்றி முன்னிய காலம் வரும் வரை அடங்கி வாழ்தல் வேண்டும். எவ்வியும் இன்று இலன். அழுந்தைத் திதியனும் செய்ய வேண்டிய வினையின் பொருட்டு சென்றுள்ள வேளையில் பணிவது ஒன்றும் பழியில்லை. தான் பணிவது கூட பகையினை வீழ்த்தவே என்பதை தெரிந்து கொள்வாயாக!"[88] என உரைக்கின்றார்.

## போர்தந்திரம் போதிக்கும் அமைச்சர்

பகைவரை முறியடிக்க ஒரு அரசனுக்குத் தேவையான முதல் தகுதி திட்டமிடுதல் ஆகும். அத்தகைய திட்டமிடுதலை சிறப்புடன் நிறைவேற்ற அமைச்சர்கள் அளப்பரிய பணியாற்றி இருக்கின்றனர். 'அனிச்ச அடி' காப்பியத்தில் நன்னனையும், அன்னி மிஞிலியையும் வெற்றி கொள்ள நார்முடிச்சேரல், செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், அருளாழி முதலியோர் ஆராய்கின்றனர். அப்பொழுது அமைச்சர் ''சேரர் தலைவனே! சிறியனவற்றை விலக்காத நன்னனும், அவனை நயந்த மிஞிலியும் பொன்னென நெல்விளையும் பூமியின் வழியே போரைத் தொடங்கும் முன்னரே நாம் போரினைத் தொடங்கி அவர்களை மடக்குதல் வேண்டும். மாநீர்த் தீவின் வேங்கை முகனின் படையினை வெளிப்பட விடாது தாக்குதல் வேண்டும். தவறாது இவற்றை ஒரே பொழுதில் உடற்றுவமாயின் பகைவர் தம் எண்ணம் பாழ்படுவது அன்றியும் நகைவிளை முதலாய் நலிவையும் எய்தும்.''[89] என்று உரைப்பது ஆழமான போர் தந்திரத்தினைப் புலப்படுத்துகிறது.

இங்ஙனம் அமைச்சருடன் ஆய்தல் என்னும் காப்பியக் கட்டமைப்பு அன்னி மகள் மற்றும் அனிச்ச அடி காப்பியங்களில் இடம்பெறுகின்றது. அரசர்கள் தங்களின் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் அமைச்சர்களிடமே ஆலோசிக்கின்றனர் நாட்டுக்கும், நாட்டு மக்களுக்கும், அரசனுக்கும் நன்மையினைத் தரக் கூடியவற்றை ஆழ்ந்து யோசித்து, அமைச்சர்கள் ஆலோசனை வழங்கி இருக்கின்றனர். இவ்வாறு அரசர்-அமைச்சர் உறவுநிலையே அமைச்சருடன் ஆய்தல் பகுதியில் பாவலர்மணி அழகாக அமைத்திருக்கின்றார்.

## தூது

"தன் கடமையை அறிந்து, நிறைவேற்றும் காலத்தினையும் கருத்திற்கொண்டு, ஏற்ற இடத்தையும் தெரிந்து, நன்றாகச் சிந்தித்துச் செல்பவனே சிறந்த தூதன்"[90] என்று திருக்குறள் சிறந்த தூதனுக்கு வரையறை கூறுகின்றது. தூது என்பது காப்பியத்தில் மிக முக்கியமான ஒன்று. தூதுவன் என்பவன் தன்னை அனுப்பிய நபர்கள் மகிழுமாறு இனிய சொற்களை எடுத்துரைப்பவன் ஆவான். ஒரு பிரச்சினையை வெற்றிக்கரமாகத் தீர்க்க முனையும் தூதுவன் மிகுந்த ஆற்றல் வாய்ந்தவனாகவும் திறமை மிக்கவனாகவும் இருக்க வேண்டும். கம்பராமாயணத்தில், அனுமன், இராமனுக்காக தூது சென்று சீதையைக் குறித்துக் கூறும் சொற்கள் நயமானது.[91] இத்தகைய சிறப்பு வாய்ந்த தூதினை பாவலர்மணி அவர்கள் தனது காப்பியங்களில் படைத்திருக்கும் பாங்கு பின்வருமாறு.

## வாழ்வியற் கலை உரைக்கும் தூது

'அன்னி மகள்' காப்பியத்தில் திதியன், அன்னியின் வெண்காற் காரியை அடக்கிய போதும் அன்னி பழம்பகையினைச் சுட்டிக் காட்டி மகட்கொடை மறுக்கின்றான். அப்பொழுது திதியன் குறுக்கைக் கோட்டையினைச் சுற்றி வளைக்கின்றான். அப்பொழுது வேளிர்குலத் தலைவன் வேள் எவ்வி அன்னிக்காக திதியனிடம் தூது செல்கின்றான். திதியன் குறுக்கையின் மீது போர்தொடுத்தல் எத்தகைய தீமையினை உருவாக்கும் எனப் பாங்குற வேள் எவ்வி எடுத்துரைக்கும் விதம் அழகானது "பெண்ணை மணங்கொள்ளுதல் பிணங்களின் மேடையில் ஆமெனின் அங்கே அன்பும் பிணைப்பும் குற்றமற வளர்த்தல் இயலுமோ? தோற்பவர் யாராய் இருப்பினும் அன்னி மிஞிலிக்குத் தீராத வருத்தம் செய்தல் நிச்சயம்; பெற்றவனை இழப்பினும், பேசருங்காதலை உற்றான் இழப்பினும் இன்பம் ஓங்குமோ? ஆதலின் பகைமையை அகற்றுவீர்."[92] என்று திதியனிடம் கொண்ட பகைமையை அன்னி கைவிடுமாறு வேள் எவ்வி தூது உரைக்கும் காட்சி குறிப்பிடத்தக்கதாகும்.

## காப்பிய உத்தியின் வழி தூது

'அனிச்ச அடி' காப்பியத்தில் போர்க்களம் சென்ற எயினனைப் பற்றிய செய்தியொன்றும் வாராமையால் மனம் வருந்திய அணிவளை ஆறுதல் பெறும் பொருட்டுப் பரணர் வீட்டிற்கு வருகின்றாள். பரணரோ ஏடும், ஆணியும் கொண்டு எழுதத் தொடங்குகின்றார். அக்கதையினை அணிவளை அமர்ந்து கேட்பதாகக் காப்பியத்தில் காட்சி விரிக்கின்றது. வையாவிக்கோப்பெரும் பேகன் தன் மனைவி கண்ணகியை விட்டு நீங்கியதையும், பரணர், கபிலர், பெருங்குன்றூர் கிழார், அரிசில் கிழார் பேகனிடம் தூது சென்று சேர்த்து வைத்ததையும் பரணர் பாடுகின்றார். பேகனிடம் தூது சென்ற கபிலர் வழிக் கண்ணகியின் துயரத்தையும், புலவர்களின் மாண்பினையும் பாவலர்மணி அவர்கள் எடுத்துரைக்கும் பாங்கினை, "நின் புகழினைப் பாடி நெடுங்கோயில் நேற்றுப் புகுந்தோம். நெடுவேலாய்! என்ன புகல்வேன் யான்! நின்மனையாள் இருவிழி நிறுத்தல் இயலாதவளாய் குழல் இரங்கி ஒலிப்பது போல் அழுதாளாய்க் கொடுந்துயர் வாயில் நைந்தாளாய் இருப்பதால்; நெருப்பை உமிழ்கின்ற வேலாய்! இந்நிலை மாற்றி அறம் செய்வாயாக! இதுவே எம்பரிசு"[93] என்ற பாடலின் வழி அறியலாம். மேலும் அரசனின் குற்றத்தினைக் கடிந்துரைக்கும பணியினை தூது செல்லும் புலவர்கள் குறைவின்றி ஆற்றிருப்பதை,

**"காட்டு மயிலின் நடுக்கத்தைக்**
**களைத்தாய் என்பர்; கலங்கும்நின்**
**வீட்டு மயிலின் நடுக்கத்தை**
**விலக்கா திருத்தல் என்கருதி?"** (அனி.அடி,அ.2,க.3,பா:48)

என்னும் அடிகள் உரைக்கும்.

இவ்வாறு அகம் சார்ந்த தூதினை அனிச்ச அடியிலும், புறம் சார்ந்த தூதினை அன்னி மகள் காப்பியத்திலும் பாவலர்மணி அவர்கள் வடித்திருக்கின்றார். காரல் மார்க்சு, சாலிமைந்தன் காப்பியங்களில் இந்நிகழ்வு இடம்பெறவில்லை.

## பயணமும் காப்பியக் கட்டமைப்பும்

காப்பியங்கள் பொதுவாக மனிதர்களின் வாழ்வோடு இயந்தது. எனவே காப்பியங்களில் பயணம் என்பது தவிர்க்க முடியாத ஒன்று. வணிகம், பொருள் ஈட்டல், தூது, ஒற்றறிதல் போன்ற பல காரணங்களுக்காக மனிதர்கள் பயணம் மேற்கொள்கின்றனர். அத்தகைய பயணம், காப்பியக் கட்டமைப்பிற்குத் துணை நிற்கின்றன.

## வறுமையினால் பெல்சியப் பயணம்

‘காரல் மார்க்சு’ காப்பியத்தில் காரல் மார்க்சு பத்திரிகைத் துறையில் முத்திரை பதிக்க நினைத்து பேனாமுனையைக் கையில் ஏந்தினார். வீறுகொண்ட இவரது எழுத்து கேடு செய்பவரை நடுக்கமுறச் செய்தது. வறுமையின் கோரப்பிடியில் சிக்கிய மார்க்சு செருமனியை விட்டு பெல்சியத்தினை சென்றடைந்த காட்சியினை ‘‘பெட்டி தான் இன்று உள்ளது; பெருஞ்செல்வம் ஏதும் இல்லை; கொட்டியும், ஆம்பலுமாய்க் கூட இருப்பாருமில்லை; ஒட்டி உறவாடுகின்ற ஒன்றிரண்டு பொன் நகைகள் வட்டிக் கடைக்காரன் வாயிலுக்கு வந்தனவால் அடமானம் வைத்துக் கொண்ட பொருளின் உதவியினால் பயணத்தை மேற்கொண்டான். பல்வகைப் புகழும் நிரம்பிய தொன்மையான நகராம் பாரிசில் தங்கிய நாளில் உணவென அறிவுநலம் வாரியுண்ட நினைவோடு பெல்சியத்தில் தலைநகராம் பிரசல்சைச் சென்றடைந்தான்’’[94] இவ்வாறு பாவலர்மணி அவர்கள் காரல் மார்க்சு காப்பியத்தில் எடுத்துரைக்கின்றார்.

## சங்கங்களோடு உறவை வளர்க்க இங்கிலாந்து பயணம்

பெல்ஜியத்தின் தலைநகரில் காரல்மார்க்சு பாட்டாளிகளிடம் விழிப்புணர்வை ஏற்படுத்தும் சீரிய பணியில் ஈடுபட்டார். அவர் உருவாக்கிய தத்துவங்களை ஏற்று உழைப்பாளி வர்க்கம் எழுச்சி பெறும் நாளை எண்ணிக் காத்திருந்த காரல் மார்க்சு, உழைப்பாளர்களின் உயர்வுக்குப் பாடுபடும் சங்கங்களோடு உறவினை மேம்படுத்த இங்கிலாந்து சென்றதை “இடைப்பட்ட காலத்தில் ஆறுவாரம் இங்கிலாந்து சென்றார்கள். வாழ்க்கைப் போரில் கடைப்பட்டு நலிந்தோர்கள் அனைவருக்கும் காப்பான உரிமைச் சாசன இயக்கம் தடைப்பட்டு நீதி வேண்டுவோர்கள் சங்கம், சகோதர சனநாயக சங்கத்தார் என்னும் உடைப்பெடுத்த

வெள்ளம் நிகர் அமைப்போடு எல்லாம் உறவை வளர்த்தெடுத்தவராய்த் திரும்பி வந்தார்"[95] என்றுரைக்கும் காரல்மார்க்சு காப்பியம்.

## அரசாங்க ஆணையினால் பாரிசு பயணம்

உழைப்பாளர் சங்கங்களினால் உழைக்கும் வர்க்கத்தார் விழிப்புணர்வு பெற்று; ஐரோப்பாவில் புரட்சித் தீ மூண்டது. அங்கு மூண்ட தீ பெல்ஜியத்திற்கும் பரவியது. உழைப்பாளிகளிடம் எழுச்சியினை ஏற்படுத்தியதற்காக காரல் மார்க்சிற்கு நாடு கடத்தும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அந்த ஆணையினை ஏற்று காரல் மார்க்சு தன் குடும்பத்தார் நால்வரோடு பாரிசுக்கு சென்ற அவலத்தினை,

**"குடும்பமின்று சிறியதிலை; ஐவரென ஆனோம்**
**இடும்பைகளோ ஓரநூறா இருநூறாச் சூழும்**
**படும்பெரிய அவதிகளை வெல்லும்வழி யாதோ?**
**தொடும்நினைவு தொடர்ந்துவரப் பாரிசைப்போய்ச் சேர்ந்தான்"**

(கார.மார்,கா,பா:220)

என்னும் அடிகள் எடுத்துரைக்கும்.

## காரல் மார்க்சின் இலண்டன் பயணம்

பாரிசிலும் புரட்சி வெடித்தது. புரட்சியின் விளைவால் காரல் மார்க்சின் பயணமும் தொடர்ந்தது. காரல் மார்க்சு மக்களின் மனதில் விதைத்த புரட்சியின் விளைவால் இன்னுமோர் நாளைக்குள்ளே பாரிசை விட்டு நீங்க வேண்டும் என்ற ஆணையை அரசு விதித்தது. நிறை சூலியான சென்னியுடன் காரல் மார்க்சு சென்ற காட்சியை "கண்ணில் முன் நிற்கும் துளிகள் சிந்தக் குழந்தைக்கு முத்தம் ஈந்து பன்னரும் இலண்டன் நோக்கிப் பயணத்தைத் தொடங்கினான்"[96] என்பர்.

## நோயினால் விளைந்த பயணம்

காரல் மார்ச்சு என்னும் மாமனிதன் நோயினாலும் நாடு விட்டு நாடு பந்தாடப்பட்டிருக்கின்றான். சமூகத்தைப் பிடித்துள்ள நோய்களைப் போக்க போராடிய போராளி தனது உடல் நோயைப் போக்க அர்ச்செண்டீஸ், அல்சீரியா, பிரான்ஸ், ஜெனிவா முதலான பல நாடுகளுக்கு சென்றார்.[97]

## அருளாழியின் வஞ்சிநகரப் பயணம்

'அனிச்ச அடி' காப்பியத்தில் நன்னனிடமிருந்து பூழி நாட்டை மீட்கவும், அவனை ஒழிக்கவும் பௌவத் தீவில் ஆய்வுக்கூட்டம் நடைபெறுகின்றது. அக்கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக அருளாழி வஞ்சி நகரம் செல்கின்றான்.

இப்பயணம் பகைவர்களை வெற்றி கொள்ள ஏதுவாக அமைந்ததால் அருளாழிக்கு இனிமையான பயணமாகவும், அவனது பிரிவால் வாடும் அனிச்ச அடிக்கு கொடுமையான பயணமாகவும் அமைந்தது.[98]

## ஒற்று அறிந்து வர பவளத்தீவுப் பயணம்

'அனிச்ச அடி' காப்பியத்தில் பவளத்தீவு அரசன் வேங்கைமுகன்; நன்னனுக்கு ஆதரவாளன். நார்முடிச் சேரல் வேங்கைமுகனின் படைபலத்தை அறிந்து வருமாறு அருளாழியை அனுப்புகின்றான். அனிச்ச அடியை கோட்புலியிடம் இருந்து மீட்கும் ஒரு சாகசப் பயணமாகவும் இது அமைகின்றது.[99]

## சாலியின் அவலப் பயணம்

சாலி மைந்தன் காப்பியத்தில் பயணம் என்பது அதிகமாக இடம்பெறுகின்றது. சாலி தனக்கு ஏற்பட்ட வாழ்வியல் அவலங்களால்ப் பயணங்களை மேற்கொள்கின்றாள். சாலி தெரியாமல் செய்த பிழையினால் வாரணாசியில் இருந்து வெளியேற்றப்படுகின்றாள். அப்போது துறவி ஒருவர் செய்த போதனையின் பேரில் குமரியாடத் தமிழ்நாடு வருகின்றாள். இந்த அவலப் பயணத்தை "இம்மையுள் உள்ள துயரம் அங்கு வாழ்பவரால் இரிந்தோடும். வருபிறப்பிலுள்ள துயரமெல்லாம் குமரிநீர் அழிவிக்கும். எனவே நீ செம்மையுறப் போகவெனக் கூறியவுடன் சாலி என்பவள் மனச்சுமையினைக் கீழிறக்கி வைப்பதற்கு அப்பாதையினை ஈர்ந்து சென்றாள்."[100] மேலும் குமரியாடச் சென்ற சாலி வழியில் ஆயர் சேரியில் ஆபத்திரனை ஈன்று; அவனை இளம்பூதி, அஞ்சனையிடம் சேர்ந்த பின் செல்வது அறியாது தவிக்கின்றாள். அபஞ்சிகன் தந்த எல்லையற்ற துன்பத்தின் விளைவால் அவள் மனம் வாரணாசியை நாடவில்லை. மதுரை பதியினை அடைந்த நிகழ்வினை, "கங்கையில் வீழ்ந்த காய்ந்த இலைச் சருகு எங்கும் அலைந்து கடலினை இறுதியில் எய்துதல் போல மதுரையை எய்தினேன்"[101] என்ற சாலியின் கூற்று புலப்படுத்தும்.

## ஆபுத்திரனின் தொண்டுப் பயணம்

தொண்டையே வாழ்க்கையாக உடைய ஆபுத்திரன், சூழ்ச்சியின் காரணமாக இளஞ்சாத்தனுடன் சாவகம் செல்ல நினைக்கின்றான். இந்த சாவகப் பயணமானது "ஒருவரும் அறியாது உறங்கும் பொழுது விரைவாக ஒலிகின்ற கடலுக்குச் சென்றனர். ஆங்கு வருகையை எதிர்பார்த்து இருந்தனர் போல வந்தவர் சேர்ந்ததும் கலத்தைப் பொருகடலில் செலுத்த காற்று தரும் துணையால் அக்கலமானது கடலில் சென்றது"[102] என்று இடம்பெறுகின்றது. மேலும் ஆபுத்திரன் இறந்ததாக

எண்ணி இளஞ்சாத்தன் தன் நண்பருடன் வடக்கிருந்து உயிர் துறக்கப் போவதை அறிந்த ஆபுத்திரன் மணிபல்லவம் செல்கின்றான். இத்தகைய துயரப் பயணத்தை “பொன் கொழிக்கும் பை ஒன்றை அறச்சாலை காத்திருப்பவன் முன் அளிக்க மீகாமன் முறுவலோடு இத்தீவினை விட்டு இப்பொழுதே செல்வோம் என இசைந்தான்; ஆவின் மைந்தனும் மன உளைச்சலோடு கலம் ஏறிச் சென்றான்.”[103] என்று ஆபுத்திரனின் தொண்டுப் பயணம் காப்பியத்திற்கு அணி சேர்க்கின்றது.

## இளஞ்சாத்தானின் பாசப் பயணம்

சாலிமைந்தன் காப்பியத்தில் இளஞ்சாத்தன் மேற்கொள்வது பாசத்தினால் விளைந்த பயணம் ஆகும். ஆபுத்திரனை மணிபல்லவத் தீவில் விட்டு வந்ததை எண்ணி இளஞ்சாத்தன் துடிதுடிக்கின்றான். அவன் தனது நண்பருடன் மணிபல்லவத் தீவிற்குச் செல்வதன் மூலம் அவனது எல்லையற்ற பாசம் வெளிப்படுகின்றது.[104]

அரசின் ஆணை, நோயின் தீவிரம், பகைவர்களை ஒடுக்க ஆலோசனைக் கூட்டம், ஒற்று அறிதல், வாழ்வில் அவலங்களால் நேர்ந்த கொடுமை, தொண்டு, பாசம் போன்ற பல்வேறு காரணங்கள் பயணத்திற்கு வித்தாக அமைந்ததைப் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் காண முடிகின்றது.

## போர் செய்தலும் காப்பியக் கட்டமைப்பும்

சமூகத்தில் அரும்பெரும் மாற்றங்கள் நிகழ்வதற்கு போர்கள் அடித்தளங்களாக அமைந்திருக்கின்றன. தர்மம் தழைப்பதற்கும் அதர்மம் அழிவதற்கும் சீரிய போர்கள் காரணங்களாக அமைந்து இருக்கின்றன. போர்கள் இலக்கியங்களில் இடம்பெறும் பாங்கினை வ.சுப.மாணிக்கம் அவர்கள், “போர்க்களம் என்பது உயிர்கள் தொகையாக மடியும் கொலைக்களம் என்பது பொதுவான கருத்து. இக்கருத்திற்கேற்ப இன்னாக் கொடுங்காட்சிகள் இலக்கியத்து இடம்பெறலாயின. யானையொடு யானை இடிப்பதும், குதிரையொடு குதிரை தாவுவதும், தேரொடு தேர் சாடுவதும், ஆளோடு ஆள் தாக்குவதும், வாளோடு வாள் உரசுவதும், வேலொடு வேல் வீசுவதும், அம்பொடு அம்பு விடுப்பதும் ஆகிய காட்சிகள் பழம்போரை நினைக்கும்போது நமக்கு வழக்கமாகத் தோன்றுகின்றன. உயிரினங்கள் உடல் துணி பட்டும் தலை நகர் பட்டும் செவி யறுபட்டும் கண் குழிபட்டும் நாத்துளைபட்டும் குடல் புறம்பட்டும் காலொடிபட்டும் வாலறுபட்டும், உறுப்பறைகளாய் உறுப்பிலிகளாய்க் கிடக்கும் அவல நிலையை இலக்கியங்கள் உருக்கமாய் எடுத்துரைக்கும்”[105] என்பர். நல்ல கொள்கைகளுக்காகப் போராடும் போராளிகளைப் பாவலர்மணி அவர்கள் தமது காப்பியங்களில் படைத்திருக்கின்றார். போர் செய்தல் என்னும் நிகழ்வு அனிச்ச அடி, அன்னி மகள், காரல் மார்க்சு

ஆகிய மூன்று காப்பியங்களிலும் அமைந்திருக்கின்றது. சாலிமைந்தன் காப்பியத்தில் இடம்பெறவில்லை.

## கற்பனையாற்றலை வெளிப்படுத்தும் போர்க்களக் காட்சி

'அன்னி மகள்' காப்பியத்தில் கோசர்களை எதிர்த்து வேள் எவ்வியும், திதியனும் போரிடும் காட்சி, "யானையின் விலாப்புறத்தில் வாள் பிளந்திட வயிற்றின் நீண்ட குடலைப் பிடித்தே பருந்தானது வானம் ஏறிப் பறந்திட வரும் குடல் அறுந்துவிடாது வளர்வது காணின் சிறுவர் வானிடைப் பட்டம் செலுத்துதலை நினைவிற்கு கொணரும்"[106] என்று வருணிக்கப்பட்டுள்ளது.

## தீயினால் அழிந்த தீயவர்

'அன்னிமகள்' காப்பியத்தில் திதியனுக்கும் கோசர்களுக்குமிடையே கடும்போர் நிகழ்கின்றது. சினவாழி, கதக்கண்ணன் ஆகிய இருவரும் அழிகின்றனர். அவர்களின் கோட்டை நெருப்புக்கு இரையாக்கப்படுகின்றது. இக்காட்சியினை "திதியனால் சாதலைக் காட்டிலும் தீயினால் சாதல் இனியதாமென எண்ணினார் கோசர். வஞ்சனை புரிவதில் வல்லவரான அக்கோசரில் எஞ்சுவரில்வாது யாவரும் எரிந்தனர். தீயவற்றையே நினைத்து தீயவற்றையே செய்தவர் தீயினால் வெந்து தீர்ந்தொழிந்தனரே!"[107] என்று அன்னிமகள் காப்பியம் உரைக்கும்.

## மிஞிலியுடன் தனிப்போர்

'அனிச்ச அடி' காப்பியத்தில் அருளாழிக்கும் மிஞிலிக்கும் இடையே கடும்போர் நிகழ்கின்றது. வஞ்சனையால் தனது மனைவி சுரும்பார் குழலியைக் கொலை செய்த கொடூரனின் சிரத்தைக் கொய்ய ஆற்றலுடன் போர் செய்கின்றான் அருளாழி. அந்த பரபரப்பான காட்சியினை பாவலர்மணி அவர்கள், "தீமையின் வாயிற் களத்திடை மிஞிலி படம் விரித்தாடும் பாம்பெனப் பாய்ந்தும் தோல்வியே கண்டான். கலங்கிய மிஞிலி தனக்குப் பொருந்துவது தனிப்போர் என மனம் துணிந்து; தலைவன் அருளாழியோடு தனிப்போர் தொடங்கினான். கொனலவன் படையைக் கொண்டனராகி அருவிசைப்பட்ட சக்கரத்தைப் போலச் செருவிடைச் சுழன்று திரிந்தும் மோதியும் ஈரிரு நாழிகை போர் செய்த போதும் போரில் முடிவு புலப்படவில்லை. ஆர்வம் விடாது அரும்போர் இயற்றச் சோர்வினால் மிஞிலியின் சுடர்வாள் கையில் ஓர் நடுக்கம் கண்ட நாயகன் அருளன் முன்னினும் இரட்டிப்பாக விரைவை முடுக்கினான். வேலும், கேடகமும் வீழ்ந்தது கண்டிலம் போழும் நெடுவேல் புக்கதே கண்டனம். மண்ணிடத்து மலையென மிஞிலி கிடந்தனன்.

புண்ணிடை இரத்தம் பொங்கி அருவியாய் வழிந்தது. வீரரின் வாழ்த்தினால் செவிப்பறை கிழிந்தது. கேட்டவர் உள்ளம் மகிழ்ந்தது."[108] என்றுரைப்பர்.

## சீறி எழுந்த உழைப்பாளிகள்

'காரல் மார்க்சு' காப்பியத்தில் காரல் மார்க்சின் ஆற்றல் வாய்ந்த எழுத்து மக்களை வீறு கொள்ளச் செய்தது. உழைப்புச் சுரண்டலுக்கு எதிரான போர் உலகமெங்கும் நிகழ்ந்தது. சுரண்டலுக்கு எதிரான சுதந்திர தாகம் மேலெழும்ப, கேடு செய்யும் தீயரை வாடுறச் செய்தது. இத்தகைய உயர்ந்த எழுச்சிப் போரினை, "ஆட்சியாளரின் தன் முனைப்பு, ஆணவம், அத்து மீறிய பற்பல தீங்குகள் அளவு கடந்து செல்லவே மக்களின் நெஞ்சினுள் நெருப்பு எழுந்தது. நீள்துயர்ச் சூழலின் மீட்சி எய்துவதற்கு ஆவன செய்தனர். மின்னல்போல் விரைந்து செயல்படும் தலைவர்கள் வீழ்ச்சிப் பாயிரம் பாடிடலாயினர். வீறு கொண்டெழும் போர் முரசு ஆர்த்தது."[109] என்று விளக்குவர்.

தீமைக்கு எதிரான ஆக்கப்பூர்வமான போர்களை பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் காண முடிகின்றது. போர்க்கள நிகழ்வுகளைக் கூறும் இடத்தில் வேகமும், ஆற்றலும், வீரமும், புரட்சியும் வெளிப்படுகின்றது.

## வெற்றி எய்துதல்

வெற்றியின் அருமை அதனை அடைந்தவர்களுக்குத் தான் தெரியும் என்று கூறுவார்கள். சரியான நோக்கத்தோடு சிறப்பாகப் போராடி பெறும் வெற்றிக்கு ஈடாக எதுவும் இல்லை என்று கூறலாம். வெற்றி எய்துதல் என்னும் காப்பிய நிகழ்வு பாவலர்மணியின் காரல் மார்ச்சு,அனிச்ச அடி அன்னி மகள் போன்ற மூன்று காப்பியங்களிலும் இடம்பெறுகின்றது. சாலிமைந்தன் காப்பியத்தில் இடம் பெறவில்லை.

## சூழ்ச்சிக்கு எதிரான வெற்றி

'அன்னி மகள்' காப்பியத்தில் கோசர்களுக்கும், திதியனுக்கும் இடையே போர் நடைபெறுகின்றது. சூழ்ச்சி மட்டுமே வடிவானவர்கள் கோசர்கள். வேள் எவ்வியை சூழ்ச்சி என்னும் வலையினில் வீழ்த்தி, அன்னியின் ஆக்காப்பாளன் தத்தனை ஆணவத்தால் கொன்று, அன்னியின் கண்களையும் இரக்கமின்றிக் களைந்தவர்கள் கோசர்கள். அவர்களை வேரோடு அழிப்பதாக சூளுரை விடுத்தான் திதியன். கதக்கண்ணனையும், சினவாழியையும் கொன்று அகுதையைச் சரணடையச் செய்கின்றான் திதியன். அந்த வெற்றியை அன்னி மிஞிலியும் மாதரியும் கண்டோர் வழி அறிகின்றனர். அப்பொழுது அன்னி மிஞிலி

**“சூளுரை காக்கச் சுடர்ப்படை ஏந்திய**
**வாளமர்ச் செல்வன் வன்றோள் திதியனை**
**முன்னின் றெதிர்கொளல் முறைமை யாதலின்**
**விண்ணின் மதியே! விரைகுவெம் ஊர்க்கே!”** (அன்.மக,அ-5,க-2,114-117)

இவ்வாறு உரைப்பதிலிருந்து சூழ்ச்சிக்கு எதிரான வெற்றியினை பாவலர்மணி அவர்கள் முழக்கம் செய்கின்றார்.

## அநீதிக்கு எதிரான வெற்றி

‘அனிச்ச அடி’ காப்பியத்தில் அருளாழியின் மனைவி சுரும்பார் குழலியைக் கர்ப்பிணிப் பெண்ணென்றும் பாராமல் நன்னனைக் கொலைத் தண்டம் விதிக்கச் செய்கின்றான் மிஞிலி, அதனால் வருத்தமுற்ற அருளாழி, மிஞிலியைக் கொன்று அவனது எலும்பைச் சுரும்பார் குழலியின் ஈமத்தில் தூணாக நட்டுக் கூரை வேய்வதாகச் சூளுரைக்கின்றான்.[110] இது அநீதிக்கு எதிரான வெற்றியை அறிவிக்கின்றது.

## சுரண்டலுக்கு எதிரான வெற்றி

ஆதிக்க மனப்பான்மையும், ஆணவமும் கொண்ட அதிகார வர்க்கத்தாரின் செயல்களுக்கு எதிரான விழிப்புணர்வே உண்மையான வெற்றி எனக் கொள்ளலாம். காரல் மார்க்சு காப்பியத்தில் உழைத்து உழைத்து ஓடாய்ப் போன வெள்ளந்தி மனிதர்களின் முழக்கம் அதிகார வர்க்கத்திற்கு சாவுமணியாக ஒலித்தது. இத்தகைய உழைப்புச் சுரண்டலுக்கு எதிரான வெற்றியினை, “அன்னை நாட்டிற்காக இறப்பதே அழகினுக்கு அழகாகுமாம் என்றொரு பண்ணிறுத்திய பாடலைப் பாடியே பரவசத்தாராய் பாரிசில் ஆடினர். மக்களின் கைகளில் மாநிலத்து அரசாங்கம் அமைந்ததனால் மன்னன் ஓடினான்”[111] என்னும் செய்தி விளக்கும். முடியாட்சியை குடியாட்சியாக மலரச் செய்த மாபெரும் மந்திரமாக புரட்சி அமைந்ததை, “பிரெஞ்சு நாட்டினில் பொங்கிய மக்களால் லூயி பிலிப்பவன் பேர்ந்து வீழ்ந்தனன். வீரம் நிறைந்த மக்களோ பாரிசை மக்களின் குடியாட்சியாக மாற்றினார். திறன் வாய்ந்தவர் ஆஸ்திரியாவில் திடுமெனப் பெரும் ஆர்ப்போடு மோதினர். வலிமை குலைந்த போர்ப்படை மக்களின் ஓரணித்திரள் கண்டு பின் வாங்கின”[112] என்னும் பகுதி விளக்கும்.

இங்ஙனம் வெற்றி என்பது உணர்வுப்பூர்வமாக பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் இடம்பெறுகின்றது.

## சருக்கம் இலம்பகம் முதலான பாகுபாடுகள்

சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் முதலான பாகுபாடுகளுடன் விளங்குவது வேண்டுவது காப்பியப் பண்புகளுள் ஒன்றாகும். அந்த வகையில் பாவலர்மணி அவர்களின் நாடகக் காப்பியங்களான அனிச்ச அடி, அன்னி மகள் இரண்டிலும் பெரும் பிரிவு அங்கங்களாகவும் சிறு பிரிவு களங்களாகவும் வரையறுக்கப்பட்டுள்ளன. 'அனிச்ச அடி' காப்பியத்தில் 5 அங்கங்களும், 21 களங்களும் அமைந்து அணி செய்கின்றன. அன்னி மகள் காப்பியத்திலும் 5 அங்கங்களும் 21 களங்களும் அமைந்து அழகு சேர்க்கின்றன. 'காரல் மார்க்சு' காப்பியத்தில் காரல் மார்க்சின் வாழ்வில் நிகழ்ந்த சம்பவங்களே தலைப்புகளாக அமைந்துள்ளன. பாயிரம் பாடுகின்றேன் முதலாக மார்க்சு மறைவு ஈறாக 25 தலைப்புகளில் காரல் மார்க்சு என்னும் மாமனிதரின் வாழ்க்கையினைப் பாவலர்மணி அவர்கள் காவியமாகப் படைத்திருக்கின்றார். சாலி மைந்தன் காப்பியத்தில் 4 காண்டங்களும் 30 படலங்களும் இடம்பெற்றுள்ளன.

## எண்வகைச் சுவைகளும் காப்பியக் கட்டமைப்பும்

**"நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று**
**அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப"**[113]

என்று எண்வகைச் சுவைகளை தொல்காப்பியம் வரையறுக்கின்றது. இந்த எண்வகைச் சுவைகள் இலக்கியங்களில் அமைந்து கற்போருக்கு இன்பம் தருகின்றது. இந்த எண்வகைச் சுவைகள் இலக்கியத்திற்கு நயமும் எழிலும் சேர்ப்பதாகும். அந்த வகையில் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் எண்வகைச் சுவைகள் அமைந்திருக்கும் பாங்கு பின்வருமாறு:

## அழுகைச் சுவை

**"இளிவே இழவே அசைவே வறுமை என**
**விளிவில் கொள்கை அழுகை நான்கே"**[114]

இழிவு, இழவு, தளர்ச்சி, வறுமை ஆகிய நான்கின் காரணமாக அழுகை என்னும் சுவை தோன்றுவதாகத் தொல்காப்பியர் வரையறை செய்கின்றார். இத்தகைய அழுகைச் சுவை குறித்து ஜே.ஜி.என்.தாசன் அவர்கள், "நகைக்கு எதிரான மெய்ப்பாடு அழுகை. இதனை அவலம் என்றும் குறிப்பர். இது நகையைப் போன்று எல்லாருக்கும் பொதுவானதாகும். அழுகை மனித இனத்தின் அடிப்படை மெய்ப்பாடு எனக் கொள்வது மிகையன்று. ஏனெனில் மனித இனம் பிறந்ததும் அழுகின்றது.

இறந்ததும் பிறரை அழவைக்கின்றது."[115] என்று கூறுகின்றார் பாவலர்மணி அவர்களின் காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் சாலிமைந்தன் ஆகிய நான்கு காப்பியங்களிலும் அழுகைச் சுவையே அதிகமாகக் காணப்படுகின்றது.

## பிரான்சிக்காவின் மரணமும் அழுகை என்னும் அவலமும்

'காரல் மார்க்சு' காப்பியத்தில் காரல் மார்க்சின் இளைய மகள் பிரான்சிக்கா மார்ச்சளியின் கொடுமையினால் மாண்டு விடுகின்றாள். தான் உயிரோடிருக்கும் பொழுது தன் குழந்தையைப் பறிகொடுப்பது தான் ஒரு மனிதனுக்கு மிகப்பெரிய தண்டனை ஆகும். அத்தகைய அவல நிலைக்கு ஆளான காரல் மார்க்சின் இன்னல் நிரம்பிய வாழ்க்கையை "இத்தகைய சூழலிலே இளைய மகள் பிரான்சிக்கா மருந்தொன்றும் இன்றி கொத்துமலர் கிடப்பது போல் மாரச்சளியின் கொடுமையினால் மூச்சு முட்டிச் செத்து விட்டாள். சவ அடக்கம் செய்ய வழி என்னவெனச் சிந்தித்தவராய் மத்திடையே உழலும் தயிரானார். மழைபொழியும் விழியானார். மயங்கலானார்"[116] என்றுரைப்பர் பாவலர் மணி.

## அன்பு மகன் எட்காரின் மரணமும் அவலமும்

'காரல் மார்க்சு' காப்பியத்தில் காரல் மார்க்சின் அன்பு மகன் எட்கார் இறந்து விடுகின்றான். அப்பொழுது சென்னியின் நிலையினையும் பணிப்பெண் எலனின் நிலையையும் பாவலர்மணி அவர்கள் சோகச் சித்திரமாக வடித்திருக்கின்றார். கற்பவரின் கண்களைக் கலங்கச் செய்யும் ஆற்றலுடைய வரிகளைச் சமைப்பதில் பாவலர்மணி அவர்கள் வல்லவர் என்பதை,

**"பார்த்தவிழி வாங்காமல் பையன்முகம் பார்த்தபடி**
**ஆர்த்தலின்றி வருமருவி ஆயினவே சென்னிகண்கள்;**
**கோத்தெடுத்த முத்தாரம் நூலறுந்து கொட்டுதல்போல்**
**சீர்த்தபணி யாட்டிஎலன் கண்ணீரைச் சிந்துகிறாள்"** (கார.மார்,கா,பா:298)

என்னும் அடிகள் புலப்படுத்தும்.

## வேள் எவ்வியின் மரணமும் அவலமும்

'அன்னி மகள்' காப்பியத்தில் கோசர்கள் வஞ்சனை வலை விரித்து வேள் எவ்வியைக் கொன்று விடுகின்றனர். வேள் எவ்வியின் மரணத்தை எண்ணி பாணர் பாடும் இரங்கற்பா அவலச் சுவையினை ஒவ்வொரு வரிகளிலும் பதிந்துள்ளது.[117] மக்களை மகிழ்விக்கும் அரசாட்சியும், நெறியான அரசியலும், வாரி வழங்கும் கைகளும், கனிவான சொற்களும் வேள் எவ்வி இறந்ததால் இழந்ததாகப்

பாணர்கள் பாடுகின்றனர். இங்கு நந்திக் கலம்பகத்தில் நந்தி வர்மன் இறந்ததால் பாடப்படும் இரங்கற்பா ஒப்புநோக்கத் தக்கது.[118]

## ஏலங்குழலி வழி அவலம்

'அன்னி மகள்' காப்பியத்தில் வேள் எவ்வியின் மரணம் ஏலங்குழலியை உலுக்குகின்றது. நமது சமுதாய அமைப்பைப் பொறுத்தவரை கணவன் என்பவன் ஒரு பெண்ணின் வாழ்வில் மிகவும் முக்கியமான அங்கம் வகிக்கின்றான். அதனால் தான் கணவனின் இழப்பு ஒரு பெண்ணின் வாழ்வையே புரட்டிப் போடுகின்றது.

ஏலங்குழலியின் அவலநிலையை அன்னி மகள் காப்பியம், ''விட்டகலும் விருப்பமில்லாத எவ்வி என் உயிர் அழிவுற நடுகலாக இருப்பது கண்டீரோ பெருமக்களே! கண்மூடி இருந்தும் நின்னுடைய எழில் காண்பது விண்ணாட்டு இன்பம் விளைக்குமென்றனனே! விண்ணோடு புகுந்தோன் விழிமலர் திருந்தென் கண்ணோடு வெள்ளம் கண்டு துன்புறுமோ''[119] என்றுரைக்கும்.

## அன்னியின் கண்கள் இருளான அவலம்

'அன்னி மகள்' காப்பியத்தில் ஆநிரை மீட்கச் சென்ற அன்னி மிஞிலியின் தந்தை அன்னியின் கண்களை கோசர்கள் களைகின்றனர். அந்தக் காட்சியைக் கண்டு அன்னி மிஞிலி துடிக்கும் காட்சி அவலச் சுவை நிரம்பியதாக உள்ளதை "தந்தாய்! தந்தாய்! தகுதியில்லாத விலங்குகள் இந்தத் தணியாத துயரைத் தந்தனவோ? பகைக்கும் அன்பையே பாராட்டும் உந்தன் தகுதிக்கோ இப்பெரும் தவறு இழைத்தார்கள்? பார்க்க முடியாத துன்பத்தினால் நெஞ்சம் கலங்கி வாழ்நாள் முழுவதும் துன்பப்பட நேர்ந்ததே! நன்றல்லதைக் காண்பதில் நான் குருடன் என்பாயே! என்றும் குருடாக இருக்க வைத்தனரே"[120] என்னும் பகுதி உரைக்கும்.

## சுரும்பார் குழலியின் மரணமும் அவலமும்

'அனிச்ச அடி' காப்பியத்தில் சுரும்பார் குழலியைக் கர்ப்பிணிப் பெண் என்றும் பாராது ஒரு மாங்காய்க்காக நன்னன் கொலைத் தண்டம் விதித்து விடுகின்றான். கருவுற்றிருக்கும் தனது மனைவியை இடுகாட்டில் ஏற்றி அருளாழி புலம்பும் காட்சி அவலத்தின் உச்சம். அந்த காட்சியின் கணத்தை, ''தொட்டிலில் சேய் உறங்கத் தொடங்கும் முன்னே கால் கழித்த கட்டிலில் நீயுறங்கும் காலம் வருவதை அறியேன். அந்த கட்டிலில் நீயுறங்கும் காலம் வருவதை அறிந்திருந்தால் செந்நிறமுடைய கொட்டியின் மலர் போன்ற வாயுடையவளே! பகை நாட்டை அடைந்திருக்க மாட்டேன்''[121] என்ற பாடலின் வழி அறிய இயலும். சீவகனின் தந்தை அமைச்சரின் சூழ்ச்சியால் மாண்ட போது அவனுடைய தாய் இடுகாட்டில்

சீவகனைப் பெற்றெடுக்கின்றாள். ‘‘நரியின் குரலே முழவு என்னும் வாத்தியமாக, செத்தவர்களின் பிணங்களைச் சுடும் ஈமத்தீயே மங்கல விளக்காக, சுடுகாடாகிய கலையரங்கில் பேய்கள் நிழல்போல் கூத்தாட, ஆந்தைகள் எல்லாப் பக்கங்களிலும் கத்தும் குரலே பலரும் பாடிப் பாராட்டுதல் போல் ஆக இந்த நிலைக்கு ஆளாகிப் பிறக்க நேர்ந்ததே!’’[122] என்று புலம்புகின்றாள். இடுகாட்டில் எழும் அவலம் என்ற அளவில் இவ்விரண்டு பாடல்களும் ஒன்றுபடுகின்றன.

## அனிச்சஅடி, அருளாழி மரணமும் அவலமும்

‘அனிச்ச அடி’ காப்பியத்தில் கோட்புலியினால் குத்துப்பட்ட அனிச்ச அடி, அருளாழியின் வெற்றிச் செய்தியினைக் கேட்ட அளவில் உணர்ச்சி வசப்பட்டு மாண்டுவிடுகின்றாள். வெற்றியுடன் திரும்பும் அருளாழி அனிச்ச அடியின் முடிவைக் கேட்டதும் இறந்துவிடுகின்றான். இக்காட்சியில் பொதிந்துள்ள அவலத்தை

**‘‘……..நற்றமிழ் வல்லீர்?**
**வண்படர் நம்மை வளைத்ததே! அந்தோ!**
**விண்படர்ந் தாள்பால் விளக்கம் கேட்கப்**
**பின்படர்ந் தான்போல் அருளன் பிறங்கிய**
**உடலை நம்பால் விடுத்துப்**
**படலைக் கண்ணியின் பாற்சென் றனனே!’’** (அனி.அடி.,அ-5,க.4,:96-101)

என்ற கணியனின் புலம்பல் வழி அறிய இயலும்.

## தந்தையை இழந்த அவலம்

தந்தைக்கும் மகனுக்கும் உள்ள உறவானது வார்த்தையினால் வடிக்க முடியாதது. உடலால் சுமப்பவள் தாய் என்றால் மனதால் சுமப்பவன் தந்தை. அத்தகைய ஒரு புனிதமான பாசப் பிணைப்பினை சாலி மைந்தன் காப்பியத்தில் காண முடிகின்றது.[123]

## தாயை இழந்த அவலம்

பாசம் என்ற அச்சாணி தான் உலகம் என்னும் சக்கரத்தைச் சுழற்றுகின்றது. அன்பே வடிவானவள் அன்னை. ஒரு குழந்தை கருவான நாளிலிருந்தே அதனைத் தன் உயிராகக் கருதுபவள் அன்னை மட்டுமே என்றால் அது மிகையாகாது. உடல் நலமும், உள நலமும் ஒரு மனிதனுக்கு பாதிக்கப்படும் பொழுது உடனடியாகக் கிடைக்க கூடிய மருந்து, ஆறுதல் போன்றவை அன்னை மடி ஒன்றேயாகும். அத்தகைய தாய் இறந்த பின்பு ஆபுத்திரன் துடிக்கும் பொழுது அவலம் வாசகர்களின் மனதில் தொற்றிக் கொள்கின்றது. இதனை ‘‘நாவூறும் இனிய

மொழியினை நாம் பேசிக் கூடாமல் சாவூரில் கூடவெனச் சதிசெய்தது அவ்விதிதான். சாவூரில் கூடவெனச் சதியினை விதி தான் செய்யவில்லையென்றால் நீ வேறாய் நான் வேறாய் மதுரையிலே நிற்போமா? தாயாக உனை ஏற்றுக் கொள்ள மனம் தயங்குமொரு பேயாக எனைக் காட்டிப் பிழை செய்தது அவ்விதிதான். பேயாக எனைக்காட்டி அவ்விதி தான் பிழைக்காமல் இருந்திருந்தால் சேயாக நின் மடியில் சிந்தை களி கொண்டிருப்பேன். காணுற நீ வந்தும் எனைக் காணாதே மீளும் வண்ணம் வெட்கப்படவே செய்தது எது? நம்மை நலிவு செய்யும் விதியன்றோ? நாணுறவே அவ்விதி தான் நலிவுசெய்ய வரவில்லையென்றால் மாணுறவே தாய் மகனாக மகிழ்ச்சி பூத்து வாழ்ந்திருப்போம்''[124] என்று ஆபுத்திரனின் புலம்பலாகப் பாவலர்மணி அவர்கள் வடிப்பதிலிருந்து அறியலாம்.

சாலி மைந்தன் காப்பியம் முழுவதிலும் அவலச் சுவையே வியாப்பித்துள்ளது. பிற சுவைகள் காணப்படவில்லை.

## இளிவரல் சுவையும்

முதுமை, பிணி, பயனற்ற முயற்சி, வலிமையின்மை ஆகிய நான்கிலிருந்து இளிவரல் (அவமானப்படுத்தப்படுதல்) என்னும் சுவை பிறக்கும்[125] என்று தொல்காப்பியர் வரையறை செய்கின்றார்.

'அன்னி மகள்' காப்பியத்தில் ஆநிரைகளை மீட்கச் சென்ற அன்னியை கோசர்கள் ''அரவு முன் ஒலி செய்யும் அற்பத் தவளையே! உரமுனக்கு இத்தனை உண்டுகொல்? யாரடா காவலர் வருக! என் கைவாள் தனக்கோ சாவதற்குக் கருதிய இந்த சழக்கரைத் தூண்தோறும் கைகளைப் பிணிப்புற இப்பொழுதே கட்டுவீராக!''[126] என்று காவலருக்கு சினவாழி ஏவல் விடுக்க, கதக்கண்ணன் அன்னியின் கண்களைக் களைகின்றான். அப்பொழுது சினவாழி ''செருவிழை ஏவலீர்! சிறு செயல் புரிந்த இந்தக் குருடரை ஒட்டிக் கொண்டு போய் எல்லையில் விரட்டி அடித்து இப்பொழுதே மீள்வீராக!''[127] என்று ஏவலர்களுக்கு ஆணை விடுத்து அன்னியை மேலும் அவமானப்படுத்துகின்றான். இதில் இளிவரல் சுவை சிறப்புற வெளிப்படுத்துகிறது.

## மருட்கைச் சுவை

இதுவரைக் காணாததைக் கண்ட புதுமை, அளவின் மிக்க பெருமை, அளவின் மிகக் குறைந்த சிறுமை, ஒன்று பிறிதொன்றாகும் ஆக்கம் என்ற இவை நான்கினாலும். மருட்கை (வியப்பு) என்னும் சுவை தோன்றும்[128] என்பர் தொல்காப்பியர். மருட்கைச் சுவை 'அன்னி மகள்' காப்பியத்தில் இடம்பெறுகின்றது. அனிச்ச அடி மற்றும் காரல்மார்க்சு காப்பியத்தில் இடம்பெறவில்லை.

“மலையொன்று உருண்டு மண்ணில் கிடந்ததென கொலைப்பட்டுக் கிடந்த களிற்றின் குடம் போன்ற பெரிய வயிற்றில் நுழைந்த நரி உணவை உண்டு மீள்கையில் பொந்தின் வழியே தலையை நீட்டுதல் இருமரப்பொந்தில் உருவினை மறைத்து தலையினைக் காட்டும் ஆந்தையெனத் தோன்றும்”[129] என்னும் போர்க்களக் காட்சி மருட்கைச் சுவையைத் தருவதை அறிய இயலும். கலிங்கத்துப் பரணியில் இடம்பெறும் போர்க்களக் காட்சி இதேபோன்று வியப்புச் சுவைக்குச் சான்றாக அமைகின்றது. இரண்டு கால்களும் அறுபட்ட வீரன் போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கிறான். இருப்பினும் அவன் கலங்கவில்லை. வெட்டுண்ட கால்களையே ஆயுதங்களாகப் பயன்படுத்தும் திறம் புதுமைச் சுவைக்குச் சான்று பகர்வதை,

**“இரு தொடை அற்றிருக்கு மறவர்கள்**
**எதிர் பொருகைக் களிற்றின் வலிகெட**
**ஒரு தொடையைச் சுழற்றி எறிவர்கள்**
**ஒரு தொடையை இட்டு வைப்பர் எறியவே!”**[130]

என்ற வரிகளால் அறியலாம். புதுமை என்ற பொருளில் இவ்விரு பாடல்களும் மருட்கைச் சுவையை உணர்த்துகின்றன.

## அச்சச் சுவை

**“அணங்கே விலங்கே கள்வர் தம் இறை எனப்**
**பிணங்கல் சாலா அச்சம் நான்கே”**[131]

என நான்கு நிலைகளில் அச்சச்சுவை தோன்றும் என்பர் தொல்காப்பியர்.

‘அனிச்ச அடி’ காப்பியத்தில் சுரும்பார் குழலிக்கு நன்னன் இழைத்தத் தீமையினால் அவனுக்குக் கொடூரக் கனவு தோன்றுகின்றது. அணங்கின் காரணமாக எழும் அச்சம் இங்கு பிரதிபலிக்கப்படுகின்றது. நன்னன் தனக்கு நேர்ந்த கனவு குறித்து மிஞிலியிடம், “குழலி என்னும் குலப் பிறப்பாட்டி நிழலின் அசைந்து நேர் வந்தாற்போல் தோன்றலும் எதிர்நின்று துணைவிழி சோர உமிழ்ந்து எழுகின்ற சினத்தீயினை முகத்தில் காட்டி ‘வினைமுதிர் காலம் விளைந்ததா?’ என்று ஒலிகடல் முழக்கமென ஆரவாரம் செய்தாலும் அஞ்சுதக உடைத்தால்; அவள் முகம் நினையின் நெஞ்சு சுடுமதனால் நிகழ்வதை அறியேன்”[132] இவ்வாறு எடுத்தியம்புகின்றான். இதில் அச்சச் சுவை கொப்பளிப்பதை உணர முடிகின்றது.

## பெருமிதச் சுவை

கல்வி, வீரம், புகழ், கொடை[133] என நான்கு நிலைகளில் பெருமிதச் சுவை தோன்றுவதாகத் தொல்காப்பியர் வரையறை செய்கின்றார்.

'அனிச்ச அடி' காப்பியத்தில் வேள் எவ்வி கோசரையும் பாண்டியரையும் அரிமணவாயில் உறத்தூரில் வென்றமைக்காக வீரர்களுக்குச் சிறப்புச் செய்கின்றான். அப்பொழுது குடலாயிற் கீரத்தனார் வேள் எவ்வியின் கொடைச் சிறப்பினைப் புகழ்கின்றார். இதில் கொடையினால் விளையும் பெருமிதச் சுவை வெளிப்படுகின்றது. இந்த பெருமிதச் சுவை அன்னி மகள் மற்றும் காரல் மார்க்சு காப்பியத்தில் இடம்பெறவில்லை. குடவாயிற் கீரத்தனார் வேள் எவ்வியை, "தாயிற்கு நிகரான நின் கருணையில் வளரும் உயிர்களெல்லாம் வந்து தங்கினர். வான்மழை போன்றவனே! தளரும் குடிகளெல்லாம் தாங்கும் தோளினை யுடையவனே! இன்னுரை அல்லாதவற்றை இசைக்காத நாவினையுடையவனே! பொன்னிறை இரண்டு படி அளவு புலவர்களுக்கு அருளிய கையினை உடையவனே! இனநலம் காக்கும் கருத்தினையுடைவனே! செய்யினை உழவன் நாள்தோறும் சென்று காத்திட மானம் காக்கும் நின் செங்கோலின் மீத்திறம் வாழ்கவே!"[134] இவ்வாறு புகழ்வதிலிருந்து பெருமிதச் சுவை வெளிப்படுவதை உணர இயலும்.

## வெகுளிச் சுவை

"கைகால்களை வெட்டுதல் போன்ற துன்புறுத்தும் செயல்கள், குடிமக்களை வருத்துதல், தடிகொண்டு அடித்தல், வைதல், கொல்ல முயலுதல் போன்றவற்றால் வெகுளி[135] என்னும் மெய்ப்பாடு தோன்றும் வெகுளிச் சுவை அன்னி மகள் மற்றும் அனிச்ச அடி காப்பியங்களில் இடம்பெறுகின்றது.

## உறுப்பறையினால் விளையும் வெகுளி

'அன்னி மகள்' காப்பியத்தில் கோசர்களால் அன்னியின் கண்கள் களையப்படுகின்றன. இதனால் சினம் கொண்ட அன்னி மிஞிலி கோசர்களின் ஊரைத் தீக்கிரையாக்குவதாகக் கூறுகின்றாள். அன்னி மிஞிலியின் "தெரிந்தது தந்தையே! தீவினையாளரைக் காலம் என்று கட்டோடு அழிப்பது? எரிகின்ற வீட்டை அணைப்பதற்குத் தேவையான நீருக்கு யாரேனும் மழையை நம்பி வாழ்வாரோ? கடலில் அலை என்று ஒழியும்? தலை என்று முழுகுதல்? கோசருக்கு நாமென்ன குறைந்தா போனோம்? தூசு என மதிப்போம். மாசினைத் துடைப்போம்! அதிரடியாளரின் அடங்காத அகந்தைக்கு எதிர்த்து அடி கொடுக்க இன்துணை கூட்டுவோம். கண்களைப் பறித்த கசடரின் ஊரை உண்ணும் நெருப்பிற்கு நல்லுணவு ஆக்குவோம்."[136] என்னும் கூற்று வெகுளிச் சுவையை நன்கு விளக்கும்.

## கொலையினால் விளையும் வெகுளி

'அனிச்ச அடி' காப்பியத்தில் சுரும்பார் குழலி என்னும் கருவுற்ற பெண் கொல்லப்படுகின்றாள். அப்பொழுது இடுகாட்டில் மிஞிலி, "நஞ்சு போன்ற மிஞிலியை, நீதியில்லாத கயவனை வெஞ்சமர் காத்திடையே வீழ்த்தி அவன் தசையை எஞ்சாமல் நாய்நரிகளுக்கு உணவாக இடுவேன்! ஒள்ளிழை ஈமத்திற்கு ஒழுக்கம் இல்லாத மிஞிலியின் வெள்ளிய எலும்புகளை ஊன்றிக் கூரை வேய்குவேன். முடியினையுடைய தலையின் ஓட்டினை முன்னெடுத்து உயர்த்திப் பிடித்து ஒரு விளக்காக விளங்குமாறு செய்குவேன்"[137] என்று உரைப்பதிலிருந்து கொலையினால் விளையும் வெகுளிச் சுவையினை அறிய இயலும்.

இங்ஙனம் அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி போன்ற அறுவகைச் சுவைகளும் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. நகையும், உவகையும் இவரது காப்பியங்களில் இடம்பெறவில்லை.

## தொகுப்புரை

- பாவலர்மணி அவர்களின் காப்பியங்கள் தமிழ்த்தாய் வாழ்த்து, வருபொருள் உரைத்தல் மற்றும் பாயிரத்துடன் தொடங்குகின்றன.
- அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றினையும் இவரது காப்பியங்கள் எடுத்தியம்புகின்றன.
- வீடுபேற்றினை இவரது காப்பியங்கள் மொழியவில்லை.
- காரல் மார்க்சு, அருளாழி, திதியன், ஆபுத்திரன் போன்ற தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தன்னிகரற்ற தலைவர்களைக் கதைநாயகர்களாகக் கொண்டு காப்பியங்கள் அமைந்துள்ளன.
- மலை, ஆறு, கடல் முதலான வருணனைகள் அனிச்ச அடி காப்பியத்திலும் நாடு, நகர், வருணனைகள் காரல் மார்க்சு, அன்னி மகள் காப்பியங்களிலும் நாடு, நகர் ஆறு வருணனைகள் சாலிமைந்தன் காப்பியத்திலும் இடம்பெற்றுள்ளன.
- மணம் புரிதல் என்னும் நிகழ்வு காரல் மார்க்சு, அன்னி மகள், சாலி மைந்தன் ஆகிய காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது.
- புனல் விளையாட்டு அனிச்ச அடி காப்பியத்தில் அமைந்துள்ளது.
- சிறுவரைப் பெறுதல் என்னும் நிகழ்வு காரல் மார்க்சு, சாலி மைந்தன் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது.
- ஊடலில் முனிதல் அனிச்ச அடி காப்பியத்தில் அமைந்துள்ளது.
- கூடலில் களித்தல் காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது. இக்கூடல் புறக்கூடலாக இல்லாமல் மனங்களின் சங்கமமான அகக்கூடலாக அமைந்து காப்பியங்களுக்கு அழகு சேர்க்கின்றன.
- அமைச்சருடன் ஆய்தல், தூது ஆகிய இரண்டும் அன்னி மகள், அனிச்ச அடி ஆகிய காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.
- போர் புரிதலும் வெற்றி பெறுதலும் காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் ஆகிய மூன்று காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. போர் என்பது இவரது காப்பியங்களில் ஆக்கப்பூர்வமானதாக அமைந்துள்ளது.

- காரல் மார்க்சு காப்பியத்தில் சுரண்டலுக்கு எதிரான வெற்றியும், அனிச்ச அடி காப்பியத்தில் சூழ்ச்சிக்கு எதிரான வெற்றியும், அன்னி மகள் காப்பியத்தில் அநீதிக்கு எதிரான வெற்றியும் இடம்பெற்றுள்ளது.
- சாலிமைந்தன் காப்பியத்தில் இந்நிகழ்வு இடம்பெறவில்லை.
- எண்வகைச் சுவைகளில் அறுசுவைகள் இவரது காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.
- அவலச் சுவையே இவரது காப்பியங்களில் ஆதிக்கம் செலுத்துகிறது.
- நகை, உவகைச் சுவை இவரது காப்பியங்களில் இடம்பெறவில்லை.
- எந்த ஒரு கதையையும் நாகரிகமாக நவிலும் பண்பில் பாவலர்மணி அவர்கள் உயர்ந்து நிற்பதை இவ்வியலின் வழி அறிய முடிகிறது.

# சான்றெண் விளக்கம்

1. தண்டி., 8.
2. மேலது, 10.
3. அன்.மக.,ப.4,பா:7.
4. அனி.அடி.,ப.4,பா:7.
5. அன்.மக.,ப.4,பா.6:1-2.
6. கார.மார்.கா,பா:8.
7. மேலது,பா:7.
8. சாலி.மை.காண்.1.பட.1.பா.:1(அ)
9. திருக்.,34.
10. மேலது,35.
11. மேலது.93.
12. கார.மார்.கா,பா.242:1-2.
13. அன்.மக.,அ.2,க.1,82-85.
14. திருக்.,78.
15. மேலது,76.
16. அன்.மக.,அ.3,க.4,60-67.
17. அனி.அடி.,அ.1,க.5,116-118.
18. புறநா,பா.182:1-3.
19. சீத்தலைச்சாத்தனார்,மணிமேகலை,கா.12,116-119.
20. சாலி.மைந்.,காண்.3,பட.1,பா:23.
21. திருக்.,321.
22. சாலி.மைந்.,காண்.3,பட.1,பா:24.
23. திருக்.,757.
24. அன்.மக.,அ.2,க.6,46-49.
25. சீத்தலைச்சாத்தனார்,மணிமேகலை,கா.11,79-80.
26. அன்.மக.,அ.2,க.1,108-113.
27. மேலது,அ.2,க.4,181-182.
28. திருக்.,47.
29. அன்.மக.,அ.3,க.2,134-138.
30. அனி.அடி.,ப.34.
31. திருக்.,388.
32. அனி.அடி.,அ.2,க.1,117-120.
33. கார.மார்.கா,பா:329.
34. திருக்.,782
35. சாலி.மைந்.,காண்.4,பட.3,பா.29:3-7.
36. சாலி.மைந்.,காண்.3,பட.8,பா:16.

37. கார.மார்.கா.பா:87
38. மு.வரதராசன்,கண்ணகி,ப.49.
39. நளவெண்பா,காண்.1,பா:174.
40. கார.மார்.கா.பா:310
41. அனி.அடி.,அ.5,க.5,60-67
42. திருக்.,1116.
43. அன்.மக.,அ.1.க.1,203-214.
44. மேலது,அ.5,க.3,93-99.
45. சாலி.மைந்.,காண்.1,பட.5,பா:48.
46. டாக்டர் ம.ரா.போ.குருசாமி, முதற் காப்பியச் சிந்தனை,ப.6.
47. ஆசாரக் கோவை,பா:1.
48. கார.மார்.கா.பா.280:1-4
49. அன்.மக.,அ.4,க.3,89-91.
50. மேலது,அ.5,க.2,88-95.
51. மேலது,அ.5,க.3,61-64.
52. பட்டினத்தார் பாடல்கள்,பா.2.
53. அனி.அடி.,அ.1,க.5,21-32.
54. மேலது,அ.4,க.4,86-89.
55. மேலது,அ.5,க.4,75-83.
56. சாலி.மைந்.,காண்.3,பட.1,பா:23-24.
57. மேலது,காண்.3,பட.4,127-132.
58. மேலது,காண்.3,பட.9,பா:22:3-8.
59. மேலது,காண்.4,பட.5,பா:44.
60. மேலது,பா:33.
61. அனி.அடி,ப.33.
62. மேலது,அ.1,க.3,31-42.
63. சாலி.மைந்.,காண்.1,பட.1,பா:7.
64. கம்பராமாயணம்,பா:84.
65. கார.மார்.கா.,பா:13.
66. சாலி.மைந்.,காண்.2,பட.1,பா:4
67. அன்.மக.அ.1,க.1,1-9
68. சாலி.மைந்.,காண்.1,பட.2,பா:25.
69. கார.மார்.கா.,பா.87.
70. இளங்கோவடிகள்,சிலப்பதிகாரம்,காண்.1,கா.1,61-62.
71. சாலி.மைந்.,காண்.1,பட.3,பா:8.
72. மேலது,பா:11.
73. திருக்.,61.

74. பெரியாழ்வார் திருமொழி,பா:56.
75. சாலி.மைந்.,காண்.2,பட.1,பா.8:2-4.
76. திருக்.,1330.
77. அனி.அடி.,அ.4,க.3,174-177.
78. மேலது,157-161.
79. மேலது,80-83.
80. மேலது,84-86.
81. மேலது,88-90.
82. கார.மார்.கா.பா:319.
83. திருத்தக்கத்தேவர்,சீவகசிந்தாமணி,பா:1347.
84. அன்.மக.,அ.5,க.3,83-85.
85. மேலது,86-90.
86. அனி.அடி,ப.33.
87. திருக்.,381.
88. அன்.மக.அ.3,க.2,134-145.
89. அனி.அடி.,அ.4,க.4,14-23.
90. திருக்.,687.
91. கம்பராமாயணம்,பா.6035.
92. அன்.மக.,அ.2,க.3,33-40.
93. அனி.அடி.,அ.2,க.3,பா:45-46.
94. கார.மார்.கா.பா:120-121.
95. மேலது,பா:139.
96. மேலது,பா.238:4-8.
97. மேலது,ப.138.
98. அனி.அடி.,அ.3,க.2,59-64.
99. மேலது,அ.5,க.1,1-10.
100. சாலி.மைந்.,காண்.1,பட.7,பா:33.
101. மேலது,காண்.3,பட.4,23-25.
102. மேலது,காண்.3,பட.10,பா.15:3-8.
103. மேலது,காண்.4,பட.5,பா:3.
104. மேலது,காண்.4,பட.3,பா.14:1-6.
105. டாக்டர் வ.சுப. மாணிக்கம், எந்தச் சிலம்பு,பக்.122-123.
106. அன்.மக.,அ.2,க.6,85-89.
107. மேலது,அ.5,க.2,94-99.
108. அனி.அடி.,அ.5,க.4,67-86.
109. கார.மார்.கா,பா:179.
110. அனி.அடி.,அ.5,க.5,11-19.

111. கார.மார்.கா,பா.194:1-5.
112. மேலது,பா:180.
113. தொல்.பொருளதிகாரம்,1197.
114. மேலது,1199.
115. ஜே.ஜி.என்.தாசன், சிலம்பில் மெய்ப்பாடுகள், ப.71
116. கார.மார்.கா,பா:275.
117. அன்.மக.,ப.79.
118. நந்திக் கலம்பகம்,பா:110.
119. அன்.மக.,அ.4,க.1,36-41.
120. மேலது,அ.3,க.4,60-67.
121. அனி.அடி.,ப.52.
122. திருத்தக்கத்தேவர்,சீவகசிந்தாமணி,பா:309.
123. சாலி.மைந்.,காண்.4,பட.5,பா:19-21.
124. மேலது,பா:40-42.
125. தொல்.பொருளதிகாரம்,1200.
126. அன்.மக.,அ.3,க.3,116-120.
127. மேலது,165-167.
128. தொல்.பொருளதிகாரம்,1201.
129. அன்.மக.,அ.2,க.6,101-106.
130. கலிங்கத்துப் பரணி, போர் பாடியது, பா.35.
131. தொல்.பொருளதிகாரம்,1202.
132. அனி.அடி.,அ.3,க.3,21-28.
133. தொல்.பொருளதிகாரம்,1203.
134. அன்.மக.,அ.1,க.2,73-81.
135. தொல்.பொருளதிகாரம்,1204.
136. அன்.மக.,அ.3,க.4,88-98.
137. அனி.அடி.,அ.1,க.5,96-102.

# இயல்-2
# கதை மாந்தர் படைப்பு

ஒரு இலக்கியம் சிறப்புடன் அமைய அடித்தளமாக அமைவது கதை மாந்தர் படைப்பாகும். எண்ணற்ற உயர்ந்த விழுமியங்களைப் படைப்பாளி படிப்பாளிக்குப் போதிக்கப் பயன்படும் சாளரமாக இது அமைகின்றது. ஒரு படைப்பாளி தனது பல்வேறு அனுபவங்களின் மூலம் கண்டறிந்த மனித முகங்களைச் செம்மையாகத் தனது இலக்கியங்களில் வடித்தெடுக்கும் பொழுது தான் அது அழியாத காவியமாக இலக்கிய உலகில் நிலைபெறுகின்றது. அவ்வகையில் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் கதை மாந்தர் படைப்பு அமைந்துள்ள பாங்கினை வெளிப்படுத்துவது இவ்வியலின் நோக்கமாகும்.

## பாத்திரங்களும் அவற்றின் இயல்புகளும்

“காப்பியத்திற்கு மிகவும் இன்றியமையாதவையாக அமைபவை பொருத்தமான பல பாத்திரங்கள் ஆகும். எண்ணிக்கையில் மிகுதியாகவும் வகையில் பல்வேறு திறத்தனவாகவும் படைக்கப்படும் பாத்திரங்கள் காப்பியச் சிறப்பினை மிகுவிக்கும். கதை, பாத்திரங்கள், நிகழ்ச்சிகள் ஆகிய இவை மூன்றும் காப்பியத்திற்குச் செறிவும் உரமும் ஊட்டும் முதன்மையான கூறுகளாகும். இம் மூன்றனுள் காப்பியத்திற்கு உரமூட்டுவதில் சிறப்பான கூறாக விளங்குவன பாத்திரங்களே ஆகும். வெறும் கதையையும் நிகழ்ச்சிகளையும் மட்டும் கூறிச் செல்வது சுவை பயக்காது. பல்வேறு வகையான பாத்திரங்களே காப்பியத்திற்குப் பொலிவும், சுவையும் உள்ளத்தைக் கவரும் தன்மையும் நல்குவனவாகும். பாத்திரங்களே காப்பியத்திற்குப் பலவகையான சுவைகளைத் தருதலோடு கருத்துக்களை வெளியிடும் வாயில்களாகவும் உள்ளன”[1] என்பர் டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி.

பாத்திரங்களின் இன்றியமையாமை குறித்து டபிள்யூ.பி.கெர் என்பவர் “நாடகப் பாங்கில் அமைக்கப்பெறும் பாத்திரங்கள் இல்லையேல் காப்பியம் வெறும் வியப்பார்ந்த (Romance) கதையாக ஆகிவிடும்; காப்பியத்தின் பலவகைத் திறனும் வாழ்க்கை உண்மையும் அதன் பாத்திரங்கள் ஒன்றோடொன்று சந்திப்பதினின்று தோன்றும் நாடகத்திலேயே காண முடியும்”[2] என்றுரைப்பர்.

பாத்திரங்கள் அமைய வேண்டிய நெறி குறித்து எஸ். வையாபுரிப்பிள்ளை “ஒவ்வொரு பாத்திரத்தினுடைய தனித்தனி வியக்தியும் (Individuality) நன்றாகப் புலப்பட வேண்டும். பாத்திரங்களுடைய மனப் பண்புகள்

பலவும் வெளிப்படுதல் வேண்டும். பல பாத்திரங்கள் ஒரே கதையில் அமைந்து அவற்றின் இயல்புக்கேற்றவாறு ஒழுகிச் செயல்புரிந்து நம் மனத்தைக் கவர்ந்து நமது கண் முகப்பிலே தோன்றுவது போல விளங்குதல் வேண்டும். பாத்திரத்தின் இயல்புகள் கதை நிகழ்ச்சியோடு சேர்த்து வளர்ந்து முதிர்வதும் தெளிவாதல் வேண்டும். கதை அமைப்பு, பாத்திரங்களின் தனிப்பட்ட இயல்பு, சூழ்நிலை இவை தம்மில் ஒரு தொடர்பும் ஓர் ஒற்றுமையும் இருத்தல் வேண்டும். மக்களது வாழ்க்கையிலும் அவர்தம் இயல்போடும் பொருந்தியனவாய்ப் பாத்திரங்கள் இயற்றப்படுதல் வேண்டும்.''[3] என்று கூறுகின்றார்.

பாவலர்மணி அவர்கள் பாத்திரங்கள் பாங்குடன் அமைய வேண்டிய பாங்கினை ''பாத்திரங்களின் தோற்றம், வளர்ச்சி, போராட்டம், வீழ்ச்சி அல்லது வெற்றி இவையே காப்பியமாக உருக்கொள்கின்றன. இவற்றுள் எதனை எப்படி அமைப்பது என்பதிலும், எப்படி வெளிப்படுத்துவது என்பதிலும் தான் காப்பியப் புலவனின் வெற்றி அமைந்திருக்கின்றது. அவன் மிகச்சிறந்த அமைப்புமுறை கற்றவனாயிருந்தால் நம்மை வியப்பிலே கொண்டுவந்து நிறுத்துகின்றான். அக்கலையில் அவன் ஏழையாக இருந்தால் நம்மைக் கொட்டாவியை நோக்கி இட்டுச் செலுத்துகின்றான்.''[4] இங்ஙனம் அழகாக எடுத்தியம்புகின்றார்.

பாத்திர இயல்புகளை அறிந்துகொள்வதற்கு கொ. இலட்சுமணசாமி

"1. அப்பாத்திரத்தின் பேச்சும் செயலும்

2. அப்பாத்திரம் பற்றிய பிறர் பேச்சும்

3. காப்பிய ஆசிரியன் கூற்றும்

என்னும் மூவகையினையும் துணையாகக் கொள்ளல் நன்றாகும்''[5] என்று கூறுகின்றார்.

இவ்வாறு அறிஞர்கள் பாத்திரங்கள் ஒரு படைப்பாளியின் படைப்பில் ஆதிக்கம் செலுத்துவதை அழகாக எடுத்துரைக்கின்றனர்.

## பாத்திரங்களின் வகைப்பாடு

பாத்திரங்களை அவற்றின் பண்பு நலன்கள், வாழ்க்கை முறை, பால், வயது, அறிவு நிலை, கதை ஆகியவற்றின் அடிப்படையில் வகைப்படுத்தலாம். அவை

1. தலைமைப் பாத்திரம்
2. எதிர் தலைமைப் பாத்திரம்
3. துணைப் பாத்திரம் என அமையும்

தலைமைப் பாத்திரமானது காப்பியம் முழுவதும் அமைந்து நிற்பதாக இருக்க வேண்டும். அறிமுகப்படுத்தும் நிலையிலிருந்து வளர்ச்சி பெற்று முழுமை நிலையை அடைய வேண்டும். அந்த வளர்ச்சியின் வழியாகவே அவர்களது உயர்ந்த குணம், உணர்ச்சி, சிக்கலை அணுகுகின்ற முறை, பிரச்சினைகளிலும் மாறாத மாசற்ற குணம், உயர்ந்த இலட்சியங்கள் போன்றவை விளக்கப்படலாம். தண்டியலங்காரம் உரைக்கும் தன்னிகரற்ற மனிதர்களாகவே இவர்கள் விளங்குவர். பண்பில் தலைமை கொள்ளும் பாத்திரங்களே தலைமைப் பாத்திரங்களாக விளங்குவர்.

## எதிர்தலைமைப் பாத்திரம்

தலைமைப் பாத்திரத்தின் செயல்களுக்கு எதிர்முனையில் இருப்பவர்களே எதிர்தலைமைப் பாத்திரங்களாவார்கள். தலைமைப் பாத்திரத்திற்கு இணையாக இப்பாத்திரம் இருந்தாலும் செயல்பாட்டு நிலையில் முற்றிலும் வேறுபாடு காணப்படும். “நல்லவர்களையே கதை மாந்தர்களாக வைத்துக் கொண்டு ஒரு சிறந்த உணர்ச்சி வடிவான கதையை-காப்பியத்தைப் படைக்க முடியாது. நல்லவர்களும் தீயவர்களும் நிரம்பிய கதைதான் உணர்ச்சியானதாக மட்டுமன்று; இயல்பானதாகவும் இருக்க முடியும். இக்கதையுள் வரும் போராட்டந்தான் நம்மைக் காப்பியத்தோடு ஒன்றச் செய்யும். ஆனால் நல்லவர்களையே கதை மாந்தர்களாக ஆக்கினால், போராட்டத்தின் வீறு குன்றிவிடும்”[6] இவ்வாறு பாவலர்மணி அவர்கள் எதிர்தலைமைப் பாத்திரத்தின் இன்றியமையாமையை எடுத்துரைக்கின்றார்.

## துணைப்பாத்திரம்

காப்பியத்தின் மையக் கருத்திற்கு நேரடியாகப் பயன்படும் நிலையில் தலைமைப்பாத்திரங்களும், எதிர் தலைமைப் பாத்திரங்களும் அமைகின்றனர். சில பாத்திரங்கள் ஆங்காங்கே உள்ள நிகழ்ச்சிகளில் மட்டும் இடம்பெறும். இப்பாத்திரங்களும் காப்பிய வளர்ச்சிக்குத் துணை நிற்கின்றன என்பதால் இவற்றை துணைப்பாத்திரங்கள் என்றும் கூறலாம். துணைப் பாத்திரங்கள் குறித்து, “இவ்வுலகில் எந்த மனிதனும் தனித்து இயங்க இயலாது. பிறரோடு கலக்காமலோ, பிறரைப் பார்க்காமலோ, பிறரின் உதவி இன்றியோ வாழ்வது என்பது இயலாது”[7] என்று க. மீனாட்சிசுந்தரம் கூறுகின்றார். எனவே தலைமைப் பாத்திரங்களும், எதிர்தலைமைப் பாத்திரங்களும் செயலோட்ட நிகழ்ச்சிகளின் வளர்ச்சிகளுக்கும், திருப்புமுனைகளுக்கும் துணை நிற்கும் பாத்திரங்களை துணைப் பாத்திரங்கள் எனலாம்.

## பாவலர்மணியின் காப்பியக் கதை மாந்தர்கள்

'காரல் மார்க்சு' காப்பியத்தில் காரல் மார்க்சு, சென்னி ஆகிய தலைமைப் பாத்திரங்களும் அர்னால்டு ரூசு என்ற எதிர் தலைமைப் பாத்திரமும் என்ரிகு, என்ரிட்டே, பிரடெரிக் எங்கல்சு, வெட்பாலன், இலாசலே, எலன்டெமூது, எட்கார், பிரான்சிக்கா, தார்வின் போன்ற துணைப் பாத்திரங்களும் என 12 பேர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

'அனிச்ச அடி' காப்பியத்தில் அருளாழி, அனிச்ச அடி போன்ற தலைமைப் பாத்திரங்களும் மிஞிலி, நன்னன், வேங்கைமுகன், கோட்புலி போன்ற எதிர்த் தலைமைப் பாத்திரங்களும் சுரும்பார் குழலி, ஆய் எயினன், அணிவளை, மோசிக்கீரனார், கணியன் கீரன், நார்முடிச் சேரல், செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டு சேரலாதன், பரணர், ஒற்றர் தலைவன் போன்ற துணைப் பாத்திரங்களும் என 16 பாத்திரங்கள் படைக்கப்பட்டுள்ளனர்.

'அன்னி மகள்' காப்பியத்தில் திதியன், அன்னி மிஞிலி ஆகிய தலைமைப் பாத்திரங்களும் அகுதை, சினவாழி, கதக்கண்ணன் போன்ற எதிர் தலைமைப் பாத்திரங்களும் வேள் எவ்வி, அன்னி, தத்தன், கீரன், மாதரி, ஏலங்குழலி, வெள்ளெருக்கிலையார், குடவாயிற் கீரத்தனார், இளஞ்சேட் சென்னி போன்ற துணைப் பாத்திரங்களும் என 14 கதை மாந்தர்கள் உள்ளனர்.

## தலைமைப் பாத்திரம்

தலைமைப் பாத்திரங்கள் தன்னிகரற்ற பண்புகளைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் மாண்புடையனவாகும். காப்பியங்களை ஆழ்ந்து படிக்கும் வாசகனது உள்ளத்தில் காலத்திற்கும் அழியாத சிறப்புடன் இலங்கக் கூடியதாகும். கதையை நடத்திச் சென்று இன்றியமையாத திருப்பங்களுக்குக் காரணங்களாக அமைவனவே தலைமைப் பாத்திரங்கள் ஆகும். அத்தகைய தலைமைப் பாத்திரங்கள் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களை அணிசெய்யும் பாங்கு பின்வருமாறு.

## காரல் மார்க்சு

காரல் மார்க்சு என்ற மாமனிதர் சமூகத்தை மீட்க வந்த ஒரு சிறந்த பேராளி. ஏற்றத்தாழ்வு நிறைந்த சமூகத்தைக் கண்டு வருந்தியதோடு அதன் அவலநிலையைப் போக்க 'மூலதனம்' என்னும் முத்தினைக் கண்டெடுத்த அறிவுக்கடல். "மனித குலத்தின் நன்மைக்காகச் சிறப்பாகப் பாடுபடுவதற்குரிய வேலையை நாம் தேர்ந்தெடுத்துவிட்டால், அதன் சுமை நம்மை அழுத்த முடியாது. ஏனென்றால், அது எல்லோருடைய நன்மைக்காகச் செய்யப்படுகின்ற தியாகம்"[8]

என்று காரல் மார்க்சு வெறும் வார்த்தைக்காகக் கூறவில்லை. வாழ்க்கையாகவே வாழ்ந்து அதனை நிருபித்துக் காட்டியவர்.

## காரல் மார்க்சின் புறவருணனை

பாவலர்மணி அவர்கள் புறத்தோற்ற வருணனைக்குப் பெரிதும் முக்கியத்துவம் கொடுக்கவில்லை. காரல் மார்க்சு புறத்தை விட அகத்தால் அழகானவர் என்பதை,

> **“.......................... மேற்றோல்**
> **தோற்றத்தில் முள்ளைப் போலத்**
> **துலங்கினும் சுளைகள் ஈயும்**
> **நாற்றத்தால் சுவையால் ஆகும்.**
> **நயந்திடும் பலாவை ஒத்தான்”** (கார.மார்.கா,பா:33:2-4)

என்றுரைப்பர்.

## பிறரது இன்பத்தில் தனது துயரை மறந்தவன்

தனது இன்பத்திற்காக மற்றவர்களைக் காயப்படுத்தும், இரணப்படுத்தும் இந்த சுயநல உலகில் மற்றவர்களின் இன்பத்தில் தன்னுடைய எல்லையில்லாத் துன்பத்தை மறக்கக் கூடிய உன்னத மாண்பினை உடையவராக காரல் மார்க்சு படைக்கப்பட்டுள்ளார்.

## வறுமையிலும் செம்மை

காரல் மார்க்சு வாழ்ந்த வறுமை வாழ்வினை கனவிலும் எந்தவொரு மனிதராலும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. வறுமை எனும் கோர நோய் அவரது வாழ்வில் தலை விரித்து ஆடியது. இதனை, “இந்த அறைக்குள் நுழைந்தவுடன் புகையும், புகையிலை நாற்றமும் சேர்ந்து உங்கள் கண்களின் நீர் வரும்படி செய்துவிடும். ஏதோ ஒரு குகைக்குள் தடவிக்கொண்டு செல்கிற மாதிரிதான் முதலில் பிரவேசிக்க வேண்டும். சிறிது நேரம் நிதானித்துப் பார்த்த பிறகு அங்குள்ள சாமான்கள் இன்னின்னவை என்பது புலப்படும். எல்லாம் தூசிமயம்! எங்கும் அழுக்குமயம். உட்காருவதென்பது ஆபத்தான காரியம். இதோ ஒரு நாற்காலி. ஆனால் இதற்கு மூன்று கால்கள் தான் இருக்கின்றன. அதோ அந்த நாற்காலிக்கு நான்கு கால்கள் இருக்கின்றன. ஆனால் அதன்மீது குழந்தைகள் சமையல் விளையாட்டு விளையாடிக் கொண்டிருக்கின்றார்கள். அந்த நாற்காலியின் மீதுதான் வந்தவர்கள் உட்கார வேண்டும். அதனால் விளையாட்டுச் சாமான்கள் அதன் மீது அப்படியேதான் இருக்கும். அவைகளைப் பொருட்படுத்தாமல் நீங்கள்

உட்கார்ந்தீர்களானால் உங்கள் கால் சட்டை கிழிந்து போகக்கூடும். ஆனால் இவைகளையெல்லாம் பற்றி மார்க்ஸோ, அவருடைய மனைவியோ சட்டை செய்வதே இல்லை. நீங்கள் உள்ளே நுழைந்து விட்டீர்களானால் உங்களுக்கு அன்பான உபசாரம் நடக்கிறது"[9] என்னும் பகுதி விளக்கும். நினைப்பதற்கும் அஞ்சத்தக்கதாகவுள்ள இந்த வறுமை வாழ்வில் காரல் மார்க்ஸ் என்னும் மாமனிதர் வாழ்ந்துள்ளார். அத்தகைய வறுமையிலும் அவர் செம்மையான வாழ்வு வாழ்ந்துள்ளார். வறுமையினால் அவர் பெற்ற இன்னல்களை உணர்ந்த இலாசலே அவருக்கு ஒரு பெரிய தொகையைத் திரட்டித் தர எண்ணி செயலில் இறங்குகின்றான். அதனை அறிந்த காரல் மார்க்சு, "அச்சம் கொள்ளச் செய்வதான வறுமையால் அழிந்த போதும் பிச்சை நான் எடுக்க மாட்டேன்; நிதி திரட்டும் அறியாமையை விடுக"[10] என்று கூறுவதிலிருந்து வறுமையிலும் செம்மையான வாழ்வு வந்த காரல் மார்க்சின் உயர்ந்த குணத்தை அறியலாம்.

## குற்ற உணர்வினால் புழுங்கும் காரல் மார்க்சு

வறுமையின் காரணமாகக் காரல் மார்க்சுக்கு கடன் தொல்லை அதிகமானது. வறுமையும், கடன் தொல்லையும் ஒட்டிப் பிறந்த இரட்டைக் குழந்தைகள். வறுமை வளமையைக் குன்றச் செய்து கடனை அதிகப்படுத்தியது. கடன்காரர்கள் தம்மைக் கண்டால் காரல் மார்க்சின் குழந்தைகள், "அப்பா வீட்டினில் இல்லை. அவசரமாய் ஒருவர் வந்து அழைத்துப் போனார்; எப்பொழுது வருவேனென இசைந்திடவும் இல்லை"[11] என்று கூறக் காரல்மார்க்சு மனம் நொந்து போனார். அவரது குற்றவுணர்வின் வெளிப்பாட்டினைப் பாவலர்மணி அவர்கள்,

**"பிள்ளைகளின் பொய்ம்மொழியால் பிரச்சனைசற்**
**றொதுங்கியது பேறே என்னும்**
**குள்ளமனம் அவற்கில்லை. கூறுகின்ற**
**மெய்ம்மொழிகள் கேட்டுக் கேட்டு**
**வெள்ளமென மகிழ்ச்சியுற வேண்டிய நான்**
**பொய் மொழியை விரும்பிக் கேட்கும்**
**கள்ளனென ஆனேனே எனக்கசிந்து**
**கண்வழியக் கவலை கொண்டான்"** (கார.மார்.கா,பா:280)

என்றுரைப்பர்.

## செ்ன்னி

காரல் மார்க்சின் காதல் மனைவி சென்னி. ப்ருஷிய மந்திரியான வெட்பாலன் பிரபுவின் மகள். வறுமை என்னும் கொடிய நெருப்பு காரலின் காதலைப் பொசுக்காமல் இருந்ததற்கு சென்னியின் தியாகமே காரணமாகும். சமூக மாற்றத்திற்குப் போராடிய காரல் மார்க்சின் பின் நின்ற தியாக தீபம் சென்னி. "காரல் மார்க்சின் குடும்ப வாழ்க்கை இன்பகரமாயிருந்தது. இதற்கு முக்கியக் காரணம், இவனுடைய மனைவி. இவள், தன்னுடைய தேக உபத்திரவம், மனோவேதனை எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு, வறுமையோடு பின்தொடர்கிற அவமானம், பரிகாசம் முதலியவைகளை உதறித் தள்ளிவிட்டு, மார்க்ஸுக்குப் பணிவிடை செய்து வந்தாள். வாழ்க்கையிலே ஒரு வெறுப்பு ஏற்படாமல் மார்க்ஸைப் பாதுகாத்து வந்தவள் இவள்தான். எங்கெல்ஸ் இல்லாவிட்டால் மார்க்ஸ் சமதர்மத்தை அனுஷ்டான சாத்தியமான ஒரு தத்துவமாக வகுத்திருக்க முடியாதென்பது வாஸ்தவம். ஆனால் ஜென்னியில்லாவிட்டால் மார்க்ஸ் உயிர் வாழ்ந்திருக்கவே முடியாது"[12] என்றுரைப்பர். இதனை,

**"எங்கல்சென் றொருவன் இங்கே**
**இலனெனில் உலகம் போற்றும்**
**பங்கமில் லாத மூல**
**தனத்தினைப் பார்த்தல் இல்லை;**
**திங்கள்நேர் முகத்துச் சென்னி**
**இல்லையேல் தீரம் மிக்க**
**இங்கொரு காரல் மார்க்சே**
**இருந்திடல் இல்லை என்பார்."** (கார.மார்.கா,பா:318)

என்னும் பாடல் எடுத்துரைக்கும்.

## சென்னியின் புறவருணனை

சென்னை எல்லையற்ற அழகு வாய்ந்தவள். பெண்களுக்குரிய அனைத்து இலக்கணங்களும் வளமாக வாய்த்தவள். அழகின் திருவுருவமாகத் திகழ்பவள். அவளது புறத்தோற்றம் குறித்துப் பாவலர்மணி அவர்கள்,

**"கண்களில் நிலவு கான்றிடும்; இதழில்**
**கமலங்கள் தோன்றிடும்; பேச்சில்**
**பண்களின் சாரம் வழிந்திடும்; அகமோ**
**பயிலறம் செழித்திடும் நன்செய்;**
**மண்களி கொளவும் வாலிபர் உள்ளம்**

**மத்துறை தயிரின் மாழ் கிடவும்**
**பெண்களில் இவள்போல் எவள்பிறந் துள்ளாள்**
**பேசினர் சென்னியை வியந்து"** (கார.மார்.கா,பா:44)

என்றுரைப்பர்.

## காதலின் இலக்கணம் சென்னி

காதல் என்பதற்குச் சரியான இலக்கணமாகச் சென்னி திகழ்கின்றார். வறுமையின் கொடுமை உச்சத்தில் இருந்த போதும் இருவருக்கும் இடையே உள்ள காதலுக்கு மட்டும் வறுமையை வழங்கவில்லை. இதனைப் பாவலர்மணி அவர்கள்,

**"காதலென் றுரைப்ப தென்ன?**
**கயிறின்றிப் பிணிக்கும் அந்தக்**
**காதலின் ஆற்றல் என்ன?**
**கசிந்திடும் ஊற்றுக் கண்ணாம்**
**காதலின் ஆழ மென்ன?**
**கனலிடைக் கருக்கி வாட்டும்**
**காதலின் கொடுமை என்ன?**
**காட்டாக சென்னி உள்ளாள்"** (கார.மார்.கா,பா:309)

என்று உரைப்பதின் வழி நன்கு உணர முடிகின்றது. ஆழமான அன்பின் வெளிப்பாடே இத்தகைய உன்னதக் காதலுக்கு அடித்தளமாக அமைகின்றது. காதல் என்ற வார்த்தைக்குச் சரியான இலக்கணமாக சென்னி விளங்குவதை இதன் மூலம் அறியலாம்.

## அன்புக்கு இல்லம் சென்னி

**"மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"**[13]

என்ற வள்ளுவரின் வாக்கிற்கு இணங்க கணவனின் வருவாய்க்கு ஏற்ப வாழ்க்கை நடத்தும் பெண்ணோவியமாக வலம் வருகின்றார். இதனைப் பாவலர்மணி அவர்கள்

**"படிப்பினில் இமயம் போன்றாள்;**
**பரிவினில் கங்கை போன்றாள்;**
**வெடிப்புறும் மகிழ்ச்சி வெள்ளம்**
**விளைத்தலில் மேகம் ஆனாள்;**
**அடிப்படைக் குணத்தில் மூத்த**
**அன்பினுக் கில்லம் ஆனாள்;**

பொடிப்புற்றுத் துயரம் சாகும்
புன்னகை முகத்துச் சென்னி" (கார.மார்.கா,பா:311)

என்று சென்னியைக் குறித்துரைப்பர்.

## வழக்கறா நகையை என்றும் சூடும் சென்னி

சென்னி வாழ்ந்த வாழ்க்கை மிகவும் கொடுமையானது. வறுமை என்னும் கொடிய அரக்கனின் கோரப் பசிக்குத் தனது குழந்தைகளை இழந்தாள். எண்ணற்ற துன்பங்களினால் சூழப்பட்டு மனம் நொந்து போனாள். அத்தனை துயரத்திலும் நீங்காத சிரிப்பினை; தனது கணவன் காரல் மார்க்சிற்காக முகத்தில் சூடினாள் என்றால் அவள் எத்தகைய தியாக உள்ளம் கொண்டவள். இதனைப் பாவலர்மணி அவர்கள் "நாடுகள் விட்டு நாடு நடந்திட நேர்ந்த போதும், கேடுகள் மாறி மாறி வாழ்க்கையுள் கிளர்ந்த போதும் பண்பில் சோர்வில்லாத அகத்தினையுடைய சென்னி அன்பன் வாடுறுவான் என்றே நீங்காத சிரிப்பினை என்றும் முகத்தில் சூடுவாள்"[14] என்று உரைப்பதிலிருந்து அறியலாம்.

## அறிவின் சாளரம் சென்னி

சென்னி மிகுந்த அறிவு நிரம்பியவர். நாட்டினையும் மக்களையும் குறித்த சரியான பார்வையினை உடையவர். காரல் மார்க்சுக்கு நிகராக அறிவாற்றல் உடையவர் சென்னி என்பதைப் பாவலர்மணி அவர்கள் "எத்தகு பொருள் குறித்தும் எதிரெதிர் வாதம் செய்யும் வித்தகம் உடையாள்; காரல் விரித்துரை செய்யும் நூலின் சிறப்பான திறன் பற்றிச் சென்னி சொல்லிடும் நடுவுரைக்காக காரல் மெய்த்தவம் செய்வான்; மேலென்ன சொல்ல வேண்டும்"[15] என்று உரைப்பதின் வழி அறிய இயலும்.

## படைப்பை விமர்சிக்கும் சீர்மிகு விமர்சகர்

படைப்பாளிக்குச் சரியாக விமர்சனம் செய்யும் விமர்சகர் தேவை-சரியான விமர்சகர் தான் தவறுகளைக் களைந்து நிறைகளை மேம்படத் துணைபுரிபவர் ஆவார். அந்த வகையில் காரல் மார்க்சு என்னும் சமூகப் படைப்பாளியை மேம்படுத்தும் சிற்பியாக சென்னி திகழ்கின்றார். காரல் மார்க்சு காப்பியத்தில் சென்னி மார்க்சிடம், "வெறுப்போடும், எரிச்சலோடும் எழுதுதல் வேண்டாம்; பேனா அறுத்திடும் வாளும் இல்லை; தாள் பகைவரின் மார்பும் இல்லை; விரைந்து நிற்கும் படையைப் போலத் தொடர்கள் ஏன் விளங்க வேண்டும்; முறைப்பட மென்மையாக எழுதிட முனைதல் நன்றாம்."[16] என்று உரைப்பதின் வழி அவர் சீர்மிகு விமர்சகர் என்பது புலனாகும்.

## அருளாழி

அருளாழி ‘அனிச்ச அடி’ காப்பியத்தின் ஒப்பற்ற நாயகன். காதலிலும், வீரத்திலும் சிறந்தவன். நற்பண்புகள் பலவற்றிற்கு வித்தானவன். பகைமையை முறியடிப்பதில் வல்லவன். தீமைக்குத் தீமையை வழங்கும் ஆற்றல் வாய்ந்தவன். நன்றி மறவாப் பண்பாளன். காதலுக்காக உயிரையும் ஈந்த உத்தமன்.

### மனைவி மீது மாறாக் காதல் கொண்டவன்

அருளாழி தனது மனைவி சுரும்பார் குழலி மிஞிலியின் சூதிற்கு இரையானதை எண்ணி உள்ளம் துடிக்கின்றான். சுடுகாட்டில் நின்று அருளாழி புலம்பும் காட்சி கல் மனதையும் கரையச் செய்யும் ஆற்றல் உடையது. அருளாழி அனிச்ச அடி காப்பியத்தில்

**“ஆறாத் துயரில் அலைபடச் செய்து**
**மீளா உலகம் மேயினை! நின்னொடு**
**வாழா வாழ்க்கையும் வாழ்வாங் கொல்லோ!**
**ஆம்பலும், ஆரமும் நாறுநின் மேனி**
**சாம்பரும் என்புமாச் சரிந்து கிடப்பதைக்**
**கண்டுமுயிர் தாங்கும் கன்மனத் தென்நிகர்**
**உண்டோ உலகிடை?”** (அனி.அடி.அ-1,க-5,4-10)

என்று புலம்புவதிலிருந்து அறிய இயலும்.

### வஞ்சினமும் வாழ்க்கைத் துணையின் மீது குன்றாத பாசமும்

கொடியவர்களின் கொடுமைக்குச் சுரும்பார் குழலி இரையாக அருளாழி துடித்துப் போகின்றான். அருளாழி மாமரத்தை அடியோடு அழிக்காது அந்நாட்டை விட்டு அகல்வது இல்லையென்றும் மிஞிலியைக் கொன்று அவன் எலும்பைத் தூணாக கட்டிக் குழவியின் ஈமத்தில் கூரை வேய்வதாகவும் வஞ்சினம் கூறுகின்றான். வஞ்சினம் கூறிய அருளாழி,

**“வெவ்வாய்க் கூற்றின் வெகுண்டுபகை தீர்ப்பேன்;**
**வெல்லினும் மகிழ்வேன்; வீவுற் றென்னுயிர்**
**செல்லினும் குழலியைச் சேர்தலில் மகிழ்வேன்.”**
(அனி.அடி,அ-1,க-5,116-118)

என்று உரைப்பதிலிருந்து மனைவியின் மீது அருளாழி கொண்ட ஆழமான பாசம் புலப்படும்.

## தன்வலி மாற்றான் வலியை உணரும் ஆற்றல் கொண்டவன்

துளுநாட்டு அரசன் நன்னனுக்குத் துணை நிற்கும் வேங்கைமுகனின் படைப் பெருக்கத்தைப் பார்த்து வருமாறு ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் அருளாழியை அனுப்பி வைக்கின்றான். பவளத் தீவினைச் சுற்றி வந்த அருளாழி ''வெள்ளலை தவழும் இந்த விரிநீர்த் துருத்தியை பகைவர் நெருங்க எண்ணாதிருக்க நூறு கலங்களை வேறு வேறாக இயற்றி ஆறு பிரிவாக அதனைப் பகுத்து நினைத்த நொடியே போரினை நிகழ்த்த அனைத்தும் செய்துள்ள வேங்கையன் ஆற்றலைப் போற்றலே வேண்டும்; ஆயினும் குட்டுவனின் ஆற்றலும், மும்மடங்காகிய கலத்தின் பெருக்கமும் தொகுத்துப் பேசினால் வெல்லுதல் எளிது என்பதை எவரும் துணிகுவர்''[17] இங்ஙனம் உரைப்பதிலிருந்து தனது வலிமையையும் மாற்றான் வலிமையையும் நன்கு அறிந்துள்ள ஆற்றல் உடையவன் அருளாழி என்பதை அறியலாம்.

## அனிச்ச அடியின் மீது ஆழமான காதல் கொண்டவன்

அனிச்ச அடியின் அன்பு கனிந்த செயல் அருளாழியை ஈர்த்த போதும் குழலியை மறக்க முடியாமல் அருளாழி தவிக்கின்றான். அவளின் ஊடல் அவன் மனதை அனிச்ச அடியின் பால் அதிகமாக ஈர்க்கின்றது. மனப்போராட்டத்தின் விளைவாக அனிச்ச அடியை அருளாழி தூரமாக வைத்தாலும் அவளோ மனதிற்கு நெருக்கமாகிவிடுகின்றாள். பவளத்தீவில் கோட்புலியிடம் இருந்து அருளாழி அனிச்ச அடியை மீட்கின்றான். வீழ்ந்து கிடந்த கோட்புலி குறுவாளால் எறிய அவ்வாள் அனிச்ச அடியின் கழுத்தில் பாய்கிறது. அப்பொழுது அருளாழி

**''பழுதிலாய்! உந்றன் பனிமலர்க் கழுத்தில்**
**அந்தோ குருதியின் அருவி வழிந்ததே!**
**செந்தேன் மொழியே செப்பகில் லாயோ?**
**கயக்கறு மதியே மயக்கமுற் றனையோ?**
**(நெஞ்சில்)**
**தயக்கம் தீயது! தளர்ந்தா ளிவளைத்**
**தூக்கி எடுத்துத் தூநீர்க் கலத்தினைப்**
**போக்கித் தொண்டி விரைந்து போவனேல்**
**வாடிய கொடிக்கு வாழ்வு கொடுக்கலாம்!**
**கோடிய புருவக் குமுதவாய் காக்க**
**ஏற்ற வினைகளை யாற்றுவென் இன்னே!''** (அனி.அடி,அ-5,க.1,171-180)

என்றுரைப்பதிலிருந்து அவனது ஆழமான காதலை அறிய இயலும்.

## நன்றி மறவாப் பண்பாளன்

அருளாழி மிகுந்த நன்றியுணர்வு உடையவன். தனக்கு உதவிகள் புரிந்த உத்தமர் தமக்கு உற்றதுணையாக இருக்க விரும்பும் உன்னத உள்ளம் படைத்தவன். கோட்புலியால் அனிச்ச அடி அவலத்திற்கு ஆளாகியுள்ள நிலையில் போர் என்னும் முக்கிய கடமை தன்னை அழைப்பதை எண்ணி குற்ற உணர்விற்கு ஆளாகின்றான். அனிச்ச அடியிடம் அருளாழி "யானை தாக்கக் கடுமையான நோயினால் உழந்தேன். நான் உய்யுமாறு எத்தனை உதவிகள் புரிந்தாய்! அல்லும் பகலும் அகலாது யானலம் புல்லும்படி செய்யத் துன்பம் பொறுத்த நீ துன்புறும் பொழுது பக்கத்து அமர்ந்து உன் இடர் களையாதவனாய்ச் செல்லும் என் செயல் நாணத் தக்கது!"[18] இங்ஙனம் புலம்புவதிலிருந்து அவனது நன்றியுணர்வினை அறிய இயலும்.

## அருளாழியின் வீரம்

அருளாழி மிகச் சிறந்த வீரன். தீமைக்குத் தீமை செய்ய அஞ்சாதவன். தனது மனைவி சுரும்பார் குழலியை வஞ்சனையால் வீழ்த்திய மிஞிலியை அருளாழி போர்க்களத்தில் எதிர்க்கொள்கின்றான். போர்க்கள நிகழ்வு அருளாழியின் வீரத்திற்குச் சான்று பகர்கின்றது. "ஈரிரு நாழிகை இடைவிடாது போர்செய்தும் போரில் முடிவு புலப்படவில்லை; ஆர்வம் விடாது அரும்போர் இயற்றச் சோர்வினால் மிஞிலியின் சுடர்வாள் கையிலோர் நடுக்கம் கண்ட நாயகன் அருளன் முன்னினும் இரட்டிப்பாக விரைவை முடுக்கினான். வேலும் கேடகமும் வீழ்ந்ததுகண்டிலம் போழும் நெடுவேல் புக்கதே கண்டனம்; மண்ணிடை மலையென மிஞிலி கிடந்தனன்; புண்ணிடைச் செந்நீர் பொங்கி அருவியாய் வழிந்தது; வீரரின் வாழ்த்தினால் செவிப்பறை கிழிந்தது; கேட்டவர் உள்ளம் கிளர்ந்தது"[19] என்ற பாவலர்மணி அவர்களின் போர்க்காட்சி வருணனை அருளாழியின் வீரத்தை விவரிக்கின்றது.

## பார்புகழும் சீர்மிகு காதலையுடையவன்

காதலும் வீரமும் நம் தமிழ்ச் சமூகத்தின் இரு கண்களாக இருந்ததை வ.சுப. மாணிக்கம் அவர்கள் "ஒரு சமுதாயம் காதலில் பேருணர்ச்சி கொண்டிருக்கும். ஒரு சமுதாயம் போரில் பேருணர்ச்சி கொண்டிருக்கும். நம் தமிழ்ச் சமுதாயத்தில் காதலுணர்ச்சிக்கும் இடமுண்டு. போர் உணர்ச்சிக்கும் இடமுண்டு. எனினும் எந்த உணர்ச்சி மிகுதியாக இருந்தது? காதலுக்காகப் போர் செய்தனரா? போருக்காகக் காதல் செய்தனரா? என்று நீங்கள் கேட்பீர்கள். இரண்டு உணர்ச்சிகளும் சமநிலையில் இருந்தன எனவும், காதலோ, வீரமோ ஒன்றைவிட்டு

ஒன்று மிகுதியாகச் சென்றதில்லை எனவும் பழைய நூல்கள் நமக்குக் காட்டுகின்றன”[20] என்று கூறுகின்றார். இக்கருத்திற்கு முற்றிலும் அணிசெய்பவனாக அருளாழி திகழ்கிறான்.

சுடுகாட்டில் சுரும்பார் குழலிக்காக உரைத்த வஞ்சினத்தை நிறைவேற்றிய மகிழ்ச்சியில் அனிச்சஅடியைக் காண அருளாழி வருகின்றான். அப்பொழுது அனிச்ச அடி இறந்த செய்தியைக் கேட்டுத் துடிக்கின்றான். அவள் இறக்கும் முன் ‘‘உறவினால் உறுவது ஒழிகலாத் துன்பமே. பிரிவினால் வருவது எண்ணில்லா இன்பமே’’[21] இவ்வாறு கூறியதாகப் பரணர் கூற அருளாழி மயங்கி விழ கையைப் பிடித்து நாடி பார்த்த கீரன் ‘‘வன்படர் நம்மை வளைத்ததே! அந்தோ! விண்படர்ந்தாள்பால் விளக்கம் கேட்கப் பின்படர்ந்தான் போல் அருளன் பிறங்கிய உடலை நம்பால் விடுத்துப் பச்சிலையும் மலரும் கொண்டு கட்டப்பட்ட மாலையை அணிந்த கண்ணியின் பாற்சென்றனனே!’’[22] இவ்வாறு கூறுவதிலிருந்து அருளாழியின் சீர்மிகு காதலை அறியலாம்.

## அனிச்ச அடி

அனிச்ச அடி காப்பியத்தின் கதைத் தலைவி. ஒழுக்கமும் ஒப்பற்ற காதலும் கொண்டவள். அன்பே உருவானவள். அன்பினால் அருளாழியின் வளைக்க முடியாத உள்ளத்தை வளைத்தவள். அதிகாரத்திற்கு அடிபணியாதவள்.

## அனிச்ச அடியின் புறவருணனை

அனிச்ச அடி வேல் போன்ற கூர்மையான விழிகளையும், கனி போன்ற இனிய சொற்களையும் உடையவள். இதனை அருளாழி சிறையிலிருந்து “வேலிலும் கொடிய விழியாளைக் காண்பதற்காகக் காற்றினும் முந்திச் செல்ல உய்ப்பது எதுவென்று ஆராய்ந்து அறிய முற்பட்ட போது அதற்கான உண்மையைக் கண்டுணர முடியாதவனாக உள்ளேன். கனி போன்ற இனிமையான சொற்களை உடைய நங்கை என் மீது கொண்டுள்ள அன்பைக் குறிப்பால் உணர்த்தியும், பதில் கூறாமல் எனது விருப்பத்தை விழுங்கி வண்டு குடைந்த கனி போன்ற மனத்தானாக எத்தனை காலம் இயங்குவேன்”[23] இங்ஙனம் கூறுவதிலிருந்து அறியலாம்.

## பிறரின் துயரைத் தன் துயராக உணர்பவள்

அருளாழியும், ‘அனிச்ச அடியும் மலைச்சாரல் வழி நடந்து சென்று இயற்கையழகைக் கண்டு மகிழும் பொழுது’ ‘என் பொருட்டு இத்துணைத் துன்பத்தையும் நீ தாங்குதல் ஏன்’ என்று அருளாழி கேட்க அதற்கு அனிச்ச அடி

தனது காதலை வெளிப்படுத்தாது "நின்னுறு துயரை என்னுறு துயராக எண்ணினேனாதலின் இச்செயல் புரிந்தேன்; நன்மை புரிந்துன் அரும்படர் களைதலில் சாதல் வருமெனின் சலிப்பில்லாது ஏற்பேன்"[24] என்று கூறுவதிலிருந்து பிறரின் துயரைத் தன் துயராக உணரும் அனிச்ச அடியின் உயர்ந்த உள்ளத்தினை அறியலாம்.

## பிரிவினால் வாடும் உள்ளம் கொண்டவள்

அருளாழி வஞ்சி நகரம் சென்ற பின்னர் அனிச்ச அடி தனியே இருந்து இரங்குகின்றாள். தோழி மான்விழியிடம் அனிச்ச அடி "நிலவும் ஆழியும் நெடுமலர்ச் சோலையில் உலவும் தென்றலும் உறுபகை எனக்கே, ஆயின வாவென்? அருளன் முன்பு வாராதிருப்பின் வருத்தம் சிறிதும் சாராதிருத்தலும் சாலும்;"[25] என்று கூறுவதிலிருந்து பிரிவினால் வாடும் அவளது உள்ளம் புலப்படும்.

## காதலனின் இலட்சியத்திற்குத் துணை நிற்பவள்

அருளாழி மீது அனிச்ச அடி கொண்ட ஆழமான காதலை அறிந்த அவளது தோழி மலர்விழி அவளது உள்ளத்தை அருளாழிக்குத் தெரியப்படுத்துமாறு கூறுகின்றாள். அதற்கு அனிச்ச அடி ''ஒருவேளை எந்தன் உளக் குறிப்பறிந்து வேட்கைப் பெருகவும் பேசி எம் இல்லம் தங்குவானேயானால் கொடிய தறுகணன் மிஞிலியால் இங்கவன் அழிவினை எய்தலும் எய்தும்; சேர நாடு செல்லாதிருப்பின் மிகுதியாகப் புகழையடையும் வாய்ப்பிழந்து சொல்லிய சூளுரை வெல்லாது தோல்வியைப் பொருந்தி பழியுரை பூணலும் பூணும்''[26] என்று கூறுவதிலிருந்து அருளாழியின் இலட்சியத்திற்குத் துணை நிற்கும் பாங்கு புலப்படும்.

## அருளாழியை நினைத்து உருகும் உள்ளம்

அருளாழி மீது ஆழமான காதல் கொண்டவள் அனிச்ச அடி காதலின் வெளிப்பாடாக அடிக்கடி ஊடல் கொள்கின்றாள். அருளாழியின் மீது வெளியில் கோபம் கொண்டாலும் ஆழ்மனமம் அவனையே நாடுகின்றது. அவனைக் காயப்படுத்தியதற்கு வருந்துகின்றது. அவளின் உளப் போராட்டத்தைப் பாவலர்மணி அவர்கள், "காணாப் பொழுதில் கரைதலும், காணின் மாட்சிமை இல்லாதன மொழிதலும் மனமே நின் செயற்கு எளியதே ஆயினும் ஏழையென்னலம் அளியதாமென அறிகில்லாயோ?"[27] என்று படைத்துக் காட்டுவதிலிருந்து அறியலாம்.

## தீமைக்கு அஞ்சாதவள்

பவளத்தீவினைச் சேர்ந்த வேங்கைமுகனின் மகன் கோட்புலி அனிச்ச அடியைக் கடத்திச் சென்று தன்னை மணந்து கொள்ளுமாறு வற்புறுத்துகின்றான். அப்பொழுது அனிச்ச அடி குறும்பர் இனத்தின் குறைகளையும், கொடுமைகளையும் கூறிப் பழிக்கின்றாள். தீமைக்கு அஞ்சாதவள் அனிச்ச அடி என்பதை கோட்புலியிடம் அவள் ‘‘தன்குலப் பெருமை தானே பேசுதல் பெண்குலத்திற்குரியது; அதனைப் பேசேல்! எருக்கு மலர் மருக்கொழுந்தாகுமோ! தலைப்படும் குலமெனின் தரையெல்லாம் அதன் தன் வலைப்பட வேண்டும்; மாறாக வசைப்பட வாழ்வது நற்குல வாழ்வெனப்படுமோ?’’[28] என்பர்.

## குலமானம் நாடும் கன்றிலாக் குணத்தாள்

அனிச்ச அடி கோட்புலியால் காயப்பட்டு துன்புறுகின்றாள். அப்பொழுது அருளாழி அவளது பக்கத்தில் இருந்து பணி செய்ய இயலாமையை நினைத்து வருந்துகின்றான். அதற்கு அனிச்ச அடி ‘‘நற்றமிழ்ப்பரணர் பேணும் திறத்தினை அறியாது பேசுதல் நீக்குக! என் அயல் இருந்தாகும் ஆக்கம் சிறியதாகும்! அதனினும் குலத்தின் மானங் காத்தலே மாண்பின் மிக்கதாகும்! அதை இயற்றாது ஒழிவது ஈனம்! களத்தில் நீ பெறும் வெற்றிக் கணக்கென் நலத்தை விளைவிக்கும் நல்லதொரு மருந்தாகும்.’’[29] இங்ஙனம் கூறுவதிலிருந்து குலமானத்தினை நாடும் அனிச்ச அடியின் ஈடில்லாக் குணத்தினை அறிய இயலும்.

## உயிரையும் துறந்த உத்தம நங்கை

அன்பு என்னும் சொல்லுக்கு இலக்கணமாக அனிச்ச அடி திகழ்கின்றாள். அன்பு தன்னலமற்றது. பிறரின் உயர்வில் மகிழக் கூடியது. அருளாழியின் வெற்றியையே தனது குறிக்கோளாகக் கொண்ட அனிச்ச அடி உள்ளக் களிப்பினால் தனது உயிரையும் துறக்கின்றாள். இதனை பாவலர்மணி அவர்கள் ‘‘வெற்றிச் செய்திகள் செவியிடை விழவிழ முற்றிய பேராசை மூண்டெழும் மனத்தாளாய் ‘அருளா நீ யாண்டுள்ளாய்’ என்றவள் அடங்காக் குரலாற் கூவினாள்; ஆதலின் குருதி வாய்வழிப் பெருகிட வஞ்சியாள் நம்மின் போயினள்.’’[30] பரணர் வாய்மொழி வழியாக விவரிக்கின்றார். இங்ஙனம் அனிச்ச அடி அருளாழிக்காகவே வாழ்ந்து தனது உயிரையும் துறக்கின்ற உத்தம நங்கையாகத் திகழ்கின்றாள்.

## திதியன்

'அன்னி மகள்' காப்பியத்தின் எல்லையற்ற தலைவன் காதலும், வீரமும் தனது இரண்டு கண்களாகக் கொண்டவன். ஒற்றுமை மனப்பான்மை உடையவன். எதிரிகளின் சூழ்ச்சியை அறிந்து கொள்ளக் கூடியவன். விவேகமும் கொண்டவன்.

## திதியனின் புறவருணனை

திதியன் ஆண்மை கலந்த அழகுடையவன். மிடுக்குடையவன். கூர்மையான கண்களையும், வலிமையான தோள்களையும் உடையவன். திதியனைக் கண்ட அன்னி மிஞிலியின் மன உணர்வுகளின் வழி பாவலர்மணி.

**"குறுவாள் ஒக்குமிவன் கூர்ங்கணென் மனத்தை**
**உருவுமால்! இஃதென்! உற்றுமுன் னறியா**
**நடுக்கமேன் மனத்தை நண்ணுதல்! உளமே**
**விடுக்க கில்லாயோ! விழியே! விழியே!**
**உரையென உயர்ந்த வடிவுறு தோள்களில்**
**கரையெனப் படர்ந்தனை!"** (அன்.மக.அ-1.க-1.187-192)

இங்ஙனம் அவனது புறத்தோற்றத்தை வருணிக்கின்றார்.

## திதியனின் தூய்மையான அன்பு

திதியனுக்கும், அன்னி மிஞிலிக்கும் புகாரில் நடைபெற்ற இந்திர விழாவினைக் காணச் சென்ற பொழுது ஒருவர் மீது ஒருவருக்குக் காதல் ஏற்பட்டது. குறுக்கையில் நடைபெற்ற ஏறுதழுவும் விழாவில் அன்னியின் வெண்காற் காரியை திதியன் அன்னி மிஞிலிக்காக அடக்கி வெற்றி பெற்றான். ஆனால் அன்னி பழம்பகையைக் காரணம் காட்டி மகட்கொடை மறுக்கின்றான். அப்பொழுது திதியன் "இனமோ பகையோ எது முன் வரினும் புனமயில் மிஞிலி என் பொன்மனைக் கிழத்தியாக ஆவது உறுதி; அவ்வினை இயற்றலில் சாதல் வரினும் இனிதே தாங்குவேன்"[31] என்று கூறுவதிலிருந்து திதியனின் தூய்மையான அன்பு புலப்படும்.

## தவற்றை உணர்ந்து கொள்ளும் பண்பாளன்

அன்னி மகட்கொடை மறுத்ததினால் திதியன் குறுக்கையை முற்றுகையிடுகின்றான். எவ்வி திதியனைக் கண்டு இன ஒற்றுமையை எடுத்துக் கூறி முற்றுகையை நீக்கக் கோருகின்றான். முன்பு மறுத்த திதியன் பின்னர் உடன்படுகின்றான். திதியன் வெள்ளெருக்கிலையாரை நோக்கி "சேயெனும் இளையோன் சினத்தால் மொழிந்ததை பொறுத்தருள் புரிவீராக! புலங்கொள்ள

உரைத்தன நம் நெஞ்சில் தங்கியது! பகையென்னும் கருந்திரைப்பட்ட என் அறிவில் ஒளியைப் பாய்ச்சினர்! உற்ற பகையை ஒழித்தேன். வளைத்த முற்றுகை நீக்கினேன்.''[32] என்று கூறுவதிலிருந்து தன் தவற்றை உணர்ந்து கொள்ளும் இனிய பண்பாளனாகத் திதியன் விளங்கும் பாங்கினை அறியலாம்.

## தலைமைக்கேற்ற தகுதிகள் படைத்தவன்

கோசர்களுடன் திதியனும், எவ்வியும் நடத்தும் போரில் திதியனின் ஆற்றல் சிறப்பாகப் பேசப்படுகின்றது. ஒரு சிறந்த வீரனாகத் திதியன் திகழ்வதையும், தலைமைப் பண்பில் உயர்ந்து விளங்குவதையும் பாவலர்மணி அவர்கள் ''வெல்போர்த் திதியன் தலைமைக்கேற்ற தகுதிகள் அனைத்தும் குலையாது பெற்றவன்; படையுள் ஒவ்வொரு பிரிவையும் தன்னோடு பிணைக்கும் ஆற்றல் உடையவன்; கூட்டாக நடத்தும் அணிப்போர் தனியொருவனாகச் செய்யும் தனிப்போர் இரண்டிலும் அதிகன் கணிப்பதும், அழிக்கின்ற பகையைக் கட்டுக்குள் கொணர்வதும் கைவரப் பெற்றவன் பலநாள் கழியினும் தளர்ச்சி இல்லாதவன்''[33] இவ்வாறு கூறுவதிலிருந்து அறிய இயலும்.

## உன்னதக் காதலில் உயர்ந்தவன்

காதல் என்பது ஒரு உன்னதமான உணர்வு ஆகும். உலகத்தின் அழகு காதல் என்னும் மங்கையால் நாளுக்கு நாள் பளிச்சிடுகின்றது. இத்தகைய அற்புத உணர்வு குறித்து மு.வரதராசன் அவர்கள், "குழந்தையின் உள்ளத்து உணர்வைத் தாய் ஏற்று உணர்வதுபோல், தாயின் உள்ளத்தைக் குழந்தை உணர்வதில்லை. அன்னப் பறவையின் துயரைப் புத்தர் ஏற்று உணர்ந்ததைப் போல், புத்தரின் உணர்வை அன்னம் உற்றதில்லை. காதலரின் வாழ்வில் மட்டுமே இருவர் ஒத்த நிலையில் நின்று ஒருவர் உணர்வை மற்றவர் ஏற்றுக்கொள்ளும் சிறப்பு உள்ளது"[34] என்று கூறுகிறார். இதற்கு இலக்கணமாகத் திதியன் திகழ்கின்றான்.

திதியனிடம் சேர்வதற்குத் தனது தந்தையே தடையாக இருப்பதை எண்ணி அன்னி மிஞிலி வாடுகின்றாள். அவளை அமைதிப்படுத்தும் விதமாக திதியன் உரைப்பது அவனது உன்னதக் காதலைப் பறைசாற்றுகின்றது. திதியன் அன்னி மிஞிலியிடம் "கொட்டும் தண்ணீர் விடுதல் ஒழிமதி! ஆயிரம் ஆண்டுகள் ஆயினும் எனக்காக நீ இருப்பாய் என்னும் ஒரே நினைவினால் கோடியினும் மிகுந்த பகையெல்லாம் கொன்றே ஓடி வருவேன் என்னும் ஒரு சொல்லில் தேறுவாயாக!"[35] என்று உரைப்பதிலிருந்து அவனின் உன்னதக் காதலை அறிய இயலும்.

## காதலியின் கண்ணீர் துடைப்பவன்

அன்னி மிஞிலியின் தந்தை அன்னி கோசர்களின் சூழ்ச்சியினால் கண் களையப்படுகின்றான். இதனால் துன்புற்ற அன்னி மிஞிலி கண் களைந்த கோசரைப் பழிவாங்காது கலத்தில் உண்ணேன், மாற்றுடை உடுத்தேன்; ஆம்புனல் ஆடேன்; தேன் மலர் சூடேன் என்று சூளுரைக்கின்றாள். ஆணுடை தாங்கிய அன்னி மிஞிலியும், மாதரியும் ஊர் அம்பலத்தில் நின்று கோசருக்கெதிராக மக்களைத் திரட்டுகின்றனர். இதை அறிந்த திதியன் அன்னி மிஞிலிக்காக வருந்துகின்றான். அவளது கண்ணீரைத் தானே துடைக்க விரும்புகின்றான். அன்னி மிஞிலியிடம் திதியன்

**“........................ ஏந்திழை யுன்றன்**
**அருஞ்சூள் முடித்தலும், அழிம்பரை அழித்தலும்**
**எம்பால் விடுமதி! இதற்காப் பொய்யுருத்**
**தாங்கலும் வடிவாள் ஏந்தலும் தவிர்த்தே!”** (அன்.மக.அ-4.க-3.173-176)

என்று கூறுவது புலப்படும்.

## திதியனின் வீரச்சிறப்பு

திதியன் மிகச் சிறந்த வீரன். எல்லையற்ற பேராற்றல் உடையவன். கோசர்களுக்கும், திதியனுக்கும் இடையே நெய்தலங்கானலில் நடைபெற்ற போர் திதியனின் வீரத்திற்குச் சான்றாக அமைகின்றது. கடல் வழியாகவும், தரை வழியாகவும் தாக்குதல் புரிந்த திதியன் கோசர்களின் கோட்டைக்குத் தீயூட்டுகின்றான். அப்பொழுது நடைபெற்ற நிகழ்வினைப் பாவலர்மணி அவர்கள் “வெந்தீக்கு அஞ்சி வாயிலை நோக்கி விரைபவர் திதியனின் கண்தீயைக் கண்டதும் இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பாகி வருதலும் பெயர்தலும் நீங்காதவராகி அலமரலுற்றனர்; அப்பொழுது நெருப்பால் சிலர் உடல் கருகினர்; பலர் மயக்கமடைந்தனர்; திதியனால் சாதலின் தீயினாற் சாதல் இனியதாமென கோசர் எண்ணினர்.”[36] இங்ஙனம் உரைப்பதிலிருந்து திதியனின் வீரச் சிறப்பினை அறிய இயலும்.

## உயிரோடு கலந்த அன்பினன்

திதியன் உண்மையான அன்பிற்கு இலக்கணமாகத் திகழ்பவன். தன் காதலியின் துயர் துடைக்க கோசர்களை அழித்தவன். அங்ஙனம் தனது துயரினைத் துடைத்த திதியனுக்கு என்ன கைமாறு செய்வதென அன்னி மிஞிலி நெகிழ்ந்து போகின்றாள். அப்பொழுது திதியன், “ஒருகை மறுகையின்

உதவிக்காகப் பெருகவும் நன்றி பேசுதல் உண்டோ? நின்னுறு பழியினை என்னுறு பழியாக எண்ணுதல் அன்றோ என் கடமை”[37] என்று உரைப்பதிலிருந்து உயிரோடு கலந்த உறவாக திதியன் விளங்கும் பாங்கினை அறிய இயலும்.

## அன்னி மிஞிலி

அன்னி மிஞிலி ஒழுக்கத்தை உயிராகக் கொண்டவள். காதலும், தந்தையின் மீது அளவில்லாத பாசமும் கொண்டவள். புத்திக்கூர்மை நிறைந்த பெண். துணிச்சல் மிக்கவள். வீரத்துடன் விவேகம் கைவரப் பெற்றவள். பேச்சாற்றலும், சாமர்த்திய குணமும் கொண்ட ஒப்பற்ற கதைத் தலைவி.

## பேரழகி அன்னி மிஞிலியின் புற வருணனை

அன்னிமிஞிலி பேரழகுடைய நங்கை. வீரன் திதியனையும் வீழ்த்தும் விந்தைமிகு அழகுடையவள். முதல் சந்திப்பிலேயே காதல் வலையில் விழுந்து திதியனையும் விழச் செய்த வித்தகி. திதியன் அன்னிமிஞிலியைச் சந்தித்த போது “அழிக்கின்ற வெம்படைக்கு அஞ்சாத நெஞ்சம் விழி பேசும் மொழிக்கு வீழ்வதென்ன புதுமை! கரிகள் சினந்தெழக் கலங்காத என் மனம் சுருண்ட கூந்தலுக்கு இன்று தோற்கவும் நேர்ந்ததே! நண்ணார் உட்கும் என் நலமும் பெருமையும் இசை போன்ற சொல்லுக்கு பணிதல் உண்டோ! யாரென அறியேன்! எனது ஆசையையும் மொழியேன்! தேரென வந்தாள். மனமும் தேர்கிலேன்!”[38] இவ்வாறு பாங்கனிடம் உரைப்பதிலிருந்து அன்னிமிஞிலியின் அழகு நலனை அறிய இயலும்.

## தந்தையின் மீது மாறாப் பாசம் கொண்டவள்

அன்னி மீது அன்னி மிஞிலி மிகுந்த பாசம் கொண்டவள். அன்னி கோசர்களால் கண் களையப்பட்ட போது அன்னி மிஞிலி துடித்துப் போகும் நிகழ்வு இதற்குச் சான்று பகர்கின்றது. கண் களையப்பட்ட அன்னியிடம் அன்னி மிஞ்லி “தந்தையே! தந்தையே! தகுதியில்லாத விலங்குகள் இந்தத் தணியாத் துயரை தந்தனவோ! பகைக்கும் அன்பையே பாராட்டும் உந்தன் தகுதிக்கோ இப்பெரும் தவறிழைத்தார்கள்; பார்க்க முடியாத துன்பத்தால் நெஞ்சம் கலங்கி வாழ்நாள் முழுவதும் தங்க நேர்ந்ததே! தீமையானவற்றைக் காண்பதில் நான் குருடு என்பாயே! என்றும் குருடாக இருக்க வைத்தனரே!”[39] என்று புலம்புவதிலிருந்து அன்னி மிஞிலியின் ஆழ்ந்த பாசவுணர்வை அறிய இயலும்.

## தீமைக்கு அஞ்சாத குணம்

தீமையைக் கண்டு அஞ்சாத உள்ளமே உறுதியான உள்ளம் ஆகும். அத்தகைய உறுதியான உள்ளத்தை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்திலேயே படைத்திருப்பதாக ம.பொ.சிவஞானம் "கண்ணகி மூலம் பெண்ணினத்தின் வரலாற்றிலேயே பெரும் புரட்சியைச் செய்கிறார் இளங்கோவடிகள். புரட்சிக்கு ஆண்களே தகுதியுடையவர் என்று எல்லோரும் எழுதுவர். ஆனால், இளங்கோவடிகள் தாங்க முடியாத கொடுங்கோன்மை தாண்டவமாடினால், ஆக்கும் செயல்படைத்த பெண்களும் பழிவாங்கும் படையின் முன்னணியில் நிற்பர். முரசை முழக்குவர், அரசை அழிப்பர் என்று அறிவிக்கிறார்"[40] இவ்வாறு மொழிகின்றார். கண்ணகியை ஒத்த உறுதியான உள்ளம் கொண்டவளாக அன்னிமிஞிலி படைக்கப்பட்டுள்ளாள். அன்னியின் கண் களையப்பட்ட போது அன்னி மிஞிலி "தெரிந்தது தந்தையே! தீவினையாளரைக் காலம் என்று கட்டோடு ஒழிப்பது? எரிகின்ற வீட்டை அணைத்திட நீருக்கு யாரேனும் மழையை நம்பி வாழ்வரோ? கடலில் அலையென்று ஒழியும்? தலையென்று முழுகுதல்? கோசருக்கு நாம் என்ன குறைந்தா போனோம்; தூசென மதிப்போம்; மாசினைத் துடைப்போம்! அதிரடியாளரின் அடங்காத அகந்தைக்கு எதிரடி கொடுக்க இன்துணை கூட்டுவோம்; கண்களைப் பறித்த கசடரின் ஊரை உண்ணும் நெருப்பிற்கு நல்லுணவாக்குவோம்."[41] என்று உரைப்பதிலிருந்து இதனை அறிய இயலும்.

## ஒற்றுமை மனப்பான்மையை பேணுபவள்

ஒற்றுமை தான் ஒரு இனத்தின் முக்கிய ஆயுதம் ஆகும். ஒற்றுமையின் அழிவே பகைவரின் வெற்றிக்குக் காரணமாக அமையும். ஒரு இனம் ஒற்றுமையின் அழிவில் தான் தனது அடையாளத்தை இழக்கும். ஒற்றுமை நிறைந்த இடத்தில் வெற்றிக்குக் குறைவில்லை. இத்தகைய ஒற்றுமையின் வலிமையை அன்னி மிஞிலி அறிந்து அதனை வளர்ப்பதனை ஊர் அம்பலத்தில் நின்று அவள் "போரெனின் வேங்கைப் போத்தெனச் சிலிர்க்கும் வீறு கொண்ட மறவரே! வியன்றமிழ் நாட்டினரே! நடந்ததும் அறிந்தீரோ? நம்மவர்க்கு இழிவு தொடர்ந்ததும் அறிந்தீரோ? துன்பமும் பார்த்தீரோ? எலிசில கூடிப் புலிக்குட்டியின் விழியினைப் பறித்த விந்தையைக் கேட்டீரோ? கொடையும், பெருமையும், அரசும் பகைவர்படையினால் அழிந்த பழிப்பும் அறிந்தீரோ? பிழைத்திட வந்தவர் பெருமைக்கு நம்மைப் பிழைத்ததும் கேட்டீரோ? இழைத்ததும் கேட்டீரோ? தாங்குதற்கென்றே தமிழனும், மேன்மேலும் ஓங்குதற்கென்றே ஒளிந்திவண் புகுந்த ஒன்னலர் சிலரும் இருப்பார்களாயின் அவரை

விண்ணுலகிற்கு உய்க்க விரும்பார் தமிழரோ?"[42] இங்ஙனம் உரை நிகழ்த்துவதிலிருந்து உணர்த்துகின்றார்.

## உன்னதக் காதலால் உயர்ந்த உத்தமி

உன்னதக் காதலினை உயிராகக் கொண்டவள் அன்னி மிஞிலி. திதியனுக்குத் தனது உளத்தைப் பூரணமாகக் கொடுத்தவள். திதியன் அன்னிமிஞிலியின் சூளுரையை நிறைவேற்ற போர்க்களம் சென்றதும் மாதரியின் "எண்ணத்தைப் புறத்தே போக விடாது அடக்கினும் உடல் தன் வண்ணம் இழந்து வாடுதல் காண்பாயாக! நின்சொல் தேறி நிற்பேன்; எனினும் பொன்னக வளையல்கள் பொருந்தாது கழலும்! வான்வழி! உந்தன் வாய்ச்சொல் தங்கினும் தோளின் தொடியோ தங்காது துவளும்! காடெனும் குழலாய்! கருதுதல் தடுப்பினும் தேடும் கண்களைத் தடுக்கும் திறனிலேன்; தீயினைச் சுமந்து தென்றலும் வருமேயானால் நோய்வாய்ப்படாது யானென் செய்குவேன்!"[43] அன்னி மிஞிலி இவ்வாறு உரைப்பதிலிருந்து அவளின் உன்னதக் காதலை அறியலாம்.

## சாலி மைந்தன் ஆபுத்திரன்

சாலி மைந்தன் ஆபுத்திரன் காப்பியத்தின் சீர்மிகு தலைவன் எண்ணற்ற நற்பண்புகளின் பிறப்பிடமாகத் திகழ்பவன். உயிர்களை நேசிக்கும் சீரிய பண்பாளன் பசிப்பிணியை அகற்றுவதற்காக முனைப்புடன் செயலாற்றுபவன். தாய், தந்தையரை நேசிப்பவன். நட்பினை சுவாசிக்கும் உள்ளம் கொண்டவன்.

## ஆபுத்திரனின் புறவருணனை

ஆபுத்திரன் தெய்வீக அழகு வாய்ந்தவன். அவனது மனமானது மென்மையும், இரக்கமும் கொண்டு இலங்குவதால் அதன் தன்மையானது அவனது முகத்தில் ஒளிர்கின்றது. பசுவின் அடியில் இளம்பூதியும், அஞ்சனையும் குழந்தையாக ஆபுத்திரனைக் கண்டெடுத்தபோது அவனது தோற்றமானது பாவலர்மணி அவர்களால் பாங்காகப் பேசப்படுவதை,

**"கான்றவொளி மணிவிழிகள்; கைவிரலோ காந்தள்;**
**நான்றுமுழந் தாள்படியும் நீண்டவிரு கைகள்**
**தோன்றுசுடர் போன்றொளிரும் துய்யநிறப் பிள்ளை**
**ஈன்றதுகொல் இப்பசுவும் என்றவளும் கேட்க"**

(சாலி.மைந்.காண்.2.ப.2,பா:13)

என்னும் அடிகள் புலப்படுத்தும்.

## ஆவின் காவலன் ஆபுத்திரன்

உயிர்களை நேசிப்பது என்பது உன்னதக் கலையாகும். வாயில்லாத ஜீவன்களின் மீது கொள்ளும் நேசமானது வாழ்வை ஜீவனுள்ளதாக மாற்றும் அந்தக் கலையில் கைதேர்ந்தவனாக ஆபுத்திரன் உலா வருகின்றான். தன் பசி தீர்த்த ஆவின் சேய் வேள்விக்கு இரையாகப் போவதை எண்ணி வருந்திய ஆபுத்திரன் "உடன்பிறப்பு அல்லேன் என்று இவ்வூரவர் சொன்னாலும் உன்னைக் காக்கும் கடமையை மறக்கவில்லை. நின்னைக் காத்திடும் செயலில் ஆவி விடலுறவரினும் ஏற்பேன்; சாவெனில் யானும் சாவேன். அச்சமின்றி இருப்பாயாக என்றான்."[44] இவ்வாறு கூறுவதிலிருந்து ஆவின் காப்பாளனாக அவன் திகழும் பாங்கினை அறியலாம்.

## பெண்மை போற்றும் பேராளன்

ஆபுத்திரன் சிறந்த பெண்மை போற்றும் பேராளன். தூய்மையான தாயுள்ளத்தை மதிக்கும் தயாளன். ஆவினைக் காப்பாற்றுகின்ற ஆபுத்திரனின் பிறப்பை இழிவாகப் பேசுகின்றனர். தன் தாயைப் பழித்துப் பேசுகின்ற அவர்களிடம் அவன் முன்னெடுத்து வைக்கும் கருத்துகள் அவனைப் பெண்ணியவாதியாக மிளிரச் செய்கின்றன. அவன் வேதியர்களிடம் "கோதமனின் மனைவி அகலிகையிடம் கற்பினைக் குலைப்பதற்காக வந்து தீதுறும் செயல் மேற்கொண்ட இந்திரன் நமக்குத் தெய்வம்; அதனால் ஏதுமில்லை என்றாய். சாலி இழிந்தவள் என்றீர். நீவிர் காதலால் கூறும் உங்கள் குலம்படும் கதை தான் என்ன?"[45] இவ்வாறு கூறுவதிலிருந்து நியாயத்தின் பார்வை கொண்டு பார்க்கும் பெண்மை போற்றும் பேராளனாக அவன் திகழ்வதை அறிய முடிகின்றது.

## நன்றி மறவாப் பண்பு

நன்றி மறவாமை என்பது வாழ்வியல் விழுமியங்களுள் தலையானதாகும். பிறர் நமக்குச் செய்த உதவிகளை நாளும் உள்ளுபவர் மானிடர்களுள் மாணிக்கம் போன்றவராவர். அத்தகைய தலைசிறந்த பண்பாளனாக ஆபுத்திரன் திகழ்கின்றான். ஆவினைப் பலிகொடுக்க ஆபுத்திரன் தடையாக இருந்ததால் வேதியர்கள் அவனை வீட்டைவிட்டு அனுப்புமாறு இளம்பூதியிடம் வற்புறுத்துகின்றனர். வேறு வழியில்லாத காரணத்தினால் இளம்பூதி ஆபுத்திரனை வீட்டை விட்டு அனுப்பும் பொழுது,

**"ஆர்ந்திடுஞ் செல்வக் காலையிற் கூடி**
**அதுகழிந் தேகிய ஞான்று**
**பேர்ந்துசெல் வாரின் யானுமைப் பிரியும்**
**பிழைசெய நேர்ந்ததே; நும்பாற்**

**போந்துள முதுமைக் கூன்றுகோ லாகிப்**
**பொறைகொளும் நாளினில் நும்மேல்**
**தீர்ந்தில தாய சுமையினை ஏற்றிச்**
**செல்லவோ எனைவளர்த் தெடுத்தீர்?''** (சாலி.மைந்.காண்.2.ப-7.பா:14)

அவன் இங்ஙனம் இளம்பூதியிடம் கூறுகின்றான். இதன் மூலம் ஆபுத்திரனின் நன்றி மறவாப் பண்பினை அறிய இயலும்.

## நேர்மறை சிந்தனையாளன்

பெரும்பாலான மனிதர்கள் வாழ்க்கை தமக்கு அளித்த நன்மைகளை உணராது துன்பத்தில் உழல்கின்றனர். ஆனால் மிகச் சிலரே வருகின்ற நிகழ்வுகளிலெல்லாம் மகிழ்ச்சி காண்கின்றனர். அத்தகைய நேர்மறையுள்ளம் வாய்த்தவர்களே வாழ்க்கையை நேசிக்கும் வல்லமை வாய்ந்தவர்களாவர். அத்தகைய சீரிய சிந்தனையின் பிறப்பிடமாக ஆபுத்திரன் திகழ்கின்றான். வேதியர்களின் சூழ்ச்சியின் காரணமாகப் பல்வேறு தீமைகளுக்கு ஆளான ஆபுத்திரன் ''தோன்றிய நாள் முதலாக வாட்டும் பசித்துன்பம் தாங்கி அறியாத எனக்கு அதன் இயல்பை இ∴தெனவே காட்டி ஆன்ற துணை புரிந்துள்ளார்; அது புரிந்திலாரேல் பொறுக்க முடியாத கொடும்பசியாகிய நோய்மை அறிவேனோ?''[46] இங்ஙனம் உரைப்பதிலிருந்து அவன் நேர்மறை சிந்தனையாளன் என்பதை அறிய முடிகின்றது.

## சீரிய கொள்கையினால் சிறந்தவன்

மாநிலத்தில் பிறக்கும் மனிதர்களில் மனித பண்புடன் தழைப்பவர்கள் சிலரே ஆவர். அதிலும் மிகச் சிலரே மாமனிதர்களாக உருவெடுத்து சமூகத்திற்குப் பயன் விளைவிக்கின்றனர். அத்தகைய மனிதர்களுள் ஒருவனாக ஆபத்திரன் காட்சி அளிக்கின்றான். அவனது சீரிய கொள்கையினை "கொடும்பசியால் அல்லலுறுவார்க்குக் காதலினால் உணவீந்து கடியபசி நோயைப்போதலுறச் செய்து முகப் புன்னகையைக் காணல் சாதலினை எய்தும் வரை தலை அறமாகக் கொள்வேன். பேசத் தெரியாத ஊமைக்கு நிகராக வாழும் உயிர் தம்மைத் தீயெரியின் வாயிலுறச் செய்யும் கொடிய வேள்வி என்னும் நோய் அகன்றோட ஊரவரின் நோக்கினைத் திருப்பிப் போய் எதிர்த்தல் வாழ்க்கைதனில் போற்றும் அறமாகக் கொள்வேன்"[47] என்ற அவனது கூற்றிலிருந்து அறியலாம். இங்ஙனம் சீரிய கொள்கையில் சிறந்தவன் ஆபுத்திரன் என்பதை அறியலாம்.

## அகிம்சையுள்ளம் கொண்டவன்

ஆபுத்திரன் எண்ணற்ற நற்பண்புகளின் உறைவிடமாகத் திகழ்கின்றான். அகிம்சை என்னும் அரிய பண்பு அவனை அணி செய்யும் முத்தாகத் திகழ்கின்றது. வேதியர்கள் வேள்வியின் பெயரால் ஆவினைப் பலியாக்க நினைப்பதை ஆபுத்திரன் முனைப்போடு தடுக்கின்றான். இதனால் வேதியர்கள் வெகுண்டெழுந்து அவனைத் தாக்குகின்றனர். இனிமையையே இதயமாகக் கொண்டவன் மீது கொண்ட ஈடில்லாத அன்பின் காரணமாக அவனது நண்பர்கள் வேதியர்களைத் தாக்குகின்றனர். அப்பொழுது ஆபுத்திரன் அவர்களிடம் ‘‘கையினைத் தலையில் ஏற்றி நீர் துன்பம் செய்தலை நீக்குமின்; அல்லீரேல் சோரும் என்னுயிரைப் போக்குமின்’’[48] என்று கூறுகின்றான். இத்தகைய செயல் அவனது அகிம்சை நெறியினைப் பறைசாற்றுகின்றது.

## நற்செயல்களின் முன்னோடி

பயன்தரும் மரங்கள் பல உருவாக சிறு விதையே கருவாக அமைவது போல் எண்ணற்ற நற்செயல்கள் உருக்கொள்ள சில மனிதர்களே அடிப்படையாக விளங்குகின்றனர். அவர்கள் தான் பல்வேறு தலைமைப் பண்புகளைத் தன்னகத்தே கொண்ட முன்னோடிகள் ஆவர். அத்தகைய சாலச் சிறந்த பண்பாளனாக விளங்குவதை, “உழைத்துண்ண முடியாதுள்ளோர் பலரையும் அழைத்துண்ணச் செய்யும் அன்புறு வாழ்க்கையினையுடையவன். அறமும் கலையும் கலைமகள் அகத்தில் புறமாகக் கிடந்த சிறுமையை மாற்றிக் கல்வியும், கலையும், கருத்தும் நன்னெறியும் பொருந்துமாறு செய்த நல்லறிவாளன்’’[49] என்ற அவனது செயல்களின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. இங்ஙனம் நற்செயல்களுக்கு ஆபுத்திரன் வித்திடும் பாங்கினை அறிய முடிகின்றது.

## வாழ்நாளைப் பயனுள்ள வகையில் கழிக்க விரும்புபவன்

ஒவ்வொரு நொடியையும் மற்றவர்களின் நலனுக்காகவே கழிக்க விரும்புபவர்கள் சமூகத்திற்கு அரிய மாணிக்கம் போன்றவர்கள். அவர்களால் சமூகம் மேன்மேலும் செழுமை பெறும் என்பதில் ஐயமில்லை. தொண்டுக்கு வாய்ப்பில்லாமல் நாள் கழிவதை எண்ணி வருத்தமுறும் ஆபுத்திரனை இளஞ்சாத்தன் சாவகம் அழைக்கின்றான். அப்பொழுது ஆபுத்திரன் ‘‘காதலினால் பன்னாடும் சுற்றிப் பார்க்கும் கருத்துடையேன் அல்லேன் யான்; உயிர்க்குலத்தின் தீது அகலத் தொண்டு செய்யும் நாளே வாழ்நாள் செய்யாத நாளெல்லாம் செத்த நாளே ஈதெனது குறிக்கோளாம். குறிக்கோள் நீங்கி எவ்வாறு நான் வருவேன்’’[50]

இங்ஙனம் கூறுவதிலிருந்து ஆழ்ந்த பொருளுள்ள வகையில் வாழ விரும்புபவன் ஆபுத்திரன் என்பதை அறியலாம்.

### தாய் தந்தையை நேசிக்கும் பண்பாளன்

தாய் தந்தையை நேசிக்காத உயிர் இந்த உலகில் இல்லை. ஆனால் கண்ணால் காணாமலேயே அவர்களின் மீது அன்பு கொண்டு திளைத்தல் என்பது மிகவும் சிறப்பான ஒன்றாகும். தாயை ஆபுத்திரன் ஒருபோதும் தவறாக நினைத்ததில்லை. சூழலினால் விளைந்த பிழையாகவே அதனைக் கருதுகின்றான். ‘‘நூல்வழியொழுகும் அபஞ்சிகனின் மகனென்று நுவல்வதிலும் சாலி மகன் என்று சொல்லல் உயர்வல்லாமல் தாழ்வில்லை. திரட்டிய பன்னூல் கற்ற அபஞ்சிகனார் கொடுமையின் முன் வினைவயத்தால் செய்ததனைப் பாவமெனச் சொல்வார் யார்’’[51] என்று கூறுவதிலிருந்து இதனை அறியலாம். மேலும் இளஞ்சாத்தன் மாண்டதை எண்ணி ‘‘என்னை அவன் தன் மகனென்று எப்படியோ கண்டதுபோல் தன்னையும் என் தந்தையெனல் தானறியாது ஒழிந்தேனால், மின்னை உமிழ்கின்ற பொற்புதையல் என்னருகில் தோன்றியும் அப்பொன்னை அறியாத வன்குருடாகப் போனேனே’’[52] இங்ஙனம் துடிக்கின்றான். பின்னர் அத்துயரைத் தாங்க முடியாமல் மாண்டு போகின்றான். இங்ஙனம் உயிரையே கொடுக்கும் உன்னத மைந்தனாக ஆபுத்திரன் காட்சி அளிக்கின்றான்.

இங்ஙனம் பாவலர்மணி அவர்களின் காப்பியங்கள் அனைத்திலும் தலைமைப் பாத்திரங்கள் தன்னிகரற்ற பண்புகளைக் கொண்டு தலைசிறந்து விளங்குகின்றன.

### எதிர்த் தலைமைப் பாத்திரம்

சமூகம் என்பது எண்ணற்ற விந்தை மனிதர்களின் சாளரம். பல்வேறு மனித முகங்களைக் காலம் என்னும் கண்ணாடி அறிமுகப்படுத்திக் கொண்டே இருக்கும். அத்தகைய வாழ்வியல் சூழலில் நல்ல மனிதர்களை மட்டும் ஒரு இலக்கியம் அறிமுகப்படுத்தினால் அது இயல்பானதாக அமையாது. எனவே எதிர் தலைமைப் பாத்திரம் என்பது ஒரு இலக்கியத்திற்கு இன்றியமையாத ஒன்றாகும். அதன் இன்றியமையாமையை செ. இரஞ்சனா, ‘‘ஒரு பொருளைத் தனித்து நோக்குவதிலும் மாறுபட்ட பொருளோடு வைத்து நோக்கும் போது அதன் அழகு, கவர்ச்சி, பண்பு என அனைத்திலும் அது மேம்பட்டு நிற்பதைக் காண முடிகின்றது. இதனால் தான் வெறும் வெண்மையிலும் கருமையிலும் அருகே இருக்கும் வெண்மைக்குக் கவர்ச்சி அதிகம்’’[53] என்பர். எதிர் தலைமைப் பாத்திரத்தின் தன்மை குறித்து, “தலைமைப் பாத்திரங்களின் திட்டங்களும், எண்ணங்களும் நிறைவேற வொட்டாமல் தடுத்து

நிறுத்தவோ தகர்த்து நொறுக்கவோ முனைப்புடைய பாத்திரமாக இருப்பதே எதிர்நிலைப் பாத்திரத்தின் இயல்பு”[54] என்று ம.ரா.போ. குருசாமி கூறுகின்றார்.

## ஒட்டுமொத்த சமூகமும் எதிர்தலைமைப் பாத்திரமும்

‘காரல் மார்க்சு’ காப்பியத்தில் எதிர் தலைமைப் பாத்திரமாக சுரண்டல் சமூகமே இயங்குவதனைக் காண முடிகின்றது. குறிப்பிட்ட நபர்கள் எதிர் தலைமைப் பாத்திரங்களாக செயல்படவில்லை. காலம் காலமாக உழைப்பாளிகளைச் சுரண்டிக் கொழுக்கும் முதலாளி வர்க்க மனோபாவமே எதிரியாகச் செயல்படுகின்றது. ஆளப்பிறந்தவர் தான் என்னும் அகந்தையினால் விளைந்த ஆதிக்க மனோபாவம் எதிரியாக செயல்படுகின்றது. மனிதப் பண்பில் வறுமையுடன் வாழ்ந்த ஆதிக்க வர்க்கத்தாரின் கொடூர மனப்பான்மையினைப் பாவலர்மணி அவர்கள்,

**“வறுமைக்கு வறுமையினை வழங்கிவிட**
**வழிகண்ட காரல் வாழ்க்கை**
**வறுமைக்கே இலக்காகி வற்றியதை**
**என்சொல்ல! மனிதப் பண்பில்**
**வறுமைக்கே உறவான மனிதர்களின்**
**பேராசை மிக்க வாழ்க்கை**
**வறுமைக்கிவ் வுலகமிசை வாழ்க்கையினைத்**
**தருவதுமோர் வஞ்சம் அன்றோ!”** (கார.மார்.கா,பா:278)

என்று உரைப்பதிலிருந்து அறிய இயலும். மேலும் பணம்தான் அனைத்தையும் இயக்கும் அச்சாணியாக விளங்குவதையும் எடுத்துரைக்கின்றார். பணத்தைக் கொண்டே ஒரு மனிதனின் வாழ்வானது அமைவதையும் இடித்துரைக்கின்றார். நுரையீரல் தொற்றுநோயால் கடும் துன்பத்திற்கு ஆளான காரல் மார்க்சு மருத்துவமனைக்குக் கூட செல்ல முடியாத அவல நிலையைப் பாவலர்மணி அவர்கள் “மருந்துக்குக் காசு இல்லை; மருத்துவர்க்குத் தருவதற்கும் மடியில் இல்லை; தெரிந்த மருத்துவரிடம் செல்ல வண்டி தேவையதைச் செலுத்துவோர்க்கு தரும் பணமும் கையில் இல்லை. தன் கையில் உள்ளதெல்லாம் வறுமை ஒன்றே; மருந்துக்கு வறுமையினை மாற்றிக் கொள்ளும் மருத்துவர்கள் மண் மேல் இல்லை”[55] இங்ஙனம் அழகாக எடுத்துரைக்கின்றார். இங்ஙனம் ஒட்டுமொத்த ஆதிக்க சமூகமே எதிர் தலைமைப் பாத்திரமாகக் காரல்மார்க்சு காப்பியத்தில் செயல்படுகின்றது.

## அர்னால்டு ரூசு

அர்னால்டு ரூசு செர்மன் பிரெஞ்சு மலர் என்ற இதழின் நிறுவனர். வார்த்தையிலே உண்மை மற்றும் சுத்தம் இல்லாதவர். நம்பிக்கை துரோகி. அர்னால்டு ரூசு குறித்து நன்மாறன் "அர்னால்டு ரூஜ் ஒரு நிலப்பிரபுத்துவ எதிர்ப்பாளர். ஆனால் முதலாளித்துவ சார்பாளர். அவருக்கும் மார்க்சுக்கும் முழுமையான கருத்தொற்றுமை நீடிப்பதில் சிரமம் இருந்தது. அவர்கள் முதலில் நடந்திய ஜெர்மன் பிரெஞ்சு மலர் (டோயட்ஷ்-பிரன் சோஷ்சி ஜாகர்புகர்) எனும் இதழ் நின்றது. இழப்பு ஏற்பட்டது. அதன் வரவு செலவுகள் குறித்தும் மார்க்சினால் எழுதப்பட்ட கட்டுரைகள் குறித்தும் இருவருக்கும் வேறுபாடு ஏற்பட்டது."[56] என்பர்.

செர்மன் பிரெஞ்சு மலர் என்னும் இதழை இரண்டு மொழிகளில் நடத்தி பணம் குவிக்கலாம் என்னும் பேராசையினால் அர்னால்டு ரூசு தொடங்கினான். பொதுவுடைமைக் கொள்கையினைத் தனது வாழ்வியல் இலட்சியமாகக் கொண்ட காரல் மார்க்சு புத்திதழில் சீறல், சினத்தல், சொல்லுளியால் செதுக்கல், நெருப்புத் துண்டுகளைத் தூறல் என புரட்சி விதையினைத் தூவினார். இதனை தடுக்க எண்ணிய செர்மன் மற்றும் பிரெஞ்சு அரசு அர்னால்டு ரூசையும், காரல் மார்க்சையும் கைது செய்யச் சொன்னது. அப்பொழுது வெளிப்பட்ட ரூசின் கொடூர முகத்தைப் பாவலர்மணி அவர்கள் "மொழிகள் இரண்டில் வெளியிட்ட முறையை யாரும் விரும்பவில்லை. தொழிற் கண்ணோட்டத்தோடு பார்த்தால் தோல்வி என்றே சொல்ல வேண்டும்; அழிம்பன் ரூசு மார்க்சிற்கு அளிப்பதாகச் சொன்ன ஊதியத்தைத் துளியும் தராது ஒரு நூறு இதழை ஊதியமாகத் தந்தான்."[57] என்றுரைப்பர்.

## மிஞிலி

துளுநாட்டுப் படைத் தலைவன்.மாறாத சினம் உடையவன், சுரும்பார் குழலியை மணமுடிக்கப் போர் தொடுத்து அவளது அண்ணனைக் கொன்றவன். காலம் பார்த்து பழி வாங்கத் துடிப்பவன். இரக்கமற்ற கொடூர அரக்கன். தீமையே உருவானவன்.

## பழி வாங்கும் வஞ்சக குணம் கொண்டவன்

நன்னன் பிறந்தநாள் விழாவினைக் காண வந்த சுரும்பார் குழலி ஆற்றில் நீராடச் செல்கின்றாள். அப்பொழுது சுரும்பார் குழலி அருகில் உள்ள மாந்தோப்பில் கட்டுக் காவல் மிகுந்திருப்பதைக் குறித்து வினவ மற்ற பெண்கள் அது அரசனுக்குரியது என்றும் அதில் உள்ள மாங்காய் நிலத்தில் கிடந்தாலும், நீரில்

மிதந்து வந்தாலும் அதனை உண்ணக்கூடாது என்றும் மீறினால் மரண தண்டனைக்கு ஆளாவர் என்றும் கூறுகின்றனர். அப்பொழுது ஒரு மாங்காய் குழலியின் கையில் அகப்பட அவள் எடுத்த தவறான முடிவினால் அரசவைக்குக் கொண்டு செல்லப்பட்டாள். அப்பொழுது சூழ்ச்சி குணம் கொண்ட மிஞிலி அவளை பழிவாங்கச் சரியான காலம் வாய்த்திருப்பதாக எண்ணினான். அவனது வஞ்சகச் குணத்தை

**"மணம்பட விரும்பாது மறுத்தநீ இன்று**
**பிணம்பட வந்துளாய்; பிழைப்புக் கெல்லாம்**
**அறுவடைத் திருநாள் அல்லவோ இன்று!**
**செருவிடைத் தோற்றேன்; சிறுமகள் உன்னைக்**
**கறுவினால் அழிக்கும் கருத்தில் தோற்கிலேன்;**
**என்பால் உறவெனும் இழையை அறுத்தனை;**
**உன்பால் உடலுயிர், உறவினை அறுப்பேன்."** (அனி.அடி.அ-1.க-4.29-35)

என்று அவன் மனதிற்குள் உரைப்பதிலிருந்து அறியலாம்.

## மிஞிலியின் சூழ்ச்சி

சுரும்பார் குழலியின் தந்தை எயினன் துளுநாட்டில் தங்களை இன்னார் எனக் காட்டிக் கொள்ளக் கூடாது என்றும் வாய்மை பேசுதல் தகாது என்றும் கூறி அனுப்பி வைத்தார். மாங்காய் தொடர்பான வழக்கில் நன்னனின் அரசவைக்குச் செல்லும் சுரும்பார் குழலி குற்றத்தை ஒப்புக் கொண்டு தான் யார் என்பதைக் கூற மறுத்து விடுகின்றாள்.

மேலும் அவள் தன்னை வஞ்சி நகரத்தினள் என்றும், வணிகன் மகளென்றும் தன் பெயர் தாமரை என்றும் கூறுகிறாள். அப்பொழுது மிஞிலி சுரும்பார் குழலியை நோக்கி "பத்து நூறாகப் பாவை நீ பொய்யைத் திறமையாக விளம்பினும் அவையெல்லாம் மணல் வீடாக மண்ணிடைச் சரிதலை நெருப்புப் போன்ற சொல்லினையுடையாள்! அறிவாயாக; கேடில்லா மன்னவன் திருமுன் இவ்வாறு திரித்துப் பொய் கூறுதல் வஞ்சி நகரத்து வஞ்சியர்க்குரிய வாய்மையே போலும்; மடத்தகாய்! நாடுகள் சேய்மையவெனினும் செறிந்த ஏற்றினால் அண்மையவாய்விடும் அது நீ அறியவில்லை; ஆமைக்கு உலகம் ஆழ்கிணறாகலாம்; அரசின் உலகமும் ஆழ்கிணறாகுமோ? உண்மை நான் கூறுதல் என நீ மொழியின் யாவரும் ஒப்புக் கொள்வோம் எனும் உன் கற்பனை தீவரும் பஞ்சாய்ச் சிதைதலை அறியவில்லை சுரும்பார் குழலி!"[58] என்று கூறி சுரும்பார் குழலியை அவைக்கு வெளிப்படுத்தும் விதத்தில் மிஞிலியின் சூழ்ச்சியினை அறிய இயலும்.

## நன்னனுடன் கொண்ட உறவு

உலகத்தில் பிறந்த அனைத்து மனிதர்களும் யாராவது ஒரு சிலருக்காவதும் நல்லவர்களாக இருப்பர். இதுவே உலக நியதி. கொலைகாரனும், கொடூரமானவனும் கூட இதற்கு விதிவிலக்கு அல்ல. நல்லவர்களுக்கு நயவஞ்சகர்களாக பிரதிபலிப்பர். அந்த வகையில் மிஞ்லி தன்னைப் போன்றே கொடூரத்தின் உருவமாகத் திகழும் நன்னன் மீது மாறாத அன்புடையவனாகத் திகழ்கின்றான். நன்னன் செய்த கொடூரத்தின் விளைவால் அவனுடைய மனம் உறுத்துகின்றது. எல்லையற்ற மனவேதனைக்கு ஆளாகின்றான். சுரும்பார் குழலியின் உருவம் கனவாக வந்து துரத்த அச்சத்தால் அல்லல்படுகின்றான். அவனது துன்பத்தை உணர்ந்த மிஞிலி, "என்ன நிகழ்ந்துளது? ஏன் இந்த மனக்கலக்கம்? உன்னிழல் வதிந்து நீ ஊட்டியது உண்டு கல்லெழுந்து நின்றாற் போல் காட்டும் இவ்வுடலில் இன்னுயிர் தாங்கி யான் இருப்ப நீ வருந்தக் கேட்டுள்ளேன். நினக்குக் கிளையெனக் காட்டுமோர் புதுமை நிலத்திலார் காண்பார்;"[59] என்று கூறுவதிலிருந்து நன்னனுடன் கொண்ட ஆழமான உறவு புலப்படும்

இங்ஙனம் மிஞிலி பழி வாங்கும் குணம் கொண்டவனாகவும் சூழ்ச்சி நிறைந்தவனாகவும், தன்னுடன் ஒத்த கொடூர குணம் கொண்ட நன்னனுக்கு நல்லவனாகவும், உண்மையானவனாகவும் படைக்கப்பட்டுள்ளான்.

## நன்னன்

நன்னன் கொடூர குணம் கொண்ட அரசன். துளுநாட்டை ஆள்பவன் மக்களைக் காட்டிலும் மாந்தோப்பிற்கு முக்கியத்துவம் கொடுக்கும் கொடுங்கோலன். தவறான தீர்ப்பினால் தரம் தாழ்ந்தவன்.

## அநீதிக்குத் துணைபோகின்றவன்

நன்னன் மானுட சிந்தனையும், மனித நேயமும் சிறிதும் இல்லாதவன். 'அனிச்ச அடி' காப்பியத்தில் சுரும்பார் குழலி கருத்தரித்து தாய்மை அடைந்த நிலையில் இருந்த போதும் அவள் மீது இரக்கம் காட்டவில்லை. நீரில் மிதந்து வந்த மாங்காயை எடுத்ததாலும், தான் யார் என்ற உண்மையை மறைத்ததாலும் நன்னன் சுரும்பார் குழலிக்கு மரண தண்டனை விதிக்கின்றான். அப்பொழுது மோசி கீரனார் தண்டனையைக் குறைக்குமாறு வேண்டுகின்றார். அதற்கு நன்னன் "ஒரு பிழை செய்யின் தண்டனையில் மாற்றம் தருதல் இயலும்; தமிழ் வல்லாயிவள் அறம் கூறும் அவையிடை ஆயிரம் பொய் சொல்லித் திறம்பட நடித்த தீவினைச்

செயலும், நீர்தரும் பசுங்காயை புசிக்கும் விருப்பத்தோடு பேரரசின் ஆணையைப் பிழைத்த செயலும், பகைப்புலத்தாளிவள் பகைவர் நாட்டிடைத் திகைப்புறச் செய்துள்ள தீமையும் நோக்கின் ஒறுத்தலில் மாற்றம் விரும்பிலேன். இதற்குப் பொறுத்தருள் செய்க!"[60] என்று கூறுவதிலிருந்து நீதிநெறி தவறி அநீதிக்குத் துணைநின்ற போக்கினை அறிய இயலும்.

## குற்ற உணர்வில் கலங்கும் குணம்

நினைவின் சாளரங்கள் மிகவும் வினோதமானவை. அழுத நாட்களை நினைத்து சிரிக்க வைக்கும். சிரித்த நாட்களை நினைத்து அழ வைக்கும். தீமையின் அடிப்படையில் எழுந்த நகையானது கண்டிப்பாக ஒருநாள் அழுகையாக மாறும். அந்த வகையில் நன்னன் சுரும்பார் குழலிக்கு செய்த தீவினையின் காரணமாக மனப் புழுக்கத்திற்கு ஆளாகின்றான். அவன் மிஞ்லியிடம் "குருதிப் புனலில் குடைந்து நீராடியும், 'பிணமலை ஏறியும், மாமிச மலர் தூவியும், அணவரிதாகிய அமர்கள வேள்விகள் அடுக்கடுக்காக ஆக்கிய நாளில் இந்நடுக்கம் சிறிதும் நானறிகில்லேன்; வாள்முனையில் கிழித்த வயிர நெஞ்சங்கள் கோள்முழுதும் எண்ணிக் குறிப்பதை ஒக்கும். கூர்மையான வேலின் நுனிக்கு' உயிர் கொடுத்தவர் தொகையோ ஆர்க்கின்ற கடலின் மணலை எண்ணி அளப்பதாகும். அத்தனை அரும்போர்க்களத்தில் எள் அத்தனை நடுக்கமும் அடையகில்லேனால் பெண்மகள் ஒருத்தி பிணம்பட நெஞ்சம் உண்முகம் ஒடுங்கி உலமரல் புதுவது"[61] இவ்வாறு கூறுவதிலிருந்து குற்ற உணர்வில் கலங்கும் குணத்தினை அறிய இயலும்.

## கொடுங்கோலன் நன்னன்

அரசன் என்பவன் அன்பினால் குடிகளை ஆள வேண்டும். தான் இயற்றுகின்ற சட்டங்கள் யாவும் மக்களின் நலனையும், வளர்ச்சியினையும் மேம்படுத்துவதாக அமைய வேண்டும். ஆனால் நன்னன் மாந்தோப்பிற்காக இயற்றிய சட்டம் அவன் கொடுங்கோலன் என்பதைப் பறைசாற்றுகின்றது. சுரும்பார் குழலி நீராடும் முன் உடன் நீராடும் பெண்கள் "நீரில் வரினும் நிலத்திடைக் கிடப்பினும் யாரும் அந்த மரத்தின் பொருளை எடுத்தல் செய்யார். அறியினும், அறியாது எடுப்பினும் எடுப்பார்க்குரியது கொலையெனல் ஊரெல்லாம் அறியும்"[62] என்று கூறுவதிலிருந்து நன்னன் ஒரு கொடுங்கோலன் என்பதை அறிய இயலும். மாந்தோப்பிற்கு அளிக்கும் முக்கியத்துவத்தை மனிதர்களுக்கு அளிக்காத கொடும்பாவி என்பதையும் அறிய இயலும்.

## எதிரியின் பலத்தை உணரும் குணம்

ஒரு சிறந்த அரசன் தன்னுடைய பலத்தையும், பகைவனின் பலத்தையும் நன்கு அறிந்து வைத்திருக்க வேண்டும். அப்பொழுது தான் அவனால் வெற்றி பெற முடியும். நன்னன் தன்னுடன் போர் புரியும் அருளாழி மற்றும் சேர அரசர்களின் பலத்தையும், தன்னுடைய வலிமையையும் தெளிவாக அறிந்து வைத்துள்ளான். மிஞிலி, வேங்கைமுகன், ஒற்றர் தலைவன் ஆகியோருடன் படைவலிமை குறித்து ஆராயும் பொழுது நன்னன் "சேரரின் ஆற்றலைச் சிறிதாக எண்ணலும், குட்டுவன் தரைப்படை கொண்டு நடத்த எள்ளளவு தகுதியும் கிடையாதென மொழிவதும் உடன்பட விரும்பமாட்டேன். உரைத்தனவற்றுள் போர்த்தொழில் தரையில் செய்தலே சேரர் விருப்பமென மொழிந்ததொன்றை விலக்கிலேன்; பவளத்தீவில் நமக்கோர் தொலையாதத் துணையாக வேங்கை முகன் எதிர் கடல் நீர்ப்பரப்பில் தாங்கை கலப்பின் தோல்வி தவிராது என்பதால் தரைப்போர் தேர்ந்தெடுத்துள்ளார்''[63] இவ்வாறு எதிரியின் பலத்தைத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றான். இதன் மூலம் நன்னன் தன் வலிமையும், மாற்றான் வலிமையையும் உணர்ந்துள்ள பாங்கினை அறிய இயலும்.

## வேங்கைமுகன்

குறும்பர் தலைவன். பவளத்தீவின் அரசன். தீயவர்களுக்குத் துணைநிற்கும் தீயவன்.

## தீமைக்குத் துணை நிற்பவன்

வேங்கைமுகன் நன்னனுக்கும் மிஞிலிக்கும் துணை நிற்கின்றான். அநியாயத்திற்குத் துணை நிற்கின்றான். அப்பொழுது நீதியின் மைந்தர்களை வேருடன் அழிக்கத் திட்டம் வகுக்கின்றான். வேங்கைமுகன் நன்னனிடம் ''பகையை வளர்த்து துன்புற்று வருந்துதல் நகையை விளைப்பதாகும்; நார்முடிச் சேரல் வளராத முன்னரே வளைத்துத் தாக்கத் தளராத வினைசெயல் தக்கது என்று உன்னினேன்''[64] இவ்வாறு கூறுவதிலிருந்து தீமைக்குத் துணை நிற்கும் அவனது குணத்தை அறிய இயலும்.

## படையை அமைப்பதில் வல்லவன்

வேங்கைமுகன் தீமைக்குத் துணைநின்ற போதும் தன்னுடைய படையினைச் செம்மையாக உருவாக்குவதில் வல்லவன். அனிச்ச அடியை மீட்பதற்காக அருளாழி பவளத்தீவு செல்கின்றான். அப்பொழுது அருளாழி வேங்கைமுகனின் படை வலிமையை ''வெள்ளலை தவழும் இந்த கடல்நீர்த் துருத்தியை பகைவர் நெருங்க

எண்ணாதிருக்க நூறு கலங்களை வேறு வேறு வகைப்பட்ட வடிவினையுடையவாய் இயற்றி ஆறு பிரிவாக அதனைப் பகுத்து நினைத்த நொடியே போரினை நிகழ்த்த அனைத்தும் செய்துள்ள வேங்கையனின் ஆற்றலைப் போற்றலே வேண்டும்''[65] இங்ஙனம் கூறுகின்றான். இதன் மூலம் வேங்கைமுகன் படையை அமைப்பதில் வல்லவன் என்பதை அறியலாம்.

## கோட்புலி

வேங்கைமுகனின் மகன். தன்னை விரும்பாத அனிச்ச அடியை வற்புறுத்தி அடைய முயல்பவன். காதலின் உண்மையான இலக்கணத்தை அறியாதவன்.

## காதலின் இலக்கணத்தை அறியாதவன்

காதல் என்பது ஒரு ஆழமான உணர்வு. இரு இதயங்களின் பூரண சங்கமம் தான் காதல். அது அடுக்கடுக்கான தியாகங்களால் கட்ட வேண்டிய அற்புதக் கோட்டை ஆகும். தான் காதலித்த ஒரு பெண் தன்னைக் காதலிக்கவில்லை யென்றாலும் அவளுடைய நல்வாழ்விற்கு உதவுபவனே உண்மைக் காதலன் ஆவான். அவ்வாறில்லாமல் அவளை அழிக்க முயல்பவன் ஒரு மனிதனாகக் கூட இருக்க முடியாது. அனிச்ச அடி கோட்புலியின் குடியினை இழிவாகப் பேசி அவனை மணக்க மறுக்கின்றாள். அப்பொழுது கோட்புலி ''முறையில்லாத சொற்களால் முதிர்ந்த எம் குலத்தைக் கறைபட பேசிய கட்டில்லாத நாவை இப்பொழுதே அறுப்பேன்''[66] என்று கூறுகின்றான். மேலும் அருளாழியால் வீழ்ந்து கிடந்த கோட்புலி குறுவாளால் அனிச்ச அடியின் கழுத்தில் எறிகின்றான். இதன் மூலம் காதல் இலக்கணத்தை அறியாத கொடூரன் கோட்புலி என்பதை அறிய இயலும்.

## அகுதை

'அன்னி மகள்' காப்பியத்தில் இடம்பெறும் அகுதை கூடலில் வாழ்ந்த கோசர் தலைவன். வேள் எவ்வியிடம் தோல்வி கண்டவன். சூழ்ச்சியின் மூலம் வேள் எவ்வியைக் கொன்றவன். தீமைக்குத் துணை நிற்பவன்.

## சூழ்ச்சியும் வஞ்சகமும் நிறைந்தவன்

அகுதை சூழ்ச்சியே உருவானவன். வீரத்தின் வலிமையால் தன்னை முறியடித்த வேள் எவ்வியை சூழ்ச்சியால் அழிக்க நினைக்கின்றான். ஒற்றர் மூலம் வேள் எவ்வி மற்றும் திதியனின் வலிமையை உணர்ந்த அகுதை ''சக்கரப்படையை எறிதலில் எவ்வியும் யானும் சரிநிகர் ஆயினோம்; முன்னிகழ்ந்த போரில் எந்தத்

திகிரியை எறிந்தென் மார்பில் புண்ணும் தோல்வியும் பொருந்தச் செய்தானோ நண்ணுமோர் வஞ்சனை பண்ணியாயினும் அச்சுடர்த் திகிரியால் அவன் மார்பைப் பிளந்து பசிய ஊனைக் காக்கைக்குப் படைத்திலேனாயின் இனிவரும் போர்களில் திகிரியை எடுக்க மாட்டேன்"[67] என்று உரைப்பதிலிருந்து அவனது சூழ்ச்சியினைத் தெளிவாக அறிந்து கொள்ள இயலும்.

## சினவாழி

'அன்னி மகள்' காப்பியத்தில் இடம்பெறும் சினவாழி நெய்தலங்கானலில் வாழ்ந்த கோசர் தலைவன். கொடூர உள்ளம் படைத்தவன். சமரச உடன்பாட்டிற்கு வந்தவர்களை இழிவுபடுத்தும் அரக்க குணம் கொண்டவன். மனிதப் பண்பற்றவன்.

## மனிதப் பண்பற்ற கொடிய அரக்கன்

கோசர்களின் புலத்துப் புகுத்த அன்னியின் வெண்காற் காரிபற்ற வந்த கோசர்களைக் குற்றிக் கொல்கின்றது. சினம் கொண்ட கோசர்கள் தத்தனைக் கொன்று ஆநிரைகளைக் கவர்ந்து செல்கின்றனர். ஆநிரைகளை மீட்கும் சமரச உடன்பாட்டிற்கு அன்னி, அமைச்சர், கீரன் ஆகிய மூவரும் செல்கின்றனர். வெண்காற் காரியினால் விளைந்த தீமைக்கு வருத்தம் தெரிவிக்கின்றனர். சமரச உடன்பாட்டிற்குத் தேவையான அனைத்து முயற்சிகளிலும் ஈடுபடுகின்றனர். காளையினால் தெரியாமல் விளைந்த தீமையினைப் பொறுத்துக் கொள்ளாத சினவாழி "அரவு முன் ஒலிசெய்யும் அற்பத் தவளையே! உரம் உனக்கு இத்தனை உண்டோ? யாரடா காவலர் வருக! என் கைவாள் தனக்கே சாவக் கருதிய அறிவிலிகளைத் தூண்தோறும் கைகள் பிணிப்புற இப்பொழுதே கட்டுக!"[68] என்று கூறுவதிலிருந்து அவனின் மனிதப் பண்பற்ற கொடூர குணத்தை அறிந்து கொள்ளலாம்.

## கதக்கண்ணன்

'அன்னி மகள்' காப்பியத்தில் இடம்பெறும் கதக்கண்ணன் சினவாழியின் இளவல். கொடூர குணத்திற்கு சொந்தக்காரன். சமரச உடன்பாட்டிற்கு வந்த அன்னியின் கண்களைக் குருடாக்கியவன்.

## கண்களைக் குருடாக்கிய கொடூரன்

வெண்காற் காரியினால் சினவாழியின் மைந்தனும் இறந்து விடுகின்றான். எனவே சமாதானத்திற்கு அன்னி அரும் முயற்சியில் ஈடுபடுகின்றான். ஆனால் மன்னிப்பு என்னும் மாபெரும் குணம் சிறிதும் இல்லாத சினவாழியின் தம்பியான

கதக்கண்ணன் "துணுக்குறுமாறு நெஞ்சம் நடுங்க நம்குலக் கண்ணெனத் திகழந்த காளையைக் கொன்றோர் கண்களைப் பறித்துக் கானிடைத் துரத்தலே உரியதாம்; இதனை மற்றுள்ள பகைவர் கண்டிடின் நமது காலடி பற்றிக் கொண்டிருப்பார்கள்; கோசரைப் பகைத்தல் வேண்டாம் என்று இவர் விழி கூறட்டும்!"[69] இவ்வாறு கூறுவதிலிருந்து தெரியாமல் நிகழ்ந்த பிழைக்குக் கூட கொடிய தண்டனை விதிக்கும் இவனது கொடூர குணத்தை அறிய இயலும்.

## சாலி மைந்தனில் எதிர் தலைமைப் பாத்திரங்கள்

சாலி மைந்தனில் அபஞ்சிகன், அதமயன், உவசரன், இந்திரன், மூலகன் ஆகிய எதிர் தலைமைப் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன. இவர்களின் பண்புநலன்களையும், படைப்பு நோக்கத்தினையும் இனிக் காண இயலும்.

## அபஞ்சிகன்

சாலியின் கணவன். வேதங்களையும் வேள்விகளையும் நேசிக்கும் அளவிற்கு மனைவியை நேசிக்காதவன். சக மனுசியாகக் கூட நடத்தாதவன். மனைவியின் உணர்வுகளுக்கு மதிப்பளிக்காதவன். சோதிடத்தின் மீது அளப்பரிய நம்பிக்கை கொண்டவன்.

## சோதிடத்தின் மீது நம்பிக்கை கொண்டவன்

எந்தவொரு நம்பிக்கையும், செயல்பாடுகளும் குற்றமாகாது. ஆனால் அது பிறருக்குத் தீமையினை விளைவிக்கக் கூடாது. பிறருடைய வாழ்விற்கும், உள்ளத்திற்கும் ஊறு விளைவிக்கும் எத்தகைய நம்பிக்கையும் குற்றமாகவே கருதப்படும். அந்த வகையில் சோதிடத்தின் பால் கொண்ட நம்பிக்கை சாலியின் இல்வாழ்விற்குத் தீங்கு ஏற்படுத்துகின்றது. சாலியின் மீது வெறுப்பு ஏற்பட்டதற்குக் காரணமாக அபஞ்சிகன் "எனக்கு மகவில்லையெனல் உறுதிபட இருக்குங்கால் எவற்றாலோ உனக்கு மகன் உண்டென்ற உண்மையினைக் கண்டு மனம் ஒடுங்கிப் போனேன். வனக்குயிலே! அம்மகளும் வாழ்விறுதிக் கடன்செய்யவாயான் என்று பன்னற்குறிப்பை ஆராய்ந்து பார்த்ததனால் வெறுப்புக்கே பற்றாய் நின்றேன்"[70] இங்ஙனம் கூறுவதிலிருந்து அறிய இயலும்.

## பெண்ணின் வாழ்வைக் குலைப்பவன்

திருமணம் என்பது ஒரு பெண்ணின் எண்ணற்ற கனவுகளின் கோட்டையாகக் கருதப்படுகின்றது. ஒவ்வொரு பெண்ணும் ஆயிரமாயிரம் கற்பனைகளுடன் திருமணம் என்னும் நிகழ்வில் அடியெடுத்து வைக்கின்றாள். அத்தகைய உயிரான நிகழ்வில் பிழையென்பது ஏற்படாது இருக்க வேண்டும். சோதிடத்தின் மீதுள்ள

நமம்பிக்கையினால் தனக்கு குழந்தை இல்லை என்பதையறிந்து திருமணத்தை வெறுத்து வந்த அபஞ்சிகன் தனது பெற்றோருக்காக திருமணம் செய்து கொள்கிறான். ஆனால் அவள் மீது துளி கூட பாசமின்றி இருந்து வருகின்றான். இத்தகைய பெண்ணின் வாழ்வினைக் குலைக்கின்ற செய்கையினை அபஞ்சிகன் ‘‘மெய்ம்மையினை அறிந்ததனால் வாழ்க்கையிலே வெறுப்புற்றேன். விழைவு மிகுந்து செய்யும் மணத்தை விரும்பாதவனாய்ச் சிலகாலம் தள்ளிவந்தேன். பெற்றோர் சிந்தும் மெய்கண்ணீருக்கு ஆற்றாது பெய்வளை நின்னை மணந்தேன். பிழையொன்றும் இல்லேன். வெய்துயிர்த்து நீ சிந்தும் விழிநீரைக் கண்ட பின்னும் விலகிச் சென்றேன்.’’[71] இங்ஙனம் சாலியிடம் கூறுவதிலிருந்து அறிய இயலும்.

## மனைவியின் உணர்வுகளுக்கு மதிப்பளிக்காதவன்

கணவன், மனைவி உறவு என்பது பூரணத்துவம் வாய்ந்தது. அவர்கள் இருவரும் மனமொத்து வாழ்கின்ற வாழ்வானது அந்தப் பூரணத்துவத்தினை அளிக்கின்றது. அபஞ்சிகன் மனைவியின் சிறு விருப்பங்களுக்குக் கூட மதிப்பளிக்காதவனாகக் காட்சி தருகின்றான். தன்னுடைய அன்பு எள்ளளவும் கிடைக்கப் பெறாத சாலி பறவைகளிடமும், முது நாயிடமும் அன்பினைச் செலுத்துகின்றாள். அதனை வளர்த்துத் தன் துயரினைப் போக்கிக் கொள்ள அனுமதி வேண்டுகிறாள். அதற்கு ‘‘வருந்தியவள் இரந்ததனை மனம் கொள்ள விரும்பானாய் மனையை நோக்கித் திருந்தடியாய்! நாய், பறவை இல்லத்துள் செல்லவிடுத்தல் முன்னோர் சொன்ன பொருந்து நெறிக்கு இழிவு தரும் போற்றறக! நீ சேர்த்த பாவம் போக்கும் மருந்திவற்றை அகற்றுவதே எனச் சொன்னான்’’[72] அபஞ்சிகன் இங்ஙனம் உரைப்பதிலிருந்து மனைவியின் உணர்வுகளுக்கு மதிப்பளிக்காதவன் என்பதை அறிய முடிகின்றது.

## மனைவியைச் சிறிதும் நேசிக்காதவன்

எந்த ஒரு பெண்ணும் குற்றவாளி இல்லை. காலமும், சூழலும் தான் அவளைப் பிழையுள்ளவளாக மாற்றுகின்றது. மனைவியின் பிழைக்குக் கணவன் நேரடியாகவோ, மறைமுகமாகவோ காரணமாகின்றான். அன்பு என்ற அமுதத்தினை சிறிதும் வழங்காமல் இருந்ததோடு அபஞ்சிகன் சோதிடம் என்னும் நஞ்சினையும் உமிழ்கின்றான். இதனால் சாலி இளஞ்சாத்தனோடு சேர்ந்து தவறு புரிகின்றாள். அதனை அறிந்து கொண்ட அபஞ்சிகனிடம் சாலி மன்னிப்பினை வேண்டுகின்றாள். அப்பொழுது அவன் ‘‘நிலையினின்று இழிந்தாய். வாழ்க்கை நெறியினைப் பிழைத்தாய். உச்சித் தலையினின்று இழிந்து வீழ்ந்த தலைமயிர் ஆகிவிட்டாய் தலைமயிர் தன்னை மீண்டும் தழுவுதல் வழக்கமில்லை. புலைமகள் தன்னை

ஏற்றல் மரபுக்கு பொருந்தல் இல்லை"[73] இங்ஙனம் கூறி விரட்டுகின்றான். இதிலிருந்து அபஞ்சிகன் மனைவியின் மீது துளியளவும் நேசம் இல்லாமல் இருப்பதை அறிய இயலும்.

## அதமயன்

பசுவைத் துன்புறுத்திச் செய்யப்படும் வேள்விகளில் நம்பிக்கை கொண்ட வேதியர்களில் ஒருவன். பழைமைவாத சிந்தனைகளைக் காப்பாற்றுவதற்கே உயிரைத் துறப்பதையும் பொருட்படுத்தாதவன். இளம்பூதியின் ஆவினைப் பலி கொடுப்பதற்காகத் தன்னுடைய ஆவியினைத் துறந்தவன்.

## இந்திரன் உள்ளம் குளிர வேள்வி இயற்றுபவன்

மனிதர் ஒவ்வொருவரும் தன்னுடைய செயல்களால் விளையும் நன்மை தீமைகளை ஆராய்ந்து பார்த்து செயல்பட வேண்டும். தனிநபருக்கு தன்னிறைவைத் தரும் செயல்களைவிட தர்மத்திற்கு பொருத்தமான செயல்களே என்றும் நிலைத்திருக்கும் தன்மை வாய்ந்தது. ஆனால் அதமயன் இந்திரனை மகிழ்விக்கும் பொருட்டு வாயில்லாத உயிரை வதைக்கும் செயலில் ஈடுபடுகின்றான். இவனது மோசமான வாழ்வியல் இலட்சியத்தை "இந்திரன் உள்ளம் சால மகிழ்வுற இயற்றும் வேள்வி மந்திரம் முழங்கப் போந்த மறையவர் மற்றுமுள்ள அந்தணர் உண்ணச் செய்தற்கு அதமயன் பொறுப்பை ஏற்றான். பந்தலை வளைத்துப் போட்டான். மறைநெறி பற்றி வாழ்வோன்"[74] என்பதிலிருந்து அறியலாம். இங்ஙனம் தீய செயலுக்குத் துணை செல்பவனாக அதமயன் காட்சி தருகின்றான். ஆபுத்திரனைக் குறித்து ஏளனமாகப் பேசுபவர்களில் அதமயனும் முக்கியப் பங்கு வகிக்கின்றான். இதனால் ஆவினால் குற்றப்பட்டு இறந்து போகின்றான். இங்ஙனம் அதமயன் பாத்திரப்படைப்பு உருவாக்கப்பட்டுள்ளது.

## உவசரன்

இந்திரன் தீய செயல்களுக்குத் துணை நிற்பவன். மனிதனின் புனிதம் அறியாதவன். அதமயனோடு ஒத்த புழுத்துப் போன சிந்தனைகளைத் தாங்கியவன். ஆபுத்திரனின் சீரிய இலட்சியம் கருவாக மறைமுகக் காரணமானவன். ஆபுத்திரனின் ஆவினை வேள்விக்குப் பயன்படுத்த ஆலோசனை பகன்றவன்.

## கொடுமையான நாவினையுடையவன்

ஆபுத்திரன் வாழ்ந்த வயணங்கோடு என்ற ஊரில் பஞ்சம் ஏற்படவே பஞ்சத்தினைப் போக்குவதற்குரிய உபாயமாக வேள்வி நிகழ்த்த வேதியர்கள் கூடி

முடிவெடுக்கின்றனர். அப்போது ஊரில் எங்கும் ஆக்கள் இல்லாத நிலையில் இளம்பூதியின் மனையில் உள்ள ஆவினைப் பலிகொடுக்கலாம் என உவசரன் ஆலோசனை கூறுகின்றான். பாசமிகுதியால் இளம்பூதி மறுக்கவே உவசரன் வார்த்தை அம்புகளால் இளம்பூதியின் நெஞ்சினைத் துளைப்பதை ‘‘புற்று அரவமெனத் திகழ்ந்த நெஞ்சினையுடைய உவசரன் முகம் சிவந்து நின்று இளம் பூதியின் நெஞ்சினைப் பிளந்து போடலாம் எனச் சொற்களைக் கொள்ளி நேர் வாயினால் அள்ளி வீசினான்’’[75] என்ற வரிகளால் அறியலாம். இங்ஙனம் உவசரன் கொடுமையான நாவினை உடையவன் என்பதை அறியலாம்.

## தீமைக்குத் துணை நிற்பவன்

நன்மைக்குத் துணைநின்றால் அது நாளும் நம்மை உய்விக்கும். தீய செயல்களுக்குத் துணை நிற்பது மிகவும் இழிவான ஒன்றாகும். அந்த வகையில் உவசரன் தீய செயல்களுக்குத் துணை நிற்கின்றான். இந்திரனை இன்பக் கடலில் ஆழ்த்துவதற்காக வேள்விச் சாலையின் அனைத்துப் பணிகளையும் அவன் ஆவலுடன் நிகழ்த்துவதை ‘‘வேள்வி செய்யும் சாலை ஆக்கல், விதிப்படி யாவும் செய்தல், கோள்கொளும் செலவிற்கு ஏற்ப நேரத்தைக் குறித்தல், நெருப்பு மூள்வினை அணையாதாக முன் நின்று காத்தல் இன்ன ஆள்வினைப் பொறுப்பை எல்லாம் உவசரன் அமைத்துக் கொண்டான்’’[76] என்ற பாடலின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

## அதமயனுடன் கொண்ட உறவு

அதயமனும், உவசரனும் ஒத்த கருத்துடன் செயல்படுபவர்களாகவே காட்சி தருகின்றனர். இதனை ‘‘அந்தணர் மடைப்பள்ளிக்குள் அதமயன் ஆட்சி செய்தான். செந்தழல் வேள்விச் சாலையில் உவசரன் கீர்த்தி கொண்டான்’’[77] என்ற பாடலின் மூலம் அறியலாம். மேலும் ஆபுத்திரனின் பிறப்பை இகழ வேதியர்கள் அனைவரும் ஒன்று கூடுகின்றனர். அப்பொழுது ஆபுத்திரன் வேதங்களில் பெண்கள் கொண்டாடுவதை எடுத்துக் கூறி நிற்கும் பொழுது அவர்களின் செயலை ‘‘வெதும்புதலை உற்றாரேனும் விளக்கத்தால் நாணி நின்று தீமையால் அலைக்கப் பெற்ற நெஞ்சம் கொண்டான் ஒன்றை மற்றொன்றாகக் கருதிப் பேசும் திரிபுறுவாதம் காதில் ஓதலை வெறுப்பீர் ஆகென்று உவசரன் புகல ஊர்க்குப் போதலை நயந்தாராகிப் பிணத்தைத் தூக்கிப் புறப்பட்டார்’’[78] இங்ஙனம் பாவலர்மணி எடுத்துக் கூறுகின்றார். இதன் மூலம் அதமயனின் உடலைத் தூக்கிச் சென்றவர்களில் உவசரனும் ஒருவன் என்பதை அறியலாம். ஒத்த கருத்துகளால் ஒத்த செயல்களை

உடையவர்கள் அதமயனும் உவசரனும் என்பதை இதன் மூலம் அறிய முடிகின்றது.

## இந்திரன்

வேதியர்களை நேசிப்பவன். தான் நினைத்ததைச் சாதிப்பவன். சூழ்ச்சியே உருவானவன். கீழான குணங்களின் பிறப்பிடமாகத் திகழ்பவன்.

## நினைத்ததைச் சாதிப்பவன்

நினைத்ததை முடிப்பதில் தவறொன்றும் இல்லை. ஆனால் நினைப்பது நல்லதாக அமைய வேண்டும். தீமையான நெறியினைத் தனது கொள்கையாக வைத்துக் கொண்டு அதனை சாதிக்க முயல்வது தவறாகும். அத்தகைய தீய குணத்துடன் இந்திரன் திகழ்வதை “தென்னாட்டு வேதியர்கள் சிறு துயருக்கு ஆட்படினும் சீறிச் சென்று தன்னாற்றல் கொண்டு எதிர்ப்போன். தன்னெறிக்குப் பகையானார் தம்மை வீழ்த்தி கல்நாட்ட முயலுபவன். கருதரிய வேதநெறி கடல் கடந்தும் புகழோங்க செய்யும் முனைப்பினிலே எந்நாளும் முனை மழுங்கான்”[79] என்ற பாடலால் அறிய முடிகின்றது.

## சூழ்ச்சி நிரம்பியவன்

வேள்விக்குத் தடையாக ஆபுத்திரன் இருப்பதால் அதனை விரும்பாத வேதியர்கள் இந்திரனிடம் முறையிடுகின்றனர். அப்பொழுது அவன் ஆபுத்திரனிடம் ‘‘இறையடியைப் பரவுபவர் இசைக்கும் ஒலி கேட்பதல்லாமல் ‘இல்லேம்’ என்று முறையிடுவோர் அவல ஒலி எச்செவிக்கும் துன்பவெரி மூட்டவில்லை; குறைகளில்லாத அவ்வூரில் குறைநாளே வாழ்ந்தாலும் உடம்பு கொண்டு நிறைதுறக்கம் செலவிழையின் நேராய் அவ்வானூர்தி நெருங்குமாலோ. தொண்டு செய்வோன் அதன்பயனாற்று உறக்கமுறும் ஆன்மகனும் துறக்க நாட்டை அண்டுதலுக்கு உரியனெனக் குறிப்பு மொழி இறை எமக்கு அளித்தது ஆற்றான் கண்டு இறைவன் மொழி கூறி வேதபுரியின் கண் வாழ்ந்து துறக்கம் காண மண்டும் உளத்து ஆவலினால் மைந்த நின்னை அழைக்கின்றேன் மாறாதே’’[80] என்று கூறுகின்றான். இதில் ஆபுத்திரனின் அருஞ்செயல்களைப் புகழ்ந்து கூறி அவனை அருஞ்செயல்களை ஆற்றவிடாது தடுக்கின்றான். இதன் மூலம் சூழ்ச்சி நிரம்பியவன் இந்திரன் என்பதை அறியலாம்.

## நன்மையை அழிக்க முயல்பவன்

நன்மையே ஒருவர் செய்யாவிட்டாலும் தீமை செய்யாமல் இருப்பதே மேலான அறமாகக் கருதப்படுகின்றது. ஆனால் நன்மை செய்பவர்களை அழிக்க நினைப்பது என்பது மானுட மதிப்பினைச் சிதைப்பதாகும். அத்தகைய கீழான செயலைச் செய்பவனாக இந்திரன் படைக்கப்பட்டுள்ளதை, "கண்ணிமை போல் நம்மைக் காக்கும் காதன்மிகு வேதநெறி மண்படவே செய்பவனை மதுரைநகர் தாங்குவதோ? விண்படவே செய்லிலிரேல் வேதநெறி யாதாகும்? புண்படவும் மண்படவும் போந்தவினம் ஆயினமோ? வாழவழி காட்டுகின்ற வைதிகம் இந்நிலமருங்கில் தாழ்வதற்கு முயல்கின்றவனை அழிக்கும் நெறி காணீரேல் வலிமை மிகும் நம் குலப்பெருமை கடலினுரை காயமெனப் பாழுறுவது அன்றியொரு பயனல்லதுகொல்?"[81] இங்ஙனம் ஆபுத்திரனை அழிப்பதற்காக வேதியர்களிடம் ஆலோசனை புரிவதிலிருந்து அறியலாம். இங்ஙனம் தீய செயல்களின் இருப்பிடமாக இந்திரன் காட்சி அளிக்கின்றான்.

## மூலகன்

இந்திரனின் இழிவான செயல்களுக்குத் துணை நிற்பவன். ஆபுத்திரனை அழிக்க உவசரனால் இந்திரனிடம் பரிந்துரை செய்யப்பட்டவன். துரோகி எதிரியின் பலத்தை அறிந்து செயல்படுபவன்.

## எதிரியின் பலத்தை அறிந்தவன்

மூலகன் பலமான எதிரியாக காப்பியத்தில் வலம் வருகின்றான். ஆபுத்திரனின் அருஞ்செயல்களைத் தடுத்து நிறுத்த வழிமுறைகளை வேதியர்களுடன் ஆய்ந்த இந்திரன் அவனைக் கொல்ல நினைக்கின்றான். அப்பொழுது மூலகன் "வஞ்சனையே நல்லவழி; வலிமையினால் அழிப்பதெனில் நஞ்சமெனத் தெரிந்திருந்தும் நாவாலுண்ணல் போன்றதாகும். மேகம் தங்கும் இம்மாட மதுரைநகர் மாந்தரெல்லாம் 'தஞ்சிறுவன்' என்றவனைத் தாங்கி உறவாடுகின்றார்."[82] என்று கூறுகின்றான். இதில் எதிரியின் பலத்தை அறிந்தவனாக மூலகன் செயல்படுவதை அறிய முடிகின்றது.

## சூதினால் வீழ்த்துபவன்

ஆபுத்திரன் அறச்செயல்களை அழிக்க மூலகன் அளிக்கும் யோசனை அவனது சூதினைப் பறைசாற்றுகின்றது. ஆபுத்திரன் நல்ல செயல்களால் மக்களை நல்வழிப்படுத்துவதை விரும்பாத வேதியர்களும், இந்திரனும் அவனது அரும்செயல்களை அழிக்க நினைக்கின்றனர். அப்பொழுது மூலகன் "சோறுண்ண

வருவோர்கள் வந்திலரேல் தொண்டுக்கு வேறென்ன செய்திடுவான்? வேற்றூரை நாடிடுவான். ஊறுசெயும் ஆன்மகனை இவ்வூரின் ஓட்டுதெற்கோர் ஆறின்று வேறிது போலென்பதனை அகங்கொள்வீர். பத்துவகைக் கறியுடனே பாலடிசில் தேனமுதம் நாடோறும் நாடி வழங்குவமேயானால் நெருங்கிவரும் இரவலர்கள் எத்திசைக்கண் இருந்தாலும் இவன் நாடி வருவதல்லால் நாளாக நாளாக ஆன்மகனை விரும்புவரோ?"[83] இங்ஙனம் கூறுவதிலிருந்து அவனது சூதின் ஆழத்தினை அறியலாம்.

## வஞ்சகத்தைச் சிறிதும் வெளிக்காட்டாதவன்

ஆயிரம் அழுக்குகள் அகத்தில் இருந்தாலும் அதனைத் துளியும் வெளிக்காட்டாதவனாக மூலகன் வலம் வருகின்றான். மூலகனின் சூழ்ச்சியினால் தொண்டுக்கு வாய்ப்பில்லாது போகவே அவ்வூரை விட்டு நீங்க ஆபுத்திரன் முடிவு செய்கின்றான். அப்பொழுது உடன் வருகின்ற நண்பர்களின் வருகையைத் தடுப்பதற்கு மூலகன் முயற்சி செய்யவே நண்பரகள் சினம் கொள்கின்றனர். அப்பொழுது மூலகனின் செயலாகப் பாவலர்மணி அவர்கள் "முன்னுள்ளோர் சொல்லைக் கேட்டு மூலகன் அதிர்ந்தானேனும் தன்முகத்து எதுவும் காட்டல் தவிர்த்தனன்"[84] இதனைக் கூறுகின்றார். இதன் மூலம் வஞ்சகத்தைச் சிறிதும் வெளிக்காட்டாதவனாக மூலகன் செயல்படுவதை அறிய இயலும்.

## வஞ்சனையே வாழ்க்கையாகக் கொண்டவன்

கண்ணீர் என்பது புனிதமான ஒன்று, மனதில் உள்ள அன்பின் வெளிப்பாடாகவும், தூய்மையான மனதை பிறப்பிடமாகக் கொண்டு உதிர்வது கண்ணீராகும். அத்தகைய கண்ணீர் சில வேளைகளில் பொய்யானவர்கள் உதிர்க்கின்ற நஞ்சாகவும் விழுவது உண்டு. அத்தகைய கண்ணீரை உதிர்த்து தனது பொய்மைக்கு மூலகன் முலாம் பூசுகின்றான். இளஞ்சாத்தனுடன் ஆபுத்திரன் சாவகம் செல்வதற்கு முடிவு செய்கின்றான். அப்பொழுது மூலகன் "யானும் நின்னுடனே வருகுவேன். உடன்கொண்டு ஏகென நின்வயின் இரந்தேன்; கானுறை வழியோ கடல்நெறிச் செலவோ காலுக்குத் துணையாகுவேன்; அதனால் தான் எனை ஏற்றுக்கொள்க எனக் கேட்டுத் தாழ்ந்தனன்; ஆன்மகன் இணங்க வானுறை மழைபோல் நீர் கண்ணில் உகுத்தான்"[85] இத்தகைய செயலை மேற்கொண்டதிலிருந்து அவன் வஞ்சகமே வாழ்க்கையாக உடையவன் என்பது புலப்படும்.

## கொலைக்கு அஞ்சாதவன்

பஞ்சமா பாதகங்களில் ஒன்றாகக் கருதப்படும் கொலையினையும் புரிய அஞ்சாதவனாக மூலகன் காட்சி தருகின்றான். மூலகன் தன் சூழ்ச்சியினால் தனிமைப்படுத்தப்பட்ட ஆபுத்திரனைக் கொல்வதற்கு திட்டம் வகுக்கின்றான். பருந்து ஒன்று பாம்பைத் தூக்கிச் செல்வதைக் காட்டி அவனது கவனத்தைத் திசை திருப்புகிறான். அப்பொழுது ‘‘வாடும் உயிர் கண்காணல், வதையொலியைச் செவி கேட்டல் வழக்கமில்லான்; நீடும் இரு கைகளினால் செவி கண்கள் பொத்தினானாக நிலத்தை நோக்கக் கேடுசெய்யும் உளங்கொண்டோன் இது சமயம் என உள்ளக் கிளர்ச்சி கொண்டு கூடுபுகழ் ஆன்மகனைக் குத்துவதற்கு வாளை ஓங்கினான்’’[86] இங்ஙனம் நடைபெறும் நிகழ்வானது மூலகன் கொலை பாதகத்திற்கு அஞ்சாதவன் என்பதைப் பறைசாற்றுகின்றது.

## மனமாற்றம் அடைதல்

ஒன்றும் அறியாத ஆபுத்திரனுக்கு தீங்கு விளைவிக்க நினைத்த மூலகன் பாம்பினால் தீண்டப்பட்டு உயிருக்குப் போராடுகின்றான். அப்பொழுது அவனிடத்தில் மனமாற்றம் ஏற்படுகின்றது. மூலகன் ஆபுத்திரனிடம் ‘‘மன்னுமருட் சான்றோய்! யான் மதுரை நகர் இந்திரன் தன் மதியால் கெட்டேன்; உன்னை நிழல் போல் தொடர்ந்து உன் உயிர் பறிக்க முயன்றேன். ஊழ் வயத்தால் என்னுயிரைப் பறிகொடுத்தேன்; இரட்டைவேடமாடுவோர் யார்க்கும் இது பாடம் என்று சொல்லுதற்கு யான் இன்று பாம்பின் வாய்ப்பட்டுப் பாழுற்றேன்’’[87] இங்ஙனம் உரைப்பதிலிருந்து தன் தவற்றினை உணர்ந்து மூலகன் மனமாற்றம் அடைவதை அறிய முடிகின்றது.

## தாயைக் குறித்த உண்மையினை வெளிப்படுத்துபவன்

மூலகன் தான் இறக்கும் தருவாயில் ஆபுத்திரனின் தாயைக் குறித்த உண்மையினையும் பாங்காக வெளிப்படுத்துகின்றான். அவன் ஆபுத்திரனிடம் ‘‘மற்றுமொரு மறையினையும் மனம் திறந்து கூறுகின்றேன்; மதுரை மூதூர் உற்ற கலை மடந்தை உனக்கு இக்கலத்தைக் கொடுக்கவில்லை. உனைச் சுமந்து பெற்றெடுத்த சாலியவள் கொடுத்தது’’[88] இங்ஙனம் கூறி சாலி ஆபுத்திரனின் அருஞ் செயல்களுக்குத் துணை நின்ற பாங்கினை வெளிப்படுத்துகிறான் வலக்கையில் சாலி என்னும் பெயர் வடமொழியில் பொறிக்கப்பட்டுள்ளது எனத் தாயின் அடையாளத்தையும் மூலகன் நுவலுகின்றான். இங்ஙனம் ஆபுத்திரனின் தாயைக் குறித்த செய்திகள் மூலகனின் வாய்மொழியாக வெளிப்படுத்தப்படுகின்றது.

இவ்வாறு சாலி மைந்தன் காப்பியத்தில் மனிதத்திற்குப் புறம்பான பண்புகளோடு எதிர் தலைமைப் பாத்திரங்கள் புனையப்பட்டுள்ளன.

## துணைப் பாத்திரம்

துணைப்பாத்திரம் என்பது காப்பியங்களைத் தாங்கும் விழுது போன்றது. காப்பியக் கட்டமைப்பிற்கும், கதை வளர்ச்சிக்கும் துணை நிற்பதாகும். எண்ணற்ற மனித முகங்களை வெளிப்படுத்த கவிஞனுக்கு கிடைக்கப்பெற்ற ஒரு அரிய வரம் ஆகும். ஒவ்வொரு துணைப் பாத்திரமும் அதன் படைப்பின் நோக்கத்தை முழுமையாக நிறைவு செய்ய வேண்டும். அப்பொழுது தான் படைப்பானது உன்னத நிலையினை அடையும். பாவலா் மணி அவர்களின் காப்பியங்கள் அடைந்த பாங்கு பின்வருமாறு.

## காரல் மார்க்சின் துணைப் பாத்திரங்கள்

காரல் மார்க்சு காப்பியத்தில் என்ரிகு, என்ரிட்டே, பிரடெரிக் எங்கெல்சு, வெஸ்ட்பாலன், இலாசலே, எலன்டெமூது, எட்கார், பிரான்சிக்கா, தார்வின் என 9 துணைப் பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன. இவர்கள் நிஜ உலகில் வாழ்ந்த பாத்திரங்கள் என்பதால் இவர்களின் குணங்களை வடிவமைக்கும் பணி பாவலர்மணி அவர்களுக்கு இல்லையெனக் கூறலாம். ஆனால் அவர்களின் அரும்குணங்களை அரிய படைப்பின் வழி தொகுத்துரைக்கும் பணி இவருக்கு வாய்த்த அரிய வாய்ப்பாகும். பாவலர்மணியின் கைவண்ணத்தில் நிஜ மாந்தர்கள் மனத் திரையில் விரியும் பாங்கு பின்வருமாறு.

## என்ரிகுவும் என்ரிட்டேயும்

காரல் மார்க்சின் தந்தை என்ரிகு ஆவார். தாயார் என்ரிட்டே ஆவார். காரல் மார்க்சுக்கு தாயைக் காட்டிலும் தந்தையின் மீதே அன்பு அதிகமாக இருந்தது. இதனை ந.நன்மாறன் “தந்தையின் புகைப்படத்தை எப்போதும் தனது சட்டைப் பையில் காரல் மார்க்ஸ் வைத்திருப்பார். மரணத்தின் போதும் இது இருந்தது. காரல் மார்க்ஸ் அடக்கம் செய்யப்பட்டபோது எங்கெல்சு அதனை எடுத்து இணைத்து வைத்தார்”[89] என்று கூறுகின்றார். காரல்மார்க்சின் தாய் என்ரிட்டே அவர்கள் பணத்தின் மீது நாட்டம் அதிகம் கொண்டவராகக் காணப்படுகின்றார். “தாயாருக்கு வேறொரு வருத்தமும் இல்லை. பிற்காலத்தில் ஒரு முறை மார்க்சின் மேதைமை குறித்து மற்றவர்கள் அவரிடம் கூறியுள்ளனர். உன் மகன் பொருளாதாரம் பற்றி அப்படிச் சொன்னார் இப்படி எழுதினார் என்றெல்லாம் புகழ்ந்த போது பணம் பொருளாதாரம் என்பதைப் பற்றியெல்லாம் எழுதி என்ன

செய்யப் போகிறோம், நாலு காசாவது சேர்க்கத் தெரிய வேண்டாமா? என்று குறைப்பட்டுக் கொண்டாராம்''[90] என்று என்ரிட்டே குறித்து ந.நன்மாறன் கூறுகின்றார். காரல் மார்க்சுக்கும் பெற்றோருக்கும் இடையே உள்ள நெருக்கத்தினை பகர்வதன் மூலம் அவர்களின் பாத்திரப்படைப்பை பாவலர்மணி அவர்கள் பாங்குற எடுத்துக் காட்டுகின்றார். ''தந்தை மேல் இருந்த நேசம் தாயின் மேல் இருந்ததில்லை. எந்த நாளும் எந்தப் பொழுதும் என்ரிகுவின் நிழற்படம் தான் விந்தை சேர்ந்த புதையலைப் போல பையினுள் வீற்றிருக்கும். நொந்துறின் படத்தைப் பார்த்து நொடிப்பொழுதில் ஊக்கம் கொள்வான்'. பணத்தினைப் பற்றி மட்டும் எழுதினால் பயனொன்றில்லை. உண்ணத் தின்ன உடுத்துவதற்கு எல்லாம் உதவிடும் பணத்தை ஈட்டாதவன் பிணத்தினை ஒப்பான்' என்னும் கொள்கையில் பிறங்கும் தாயின் மீது மனத்தினை வைப்பதற்கு காரல் மார்க்சிற்கு தயக்கம் போலும்''[91] என்று கூறி என்ரிகு, என்ரிட்டே பாத்திரப்படைப்பைப் பாங்குற வடிவமைக்கின்றார்.

## பிரடெரிக் எங்கல்சு

பிரடெரிக் எங்கல்சு காரல் மார்க்சின் உன்னத நண்பர். நட்பின் இலக்கணம் அறிந்தவர். காரல் மார்க்சுக்கு இறுதி வரை துணைநின்றவுர். காரல் மார்க்சு எங்கல்சுக்கு எழுதிய கடிதத்தில் ''கடைசியாக இந்த முதல் பாகம் (மூலதனம்) முடிந்தது. இதற்கு நீ ஒருவனே காரணம். என் நன்றியை ஏற்றுக்கொள். எனக்காக நீ தியாகம் செய்திருக்காவிட்டால் இந்த நூலின் மூன்று பாகங்களையும் நான் தயாரித்திருக்க முடியாது. வந்தனத்தோடு உன்னை ஆலிங்கனம் செய்து கொள்கிறேன். என் அரிய நண்பனே. உன்னை வாழ்த்துகிறேன்''[92] இவ்வாறு கூறுவதாக ந.நன்மாறன் கூறுகின்றார். அத்தகைய சிறப்பிற்குரிய எங்கல்சைப் பாவலர்மணி வடித்திருக்கும் விதத்தினை இனிக் காணலாம்.

## நட்பின் வடிவம் எங்கல்சு

நண்பனாக அமைவதற்கு முதல் தகுதி ஒத்த குணநலன்களையும், ஒருமித்த கருத்துக்களையும் பெற்றிருப்பதாகும். அந்த வகையில் எங்கல்சும், மார்க்சும் ஒத்த சிந்தனையுடையவராக வலம் வருகின்றனர். சமூகம் குறித்த பார்வையும் சிந்தனையும் இருவரிடத்தும் ஒன்றுபட்டுக் காணப்படுகின்றது. இதனைப் பாவலர்மணி அவர்கள் ''பிறப்பிடத்தாலே ஒத்தவரானார். பேசரும் சிந்தனை என்னும் சிறப்பிடத்தாலும் ஒத்தவராகிச் சிறந்தது மட்டுமா? சொல்லும் வறுமை என்னும் ஒன்றை மானுடத்து இருந்தே நீக்குவதற்கான போர்க் களத்தில் இறப்புறும் வரை தோளோடு தோளாக இணைந்தவர் இவரல்லால் யாரே!''[93] என்று அழகாக எடுத்தியம்புகிறார்.

## உண்மையான நண்பன்

நட்பு என்பது ஓர் உன்னத உணர்வாகும். உண்மையான நட்பு கடவுள் காட்டும் அன்புக்கு இணையானதாகும். அது பரிசுத்தம் நிறைந்தது உண்மையான நட்பு தான் இறுதி வரை தொடர்ந்து வரும். நண்பனிடம் நட்பை மட்டுமே அன்புக்குப் பரிசாக எதிர்பார்ப்பவனே உண்மையான நண்பன். அத்தகைய உண்மையான நண்பனாக எங்கல்சு திகழ்வதை பாவலர்மணி அவர்கள் "பற்பல நண்பர்கள் காரலைத் தொடர்ந்து பயணம் மேற்கொண்டனர் எனினும் அற்பராக மாறி இடையிலே பயணம் அறுத்தனராகியே ஓட விற்பயிலும் ஒருவன் இலக்கையே அல்லாமல் வேறெதுவும் நோக்கிலானாகி முற்றொடர்வது போல் மூத்த எங்கல்சு அல்லால் யாரோ காரலைத் தொடர்ந்தவன்"[94] இங்ஙனம் எடுத்தியம்புகின்றார்.

## உற்றுழி உதவுபவன்

காரல் மார்க்சின் பொருளாதார ஆராய்ச்சிப்பணி என்பது தொழிலாளி வர்க்கத்திற்கு மிகவும் முக்கியமானது என்பதை எங்கல்சு நன்கு அறிந்தவர். எனவே அவரது பணி தொடர்வதற்காக பொருளாதார உதவியினைச் செய்வதற்கு எங்கல்சு முன்வந்தார். அத்தகைய சீர்மிகு உதவி குறித்து என்.ராமகிருஷ்ணன் அவர்கள் "1850 ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் எங்கெல்ஸ் லண்டனிலிருந்து புறப்பட்டு மான்செஸ்டருக்கு வந்தார்'. எர்மென் எங்கெல்ஸ்'' நிறுவனத்தில் வர்த்தகத்துறை பிரதிநிதியாகப் பணியாற்றத் துவங்கினார். 20 ஆண்டுகள் காலத்திற்கு இவ்வாறு பணியாற்றி மார்க்ஸ் குடும்பத்துக்கு உதவினார்.''[95] இவ்வாறு கூறுகின்றார். இத்தகைய அரிய தியாகத்தினைப் பாவலர்மணி அவர்கள்

**"வாழ்ந்திடும் போதும் கூடவே வாழ்ந்தான்;**
**வஞ்சகர் சூழ்ச்சியால் சாய்ந்து**
**தாழ்ந்திடும் போதும் கூடவே தாழ்ந்தான்;**
**தணலெனும் வறுமையுள் இடறி**
**வீழ்ந்திடும் போதும் கூடவே வீழ்ந்தான்;**
**வீறுடன் சாவென்னும் ஓர்வாள்**
**போழ்ந்திடும் போதும் அவன்பணி முடித்தே**
**பொன்றினான் போன்றுளார் யாரே!"** (கார்.மார்.கா,பா:329)

என்று சிறப்பிக்கின்றார்.

## சமனியத்திற்குத் துணை நின்றவன்

ஒரு நல்ல செயலானது விளைவதற்குப் பலரின் துணை வேண்டும். ஆனால் சமனியம் என்னும் முத்து சமுதாயக் கடலில் உதிப்பதற்கு எங்கல்சு என்னும் அரும் மனிதனே காரல் மார்க்சிற்குப் பக்க பலமாக இருந்திருக்கின்றார். காரல் மார்க்சின் மூலதனம் நூலின் முதல் பகுதி 1867ஆம் ஆண்டு செப்படம்பர் மாதத்தில் வெளியானது. முதலாளித்துப் பத்திரிகைகள் "மூலதனம்" நூலைக் குறித்து எவ்வித செய்தியும் வெளியிடாமல், விமர்சனமும் செய்யாமல் புறக்கணிப்புச் செய்ய முயன்றன. இந்தப் புறக்கணிப்பை முறியடித்து மூலதனம் நூலில் பிரபலப்படுத்துவதற்காக எங்கல்சு ஒரு யுத்தியினைக் கையாண்டார். அந்த உத்தி குறித்து என்.ராமகிருஷ்ணன் அவர்கள் "தன் பெயரைப் போடாமல் "மூலதனம்" கடுமையாக விமர்சனம் செய்வது போல் அந்த நூல் வெளிவந்துவிட்டது என்பதை அறிவித்தார்'' என்ன, காரல் மார்க்ஸ் பெரிதாக எதைக் கண்டுபிடித்துவிட்டார்? என்று கேள்வியை எழுப்பி மார்க்சை விமர்சிப்பது போல் பாவனை செய்து அந்நூலின் முக்கிய சாராம்சத்தை அந்த விமர்சனத்தில் கொடுத்தார். இவ்வாறு ஒன்றல்ல, இரண்டல்ல ஏராளமான விமர்சனங்கள் எழுதி அனுப்பினார். இந்த விமர்சனங்களை 1867 ஆம் ஆண்டு அக்டோபர் முதல் 1868 ஆம் ஆண்டு ஜூன் மாதம் இறுதிவரை எழுதினார்.''[96] இவ்வாறு கூறுகின்றார். இவ்வாறு சமனியம் சமூகத்தில் வலம்வர எங்கெல்சு துணை நின்றுள்ளார். சமனியத்தின் உதயத்திற்கு எங்கல்சு துணை நின்ற பாங்கினைப் பாவலர்மணி அவர்கள் ''காரல் என்றொருவன் பிறந்திலன் ஆயின் கருதும் எங்கல்சிவன் இல்லை; நேருறும் எங்கல்சு இல்லை என்றாலோ நீண்ட புகழுடைய காரலும் இல்லை; சீருற அவர் தாம் சேர்ந்திலர் ஆயின் சிறப்புறும் சமனியம் இல்லை; வேர் அறுந்து போகும் உழைப்போர் குலத்தினுக்கு இங்கே சுரண்டலின் கொடுமை வலிமைமிகும்''[97] இவ்வாறு எடுத்தியம்புகின்றார்.

பிரடரெக் எங்கல்சு கடைசி வரை காரல் மார்க்சுடன் அவருக்காகவே வாழ்ந்துள்ளார். காரல் மார்க்சு இறந்ததும் மயானத்தில் அவரை அடக்கம் செய்துவிட்டு அவர் வாசித்த உபந்நியாசம் இதனைப் பறைசாற்றுகிறது. எங்கல்சு அவர்களின் வாய்மொழிகளை சாமிநாத சர்மா, "1883ம் வருஷம் மார்ச்சு மாதம் 14ம் தேதி பிற்பகல் இரண்டே முக்கால் மணிக்கு உலகத்தின் மிகப்பெரிய சிந்தனையாளன்- இந்த காரல் மார்க்ஸ்- சிந்திப்பதை நிறுத்திவிட்டான். கடைசி சமயத்தில் சுமார் இரண்டு நிமிஷ நேரந்தான் இவனைத் தனியாக விட்டு வைத்திருந்தோம். திரும்பச் சென்று பார்க்கிற போது இவன் தனது நாற்காலியில் அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான். அதுவே இவனுடைய கடைசித்

தூக்கம்”[98] இவ்வாறு வடித்துள்ளார். மரணம் கூட எங்கல்சு அருகில் இருந்தபோது காரல் மார்க்சை நெருங்கவில்லை என்ற ஆழமான அன்பினை இதன் வழி அறிய முடிகின்றது.

இவ்வாறு நட்புக்கு இலக்கணமாக எங்கல்சு திகழ்கின்றார். தியாகம் என்னும் உன்னத பண்பிற்கும் உரைகல்லாக எங்கல்சு வலம் வருகின்றார். புரட்சி சிந்தனையும், பொதுவுடைமை உணர்வும் முழுமையாகப் பெற்று காரல் மார்க்சின் மறு வடிவமாக எங்கல்சு திகழ்கின்றார். மனிதப் பண்புகள் முழுமையாக அமையப் பெற்ற ஒரு உன்னத மனிதராக எங்கல்சு அமைந்த பாங்கினைக் காரல் மார்க்சு காப்பியத்தின் மூலம் அறிய இயலும்.

## வெட்பாலன்

வெட்பாலன் என்று காரல் மார்க்சு காப்பியத்தில் வலம் வரும் வெஸ்ட்பாலன் காரல் மார்சின் குடும்ப நண்பர். சென்னி என்னும் புதையலை காரல் மார்க்சுக்கு வழங்கிய கொடையாளி. சீர்மை நிறைந்தவர். மேன்மைச் சிறப்பற்குரியவர்.

## சமனியம் குறித்த பார்வையில் வல்லவர்

காரல் மார்க்சிற்கு சமனியத்தின் மீது ஈர்ப்பு உருவானதற்கும், அந்த ஈர்ப்பிற்குப் பக்கபலமாக சென்னி துணையாக அமைந்ததற்கும் வெட்பாலனே காரணமாக இருந்திருக்கின்றார். மார்க்சின் மனதில் சமனியம் உதயமானதற்கு வெட்பாலன் என்ற விடியலும் காரணமாக இருந்த பாங்கினைப் பாவலர்மணி அவர்கள் ‘‘மாற்றரும் கால மரபினுக்கு ஏற்ப வளர்துறை அனைத்தையும் கற்றார்; ஆற்றலனாகிய காரல் மார்க்சினுக்கு அவற்றை அறிமுகம் செய்வதில் முதல்வர்; போற்றுதற்கரிய சமன்மை பற்றியே சைமன் புகன்றனவற்றை புத்தியுள் தந்தோர்; ஏற்றதோர் உருவினைக் காரல் தாம் எடுக்க இவர் கொடை கொஞ்சமோ! இல்லை!’’[99] இங்ஙனம் எடுத்துரைக்கின்றார்.

## கருத்தை நுட்பமாக மொழிவதில் வல்லவர்

எந்த ஒரு கருத்தும் அதனை மொழிபவர் மொழியும் விதத்தால் தான் முழுமையடையும். கேட்பவர் மனதில் தாக்கத்தையும் ஏற்படுத்தும். அத்தகைய சிறப்பு வாய்ந்தவர் வெட்பாலன். பிரஷ்ய அரசவையின் ஆலோசனைக்குழு உறுப்பினராகப் பணியாற்றி வந்த போதும், பிரபுக் குடும்பத்தைச் சேர்ந்தவராக இருந்த போதும் கர்வம் என்பது சிறிதும் இல்லாமல் காரல் மார்க்சுடன் நெருங்கிய நண்பராகப் பழகியவர். காரல் மார்க்சை தன்னினும் இளையவர் என்று இகழாமல் கருத்தினை நுட்பமாக எடுத்துரைப்பதில் வல்லவர் வெட்பாலன் என்பதைப்

பாவலர்மணி அவர்கள் “சென்னியை மகளாகக் கண்ணுறைகின்ற மணியாகச் சீருறப் பெற்றவர்; காரல் தன்னினும் இளையவன் என்று இகழாமல் தக்கதொரு நண்பனாகக் கருதி கருதிய கருத்தை நுட்பமாக மொழிகுவார்”[100] இவ்வாறு கூறுகின்றார்.

## இலாசலே

இலாசலே என்பவர் காரல் மார்க்சின் நண்பர். தளராத நட்பு கொண்டவர். இவர் காப்பியம் முழுவதும் பயணிக்கவில்லை. ஒரு நிகழ்ச்சியில் மட்டுமே இடம்பெறுகின்றார்.

## நட்பில் உயர்ந்தவர்

காரல் மார்க்சு கடும் வறுமைத் துன்பத்தில் வாடினார். பாரிசு நகரில் வறுமைத் தீயினால் அடைந்த துன்பங்கள் அளவில்லாதவை. அதனால் தனது துன்ப நிலையில் இருந்து விடுபட எண்ணி இலாசலேவிடம் உதவி வேண்டினார். அவரது சூழ்நிலையை நன்கு உணர்ந்து கொண்ட இலாசலே அவருக்கு நிதி திரட்டித் தர எண்ணினார். இதன் மூலம் இவரது உன்னத நட்பினையும், உயர்ந்த மனப்பான்மையையும் அறிந்து கொள்ளலாம். இதனை பாவலர்மணி அவர்கள் “தன்னுடைய நிலையினை விளக்கிக் கூறி ‘கடன் கொஞ்சம் தருக’ என்றான். இன்னவாறு இவன் உரைக்க இலாசலே மனம் நெகிழ்ந்து பின்னரும் பொருள் நாடாது பெரியதோர் நிதி திரட்டி அன்னவர்க்கு அளிக்க எண்ணி ஆவன எல்லாம் செய்தான்”[101] என்று எடுத்துரைக்கின்றார்.

## எலன்டெமூது

எலன்டெமூது என்பவர் காரல் மார்க்சு மற்றும் சென்னியின் பணியாட்டி, இவரைக் குறித்து ந.நன்மாறன் அவர்கள் “ஜென்னியின் தாயர் வீட்டு உதவிக்காக ஒரு பெண்மணியை அனுப்பி வைத்தார். அவர் பெயர் ஹெலன் டெமூத். இவர் மார்க்சின் குடும்பச் சக்கரம் சுழலப் பேருதவி புரிந்தார். தனது வாழ்நாளை இக்குடும்பத்திற்கெனவே அர்ப்பணித்தார்”[102] என்று குறிப்பிடுகின்றார்.

## துன்பத்தில் பங்கு கொள்பவள்

மகிழ்ச்சியின் போது உறவாடுபவர்களை விட துன்பத்தின் போது தோள் கொடுப்பவர்களே உன்னதமான மனிதர்கள். அத்தகைய ஒரு உன்னதமான பெண்ணாக எலன் நம் மனத்திரையில் விரிகின்றாள். இவளை குறித்த செய்தி ஒரு நிகழ்வில் மட்டும் இடம்பெறுகின்றது. காரலின் அன்பு மகன் எட்கார் இறந்த போது

எலன் “கோர்த்தெடுத்த முத்தாரம் நூல் அறுந்துக் கொட்டுதல் போல் சிறப்பு வாய்ந்த பணியாட்டி எலன் கண்ணீரைச் சிந்துகின்றாள்”[103] இவ்வாறு சோகமே வடிவமாகக் காட்சி அளித்த நிகழ்வினை பாவலர்மணி பதிவு செய்கின்றார். இதன் மூலம் துன்பத்தில் பங்கு கொண்ட எலனின் பூரணத் தன்மையினை நன்கு அறியலாம்.

## எட்கார்

காரல் மார்க்சு, சென்னியின் அன்பு மகன். இவன் 1846 டிசம்பரில் பிறந்தான். எல்லையற்ற இன்பத்தைப் பரிசாக அளித்தவன். நோயின் பிடியின் மூலம் இறந்து துயரத்தின் எல்லைக்கு மார்க்சைக் கொண்டு சென்றவன். இவன் இறந்த போது காரல் மார்க்சு எங்கெல்சுக்கு “என் மகன் எட்கார், வீட்டின் ஜீவநாடி போலிருந்தான். அவன் இறந்து விட்ட பிறகு வீடு சூனியமாயிருக்கிறது; திக்கற்றது போல் ஆகிவிட்டது. ஒவ்வொரு நிமிஷமும் அவனைப் பற்றி நினைக்க வேண்டியிருக்கிறது. அப்படி நினைக்காமல் இருக்க முடியவில்லை. அப்பொழுது எங்களுக்கு உண்டாகும் துயரத்தை வருணிக்க முடியாது. நான் எத்தனையோ துன்பங்களை அனுபவித்திருக்கிறேன். ஆனால் உண்மையான துயரம் இன்னதென்பதை இப்பொழுதுதான் தெரிந்து கொண்டேன்.”[104] இவ்வாறு கடிதம் எழுதியதாக சாமிநாத சர்மா கூறுகின்றார். இதன் மூலம் காரல் மார்க்சு எட்கார் மீது கொண்ட அன்பினை அறிய இயலும்.

## எல்லாச் சிறப்பும் உடையவன்

அழகு, அறிவு, ஆற்றல் அனைத்தும் நிறைந்தவன் எட்கார். பெற்றோரின் மனதில் குடிகொண்ட சிறப்பிற்குரியவன். காரலைப் போன்றே குணநலன்களும் நிறைந்தவன். இதனை பாவலர்மணி அவர்கள் “எட்டு வயதுடையான்; எட்டாத கூரறிவன்; மொட்டு போன்ற முகமுடையவன்; புன்சிரிப்பில் இளந்தாமரையான்; தொட்ட அளவினிலே பெற்றோர் துயரம் எல்லாம் கெட்டுத் தொலையும் வண்ணம் கீழறுக்கும் தீண்டலினான். காரலைப் போல் படிப்பினிலே கரையில்லாத காதலினான்; சேரவரும் காரல் குணச் சிறப்பெல்லாம் பெற்ற மக்கள் யாரெவரோ என வினவினால் எட்காரே அவனாமென்று ஊரவரே சொல்லும் வண்ணம் உயர்ந்தவனை இழந்தாரே”[105] என்று எட்கார் இறப்பினை பதிவு செய்யும் விதத்தில் அழகாக எடுத்துரைக்கின்றார்.

## பிரான்சிக்கா

காரல் மார்க்சின் இளைய மகள் பிரான்சிக்கா. காரல் மார்க்சு அடைந்த வறுமைத் துன்பத்திற்கு மற்றுமொரு சாட்சி இவள். கடுமையான மார்ச்சளியினால் இறந்தவள். துயரமே வடிவானவள்.

## கொத்துமலர் பிரான்சிக்கா

பிரான்சிக்கா ஒரு வயதிலேயே கடுமையான மார்ச்களியினாள் இறந்து விட்டாள். அவளுடைய உடலை அடக்கம் செய்வதற்குத் தேவையான சவப்பெட்டி கூட வாங்க முடியாத அவலநிலை. அத்தகைய கொடுமையான சூழ்நிலையை சென்னி ஒரு கடிதத்தில் "எங்களுடைய சிறு குழந்தை பிரான்சிஸ்கா. கடுமையான மார்ச்சளியினால் நோயாய்ப் படுத்துக் கொண்டு விட்டது. அது பாவம், மூன்று நாள் யமனோடு போராடியது. அதனுடைய அவஸ்தை சொல்ல முடியாது. கடைசியில் அதனுடைய ஆயுள் முடிந்துவிட்டது. அதன் தேகத்தைப் பின் பக்கத்து அறையில் கிடத்திவிட்டு நாங்கள் எல்லோரும் முன் பக்கத்து அறைக்கு வந்துவிட்டோம். அன்றிரவு வெறுந்தரையிலேயே படுத்துக் கொண்டோம். எங்களோடு மற்ற மூன்று குழந்தைகளும் இருந்தன. பிரான்சிஸ்கா இறந்து போனதற்காக நாங்கள் அழுது கொண்டிருந்தோம்…..எங்களுடைய அதிகமான பணமுடை காலத்தில் அந்தக் குழந்தை இறந்துவிட்டது. எங்களுடைய ஜெர்மானிய நண்பர்கள் எங்களுக்கு எவ்வித உதவியும் செய்ய முடியாதவர்களாயிருந்தார்கள்….. எர்னஸ்ட் ஜோன்ஸ், இந்தச் சமயத்தில் எங்களை வந்து பார்த்தார். ஆனால் அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை….. எனவே, என்னுடைய தேவையை முன்னிட்டு, எங்களைப் போல் தேசப் பிரஷ்டமடைந்து அருகாமையில் வசித்துக் கொண்டிருந்த ஒரு பிரெஞ்சு நண்பரிடம் சென்று என் குறையைத் தெரிவித்துக் கொண்டேன். அவர் உடனே பெரிய மனது பண்ணி இரண்டு பவுன் கொடுத்தார். இந்த பணத்தைக் கொண்டு சவப்பெட்டி வாங்கினேன். அதில் தான் இப்பொழுது என் குழந்தை சாசுவதமான நித்திரை செய்து கொண்டிருக்கிறது. அது பிறந்த போது, அதற்குத் தொட்டில் இல்லை; இறந்த பிறகு அதற்குச் சவப்பெட்டி அகப்படுவதற்குக் கஷ்டமாகி விட்டது"[106] இவ்வாறு உரைப்பதாக வெ.சாமிநாத சர்மா கூறுகின்றார். இத்தகைய கொடுமையான சூழலை பாவலர்மணி அவர்கள் "இத்தகைய சூழலிலே இளையமகள் பிரான்சிக்கா மருந்தொன்று இன்றிக் கொத்துமலர் கிடப்பது போல் மார்ச்சளியின் கொடுமையினால் மூச்சு முட்டிச் செத்துவிட்டாள்; சவஅடக்கம் செய்ய வழி என்னவெனச் சிந்தித்தவராய் மத்துழலும் தயிரானார்; மழை பொழியும் விழியானார்; மயங்கலானார்."[107] இவ்வாறு எடுத்தியம்புகின்றார். இப்பாத்திரப்

படைப்பின் மூலம் காரல் மார்க்சு மற்றும் சென்னி வாழ்ந்த எல்லையற்ற துன்ப வாழ்வைப் பதிவு செய்கின்றார்.

## தார்வின்

தார்வின் என்று அழைக்கப்படும் சார்லஸ் டார்வின் உயிரியல் அறிஞர். ‘‘உயிரினங்களின் பரிணாம வளர்ச்சி, இயற்கையான தேர்வின் மூலம் என்னும் நூலை இயற்றியவர். காரல் மார்க்சு வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர்.

## மார்க்சியத்தை ஏற்காதவர்

அறிஞர்கள் இவ்வுலக நலனுக்காக பல படைப்புகளை உருவாக்கிய போதும் சமூகம் குறித்த பார்வை அவர்களிடம் குறைவாகவே காணப்படுகின்றது. இதற்குச் சிறந்த சான்றாக தார்வின் காரல் மார்க்சில் வலம் வருகின்றார். மூலதனம் நூலின் ஒரு பகுதியை டார்வினுக்குச் சமர்ப்பணம் செய்ய மார்க்ஸ் விரும்பினார். இது குறித்து 1880 அக்டோபர் 13ம் தேதியிட்டு டார்வின் ஒரு கடிதம் எழுதினார். அக்கடிதத்தில் அவர் ‘‘நண்பனே! மடலினுக்கு இசையவும் ஒப்புதல் அளிக்கவும் மனமில்லை. பொறுத்தருள் செய்க; இடர்தரும் எதற்கும் விலகி நின்றிடுதல் என் இயல்பு என்பதை அறிக. ‘நூலினுள் உரைக்கும் செய்திகள் பற்றி நுண்துளி அறிவும் எனக்கில்லை; சால அந்நூலில் கடவுளை மதத்தைச் சாடுறும் செய்திகள் உள்ளதால் மேலும் நான் இதற்காக ஒப்புதல் அளித்தால் மிகவும் என் உறவினர் வெறுப்பை வெளிப்படுத்துவர்; எனவே ஒப்புதல் தர யான் கருதிலேன்;’’[108] என்று கூறுவதிலிருந்து சமூகப் பார்வையற்றவர் தார்வின் என்பதை அறியலாம்.

## அனிச்ச அடி

சுரும்பார் குழலி, ஆய் எயினன், அணிவளை, மோசிக்கீரனார், கணியன் கீரன், நார்முடி சேரல், செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டு சேரலாதன், பரணர், ஒற்றர் தலைவன் என பத்து துணைப் பாத்திரங்கள் அனிச்ச அடி காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

## சுரும்பார் குழலி

அருளாழியின் மனைவி. கதை சீருடன் நடைபெறுதற்கு இவளது கதாபாத்திரமே ஆதாரம் ஆகும். வஞ்சிக்கப்பட்ட பெண். பாவமே வடிவானவள்.

## சுரும்பார் குழலியின் புறவருணனை

சுரும்பார் குழலி அழகே உருவானவள். அதுமட்டுமின்றி இல்லறத்துக்குத் தேவையான அனைத்து நல்லறங்களும் பொருந்தியவள். இதனைப் பாவலர்மணி அவர்கள், "நீல விழியும், நெய்கனி கூந்தலும், தூய பல் தோன்ற வழங்கிய நகையும், ஏழிசை நாணிய இன்சொல் தொகுதியும், தாழிசை அஞ்சும் தளர்படு நடையும், அன்பென உரைக்கும் அளப்பிலாத் தன்மையைக் கண்பட வாழ்ந்து திறமும், இருவரின் பெற்றோரும் ஒரு மனம் உடையவராய்ப் பெருநலக் குறுமகள் இவளெனப் பேசிட இல்லறம் போற்றிய எழிலும், விருந்தோடு சொல்லறம் பேணலில் சோர்வில்லாத் தகைமையும் என்று நான் காண்பேன்- இனி எவ்வுலகம் சென்று நான் காண்பேன்"[109] என்று சுரும்பார் குழலி இறந்தபோது அருளாழி புலம்புவதாகக் குறிப்பிடுகின்றார். இவ்வாறு அக அழகுடன் புற அழகும் வாய்ந்தவளாகச் சுரும்பார் குழலி காட்சி தருகின்றாள்.

## உண்மையை ஒப்புக் கொள்ளும் மனமுடையவள்

சுரும்பார் குழலி நீரில் மிதந்து வந்த அரசனுக்குரிய மாங்காயை உண்டதால் அரசனின் முன் நிறுத்தப்பட்டு விசாரிக்கப்படுகின்றாள். அப்பொழுது சுரும்பார் குழலி தான் செய்த பிழையை மறைக்கவில்லை. உண்மை என்னும் ஒப்பற்ற வலிமை மிகும் ஆயுதத்தை தன் கையில் ஏந்தி நிற்கின்றாள். நீதிமன்றத்தில் நன்னனிடம் சுரும்பார் குழலி "சிறிய இந்த பசுங்காயினை உண்டதும், உண்டார் தண்டனைக்குரியவர் என்பதும் அறிந்த யான் இவ்வினையைப் புரிந்ததும் மெய்யே"[110] என்று குறிப்பிடுகின்றாள். இதன் மூலம் உண்மை என்னும் ஒப்பற்ற பண்பினை இயல்பாலே உடையவள் சுரும்பார் குழலி என்பதை அறியலாம்.

## பெற்றோர் சொல்லை மதிப்பவள்

தாய் தந்தையரின் சொல்லுக்குக் கட்டுப்படும் பெண்கள் வீட்டுக்கு மணி போன்றவர் ஆவர். துளுநாட்டிற்கு விழா காண்பதற்காக செல்வதற்கு சுரும்பார் குழலி விழைகின்றாள். அப்பொழுது எயினன் துளுநாட்டில் தங்கியிருக்கும் பொழுது தங்களை இன்னார் என காட்டிக் கொள்ளலாகாது என்றும், வாய்மை பேசுதல் தகாது என்றும் கூறுகின்றான். இந்த சொல்லிற்கு முழுவதும் கட்டுப்பட்டவளாக சுரும்பார் குழலி காணப்படுகின்றாள். சுரும்பார்குழலி அரசவையில் "புகழ்சால் கொற்றவனே! வானவர் நகரென வையகம் போற்றித் தேனமர் மலரின் திகழ்தரு வஞ்சியில் அரும்பொருள் வணிகன் அருமை மகளாகி வரும்பொருள் அறியாது வழக்காட்பட்டுள்ள என் பெயர் தாமரை என்பர்; இசைமிகு அரசனின் பிறந்த நாள்

விழா கண்டு மகிழ்வுற நின்னகர்ப் புகுந்தோம்; நீரிடையில் பசுங்காய் தின்றதால் விளைந்தது இந்தத் தீவினை”[111] இங்ஙனம் கூறுகின்றாள். இதிலிருந்து பெற்றோர் சொல்லை மதிக்கும் ஒப்பற்ற பண்புடையவள் சுரும்பார் குழலி என்பதை அறியலாம்.

## ஆய் எயினன்

சுரும்பார் குழலியின் தந்தை. சேரர் படைத் தலைவன். வீரம் நிறைந்தவர். குழலியை ஆழமாக நேசிக்கும் அன்பு நெஞ்சத்திற்குரியவர்.

## மகளின் மீது ஆழமான அன்பு

தனது மகள் சுரும்பார் குழலியின் மீது ஆழமான அன்பு கொண்டவன். தனது மகளை இழந்து துடிக்கின்ற காட்சி அவனது அன்பின் ஆழத்தைப் பறைசாற்றுகின்றது. நார்முடிச் சேரலிடம் “தீவினை என்பது எவ்வண்ணம் ஆயினும் ஆகுக! எந்தன் பகைவர்க்கும் இதுபோல் தீமை நிகழற்க!”[112] இவ்வாறு எயினன் கூறுகின்றார். இதிலிருந்து ஆழமான அன்பு வெளிப்பாட்டினை அறியலாம்.

## பகைவரை அழிக்க முனையும் வீரம்

தன்னுடைய மகளின் அழிவிற்குக் காரணமாக இருந்தவர்களை அழிக்க நினைக்கும் எண்ணம் மிகுந்தவராக எயினன் காணப்படுகின்றார். ஒரு மனிதனுக்கு மிகுந்த துன்பம் என்பது தான் வாழும் பொழுது தன்னுடைய சந்ததிகளின் அழிவினைக் காண்பதாகும். அத்தகைய நிலைக்குத் தள்ளிய பகைவர்கள் மீது தான் காட்டும் நியாயமான கோபம் வீரமாக வெளிப்படுகின்றது. துளுநாட்டின் வடக்கேயுள்ள புன்னாட்டார் நன்னனை எதிர்க்கப் படைத்துணை கேட்டுள்ள போரில் புன்னாட்டாருக்கு உதவி நன்னனை அழிக்கத் திட்டமிடுகின்றான் நார்முடிச் சேரல்.

அப்பொழுது எயினன் ‘‘குலத்தின் கொடிகளை வேரோடு களைந்து எம் நலத்தினை அழித்த நயனில்லாப் பகைவரைப் பூண்டோடு அழித்தும் புனற் குருதியாட ஆண்டு எம் ஆருயிர் அழியினும் அதனை நயப்பதே வீரர்கள் நயப்பதாம். இதனை வியப்பது செய்வார் வீரர் ஆவாரோ?’’[113] இவ்வாறு கூறுகின்றான். இதன் மூலம் பகைமையை முறியடிக்கும் இவனது உன்னத வீரத்தை அறியலாம். மேலும் பகைவரோடு போராடி வீர மரணம் அடைகின்றான். இங்ஙனம் ஆய் எயினன் சிறந்த தந்தையாகவும், உன்னத வீரனாகவும் காட்சி தருகின்றான்.

## அணிவளை

ஆய் எயினனின் அன்பான மனைவி சுரும்பார் குழலியின் அன்பான தாய்.

## தன்னுடைய துயரிலும் பிறரின் நிலையினை உணர்பவள்

பிறருடைய நிலையினைப் பூரணமாக அறிந்து கொள்பவர்கள் மிக மிக அரிது. தளராத துன்பத்தில் தான் இருந்த போதும் பிறரின் நிலையைப் பூரணமாக உணர்ந்து கொள்பவள் அணிவளை. மேலும் தமிழின் மீது அருங்காதலும் கொண்டவள். பரணர் வையாவிக்கோ பேகனின் வரலாற்றை எழுதிக் கொண்டிருக்கும் பொழுது அணிவளை அங்கு வருகின்றாள். அப்பொழுது அவள் “ஏடும் ஆணியும் கையில் எடுத்துப் பாடும் வேளையிது; பாவியேன் யானுறும் துன்ப நெருப்பினைத் தூயவர் வாய்மொழி அன்புப் புனலால் அவித்திட வந்தேன்; காலம் அறியாது கற்பனை நீக்கின் ஞாலம் பெறுவோர் நற்றமிழ்ப் பாடல் பிறவாது ஒழித்த பிழைக்கு ஆளாவேன்; சிறப்பில்லாத இச்செயலை செய்திட விரும்பேன்; விரும்பிய எல்லாம் விரும்பிய பாடலாய் ஏட்டில் வரும்பரை இவண் அமர்ந்திருப்பேன்;”[114] இவ்வாறு நினைக்கின்றாள். இதன் மூலம் பிறரின் நிலையை உணரும் இவளது பண்பை அறியலாம்.

## பிறருடைய துயரத்திற்கு வருந்தும் குணம்

அணிவளை எல்லையற்ற துன்பத்தில் இருந்த போதும் பிறருடைய துயரத்திற்காக வருந்தும் உயர்ந்த குணம் கொண்டவள். பரணர் பேகனின் வரலாற்றைப் பாடும் பொழுது கண்ணகி அடைந்த துயரை நினைத்து அணிவளை வருந்துகின்றாள். பரணரிடம் ‘‘பெண்ணாகப் பிறந்த பிழைக்கோ இத்தனை எண்ணிலடங்காத துயரம் இழைத்தனன் பேகன்;’’[115] என்று கூறுவதிலிருந்து பிறருடைய துயரத்திற்காக வருந்தும் உயரிய குணத்தினை அறியலாம்.

## மகளின் மீது ஆழமான அன்பு

தன்னுடைய மகள் மீது ஆழமான அன்பு கொண்டவள் அணிவளை சுரும்பார் குழலியை இழந்த அணிவளை பரணரிடம் ‘‘மணம்படும் கோலம் மகிழ்வேமெனுநாள் பிணம்படு கோலம் மகனும் பெற்றனன்; இளைப்புற்ற காலத்தில் உதவும் என்று தொகுத்த ஏமநிதியத்தை வஞ்சனைக் கள்வர் எஞ்சாது கவருதல் என்ன தீவினை. வஞ்சனையாளரால் மகளை இழந்தனம்; பிணமாயேனும் பெறுமகற் கண்டேன். நிணவேல் விழியாளான சுரும்பார் குழலியை அதுவும் காண்கிலேன்;’’[116] இவ்வாறு கூறிப் புலம்புகின்றாள். இதிலிருந்து மகளிடம் கொண்ட ஆழமான அன்பினை அறியலாம்.

## கணவனை நேசிக்கும் மாண்பு

கணவனை உயிராகக் கருதுபவள் அணிவளை. அதனால் அவனது உடம்பில் உயிர் நீங்கிய செய்தியினைக் கேட்ட அளவில் இவளது உடம்பிலிருந்தும் உயிர் பிரிந்தது. நன்னனுக்கு எதிரான போரில் எயினன் இறந்துவிடுகின்றான். அந்த செய்தியினைக் கேட்ட அளவில் அணிவளையின் உயிர் பிரிந்ததை பாவலர்மணி அவர்கள் ''வஞ்சகன் மிஞிலியைத் தன் வாளாற் கொல்ல தடந்தோள் கொட்டிப் புன்னாட்டரசின் போர்த்துணையாகி எயினன் சென்றான். செருக்களம் முழுமையும் நின்றான்; சுழன்றான்; நடுவாளுக்கு உணவாகப் பலரைக் கொன்றான். அவ்வாறு குறித்தது கொள்ளாதவனாய் நடுகல்லாகி நின்றான்; நிகழ்விது கேட்டுப் பனையில் வீழ்ந்தவற்கரி மிதித்தாலென அணிவளையாட்டியும் ஆவி ஒடுங்கினாள்''[117] என்று குட்டுவன் அருளாழியிடம் கூறுவதாக அமைந்திருக்கின்றார். இதன் மூலம் கணவனிடம் கொண்ட ஆழமான அன்பினை அறியலாம்.

## மோசி கீரனார்

துளு நாட்டுப் புலவர். புலவர் பரணரின் நண்பர். தன் நண்பன் தனக்கு அளித்த முடங்கலுக்காக சுரும்பார் குழலியைக் காப்பாற்றப் போராடியவர்.

## மோசி கீரனாரின் கருணை உள்ளம்

மோசி கீரனார் கருணையின்பால் உண்மையான ஈடுபாடு கொண்டவர். சுரும்பார் குழலி அரசவையில் நிறுத்தப்பட்டு கடும் தண்டனை விதிக்கப்பட்ட போது நன்னனிடம் ''குற்றத்தை நீக்கக் கோரினேன் அல்லேன்; குற்றத்தின் கடுமையைக் குறைக்கவே வேண்டினேன்; கொலை தண்டனையிலிருந்து நீக்கிக் குழலிநிறை பொன்படும் சிலையும், ஒன்பதிற்று ஒன்பது களிறும், தண்டமாகச் செலுத்துதும்; தாவிலாச் சூழறும் பெண்டென்பதனால் பிழையினைப் பொறுத்தருள்க;''[118] மோசிகீரனார் இவ்வாறு கூறுகின்றார். இதன் மூலம் அவரின் கருணை உள்ளத்தை அறியலாம்.

## நீதி நெறி தவறாதவர்

புலவர்கள் பொதுவாக தான் ஒரு மன்னவனை முழுமையாகச் சார்ந்திருந்த போதும் அவர்களின் தவற்றினைச் சுட்டிக் காட்டத் தயங்க மாட்டார்கள். அதே போல் மோசிக் கீரனார் நன்னன் பிழைத்த பொழுது அதனைத் தட்டிக் கேட்கத் தயங்கவில்லை. நிறைசூலியான சுரும்பார் குழலிக்கு நன்னன் மரண தண்டனை விதித்த போது அவனிடம் ''இயற்றிய பிழைக்கே யாவரும் தண்டிப்பர்; வயிற்றில்

உள்ள கருவும் வஞ்சனை புரிந்ததோ? பொய்மையின் தோற்றப் பொலிவினால் மயங்கி மெய்மையைக் காலிடையில் மிதித்துத் துவைத்துள்ளீர்!"[119] என்று கூறுகின்றார். இதிலிருந்து மன்னவனின் பிழையையும் எடுத்துரைக்கும் மோசி கீரனாரின் நீதி நெறி தவறாத குணத்தினை அறியலாம்.

## கணியன் கீரன்

அனிச்ச அடியின் தந்தை கதைத் தலைவனுக்கு ஒப்பற்ற உதவியாளர் ஆலோசகர். அரும் குணத்திற்குச் சொந்தக்காரர். கதையின் வளர்ச்சிக்கு முழுமையாக உதவும் ஒப்பற்ற பாத்திரம் கணியன் கீரன் பாத்திரம் ஆகும்.

## நுண்ணிய மதிநுட்பம் உடையவர்

சுரும்பார் குழலியை இழந்து சுடுகாட்டில் அருளாழி அழியாத துன்பத்திற்கு ஆளாகின்றான். அவனுடைய புலம்பலைக் கேட்ட கணியன் கீரன் அருளாழிக்கு ஆறுதல் மொழிவதுடன் மாமரத்தை அழிப்பதற்கான வழிமுறையினையும் கூறுகின்றான். இதன் மூலம் இவனின் நுண்ணிய மதிநுட்பத்தினை அறியலாம். கணியன் கீரன் அருளாழியிடம் "நீரில் கழுவுவதற்காக நெடுங்கோட்டினை உடைய யானையின் மீது ஏறி வருவோரில் எம்மவர் இருப்பதால்; யானை உண்ணும் சோற்று உருண்டையில் ஒருபொருள் சேர்ப்பின் எண்ணுவதெல்லாம் இனிதே முடியும்; யானையானது மதம் கொள்ளும்; யாரும் மறித்திட முடியாத சினங்கொள்ளும்; மாமரச் சோலையினுள் புகுமேயானால் வேரொடு பறித்து வீழ்த்திச் சிதைக்கும்"[120] இவ்வாறு கூறுவதிலிருந்து இதனை அறியலாம்.

## திட்டம் வகுப்பதில் வல்லவன்

அருளாழி நன்னனுடன் நடத்தும் போரில் சோழனின் உதவியை நாடினார். அதற்கு சோழன் மறுத்துவிட்டான். அப்பொழுது கணியன் கீரன் அருளாழியிடம் "அருளனே! செருவினில் விருப்பம் இல்லையென்ற சோழனின் செய்தியைக் கொஞ்சம் திருத்தி 'வெஞ்சமர்க் களத்தில் வஞ்சன் மிஞிலியை வாளின் வாய்ப்படுத்தித் தீர்க்கும் போரில் சேர்ந்து கொள்ளுவேன். யார்க்கும் இதனை அறிவியாது ஒழிக! 'என்னுமாறு இயற்றி இப்பொழுதே மிஞிலியின் கையினை நெருங்குமாறு இதனைச் செலுத்தினால் சோழனின் இருமுகப் போக்கினை எண்ணிச் சினத்து வஞ்சனை கொள்வான்; யானும் அப்பொழுது சிறிய படையினைத் திரட்டிச் சோழன் குறிப்பிடும் வண்ணம் புலிக் கொடியை ஏந்துவேன்; ஏந்தி எல்லைப் புறத்தே சென்று படைகொரு போரிடைக் கவர்ந்த அருங்கல செல்வம் நிறைந்துள்ள கோட்டையினை நெருங்கி முற்றுவேன்; நெருங்காது தடுக்கப் படை அங்கு இல்லை;

படையெல்லாம் பூழி நாட்டின் இடையாண்டுள்ளதால்; இதுகேட்ட மிஞிலி விரைவான். யான் என் வீரரோடு அதற்குள் மறைவேன். அதனால் மண்டிய சினத்தன் வளவனோடு முரணும் வாய்ப்பு உண்டாகும்.”[121] இங்ஙனம் கூறி சோழன் மறுத்த முடங்கலைக் கொண்டே நன்னனுக்கும் அவனுக்கும் பகை உண்டாக்குகின்றான். இதன் மூலம் திட்டம் வகுப்பதில் வல்லவன் கணியன் கீரன் என்பதை அறியலாம்.

## அருளாழிக்கு உற்ற துணைவன்

கணியன் கீரனின் திட்டப்படி மிஞிலியின் கையில் போலி முடங்கல் கிடைக்குமாறு செய்த அருளாழி அகப்பட்டுக் கொள்கின்றான். சிறையில் அடைக்கப்படுகின்றான். அப்பொழுதும் கணியன் கீரன் என்னும் வலிய ஆயுதம் அவனைக் காக்கின்றது. காவலன் மூலம் கொடுத்தனுப்பப்பட்ட உணவானது அருளாழிக்கு கவசமாகின்றது. உணவின் வழியே அளிக்கப்பட்ட குழம்பினைக் காலதர் கம்பியில் தடவினால் அது எளிதாக உடைந்து அதில் இணைக்கப் பட்டுள்ள கயிற்றின் மூலம் பகைவரின் கோட்டையிலிருந்து விடுபடமுடியும் என்ற செய்தி அடங்கிய முடங்கலையும் காவலன் மூலமாக அளித்து அருளாழியைக் காத்தார். இங்ஙனம் கணியன்கீரன் அருளாழிக்கு உற்ற துணையாக இருந்து காக்கின்றார்.

இங்ஙனம் தீமைக்குத் தீமை செய்பவனாகவும், மதிநுட்பம் நிறைந்த வனாகவும், அருளாழிக்கு உற்ற துணைவனாகவும் கணியன் கீரன் பாத்திரமானது படைக்கப்பட்டுள்ளது. கதை வளர்ச்சிக்கு இவனது பங்கு அளப்பரியது ஆகும்.

## நார்முடிச் சேரல்

சேர நாட்டு மன்னன். சேரர் படைத் தலைவன் எயினனுக்கும், சேரர் படைத் துணைத் தலைவன் அருளாழிக்கும் நேர்ந்த துன்பத்தை தன்னுடைய துயராகக் கருதுபவன். அநீதிக்கு எதிராகப் போர் தொடுப்பவன். கதைத் தலைவனுக்கு பக்கபலமாக அமைந்த ஒப்பற்ற பாத்திரம் இதுவாகும்.

## குழலிக்குற்ற துயரை எண்ணி வருந்துபவன்

நாட்டில் எண்ணிலாத் தீமைகள் நடைபெறும் பொழுது அதனை அறிந்தவுடனே மனதால் கலங்கும் மாந்தர்கள் இருப்பதால் தான் இந்த உலகம் இன்றும் நிலைபெற்று இருக்கின்நது. அத்தகைய கருணை உள்ளம் கொண்டவர் நார்முடிச் சேரல். குழலிக்கு நேர்ந்த கொடுமையை அறிந்த பொழுது அவன் “ஆயிரம் வேலின் நுனியானது மார்பில் அழுத்தியதாயினும் பொறுத்துத் தாங்குதல்

இயலும்; குழலிக்கு உற்ற கொடுமைகள் என்னும் நெருப்பின் வெம்மையை ஆற்றுதல் எவ்வண்ணம்!"[122] இவ்வாறு உரைப்பதிலிருந்து இதனை அறிய இயலும்.

## சிறந்த வீரன்

நார்முடிச் சேரல் வீரத்தில் சற்றும் குறைந்தவன் இல்லை. குழலிக்கு நேர்ந்த கொடுமையை எண்ணி எயினன் தணியாத துயரம் கொண்ட போது அவன் "அழுவதை ஒழிமதி! அவலத்திலிருந்து நீங்கி எழுதலே ஆண்மை என்பர் மேலோர்; வீரம் என்பது பகைவரின் மேற்சென்று துன்பம் இழைப்பது ஒன்றேயாமோ?"[123] என்று ஆறுதல் கூறும் பொழுது அவனின் வீரம் வெளிப்படுகின்றது.

## கருணையுள்ளம் கொண்டவன்

கருணை என்பது ஒப்பற்ற குணம் ஆகும். கருணை என்னும் கண் கொண்டு ஒரு அரசன் திகழ்வது சால சிறந்ததாகும். அந்த வகையில் நார்முடிச் சேரல் கருணையுள்ளம் கொண்டவனாகக் காட்சி தருகின்றான். புன்னாட்டாருக்குத் துணையாக நன்னனை எதிர்க்கின்ற போரில் செங்குட்டுவனைப் படைத் தலைவனாக நார்முடிச் சேரல் நியமிக்கின்றான். அப்பொழுது எயினன் வருந்துகின்றான். அப்பொழுது நார்முடிச் சேரல் "மிகவுயர்ந்த தோளினையுடையவனே! மென்மையான இயல்பினையுடைய மகளால் நோய்வாய்ப்பட்டு உள்ளம் நொந்தனையாதலின் ஓய்வும் அமைதியும் உனக்குத் தருவதை விரும்பியது அல்லால் வேறொன்றும் இல்லை; நின்னுடைய உள்ளத்தில் அமைதி அரும்புக; ஆவன செய்வதற்கு நான் உள்ளேன்"[124] இவ்வாறு கூறுவதிலிருந்து அவரின் கருணையுள்ளத்தை அறியலாம்.

இவ்வாறு வீரம், கருணை, பிறரின் துயரத்திற்கு வருந்துதல் ஆகிய சிறந்த மனிதப் பண்புகள் நிறைந்த பாத்திரமாக இப்பாத்திரம் அமைந்துள்ளது.

## செங்குட்டுவன்

நார்முடிச் சேரலின் இளவல். வீரம் நிறைந்தவன். போர்த் திறன் மிக்கவன்.

## வீரம் குறையாதவன்

செங்குட்டுவனும் வீரத்தில் செறிந்தவன். மன தைரியமும், மன உறுதியும் கொண்டவன். அருளாழியிடம் செங்குட்டுவன் "துன்ப நிகழ்ச்சிகள் எண்ணிலாவாகி எதிர் உறும் பொழுதும் கலங்காத உள்ள காட்டலே வீரம் ஆகும். அழகிய சோலையில் நுழையினும், போர்க்களம் புகினும், ஒன்றே என்னும் உறுதியில் பிறழாதவர்கள் வென்றே விடுவர் என்பதை விளங்குவாயாக;"[125] இவ்வாறு கூறுகின்றான். இதன் மூலம் இவனது வீர உள்ளத்தை அறியலாம்.

### போர்த்திறன் மிக்கவன்

ஒரு சிறந்த வீரனுக்கு வீரத்துடன் அதனை செயல்படுத்துவதற்கான ஆற்றலும் வேண்டும். செங்குட்டுவன் போர்த்திறன் நிறைந்தவனாகக் காணப்படுகிறான். நன்னனை எதிர்க்கும் போரில் செங்குட்டுவன் ‘‘பவளத் தீவினைப் பாழ்படச் செய்த பின் வெண்மையான நீரலை தவழும் நறவினைத் தாக்கி அழித்து தலைநகர் பாரம் நோக்கி முன்னேறுதல் வேண்டும்; கிழக்கில் கொங்கு நாட்டில் இருந்தொரு கொல்படைப் பிரிவு தென் கிழக்காகித் திகழும் அணியூர் கடம்பின் வாயிலைக் கருதுதல் வேண்டும்;’’[126] இவ்வாறெல்லாம் போர் குறித்துத் திட்டம் வகுக்கின்றான். இதன் மூலம் போர்த்திறன் மிக்கவன் என்பதை அறியலாம்.

இவ்வாறு வீரமும், போர்த்திறமும் உடையவனாக செங்குட்டுவன் வலம் வருகின்றான்.

### ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

நார்முடிச் சேரலின் இளவல். கதை வளர்ச்சியில் பெரிதும் இடம்பெறாத பாத்திரமாக இது காணப்படுகின்றது. குணநலன்களும் இதில் விவரிக்கப்படவில்லை.

#### பரணர்

பரணர் சிறந்த புலவர். கிளைக் கதையின் மூலம் இவரது அரிய குணநலன்கள் காப்பியத்தில் பறைசாற்றப்படுகின்றது. அணிவளையின் மனப்போராட்டத்திற்கு தீர்வு பகருபவர். நீதியின் மீது உண்மையான அக்கறை கொண்டவர்.

### மாட்சிமை பெருந்தியவர்

பரணர் ஒரு மிகச் சிறந்த மனிதர். பொருளைக் காட்டிலும் வாழ்வியல் பொருளுக்கு முக்கியத்துவம் கொடுப்பவர். உண்மையான பரிசிலின் தன்மையினை அறிந்தவர். பேகனுக்கும், அவனுடைய மனைவி கண்ணகிக்கும் இடையே ஒரு நடுவுநிலைமை தவறாத உன்னத நெஞ்சமாகத் திகழ்கின்றார். பேகனின் செயலால் கண்ணகிக்கு எவ்விதக் கேடும் நிகழ்ந்துவிடக் கூடாது என்று பரணர் “வள்ளல் ஒருவனின் சிறுபிழையினால் குற்றமில்லாத மனையாளின் நல்வாழ்க்கை குற்றம் உடையதாய்ப் போகாமல் புலவீர் தடுத்தல் கடனென்றேன்.”[127] இங்ஙனம் மற்ற புலவர்களிடம் கூறுகின்றார். இதன் மூலம் பரணர் மாட்சிமையுடையவர் என்பதை அறியலாம்.

## உலகியலை உணர்ந்தவர்

கவிஞர்கள் மனித மன உணர்வுகளைப் புரிந்து கொள்ளும் கலையினில் கைதேர்ந்தவர்கள். மனிதர்களின் பார்வையில் அல்லாமல் அழகியல் நோக்கோடு உலகினை இரசிப்பவர்கள். அதனால் இன்ப துன்பங்களைச் சமமாகப் பாவிக்கும் மனோபாவம் அவர்களிடம் இயல்பாகவே அமைந்துவிடுகின்றது. அணிவளை மனம் நொந்து ஆறுதல் வேண்டும் பொழுது பரணர் ‘‘விரும்பிய எல்லாம் நண்ணலும் இல்லை; வெறுப்பன எல்லாம் விலகலும் இல்லை; துன்புறுத்துவன வந்தால் துவப்பனவாக எண்ணுதல் இம்மனது எளிதாய் விடுமானேயானால் நண்ணும் எந்த துன்பமும் நலிவிக்கும் ஆறில்லை;’’[128] என்று உரைப்பது உலகியலை அவர் உணர்ந்துள்ள பாங்கினை நமக்கு உரைக்கின்றது. மேலும் அணிவளைக்கு ஏற்ப ஆறுதல் உரைப்பதையும் அறிய முடிகின்றது.

இங்ஙனம் பரணர் மாட்சிமை உடையவராகவும், உலகியல் உணர்ந்தவராகவும், பிறருடைய மனதை அறிந்தவராகவும் வலம் வருகின்றார்.

## ஒற்றர் தலைவன்

துளுநாட்டு ஒற்றர் தலைவன். ஒற்றறிவதிலே வல்லவன். எதிரி நாட்டு பலத்தினை பாங்குற வரையறுத்துக் கூறுபவன்.

## எதிரிகளின் திட்டத்தைக் கணிப்பவன்

ஒற்றர் தலைவன் எதிரி நாட்டாரின் திட்டங்களைத் துல்லியமாகக் கணித்துத் தருவதில் வல்லவன். தன்னுடைய தொழிலில் தேர்ந்தவன். நன்னனிடமும், மிஞிலியிடமும் ஒற்றர் தலைவன் “வடக்கில் புன்னாட்டாரின் போர்த் துணையாகி எந்நாட்டவரும் இகழ்ந்திடுமாறு தோற்றதும், எயினன் இறந்ததும் எண்ணிச் சேரன் சீற்றம் கொண்டுள்ளான். முன்னரே பூழியை இழந்தது பொறாதவனாய் உள்ளம் ஆழியினைப் போல அலைபுண்டுள்ளான்; பழியெல்லாம் துடைக்க ஓர் வழியினைத் தேடும் பேராவல் கொண்டுள்ளான்; அரசாங்கத்தின் பல பிரிவுத் தலைவர்களைக் காண்பதும், அவர்களுடன் சூழ்ந்து கணிப்பதும் பிறரறியாச் செயல் பூண்பதும் நோக்கின் போருக்குரியன இயற்றுவான் போலும் என எண்ணுகின்றேனான்;[129] இவ்வாறு கூறுவதிலிருந்து இதனை அறியலாம்.

இங்ஙனம் தனது பணியினைச் சிறப்பாகச் செய்து நுட்பமான மதியினை உடையவனாக ஒற்றன் படைக்கப்பட்டு கதை வளர்ச்சிக்கு உதவுகின்றான். கதையின் போக்கினையும் நமக்கு நன்கு உணர்த்துகின்றான்.

## அன்னி மகள்

வேள் எவ்வி, அன்னி, தத்தன், கீரன், மாதரி, ஏலங்குழலி, இளஞ்சேட் சென்னி, வெள்ளெருக்கிலையார், குடவாயிற் கீரத்தனார் என ஒன்பது துணைப் பாத்திரங்கள் அன்னி மகள் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

## வேள் எவ்வி

நீடூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட வேளிர் குலத் தலைவன். தமிழினப் பற்றும், வீரமும், ஒற்றுமையைப் பேணும் உன்னத குணமும் கொண்டவன்.

## வீரம் நிறைந்தவன்

வேள் எவ்வி வீரத்தின் விளைநிலம். வீரம் என்ற சொல்லுக்கு இலக்கணமாகத் திகழ்கின்றான். வேள் எவ்வியின் வெற்றிச் சிறப்பினைப் பாடும் குடவாயிற் கீரத்தனார் "இங்கு உன் வாள் உறை களைந்தனை; பகைப்புல மங்கையர் தங்களின் மங்கல நல்லணியினைக் களைந்தனர்; வில்லோ வளைத்தாய்! உனக்கு வேண்டாதவரின் புலத்து புல்லிய மாந்தரின் வாழ்வினை வளைத்தாய்! நாணோ தெறித்தனை! பகைவரின் மனைவியர் பூணும் அணிவளைப்பூட்டே தெறித்தனை! பகையோ துடைத்தனை! பற்றலர் பெண்டிரின் நகையும் திலகமும் அன்றோ துடைத்தனை!"[130] இங்ஙனம் பாடுவதிலிருந்து வேள் எவ்வி வீரம் நிறைந்தவன் என்பதை அறியலாம்.

## சிறந்த கொடையாளி

கொடைச் சிறப்பில் உயர்ந்தவனாக வேள் எவ்வி காணப்படுகின்றான் மழைக்கு நிகரான கொடைத் தன்மையினை உடையவன். இதனை குடவாயிற் கீரத்தனார் "தாய்க்கு நிகரான உந்தன் குளிர்ந்த நிழலில் தங்கினர்; வளரும் உயிர்களுக்கெல்லாம் வான்மழையை போன்றவனே; தளரும் குடிகளையெல்லாம் தாங்குகின்ற தோளினையுடையவனே; இன்னுயிரை அன்றி வேறு இசைக்காத நாவினை உடையவனே; பொன்னிறை தட்டு புலமையோர்க்கு அருளிய கையினையுடையவனே;"[131] இவ்வாறு உரைப்பதிலிருந்து எவ்வியின் கொடைச் சிறப்பினை அறியலாம்.

## போரை வெறுக்கும் பெருங்குணம்

வீரத்தின் வெளிப்பாடாகப் போரானது அமைந்த போதும் எண்ணற்ற உயிர்களைப் பலி கொள்ளும் கொடூர அரக்க குணம் படைத்தது போர் என்பதை

எவராலும் மறுக்க முடியாது. எனவே அத்தகைய போரினை வேள் எவ்வி வெறுக்கின்றான். போரின் போது தனது இருமகன்களையும் இழந்த மூதாட்டியிடம் வேள் எவ்வி,

**"போரும் பூசலும் பொறையிலாச் செருக்கும்**
**தீருநாள் உண்டுகொல் தெவ்வெனும் ஒரு சொல்**
**உலகைவிட் டொழியும் ஒருநாள் வருங்கொலோ?**
**அலகையா மாந்தன் அலைதலும் தீருமோ?**
**கொல்லுலைக் களமெலாம் கொல்படை செயாது**
**நெல்லும் கூலமும் விளைநிலம் திருத்தக்**
**கருவிசெய் காலமும் ஒன்று கனியுமேல்**
**பெரியீர்! அந்நாள் காணும் பேற்றினைப்**
**பெற்றவர் அலரோ பேறெலாம் பெற்றவர்;"** (அன்.மக,அ.1,க.2,188-196)

இங்ஙனம் உரைப்பதிலிருந்து இதனை அறிய இயலும்.

## தமிழினச் சிந்தனை

வேள் எவ்வி தமிழ் மீதும் தமிழ் பாடும் கவி மீதும் தணியாத பற்று உடையவன். நாடும், மொழியும் இரு கண்களாகப் போற்றுவது நல்லோரின் இயல்பாகும். அத்தகைய சீர்மை பொருந்திய பண்பினையுடையவன் வேள் எவ்வி என்பதைக் குடவாயிற் கீரத்தனாரிடம் "ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இருநில மருங்கில் தமிழ்நெறி பரப்பும் தகைமையிற் சிறந்தீர்! உங்களின் வரவினை நினைத்து மகிழ்கின்றேன்; நும் போன்ற வஞ்சனை அறியாத வாழ்வின் கதிரொளி இருப்பதால் அன்றோ தமிழினம் இன்றும் உருப்படுகின்றது"[132] இவ்வாறு உரைப்பதிலிருந்து அறியலாம்.

## ஒற்றுமையைப் பேணுபவன்

இருவருக்கிடையே பூசல் எழும் பொழுது அவர்களின் முரண்பாடுகளைப் போக்குபவனே உயர்ந்த மனிதன். பூசலை இரசித்து அதனை மேலும் வளர்ப்பது தீயவர்களின் குணமாகும். அன்னிக்கும், திதியனுக்கும் இடையே கருத்து வேறுபாடு தோன்றும் பொழுது வேள் எவ்வி "பெண்ணை மணம்கொளல் பிணங்களின் மேடையிலாம் எனின் அங்கே அன்பும், பிணைப்பும் குற்றமற வளர்தல் இயலுமோ? தோற்பவர் யாராக இருப்பினும் அன்னி மிஞிலிக்குத் தீராத வருத்தம் ஏற்படுவது உறுதி; பெற்றவனை இழந்தாலும், பேசருங் காதலை உற்றவன் இழந்தாலும் இன்பம் ஓங்குமோ? ஆதலின் பகைமையை அகற்றுவீர்;"[133] இவ்வாறு உரைப்பதிலிருந்து இதனை அறியலாம்.

இவ்வாறு வீரம், கொடை, தமிழினச் சிந்தனை, வாழ்வியற் சிந்தனை, ஒற்றுமையைப் பேணும் குணம் என பல நற்பண்புகளின் சாளரமாக எவ்வி பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

## அன்னி

குறுக்கையில் வாழ்ந்த ஆயர் குலத் தலைவன். அன்னி மிஞிலியின் தந்தை. பணிந்து செல்லும் குணம் கொண்டவன். பிறரின் நல்லுரைகளை ஏற்றுக் கொள்ளும் உயரிய குணம் கொண்டவன்.

## குலக் காப்பாளன் அன்னி

அன்னி தனது ஆயர் குலத்தின் மீது அளவில்லாத ஈடுபாடு கொண்டவன். பழம் பகையின் காரணமாக அன்னி மகட்கொடை மறுக்கின்றான். அப்பொழுது அமைச்சர் எதிர் வரும் இன்னல்களை எடுத்துக் கூற அன்னி “மகட்கொடை மறுத்த நாம் மணம் உடம்படுவமேயானால் அது நகல் செயல் அல்லால் உலகம் நல்ல செயலாய்ப் போற்றுமோ? பகையோடு போரிடுவதற்கு அஞ்சியே மணத்தை ஏற்றனர் என்னும் பழி வருமே! ஆயர் குலத்தவர் அஞ்சும் குலத்தவராய்ப் போயினர் என்னும் பழி பொன்றாது நிற்குமே! உயிரினும் குடிப்புகழ் ஓங்கியது அன்றோ!”[134] இவ்வாறு கூறுவதிலிருந்து குலக் காப்பாளன் அன்னி என்பதை அறியலாம்.

## மன்னிப்பு கேட்கும் குணம்

மன்னிப்பு கேட்பது என்பது மானுட மதிப்புகளுள் ஒன்றாகும். சரியான நேரத்தில் கேட்கப்படாத மன்னிப்பும், கொடுக்கப்படாத மன்னிப்பும் தீய விளைவுகளையே ஏற்படுத்தும் என்று கூறுவர். தன்னுடைய நாட்டின் நலனுக்காக எதிர்பாராமல் விளைந்த தீமைக்கு மன்னிப்பு கேட்பதற்கு அன்னி தயங்கவில்லை. வெண்காற் காரியினால் விளைந்த தீமையின் காரணமாக சினவாழியும், கதக்கண்ணனும் கடும் கோபத்தில் இருக்கின்றனர். அதனால் நாட்டிற்கு விளையும் ஏதங்களை அமைச்சர் பட்டியலிடுகின்றார். அவர்களின் நல்லுரைகளை ஏற்ற அன்னி ‘‘நெறியின் உயர்ந்தவரே! பழிகளை அடுக்குனீர்கள்; ஆர்வமாகத் தேளின் கொடுக்கானது உமிழ்கின்ற நஞ்சின் கொடிய சொற்களால் பழி சொல்ல நடுங்காத நின்மனம் நயந்தவாறு என்னை? புன்புலம் காளை புகுந்ததும், செல்வன் சாவ நிகழ்ந்ததும் புரைபடும் மனத்துடன் எண்ணிச் செய்தோம் என நீ மொழிவது கடுஞ்சொல்லாவதால் கண்ணியம் அன்று’’[135] சினவாழியின் அவையில் இவ்வாறு கூறுவதன் மூலம் இதனை அறியலாம்.

## சிறந்த தந்தை

ஒவ்வொரு ஆண்மகனும் அதிகமாக நேசிக்கும் பெண் அவளுடைய மகள் என்பது அனைவரும் அறிந்த ஒன்று. அவனால் தாங்கிக் கொள்ள முடியாத துன்பம் என்பது மகளின் கண்ணீர் ஆகும். கோசர்களால் அன்னியின் கண் களையப்பட்டவுடன் அன்னி மிஞிலி துடிக்கின்றாள். அவளின் துன்பத்தைப் பொறாத அன்னி "கண்ணே! நீ என் கண்ணாக இருக்கக் கண்ணிலான் என்று எனைக் கருதுவோர் உளரோ?"[136] என்று கூறுவதன் மூலம் அவன் சிறந்த தந்தை என்பதை அறியலாம்.

இவ்வாறு குலத்தின் மீது பற்றுக் கொண்டவனாகவும், மன்னிப்பு கேட்கும் மாபெரும் குணம் கொண்டவனாகவும், சிறந்த தந்தையாகவும் அன்னி வலம் வருகின்றான். கதையின் வளர்ச்சிக்கு அரும் துணை புரிகின்றான். தீயவர்களின் அழிவுக்குக் காரணமான போர் இவனால் எழுகின்றது.

## தத்தன்

அன்னியின் ஆநிரை காப்பாளன். கோசர்களின் கொடூரத்திற்கு இரையானவன். தன்னுடைய பணியினைச் சிறப்புடன் செய்பவன்.

## தொழில் திறமை வாய்ந்தவன்

எந்தத் தொழிலும் இழிவானது கிடையாது. எந்தவொரு தொழிலும் அத்தொழிலைப் புரிபவரின் நேர்த்தியினால் தான் மிளிரும். தொழில் புரிபவர் அனைவருக்கும் தொழில் திறமை என்பது வாய்க்காது. அதனை முனைப்புடனும், ஆர்வத்துடனும் புரிபவருக்கு மட்டும் தான் அந்த அரிய கலையானது வாய்க்கும். தத்தன் மிகுந்த தொழில் திறமையுடையவனாகக் காட்சி தருகின்றான். காளைகள் இரண்டினிடையே ஏற்பட்ட மோதல் காரணமாக அவ்விரண்டு காளைகளுக்கும் மூட்டு நெகிழ்ந்தது என ஆயன் கூற தத்தன் "மனையில் உறைகின்ற கோழி முட்டையின் வெண் தாதினால் பற்றுப் பூசியும் ஒருநாள் விட்டு ஒருநாள் பற்றுப் புதுக்கியும் வேம்பும், புளியும், மயிலடி நொச்சியும் வேகவைத்து எடுத்த வெந்நீர் கொண்டு கழுவினால் மூட்டானது நழுவாது இறுகும்"[137] இவ்வாறு கூறுவதிலிருந்து அவன் தொழில் திறமை வாய்ந்தவன் என்பதை அறியலாம்.

## வீரத்தில் குறைவில்லாதவன்

தத்தனும் வீரம் நிறைந்தவனாகப் படைக்கப்பட்டுள்ளான். வெண்காற் காரி கோசர்களின் புலத்தில் புகுந்து தீவினை புரிந்த நிகழ்வினைக் கேட்ட அளவில்

தத்தன் போருக்குத் தயாராகின்றான். ஆயினிடம் தத்தன் "போரினை விரும்புகின்ற கோசர்கள் சீற்றத்தவராகி வருதலும் நம்மை வளைத்து ஆநிரையைக் கவர்தலும் செய்வர்; ஆதலின் குற்றமில்லாதவரே! பிளவுபட்ட வழியெல்லாம் கலைத்து ஆநிரையைச் செலுத்துவீராக! அவை போய்த் தொழுவத்தைச் சேரும்; மலைத்தல் ஒழிப்பீராக! மம்மர் அறுப்பீராக! வருபவரை எல்லாம் வானிடையில் துய்க்க அருஞ்சமர் ஆற்றுவேன்;"[138] இவ்வாறு கூறுவதிலிருந்து இதனை அறிய இயலும்.

இவ்வாறு தத்தன் தொழில் திறமை வாய்ந்தவனாகவும், வீரம் நிறைந்தவனாகவும் காட்சி தருகின்றான். பெரிய திருப்பு முனைக்கு இவனே காரணமாகின்றான்.

## கீரன்

அன்னியின் நண்பர். தமிழினச் சிந்தனையும், மாறாத நட்பும் உடையவர்.

## தமிழினச் சிந்தனையுடையவர்

தமிழினம் என்பது மிகத் தொன்மை வாய்ந்த இனமாகும். இன்றும் அழியாமல் கன்னித் தன்மையுடன் நிலைத்திருப்பதற்கு தமிழின் மீதும், இனத்தின் மீதும் ஈடுபாடு கொண்டவர்களே காரணம் எனலாம். அந்த வகையில் ஆழமான தமிழனச் சிந்தனையுடையவர் கீரன். கோசர்கள் தத்தனைக் கொன்று ஆதிரைகளைக் கவர்ந்த பொழுது அமைச்சர் சமாதானமாகச் செல்ல நினைக்கின்றார். அப்பொழுது கீரன் ''தமிழரை மதியாத செருக்குமிக்க கோசர்களின் தலைகளை உமியெனக் களத்திடையில் ஊதித் தூற்றுவோம்; ஊரெல்லாம் கூட்டி ஒன்றுபடுத்துவோம்; காரெல்லாம் பொழியும் கடுமழை இடியெனத் தாக்குவோம். கோசர்களால் தங்கிய பழியெல்லாம் போக்குவோம்.''[139] இவ்வாறு உரைப்பது அவரின் தமிழினச் சிந்தனையைப் பறைசாற்றுகின்றது.

## சிறந்த நண்பர்

நட்பு என்பது ஆழ் மனதில் பிறக்கும் ஓர் அற்புத உணர்ச்சி ஆகும். மதம், சாதி, இனம் போன்ற பிரிவினைகளைக் கடந்து இதயம் ஒன்றுபடும் ஆத்ம உறவு நண்பன் ஆவான். அத்தகைய சிறந்த நண்பனுடன் கோசர்களின் அவைக் களத்திற்கு வரும் கீரன் தன் நண்பனுக்கு இழுக்கு நேரும் பொழுது கொந்தளிக்கும் நெஞ்சமுடையவராகக் காட்சி தருகின்றார். அவர் கோசர்களின் அவையில் ''வஞ்சனை, சூழ்ச்சி, வாழ்பவர்க் கண்டு நெஞ்சம் புழுங்கி நெறியினைக் கோறல், எஞ்சல் இல்லாமல் ஏசிப் பழித்தல், கோசருக்குரிய கொடுங்குணம்

போலும்"[140] என்று ஆவேசத்துடன் கூறுவதிலிருந்து அவர் சிறந்த நண்பர் என்பதை அறியலாம்.

இங்ஙனம் தமிழினச் சிந்தனையும், சிறந்த நட்பும் உடையவராகக் கீரன் படைக்கப்பட்டுள்ளார். காப்பியத்தில் முக்கிய திருப்புமுனையான அன்னியின் கண் களையப்படும் நிகழ்வில் இப்பாத்திரம் இடம்பெறுகின்றது. கதையின் வளர்ச்சிக்கும், விறுவிறுப்பிற்கும் இப்பாத்திரம் துணை நிற்கின்றது.

## மாதிரி

அன்னி மிஞிலியின் தோழி. தொடக்கம் முதல் இறுதி வரை இவள் காப்பியத்தில் பயணிக்கின்றாள். அன்னி மிஞிலியின் நலனில் முழுமையான அக்கறை உடையவள். உண்மையான தோழி.

## தன்னை வேறாகக் கருதாதவள்

ஒரே உணர்வுடன் வாழும் இரு வேறு உடல்கள் தான் தோழிகள் ஆவர். உணர்வினால் ஒன்றுபடுவது தோழமையில் மட்டுமே ஆகும். ஒரே தாயின் வயிற்றில் பிறந்த குழந்தைகள் கூட எண்ணங்களால் வேறுபட்டு இருப்பர். ஒத்த உணர்வினையுடையவரே தோழிகளாக அமைய முடியும். அத்தகைய சிறந்த தோழியாக மாதிரி திகழ்கின்றாள். திதியனுடனான காதலை அன்னிமிஞிலி மறைக்கும் பொழுது மாதிரி "அன்னி மகளே! கண்மணி போன்றவளே! என்னை மறைக்க எண்ணிணாய் போலும்! என்னை அயலாலாக எண்ணவில்லை ஆயின் இப்பொழுதே அதனை இயம்புக;"[141] இவ்வாறு கூறுவதிலிருந்து இதனை அறியலாம்.

## ஆத்மார்த்தமான தோழி

தனக்கு நெருக்கமானவர்கள் கவலை கொள்வதை சற்றும் விரும்பாதவர்கள் தான் ஆத்மார்த்தமானவர்கள். கவலை என்பது எந்தவொரு மனிதனையும் நிலைகுலையச் செய்வதாகும். பகிர்ந்த துன்பம் பாதியாகக் குறைவது உண்மையான நண்பர்களால் மட்டும் தான் என்றால் மிகையாகாது. அத்தகை ஆத்மார்த்தமான தோழி மாதிரி ஆவாள். திதியனை அன்னி பழம்பகையைக் காரணம் காட்டி மணம் முடிக்க மறுக்கும் பொழுது அன்னி மிஞிலி கவலை கொள்கிறாள். அப்பொழுது மாதரி "மதி மருளும் முகத்தினையுடையவனே! மலர்பொழில், நீர்நிலை எதிலும் விருப்பம் இன்றிக் கிடக்கும் எதனாலோ மொழிக! இடரும் கவலையும் முன்னில்லாது அழிக்கும் முயற்சிகள் மேற்கொள்ளல் உறுதியாதலின் கவலையெல்லாம் ஒழிப்பாயாக! இன்பமெல்லாம் பெறுவாயாக"[142] இவ்வாறு கூறுவதிலிருந்து இதனை அறிய இயலும்.

## சிறந்த ஆலோசகர்

ஆலோசனை என்பது அறிவு வயப்பட்டு அந்நிலையில் இருந்து பாங்குற எடுத்துரைப்பதாகும். அன்னியின் கண் களையப்பட்ட போது அன்னி மிஞ்லி உணர்வு நிலையில் இருக்கின்றாள். ஆனால் மாதரி அவளுடைய நிலையில் நில்லாத அறிவு நிலையில் ஆலோசனை பகர்கின்றாள். அன்னி மிஞிலி சினந்த பொழுது ''வடிக்கணை விழியாய்! வஞ்சினம் எங்ஙனம் முடிப்பது என்பதை முன்னினை கொல்லோ? பகையானது மிகப் பெரியது; பகையினை முடிக்க எண்ணும் நம் தகுதியோ மிகச் சிறியது''[143] மாதரி இங்ஙனம் உரைப்பதின் மூலம் அவள் சிறந்த ஆலோசகர் என்பதை அறியலாம்.

## நலம் நாடுபவள்

அன்னி மிஞிலியின் பூரண நலம் நாடுபவள் மாதரி ஆவாள். நட்பானது இறுதி வரை தொடர இந்த குணமே ஆதாரமாகும். போரில் வெற்றி பெற்ற திதியன் இன்னும் மீளவில்லை என்று அன்னி மிஞிலி வருந்துகின்றாள். அப்பொழுது மாதரி "புதிய உடை கசங்கும் முன் கூந்தல் மலர் வாடும் முன் ஓடிய கண்களில் ஒழுகும் நீர் தடுத்து நின் நோய் களைய நெடுந்தகை வருவான். அன்னாய் துன்பம் ஆற்றுவாயாக!''[144] இவ்வாறு உரைப்பதன் மூலம் நலம் நாடும் பண்பினள் மாதரி என்பதை அறியலாம்.

இவ்வாறு சிறந்த தோழியாகவும், ஆலோசகராகவும், நலம் நாடும் பண்பினளாகவும் மாதரி படைக்கப்பட்டுள்ளாள்.

## ஏலங்குழலி

வேள் எவ்வியின் மனைவி. கணவனின் மீது மாறாத அன்பு கொண்டவள். வேள் எவ்வியின் மரணத்தைக் கண்டு துடிக்கும் பொழுது போர்க்கான திட்டம் வகுக்கும் பொழுதும் உள்ளத்தைத் தொடுகின்றாள்.

## சிறந்த மனைவி

ஏலங்குழலி ஒரு சிறந்த மனைவி ஆவாள். மனைவி என்பவள் கணவனை மட்டும் நேசித்தால் போதாது. அவனது சீரிய சிந்தனைகளையும், எண்ணங்களையும் நேசிப்பவளாக அமைதல் வேண்டும். இலட்சியக் கணவனுக்கு வாய்த்த இலட்சிய மனைவியாக ஏலங்குழலி காட்சி தருகின்றாள். வேள் எவ்வி இறந்தவுடன் அவனது இறப்பை நினைத்து வருந்தும் ஏலங்குழலி ''பகையினால் விளைந்ததைப் பார்த்துள்ளோம் அன்றே! நகையையும், அமைதியையும் நலிவிப்பது அல்லால்

பகையால் விளைந்த பயனொன்று உண்டோ? பொன் நாண் பறிக்கலாம்; புனையிழை ஒருத்திக்கு அந்நாண் கொடுத்தல் ஆகுமோ? அதனால் அன்பால் கூடிவாழும் கூட்டினை அறிந்திடாத மாந்தர் எலும்புக் கூட்டின் மேல் மாளிகை எழுப்பினர்; மனை நிலைத்து இலது; மகிழ்வும் நிலைத்து இலது; எல்லாப் பக்கத்திலிருந்தும் துன்பமே எழுந்தது. அழுகையும் அவலமும் அலைத்திடாத வாழ்விற்கு எழுவதே இனி நாம் இயற்றுதல் வேண்டும்;"[145] இவ்வாறு கூறுவதிலிருந்து இதனை அறியலாம்.

## விவேகம் உடையவள்

பகையை முறியடிக்க வேகத்துடன் விவேகமும் அமைதல் அவசியம் ஆகும். அப்பொழுது தான் வெற்றிக் கனியினை எளிதாகக் கைப்பற்ற முடியும். விவேகம் மிகுந்தவள் ஏலங்குழலி என்பதை அன்னி மிஞிலியிடம் "வேல்விழியாளே! எந்தன் முடிவும் உந்தன் சூளும் ஒன்றுமேயானால் பெரும்பயன் தருமென்னும் உண்மை பெரிதன்றோ?"[146] இவ்வாறு கூறுவதிலிருந்து அறியலாம். இவ்வாறு ஏலங்குழலி ஒரு உன்னத பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளது.

## வெள்ளெருக்கிலையாரும் குடவாயிற் கீரத்தனாரும்

இவர்கள் இருவரும் புலவர்கள். வேள் எவ்வியின் கொடை, வீரம், செங்கோல் வளையாமல் ஆட்சி புரியும் சிறப்பு ஆகியவற்றை நயமுடன் நவில்வதற்காக சீருற படைக்கப்பட்டுள்ளனர். மேலும் ஏலங்குழலி எவ்வியைப் பிரிந்து வாடும் பொழுது வெள்ளெருக்கிலையார் ஆறுதல் பகரவும் செய்கின்றார். இலக்கியத்தினை மேலும் சுவையூட்டுவதற்காகவும் இப்பாத்திரங்கள் பயன்படுகின்றன. சமூக சிந்தனையினை வேள் எவ்வியிடம் எடுத்துரைப்பதில் வாசகர்களின் உள்ளத்தையும் தொடுகின்றனர்.

## இளஞ்சேட் சென்னி

சோழப் பேரரசன். கோசர்களுடனான போரில் திதியனுக்குத் துணை நிற்பவன். தீமைக்குத் துணை போகாதவன். அரசியல் வியூகம் வகுப்பதில் வல்லவன். போர்த்திறன் மிக்கவன். கதை வளர்ச்சிக்கு உதவுகின்றான். கதை மாந்தர்களுக்கு துணை நின்று சிறப்புச் செய்கின்றான்.

## சாலி மைந்தன்

சாலி, இளஞ்சாத்தன், துறவி, இளம்பூதி, அஞ்சனை, தீவதிலகை, செட்டியார் எண்மர் ஆகிய துணைப் பாத்திரங்கள் இடம்பெற்றுள்ளன.

## சாலி

கதைத் தலைவன் ஆபுத்திரனின் சீர்மிகு அன்னை. சூழலின் காரணமாகப் பிழை செய்தவள் அன்றி தூய்மையான உள்ளம் கொண்டவள். செய்த பிழையை எண்ணி வருந்துபவள். இளஞ்சாத்தன் மீது கொண்ட பூரண அன்பின் காரணமாக அவனது இறப்பிற்குப் பின் உயிர் வாழாதவள்.

## சாலியின் புறவருணனை

சாலி பேரழகு வாய்ந்தவள். செயற்கை அலங்காரம் ஏதுமின்றி இயற்கையிலேயே எழில் கொஞ்சும் அழகு வாய்ந்தவள். இதனை பாவலர்மணி அவர்கள்

**“ஈராறு பருவத் தாளை**
**இனிப்பூறும் இதழி னாளை**
**வாராருங் குழலி னாளை**
**மணநாறும் உடலி னாளைத்**
**தேரூர்ந்து வருதல் போலச்**
**சிறப்பூரும் நடையி னாளைச்**
**சீராரும் சாலி என்னும்**
**சீர்த்திகொள் பெயரி னாளை”** (சாலி.மைந்.காண்.1,பட.3.பா:9)

இங்ஙனம் மணப்பெண்ணாக வருணிப்பதன் மூலம் அறியலாம்.

## துன்பமே வாழ்க்கையாகக் கொண்டவள்

எண்ணற்ற கனவுகளுடன் மணவாழ்க்கையில் சாலி அடியெடுத்து வைத்த போதும் அபஞ்சிகனின் அலட்சியத்தால் துன்ப வாழ்வே அவளுக்கு இல்வாழ்க்கையாக அமைந்தது. எண்ணற்ற துயரங்களுடன் மணவாழ்க்கையினை அவள் வாழ்ந்த பாங்கினை “வீசுமென் தென்றல் வந்து மேனியைத் தீண்டுமாயின் கூசுவாள். செந்தீப் பற்றிக் கொண்டதென நடுங்கி நிற்பாள்; பேசும் மென் சிறைக்குலங்கள் காதலில் பிறங்கக் காணின் மூசுபல் துயரம் சூழ்ந்து மூண்டென உயிர்த்து நிற்பாள்.”[147] பாவலர்மணி இவ்வாறு கூறுகிறார். மேலும் அவர் சாலியின் அவல நிலையை,

**“தென்றலைப் பகையாக் கொண்டாள்**
**தீயினை உறவாக் கொண்டாள்**
**மன்றலை வெறுத்து விட்டாள்**
**மருளினைப் புகலாக் கொண்டாள்**
**பொன்தரு மாலைப் போதைப்**

**புலந்தனள் ஒழுகு கண்ணீர்**
**நன்றுசெய் உறவாக் கொண்டு**
**நயந்தனள் மாழ்கி நின்றாள்"** (சாலி.மைந்,காண்.1,பட.3,பா:19)

இங்ஙனம் சொல்லோவியங்களாகச் செதுக்குகின்றார்.

## வாயில்லாத உறவுகளிடம் நேசம்

சாலி புனிதம் நிறைந்த உள்ளத்தினையுடையவள். கணவனின் அன்பு கிட்டாத போதும் தவறான வழியில் செல்லத் துணியவில்லை. தன்னுடைய மன இறுக்கத்தினை மாற்றும் செயல்பாடுகளில் அவள் ஆக்கமுடன் செயல்படுவதைக் காண முடிகின்றது. பறவைகளிடம், முதுநாய் ஒன்றிடமும் காட்டும் அன்பின் மூலம் அவளது துயரினை மாற்ற முனைவதை "பொற்குடத்தைக் கீழிறக்கிப் புன்னகையை இதழிருத்திப் புழைக்கடைக்கு முற்படர்ந்து வருவாளின் முகம் நோக்கிப் பறவைகளும் முதுநாய் ஒன்றும் அன்பு நிறையும் நெஞ்சினவாய் ஆர்ப்பரிக்கக் கண்டவளாய் அவற்றிற்கெல்லாம் விற்படரும் புருவத்தாள் வேண்டும் உணவு தாம் ஈந்து வியந்து நின்றாள்"[148] என்ற பாடலின் மூலம் அறிய இயலும்.

## நியாயமான ஆசையுடையவள்

திருமணம் என்னும் நிகழ்வில் கால் பதிக்கும் பெண்கள் கொண்ட நியாயமான ஆசையை உடையவளாக சாலி காட்சி தருகின்றாள். குடும்பம் என்னும் அழகிய வட்டம் தன்னைப் பிணிக்கும் சங்கிலியாக அமைய வேண்டும் என ஆவல் கொள்கின்றாள். அவளின் நியாயமான மன உணர்வு வெளிப்பாட்டினை, "இன்பத்துள் மேலென்றும் கீழென்றும் இசைக்கின்ற நீ என்னை மணந்து துன்பத்தை ஏன் தந்தாய்? சுடுபருவத் தீயில் ஏன் துளங்க வைத்தாய்? அன்பொத்த நல்வாழ்வின் அரும்பயனாகக் குழவியொன்று அளித்திருந்தால் முன்பற்றும் எத்துயரும் முனைமுறியச் செய்து இன்பத்தில் மூழ்கி நிற்பேன்"[149] என்ற பாடலால் அறியலாம்.

## உயிர்களைக் காத்தலே உளத்து ஆசையாகக் கொண்டவள்

சோதிடத்தைக் காரணமாகக் காட்டி அபஞ்சிகன் வெறுப்பினை உமிழும் போது தன்னுடைய உள்ளத்து ஆசையினை சாலி வெளிப்படுத்துகிறாள். பறவைகளும், முதுநாயும் வீட்டில் அணிசெய்ய வேண்டும். அவற்றிற்கு அமுது படைக்க வேண்டும் என்ற தனது உள்ளத்து ஆசையினை சாலி வெளிப்படுத்துகின்றாள். அதற்கு அபஞ்சிகன் மறுப்புத் தெரிவிக்கும் பொழுது சாலி "என் உடம்பில் உயிர் இருக்கும் வரை இந்த உயிர்க்குலங்கள் இங்கிருக்கும். பின்

இவற்றை அகற்றலெனின் பேதையிவள் உயிர் உடம்பைப் பிரிந்த பின்பு முன்னியதை முடித்திடுவாய்.''[150] இங்ஙனம் கூறுவதிலிருந்து அவளின் உன்னத ஆசையினை அறிய முடிகின்றது.

## புதுமைச் சிந்தனையுடையவள்

சூழலின் காரணமாகச் சாலி இளஞ்சாத்தனுடன் சேர்ந்து பிழை செய்கின்றாள். தன்னுடைய தவறை ஒப்புக் கொள்கின்ற அவள் மன்னிப்பு கேட்டு மன்றாடுகின்றாள். ஆனால் அபஞ்சிகன் மன்னிக்க மறுக்கின்றான். அப்பொழுது அவள் வேதங்களிலும், புராணங்களிலும் உள்ள மகளிர் இயற்கைக்குப் புறம்பானதைச் செய்த போதும் கொண்டாடப்படுவதைச் சுட்டிக் காட்டுகின்றாள். ஆனால் சூழலின் பிழையால் விளைந்த தீங்கினை மன்னிக்காத ஆடவரின் மனநிலையை சாலி சாடுவதை அபஞ்சிகனிடம் "தருகெனக் கணவன் கேட்கத் தேவர்கள் தம்மைக் கூடித் தருமனை, வீமன் தன்னை, விசயனைத் தந்தாள் உண்மை; பாண்டுவின் மனைவியாகப் பிறங்கும் முன் கன்னன் என்னும் ஒருவனை யாவர் கேட்கப் பெற்றனள்"[151] இங்ஙனம் கூறுவதிலிருந்து அறியலாம்.

## செய்த பிழையெண்ணி வருந்துபவள்

ஒருவன் தான் செய்த பிழையினை எண்ணி வருந்தும் தருணத்தில் அவன் புதுப்பிறவி எய்துகின்றான். அவனுடைய பாவங்கள் அனைத்தும் உண்மையான வருத்தத்தின் போது நீங்குகின்றது என்றால் அது மிகையாகாது. அத்தகைய புனிதத் தன்மையினை சாலி தனது குற்ற உணர்வின் மூலம் அடைகின்றாள். ஆபுத்திரனை ஈன்ற சாலி ''இன்னொருவன் மனைவியாவேன் என்ற ஓர்சொல் இளஞ்சாத்தற்கு இசைக்காததால் விளைந்த சொல்லுதற்கரிய துன்பத்தால் அன்றோ இந்தப் பால் நிலவைத் தோள் சுமக்க நேர்ந்தது இன்று முன்னை விதி மூட்டும் எனில் அறிவும் சற்றே முனை மழுங்கிப் போகுமெனல் உண்மை அன்றோ?''[152] இங்ஙனம் வருந்துவதிலிருந்து இதனை அறியலாம்.

## தாயுள்ளம் கொண்டவள்

தாய்மையுள்ளம் என்பது பொழிகின்ற மழையைப் போல தூய்மை நிறைந்தது. அது குறிப்பிட்ட எல்லைக்கு உட்பட்டதன்று தன்னுடைய குழந்தைகளின் வயதை ஒத்த பிள்ளைகளையும் ஒரே மாதிரி எண்ணும் மனநிலை வாய்ந்தது. அத்தகைய உன்னதத் தாய்மையின் பூரணத்தை ஆபுத்திரன் வேதியர்களால் துன்புறுத்தப்பட்டு உணவு வேண்டி வரும் வேளையில் ''மகனே! இ∴தென் மார்பினும் முகத்தும் புகல்வாய் என்றனள்; 'தெவ்வரின் செயலோ?

தீயரின் செயலோ? எவ்வண்ணம் நேர்ந்தது இயம்புக நின்னைத் தகவுறப் பெற்ற தாய் இதுகாணின் அகனுறும் நெருப்பால் அழிவளே"[153] சாலி இங்ஙனம் துடிக்கின்றாள். இவ்வாறு ஆபுத்திரன் தன்னுடைய மைந்தன் என்பதை அறியும் முன்னரே அவள் கொள்ளும் ஆறாத துயரம் அவளது தாய்மையுள்ளத்தைப் புலப்படுத்துகின்றது.

## தொண்டுக்குத் துணை செய்பவள்

சாலி பல நற்பண்புகளின் சாளரமாகத் திகழ்கின்றாள். ஆபுத்திரன் தன்னைத் தாயாக ஏற்றுக் கொள்ளத் தயங்குகின்றான் என்று தவறாகப் புரிந்து கொண்ட சாலி வருந்தி நிற்கின்றாள். அப்பொழுது தன்னை நாடி உணவு வேண்டி வந்த சிலருக்கு உணவு வழங்க முடியவில்லை என்று கலைமகளிடம் ஆபுத்திரன் வேண்டி நிற்கின்றான். அப்பொழுது சாலி "அழுது நின்ற தன் மைந்தனைக் கண்டனள். அடுதீயில் இட்ட வெண்ணெய் போன்றனள், கண்திறவா முன்னம் எழுந்து பழுதில்லா வகைப் பண்ணியம் ஆர்ந்த பாத்திரத்தைத் தொழுது வைத்தபின் துவண்டு நீங்கினள்"[154] இங்ஙனம் செயல்படுகின்றாள். இது உன்னதத் தொண்டிற்கு அவள் துணை நின்ற பாங்கினை உணர்த்துகின்றது.

## மனத்தைப் பறிகொடுத்தவனுக்காக உயிரைப் பறிக்கொடுத்தவள்

சாலியின் உள்ளத்தைத் திருடியவன் இளஞ்சாத்தன். எல்லையற்ற அன்பினை அவன் மேல் சாலி கொண்டிருப்பதன் வெளிப்பாடே அவளது மரணம் ஆகும். வடக்கிருந்து உயிர் துறந்த இளஞ்சாத்தனின் உடலைக் கண்டதும் அவளது ஆவி அவளைவிட்டுப் பிரிந்த நிகழ்வானது இதனைப் பறைசாற்றுகின்றது. இதனை "ஐயோ! என் மகனே என்று அலறிய பின் இளஞ்சாத்தன் மெய் சார்ந்த வெள்ளென்பின் மேல் வீழ்ந்தாள்; அவ்வளவே தளராமல் வினை செய்யினும் உண்மை எதிர் வரும் நாளில் பொய் ஓடிப் போவது போல் அவள் ஆவி போயிற்று"[155] என்ற பாடலால் அறியலாம்.

## இளஞ்சாத்தன்

சாலியின் உள்ளம் கவர்ந்த கள்வன். ஆபுத்திரனின் தந்தை. அறியாமல் பிழை செய்தவன். செய்த பிழையை எண்ணி வருந்துபவன். ஆபுத்திரன் மீது கொண்ட அளவில்லாத அன்பின் காரணமாக உயிரையும் துறந்தவன், உயிரைக் கூட கொடுக்கும் உன்னத நண்பர்களைப் பெற்றவன். சாலியைத் தவிர பிற பெண்ணை மனதாலும் நினையாதவன்.

## இளஞ்சாத்தனின் புறருவணனை

இளஞ்சாத்தன் அகஅழகோடு புற அழகும் கொண்டவன். கம்பீரமான தோற்றமும், எழில் மிகு உடல் வனப்பும் உடையவன் இறஞ்சாத்தன் என்பதை "திரண்டிருக்கும் இருகுன்றமென அமைந்திருக்கும் இரண்டு தோள்கள்; கூரிய வேல் போன்ற இரண்டிருக்கும் கருவிழிகள். இருங்குஞ்சிச் சுருள் காற்றில் விரிநுதலில் புரண்டிருக்கும். பொன்மலரில் கருவண்டு ஒன்று உருண்டோடிக் கிடப்பது போல் உருக்காட்டும் பேரழகன்"[156] என்ற பாடலால் அறியலாம்.

## பிழையை எண்ணி வருந்துபவன்

ஆபுத்திரனைச் சந்திக்கும் இளஞ்சாத்தன் அவனைத் தன் மகன் என்று தெரிந்து கொள்கின்றான். அப்பொழுது தன் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்வுகளை பின்னோக்கிப் பார்க்கும் வேளையில் உள்ளம் வருந்துகிறான். அவன் கொள்ளும் துயரமானது அவனுடைய புனிதத் தன்மையை வெளிப்படுத்துகின்றது. இளஞ்சாத்தன் "சாலியினைக் கூடியதும், அவளை நீங்கிச் சாவகத்திற்குச் சென்றதுவும், மீண்டு வந்து சேல் மீன் போல் திரியும் கண்ணாளைக் காணச் சென்று திரும்பியதும், உசாவுங்கால் அவளோ மாற்றான் தாலி புனைந்த மனைவியாவாள் என்று கேட்டதனால் செவியிற் சுட்டதுவும், வேதியர்கள் சூலியலும் மகளென்றும் பாராராகித் துரத்தியதும் மனக்கண்ணில் தெரியக் கண்டு"[157] இங்ஙனம் வருந்துகின்றான். இதன் மூலம் இவன் தன்னை அறியாமல் பிழை செய்தவன் என்பதை அறியலாம்.

## மகனின் மீது மாறாத அன்பு

இளஞ்சாத்தன் எல்லையற்ற அன்பின் உறைவிடமாகக் காட்சி தருகின்றான். ஆபுத்திரன் தன் மகன் என்பதை அறிந்த போது சொல்ல முடியாத இன்பத்தை எய்துகின்றான். மூலகனின் சதியின் காரணமாக ஆபுத்திரனை மணிபல்லவத் தீவிலேயே விட்டுப் பிரிந்த இளஞ்சாத்தன் சொல்ல முடியாத துயரத்தை எய்துகின்றான். இதனை "ஆன்மகனின் முகத்தை உன்னி வருந்துவதும், விதியை எண்ணி இரங்கலும், விழிநீர் சிந்தி நனைவதும் அல்லால் வேறு நவின்றிடற்கு இயலாத சாத்தன் பகையெனக் காலம் நீண்டு படர்தரல் போலுழந்தான்"[158] என்ற பாடலால் அறியலாம்.

பின்னர் மணிபல்லவத் தீவிற்கு மீள கலம் இல்லாத நிலையில் ஆபுத்திரன் பெயரால் அறச்சாலை நிறுவி அருஞ்செயல்களில் ஈடுபடுகின்றான். ஆபுத்திரன் சாவகம் வந்ததும் அவ்வறச்சாலை தன்னைக் காண்கின்றான். அங்கு

“உழைத்துண்ண முடியாதவர் யாவரும் ஆங்கண் உண்டு இனிதிருந்தனர். நோயின் பிழைத்துய்ய வந்தோர் அனைவரும் மருந்து பெற்றனராயவண் மீண்டார்”[159] இத்தகைய அறச்செயல்கள் நடைபெறக் கண்டு மகிழ்கின்றான். இதன்மூலம் மகனின் தொண்டார்ந்த செயல்களுக்கு இளஞ்சாத்தன் துணைபுரிவதைக் காணலாம். மேலும் தீவதிலகையின் மூலம் மகன் மரணித்ததாகத் தவறான செய்தியைக் கேட்ட இளஞ்சாத்தன் “சாலியை இழந்த துன்பம் தாக்கிய வெப்பம் போக்க மழையைப் போல வந்தான். அவனையும் இழந்தேன். அந்தோ எல்லையில்லாத நீளும் செல்வத்தைப் பற்றி நிற்கும் போலித்தனத்தை வாழ்க்கை என்று போற்றிட மனமில்லேனால் வடக்கிருந்து உயிர் விடுக்க எண்ணினேன்”[160] இங்ஙனம் கூறுவதிலிருந்து மகனுக்காக உயிர் துறக்கும் அவனது மாறாத அன்பை அறியலாம்.

## நட்பின் மேன்மை அறிந்தவன்

நட்பு என்பது உன்னதமான ஒன்று உண்மையான நட்பின் தன்மையினை உணர்ந்தவர்கள் மிகச் சிலரே ஆவர். அத்தகைய ஒரு சிறந்த மனிதனாக இளஞ்சாத்தன் திகழ்கின்றான். ஆபுத்திரன் பொருட்டு மணிபல்லவம் செல்ல நினைக்கும் இளஞ்சாத்தனிடம் நண்பர்கள் தங்களைவிட்டு அவன் செல்வதை எண்ணி வருந்துகின்றனர். அதற்கு இளஞ்சாத்தன்,

**“தேட்டையில் மட்டும் நட்புச்**
**செய்தனெ மல்லே மென்றும்**
**கேட்டிலும் நட்பைப் போற்றும்**
**கிழமையைக் கொண்டோ மன்றோ!**
**வாட்டுமால் சொன்ன சொல்லை**
**வாங்குக மீள வென்ன**
**வேட்டவெம் மகனைத் தேடல்**
**வேண்டாவோ.......”** (சாலி.மைந்,காண்.4,பட-3,பா:11)

என்று கூறுகின்றான். இதில் நட்பின் மேன்மையையும் உண்மைத் தன்மையையும் அறிந்துள்ள பாங்கினை அறியலாம். இவனுடைய நட்பின் பொருட்டு தான் நண்பர்களும் உயிரைத் துறந்த உன்னதத்தை நாம் காண முடிகின்றது.

## இளம்பூதி

ஆபுத்திரனின் வளர்பபுத் தந்தை. தான் வளர்த்த ஆவினையும் பிள்ளையாகக் கருதுபவர். வேதியர்களின் வற்புறுத்துதலின் காரணமாக ஆபுத்திரனைப் பிரிந்தவர்.

### உன்னத வாழ்க்கைக்கு உரித்தானவர்

உன்னதமான வாழ்க்கை என்பது பிறருக்கும் தீங்கு இழைக்காமல் வாழ்வியல் நெறியைப் பிழைக்காமல் வாழ்வதாகும். அத்தகைய உன்னத வாழ்க்கையினை இளம்பூதி வாழ்வதை ‘‘அழுக்கறியாத நெஞ்சுடையான்; ஆன்ற பெரும் வேத ஒழுக்கம் கெடாத வாழ்க்கை நெறி ஓம்புதலில் நீங்கான். இழுக்கறியாத ஒருவனென யாரும் முறை செய்ய முழுமையான சான்றாகத் திகழுபவன். மூண்ட புகழாளன்’’[161] என்ற பாடலால் அறியலாம்.

### ஆவின் மீது கொண்ட நேசம்

ஊரில் ஏற்பட்ட பஞ்சத்தைப் போக்க இளம்பூதியின் ஆவினைப் பலிகொடுக்க வேதியர்கள் கேட்ட பொழுது இளம்பூதியின் நேசமானது வெளிப்படுகின்றது. ஆவின் மீது அளப்பரிய பாசத்தினை இளம்பூதி கொண்டிருப்பதை அவர் ‘‘மாடு தானென யாம் அதை எண்ணவில்லை. மகளைப் போல எம் ஆவியுள் கொண்டுள்ளோம். நீடு வேள்வியிலாவுதி செய்திட நீருரைத்தன கேட்டொறும் என் தசை ஆடுகின்றது எம் பிள்ளை தான் கேட்குமேல் ஆவி நீங்குவான். ஆதலின் இங்கு நீர் மாற்றாக வேறெது கேட்பினும் ஈகுவேன். இதனை மட்டும் நீர் மாற்றுவீராக’’[162] இங்ஙனம் உரைப்பதிலிருந்து அறியலாம்.

### பயந்த சுபாவம் கொண்டவன்

சராசரி மனிதர்கள் பெரும்பாலும் உலகத்தின் சொற்களுக்குக் கட்டுப்பட்டவர்களாகவே இருக்கின்றனர். நியாயம் என்று தெரிந்த போதும் அதற்கு ஆதரவு அளிக்கும் மனநிலை அவர்களிடம் இருப்பதில்லை. வேள்வியினைத் தடுத்த ஆபுத்திரனை வேதியர்கள் விரட்ட நினைக்கின்றனர். ஆபுத்திரன் நியாயத்தின் பிள்ளையாக இருந்த போதும் தன் பிள்ளையாகக் கொள்ளாத இளம்பூதியின் மன நிலையை “நற்செயலை இயற்றினாய் என இயம்பிடும் மனஉரமில்லாதவன். உன்னைத் தூற்றி நான் சொல்லவும் நாவெழல் இன்றித் துளங்கினேன்; உன்னைப்பழி சொல்லிச் சாற்றிடின் மனச்சான்று என்னை வருத்தும். தக்கதே செய்தாய் என்று போற்றினால் உறவோர் பகையென்னை உருத்தும். போகும் வழி அறியவில்லை மகனே”[163] என்ற பாடலால் அறியலாம்.

### ஆபுத்திரனைக் கொண்டாடுபவன்

குழந்தையற்ற தம்பதிகளுக்கு அக்குழந்தையின் வருகை எத்தகைய மகிழ்வினை ஏற்படுத்தும் என்பதனை இளம்பூதி பாத்திரப்படைப்பின் மூலம் அறிய முடிகின்றது. ஆபுத்திரனை பிரியவேண்டிய சூழலில் இளம்பூதி ‘‘பயனற்றதாகிய

வாழ்க்கையினாலும் வெந்த எம் இல்லத்தினுள் புகுந்து குறுகுறுவென நடந்தும் மெய்யின் மீது தவழ்ந்தும குதலை நன்மொழி பல உதிர்த்தும் பெறுவரும் இன்பத்தில் எம்மை மூழ்கச் செய்த பேற்றினை நெறுஞ்சினில் சுமந்தே சாகும் வரை வாழ்வோமாதலின் மைந்தனே நீ செல்வாயாக"[164] அவனிடம் இங்ஙனம் கூறுகின்றான். இதன் மூலம் ஆபுத்திரன் கொண்டாடி வளர்க்கப்பட்டதை அறிய முடிகின்றது.

## அஞ்சனை

இளம்பூதியின் மனைவி. ஆபுத்திரனின் வளர்ப்பு அன்னை அன்பே உருவானவள். கணவனோடு ஒத்த கருத்துடைய மனைவி.

## அன்பே வடிவானவள்

அன்பு என்பது உலகம் என்னும் சக்கரம் சூழல்வதற்கு அச்சாணி போன்றது. மகத்துவம் வாய்ந்த அந்த பண்பானது அமைய பெற்றவள் அஞ்சனை என்பதை "அன்பினியளான மகள் அஞ்சனை என்பாளைத் தன் மனையாளாக மணந்தே இல்லத் தலைமை தந்தான்"[165] இளம்பூதியைக் குறித்துக் கூறும் சொற்களால் அறியலாம். தாய்மை என்னும் உன்னதப் பண்பு என்பது பெண்களுக்கே உரியது. தாய்மையே அடையாத போதும் மாணிக்கமாக அஞ்சனை திகழ்வதை "பிள்ளை நமக்கு இல்லை இது பெரிய குறை என்ற துன்பம் மனதில் தங்குதலால் சாகும் உயிர்க்கெல்லாம் தாய் மனமுடைமையினால் தழுவும் குணம் பெற்றார். குள்ள மனம் நீங்கி மலைக்குவடு மனம் கொண்டார்"[166] என்ற இளம்பூதி, அஞ்சனையின் வாழ்க்கையினை பாவலர்மணி அவர்கள் வருணிப்பதிலிருந்து அறியலாம்.

## துறவி

கவலைகளால் நொந்த சாலியின் உள்ளத்தினை உய்விக்க வந்தவர்- சாலியின் வாழ்வில் நிகழ்ந்த பல்வேறு நிகழ்வுகளுக்கு மறைமுக காரணமானவர்.

## துறவியின் புற வருணனை

சிலப்பதிகாரத்தில் பாத்திரங்களின் புறவருணனை குறித்து, "இளங்கோவடிகள் தம் பாத்திரங்களின் மனத்தையே நமக்குத் திறந்து காட்டுபவர். அதற்கு ஏற்பப் புறக்கோலத்தையும் வேண்டிய அளவு வற்புறுத்துவார்"[167] தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் இங்ஙனம் கூறுகிறார். அத்தகைய தன்மையினைப் பாவலர்மணி அவர்களிடமும் காண முடிகின்றது. தேவையான பாத்திரங்களுக்கு மட்டுமே புறவருணனை தருகின்றார்.

மனதின் அழுக்குகள் மறையுமிடத்தில் இறைவனின் எழுச்சியின் காரணமாக முகத்தில் ஒளி பரவும். முற்றும் துறந்த துறவி அருள் கலந்த நெஞ்சமோடு வருகை புரிந்ததை “வெள்ளி போன்ற தாடி மார்பு உரச விரிந்த நெற்றி அறிவு காட்ட விள்ளரிய அருள் நெஞ்சினை விழி இரண்டும் பறைசாற்றத் தள்ளரிய பெருநீத்தக் குளம் பலவும் மூழ்கி வரும் கொள்ளரிய துறவுநெறிக் கோலத்தார் அவ்விடம் வந்தார்”[168] என்ற பாடலால் அறியலாம்.

## கவலைகளைச் சரியான வழியில் போக்குபவர்

மனிதன் குறைகள் நிறைந்தவன். மாசே வடிவானவன். ஆனால் அக்குறைகளை எண்ணி வருந்திக் கொண்டே இருந்தால் வண்ணமயமான வாழ்வானது வசப்படாது. தெரியாமல் பிழை நேரும் பொழுது அதிலிருந்து மீட்சி பெறுவது என்பது இன்றியமையாதது. அத்தகைய பணியினை வாழ்வைக் கடந்த துறவிகளால் மட்டும் மனிதருக்குச் செய்ய முடியும். தான் செய்த பிழையை எண்ணி சாலி துடிக்கின்றாள். அப்பொழுது துறவி தீமையே வாழ்க்கையாகக் கொண்ட சௌமினியின் வரலாற்றைக் கூறி அவளையும் இறைவன் ஆட்கொண்டதை இயம்பகின்றார். மேலும் அவர் “நெஞ்சோடுபடாதவளாய் நிகழ்ந்த செயலுக்கே இறைவன் தஞ்சம் புக அருளினான் எனில் தையலே நின் தவறை எண்ணி ஐந்தருவி போல் கண்ணீர் வடிக்கின்றாய். ஆதலினால் செஞ்சடையான் உனக்கு அருளிச் செய்வது உறுதி”[169] இங்ஙனம் உரைப்பதிலிருந்து மானிடர்களை உய்வித்து கவலைகளைச் சரியான வழியில் போக்குபவர் என்பதை அறியலாம்.

## தீவ திலகை

கோமுகி ஆற்றங்கரையின் அழகைப் பேணுபவள். மூலகனின் சூழ்ச்சியை முறியடித்தவள். நிலையாமையை எடுத்துக் கூறி வாழ்வியல் உண்மையினை உரைப்பவள். நம்பிக்கையை ஊட்டி நல்வழி காட்டுபவள் அறியாமல் செய்த பிழையை எண்ணி வருந்துபவள்.

## சூழ்ச்சியினை முறியடித்தவள்

சூழ்ச்சியே உருவான மூலகனின் சதியினை முறியடிப்பதில் தீவ திலகை முதலிடம் பெறுகின்றாள். துரோகியாக இருந்து அன்பே வடிவான ஆபுத்திரனை மூலகன் அழிக்க முனைகின்றான். வாளை வீசி திசை திருப்பி ஆபுத்திரனை மூலகன் கொலல முனையும் போது “வழிகண்டு போவாரோ மாட்டாரோ என்னும் நினைவால் தொடர்ந்து வந்த எழில் வடிவான தீவதிலகை அவன் செயல் கண்டு காடு அதிரக் கூச்சலிட்டாள்”[170] என்று பாவலர் பணி கூறுகிறார்.தீவதிலகையின்

கூச்சலால் அஞ்சி நடுங்கி மூலகன் வாளைத் தவறவிட சதி முறியடிக்கப்பட்டது. இங்ஙனம் மூலகனின் சூழ்ச்சியினை முறியடிப்பவளாக தீவதிலகை காட்சி தருகின்றாள்.

## நிலையாமையைப் போதிப்பவள்

தீமையே உருவான மூலகனின் மரணம் கருணையால் கருவான ஆபுத்திரனை வாட்டுகின்றது. தொடர்ந்து மேற்கொள்ள வேண்டிய செயலை தடை செய்கின்றது. இது உலகுக்கும் ஆபுத்திரனும் தீமையை விளைவிக்கும் என்பதை உணர்ந்த தீவதிலகை ‘‘மாண்டவரை எண்ணி மனமாழ்கி அழுதாரெல்லாம் மண்ணகத்தில் ஈண்டவரை எழுப்பியதாக யான் அறியவில்லை. அஃதியலாதென்பதைக் கண்டுள்ளாய். நீ ஆதலினால் கருதும் வினை மேல் தொடரக் கலம் செல்க’’[171] என்று கூறி அவனைத் துன்பத்தில் இருந்து காப்பதிலிருந்து நிலையாமையைப் போதிப்பவள் என்பதை அறியலாம்.

## நம்பிக்கையின் நாயகி

சோதனைகள் ஆயிரம் வந்தாலும் அதனைக் கடந்து அடுத்த நிலையை எய்துவதே மானுடப் பிறவியின் தனித்துவமாகும். அந்த தனித்துவம் இயல்பாக வாய்ப்பதில்லை. ஆக்கம் நிறைந்த சொற்கள் தான் மனிதர்களின் ஊக்கத்திற்குக் காரணமாக அமைகின்றன. சாவகம் செல்ல நினைத்த ஆபுத்திரனுக்குத் தடை ஏற்படும் வகையில் கலம் சென்றுவிடவே அவன் வருந்துகின்றான். அப்பொழுது தீவ திலகை ‘‘கலம்போனால் குறிக்கோளும் போனதென்று ஆன்மகனே! கலங்க வேண்டாம். நிலம் போகும் வண்டியென நெடுங்கடலில் வாரந்தோறும் நீள் கலங்கள் வலமாகச் செல்லக் காண்பாய். ஆதலினால் வருந்துதல் ஒழி; வருங்காலத்தில் நலம்பெறவே நீ செல்ல எத்தனையோ வழியுண்டு நலியாதே’’[172] இங்ஙனம் கூறுவதிலிருந்து நம்பிக்கையூட்டி நலம் பெற செய்பவள் என்பதை அறியலாம்.

## அறியாமல் செய்த பிழையினால் வருந்துபவள்

செய்த பிழையை எண்ணி வருந்துவது என்பது நல்லவர்களுக்கே உரிய குணமாகும். நல்லவர்களை கெட்டவர்களிடமிருந்து வேறுபடுத்தப் பெரிதும் துணை புரிவது இந்த குணமேயாகும். ஆபுத்திரன் எழுதிய முடங்கலால் அவன் இறந்துவிட்டதாக தீவதிலகை தவறாகப் புரிந்துக்கொள்கின்றாள். ஆபுத்திரனைத் தேடி வந்த இளஞ்சாத்தனிடம் அவள் தவறாக உணர்ந்த செய்தியைக் கூற இளஞ்சாத்தன் தனது நண்பர்களுடன் வடக்கிலிருந்து உயிர் துறக்கின்றான். பின்னர் தனது பிழையை எண்ணி தீவதிலகை வருந்துவதை ஆபுத்திரனைக் கண்ட அவளின் ‘‘நின்று இரங்கி அழுதனளாய் நீண்ட பெரும் மூச்சினளாய் ‘அன்று

எனக்கு நீ வரைந்த முடங்கலினால் அவனாவி கொன்றொழித்தேன்.’ என்றுரைத்துக் கோவென்று கதறினாள்”[173] இச்செயலின் மூலம் அறியலாம்.

## செட்டியார் எண்மர்

இளஞ்சாத்தனின் உயிரான நண்பர்கள். அவனுக்காக உயிரையும் துறந்த உத்தமர்கள். இளஞ்சாத்தனின் வாழ்வில் மட்டுமின்றி தாழ்விலும் உடன் நின்றவர்கள்.

## ஆபுத்திரனைத் தம் மகனாகக் கருதுவோர்

உணர்வினால் ஒத்த வெவ்வேறு உடல்கள் நண்பர்களாவர். உடன்பிறந்தவர்களிடம் இல்லாத கருத்து ஒற்றுமை நண்பர்களிடம் காணப்படுவது விந்தையான ஒன்றாகும். அதனால் தான் உன்னதமான நண்பர்கள் உறவிலும் மேலாகக் கருதப்படுகின்றனர். ஆபுத்திரனைத் தேடி விரைந்த இளஞ்சாத்தனிடம் அவனுடைய நண்பர்கள் ‘‘என் மகனென்ற சொல்லை இனியும் கூறல் வேண்டாம். நம் மகனென்று சொல்ல நமக்கு உறவில்லை கொல்லோ. அம்மகன் தேடிச் செல்வோம். அவன் காணின் கூட்டி மீள்வோம். இம்முறை மாறுமாயின் எங்கு நீ அங்கு இருப்போம்”[174] இங்ஙனம் கூறுவதிலிருந்து ஆபுத்திரனைத் தம் மகனாகக் கருதுகின்றனர் என்பதை அறியலாம்.

## உயிரையும் கொடுக்கும் உத்தமர்கள்

அன்பானவர்களுக்காக உயிரையும் கொடுப்பது இன்பமாகும். ஆனால் அவர்களுடைய உயிரை அதன் மூலம் காக்க முடியுமாயின் அது இன்பமான ஒன்றாகக் கருதப்படும். இது ஒரு நிலை என்றால் அவர்களின் பிரிவைத் தாங்க இயலாமல் அவர்களுடனே உயிரைத் துறப்பது மிக உன்னத நிலையாகும். இத்தகைய தன்மை வாய்ந்த நண்பர்களாக செட்டியார் எண்மரும் காட்சி தருகின்றனர். மைந்தனின் பிரிவைத் தாங்க முடியாத இளஞ்சாத்தன் வடக்கிலிருந்து உயிர்துறக்க முடிவெடுக்கின்றான். அப்பொழுது செட்டியார் எண்மரும் ‘‘சாவகக் கரையில் தொடங்கிய நந்தம் நட்புச் சாவினும் தொடர்கவென்று வாய்மொழி பேசானாக நண்பர் அவனை மடக்கினர். தண்ணளியுடைய நல்லாள் தடுத்தனள். அதனைக் கேளாராகி எண்மரும் சூழ்ந்திருக்க இளஞ்சாத்தன் நடுவிருக்க உண்ணுதல் ஒழிந்தாராகி நோன்பினில் ஊன்றி நின்றார்”[175] இத்தகைய செயலில் ஈடுபட்டனர். இதன் மூலம் நட்பிற்காக உயிரையும் கொடுக்கும் உத்தமர்களை அறிய முடிகிறது.

# தொகுப்புரை

- கதை மாந்தர் படைப்பு என்பது இலக்கியத்தின் உயிர்நாடி போன்றதாகும்.
- கதை மாந்தர்களின் தோற்றம், வளர்ச்சி, போராட்டம், வீழ்ச்சி அல்லது வெற்றி இவையே காப்பியமாக உருக்கொள்கின்றன.
- கதை மாந்தர்களை எப்படி அமைப்பது என்பதிலும் எப்படி வெளிப்படுத்துவது என்பதிலும்தான் காப்பியப் புலவனின் வெற்றி அமைந்துள்ளது.
- பாவலர்மணி அவர்களின் கதை மாந்தர்கள் அனைவரும் நேர்த்தியாகவும் அழகாகவும் படைக்கப்பட்டுள்ளனர்.
- 'காரல் மார்க்சு' காப்பியத்தில் காரல் மார்க்சு, சென்னி ஆகிய தலைமைக் கதை மாந்தர்களும், அர்னால்டு ரூசு என்ற எதிர்த் தலைமைக் கதை மாந்தரும் என்ரிகு, என்ரிட்டே, பிரடெரிக் எங்கெல்சு, வெட்பாலன், இலாசலே, எலன்டெமூது, எட்கார், பிரான்சிக்கா, தார்வின் போன்ற துணைக் கதை மாந்தர்களும் எனப் பன்னிருவர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.
- 'அனிச்ச அடி' காப்பியத்தில் அருளாழி, அனிச்ச அடி போன்ற தலைமைக் கதை மாந்தர்களும் மிஞிலி, நன்னன், வேங்கைமுகன், கோட்புலி போன்ற எதிர்த் தலைமைக் கதை மாந்தர்களும், சுரும்பார் குழலி, ஆய் எயினன், அணிவளை, மோசிகீரனார், கணியன் கீரன், நார்முடிச் சேரல், செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், பரணர், ஒற்றர் தலைவன் போன்ற துணைக் கதை மாந்தர்கள் எனப் பதினாறு பேர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.
- 'அன்னி மகள்' காப்பியத்தில் திதியன், அன்னி மிஞிலி ஆகிய தலைமைக் கதை மாந்தர்களும் அகுதை, சினவாழி, கதக்கண்ணன் ஆகிய எதிர்த் தலைமைக் கதை மாந்தர்களும் வேள் எவ்வி, அன்னி, தத்தன், கீரன், மாதரி, ஏலங்குழலி, வெள்ளெருக்கிலையார், குடவாயிற் கீரத்தனார், இளஞ்சேட் சென்னி போன்ற துணைக் கதை மாந்தர்களும் எனப் பதினான்கு பேர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.
- 'சாலி மைந்தன்' காப்பியத்தில் ஆபுத்திரன் என்ற தலைமைக் கதை மாந்தரும், அபஞ்சிகன், அதமயன், உவசரன், இந்திரன், மூலகன் ஆகிய எதிர்த் தலைமைக் கதை மாந்தர்களும், சாலி, இளஞ்சாத்தன், இளம்பூதி,

அஞ்சனை, துறவி, தீவதிலகை, செட்டியார் எண்மர் போன்ற துணைக் கதை மாந்தர்களும் என இருபது கதை மாந்தர்கள் படைக்கப்பட்டுள்ளனர்.

- பாவலர்மணி அவர்கள் தம் காப்பியங்களில் புறவருணனைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கவில்லை. பத்துக் கதைமாந்தர்களுக்கு மட்டுமே புற வருணனை இடம்பெற்றுள்ளது.
- தலைமைக் கதை மாந்தர்களின் மீது ஈர்ப்பும் எதிர்த் தலைமைக் கதை மாந்தர்களின் மீது எதிர்ப்பும் தோன்றக் கூடிய வகையில் கதை மாந்தர்கள் படைக்கப்பட்டுள்ளனர்.
- அன்பு, வீரம், தியாகம், காதல், நட்பு, வாழ்வியற் சிந்தனை, வாழும் கலை, சிறியன சிந்தியாத தன்மை முதலான எண்ணற்ற நற்பண்புகளுடன் தலைமைக் கதை மாந்தர்கள் அமைந்துள்ளனர்.
- கொடூரத்தையும் வக்கிரத்தையும் வெளிப்படுத்துவதாக எதிர்த் தலைமைக் கதை மாந்தர்கள் அமைந்துள்ளனர்.
- துணைக் கதை மாந்தர்கள் அனைவரும் அவர்கள் உருவாக்கப்பட்டதன் நோக்கத்தை முழுமையாக நிறைவு செய்கின்றனர்.
- துணைக் கதை மாந்தர்கள் பல இடங்களில் தலைமைக் கதை மாந்தர்களுக்கு இணையாகப் படைக்கப்பட்டுள்ளனர்.
- கதை மாந்தர்கள் அனைவரும் முன்னுக்குப் பின் முரணின்றிப் படைக்கப்பட்டுள்ளனர்.
- கதை மாந்தர்களின் செயலும் பேச்சும் அவர்களின் இயல்புக்கு ஏற்றதாகவும் நம்பத் தகுந்ததாகவும் அமைந்துள்ளன.
- அனிச்ச அடி, அன்னி மிஞிலி, சாலி போன்ற பெண் கதை மாந்தர்கள் புரட்சிகரமாகப் படைக்கப்பட்டுள்ளனர்.
- கதை மாந்தர்கள் வாழ்க்கையில் நாம் அன்றாடம் பார்க்கும் மனிதர்களின் பிரதிபலிப்பாகவும் கதை வளர்ச்சிக்கு உதவுபவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர்.

# இயல்-2
## சான்றெண் விளக்கம்

1. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், பக்.273-274.
2. மேலது.ப.274.
3. எஸ்.வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள் தொகுதி.1, பக்.78-79.
4. பாவலர்மணி ஆ.பழநி, சிலப்பதிகாரக் காப்பியக் கட்டமைப்பு,பக்.132-133.
5. கொ.இலட்சுமணசாமி,சிலப்பதிகாரம்-மணிமேகலை காப்பிய மரபு, பக்.193-194.
6. பாவலர்மணி ஆ. பழநி, சிலப்பதிகாரக் காப்பியக் கட்டமைப்பு, ப.133.
7. க.மீனாட்சி சுந்தரம், சிலம்பில் துணைப் பாத்திரங்கள்,ப.6.
8. ந.நன்மாறன், மார்க்ஸ் வாழ்க்கை வரலாறு,ப.3.
9. வெ.சாமிநாதசர்மா, காரல் மார்க்ஸ், பக். 102-103.
10. கார.மார்.கா,பா:234:2-3.
11. மேலது,பா:279:2-3.
12. வெ.சாமிநாத சர்மா, காரல் மார்க்ஸ், பக்.103-104.
13. திருக்.,51.
14. கார.மார்.கா.பா:313.
15. மேலது,பா:314.
16. மேலது,பா:316.
17. அனி.அடி.,அ.5,க.1,1-10.
18. அனி.அடி.,அ.5,க.2,103-109.
19. மேலது,அ.5,க.4,75-86.
20. வ.சுப.மாணிக்கம், எந்தச் சிலம்பு,ப.59.
21. அனி.அடி.,அ.5,க.5,89-90.
22. மேலது,97-101.
23. மேலது,அ.4,க.2,27-35.
24. மேலது,அ.2,க.4,205-208.
25. மேலது,அ.3,க.2,29-33.
26. மேலது,130-137.
27. மேலது,அ.4,க.3,174-177.
28. மேலது,அ.5,க.1,124-129.
29. மேலது,அ.5,க.2,110-116.
30. மேலது,அ.5,க.5,62-67.
31. அன்.மக.,அ.1,க.4,200-203.
32. மேலது,அ.2,க.3,142-148.
33. மேலது,அ.2,க.4,118-125.

34. மு.வரதராசன்,கண்ணகி,ப.49.
35. அன்.மக.,அ.2,க.5,137-142.
36. மேலது,அ.5,க.2,88-95.
37. மேலது,அ.5,க.3,61-64.
38. மேலது,அ.1,க.1,206-213.
39. மேலது,அ.3,க.4,60-67.
40. ம.பொ.சிவஞானம், சிலப்பதிகாரமும் தமிழரும், பக்.12-13.
41. அன்.மக.,அ.3,க.4,88-98.
42. மேலது,அ.4.க.2,1-14.
43. மேலது,அ.5,க.3,27-36.
44. சாலி.மைந்.,காண்.2,பட.5,பா:30.
45. மேலது,காண்.2,பட.6,பா:40.
46. மேலது,காண்.3,பட.1,பா:11.
47. மேலது,பா:23,24.
48. மேலது,காண்.3,பட.3.பா.23:3-4.
49. மேலது,காண்.3,பட.4,127-132.
50. மேலது,காண்.3,பட.9,பா.22:3-4.
51. மேலது,காண்.4,பட.5,பா.44.
52. மேலது,பா:33.
53. செ.இரஞ்சனா,கம்பராமாயணத்தில் எதிர்நிலை மாந்தர்கள்,ப.1.
54. ம.ரா.போ.குருசாமி, முதற் காப்பியச் சிந்தனை, ப.21.
55. கார.மார்.கா,பா:274.
56. ந.நன்மாறன்,மார்க்ஸ் வாழ்க்கை வரலாறு,ப.41.
57. கார.மார்.கா,பா:98.
58. அனி,அடி.,அ.1,க.4,86-100.
59. மேலது,அ.3,க.3,83-88.
60. மேலது,அ.1,க.4,212-221.
61. மேலது,அ.3,க.3,42-54.
62. மேலது,அ.1,க.3,59-62.
63. மேலது,அ.3,க.1,114-123.
64. மேலது,105-108.
65. மேலது,அ.5,க.1,1-7.
66. மேலது,143-145.
67. அன்.மக.,அ.2,க.4,203-210.
68. மேலது,அ.3,க.3,116-120.
69. மேலது,150-156.
70. சாலி.மைந்.,காண்.1,பட.4,பா:28.
71. மேலது,பா:25.
72. மேலது,பா.37:1-4.

73. மேலது,காண்.1,பட.6,பா:33.
74. மேலது,காண்.2,பட.5,பா:2.
75. மேலது,கா.2,பட.4,பா.25:2-4.
76. மேலது,காண்.2,பட.5,பா:3.
77. மேலது,பா.15:1-2.
78. மேலது,காண்.2,பட.6,பா:46.
79. மேலது,காண்.3,பட.6,பா:2.
80. மேலது,பா:15-16.
81. மேலது,காண்.3,பட.7,பா:5-6.
82. மேலது,பா:15.
83. மேலது,பா:20-21.
84. மேலது,காண்.3,பட.8,பா:20:1-2.
85. மேலது,காண்.3,பட.10,பா:14.
86. மேலது,காண்.4,பட.2,பா:17.
87. மேலது,பா:21.
88. மேலது,பா.22:1-3.
89. ந.நன்மாறன்,மார்க்ஸ் வாழ்க்கை வரலாறு,ப.16.
90. மேலது,ப.16.
91. கார.மார்.கா,பா:34-35.
92. ந.நன்மாறன்,மார்க்ஸ் வாழ்க்கை வரலாறு,ப.4.
93. கார.மார்.கா,பா:327.
94. மேலது,பா:328.
95. என்.இராமகிருஷ்ணன்,தியாக தீபம் பிரடெரிக் எங்கல்ஸ்,ப.53.
96. மேலது, ப.64.
97. கார.மார்.கா,பா:330.
98. சாமிநாத சர்மா, காரல் மார்க்ஸ், ப:152.
99. கார.மார்.கா,பா:42.
100. மேலது,பா:43:1-3.
101. மேலது,பா:233.
102. ந.நன்மாறன்,மார்க்ஸ் வாழ்க்கை வரலாறு, ப.48.
103. கார.மார்.கா,பா.298:3-4.
104. வெ.சாமிநாத சர்மா, காரல் மார்க்ஸ், ப.105.
105. கார.மார்.கா,பா:293-294.
106. வெ.சாமிநாத சர்மா, காரல் மார்க்ஸ், ப. 97.
107. கார.மார்.கா,பா:275.
108. மேலது,பா:373:2-4,374.
109. அனி.அடி.,அ.1,க.5,21-32.
110. மேலது,அ.1,க.4,14-17.
111. மேலது,60-68.

112. மேலது,அ.2,க.1,22-24.
113. மேலது.135-140.
114. மேலது.அ.2,க.3,1-10.
115. மேலது,11-12.
116. மேலது,85-92.
117. மேலது,அ.2,க.4,114-122.
118. மேலது,அ.1,க.4,206-211.
119. மேலது,228-231.
120. மேலது,அ.1,க.5,137-143.
121. மேலது,அ.4,க.1,75-95.
122. மேலது,அ.2,க.1,1-4.
123. மேலது,39-42.
124. மேலது,117-122.
125. மேலது,அ.2,க.4,101-106.
126. மேலது,அ.4.க.4,29-35.
127. மேலது,அ.2,க.3,பா:28.
128. மேலது,60-64.
129. மேலது,அ.3,க.1,40-51.
130. அன்.மக.,அ.1,க.2,60-67.
131. மேலது,73-78.
132. மேலது,அ.2,க.1,1-6.
133. மேலது,அ.2,க.3,33-40.
134. மேலது,அ.2,க.2,43-49.
135. மேலது,அ.3,க.3,49-56.
136. மேலது,அ.3,க.4,68-69.
137. மேலது,அ.3,க.1,70-75.
138. மேலது,133-140.
139. மேலது,அ.3,க.2,119-124.
140. மேலது,அ.3,க.3,98-101.
141. மேலது,அ.1,க.3,29-33.
142. மேலது,அ.2,க.5,40-45.
143. மேலது,அ.3,க.4,144-147.
144. மேலது,அ.5,க.3,45-48.
145. மேலது,அ.4,க.1,87-97.
146. மேலது,அ.4,க.3,51-55.
147. சாலி.மைந்.,காண்.1,பட.3,பா:18.
148. மேலது,காண்.1,பட.4,பா:4.
149. மேலது,பா:21.
150. மேலது,பா.39:1-3.

151. மேலது,காண்.1,பட.6,பா:26.
152. மேலது,காண்.2,பட.1,பா.11:1-3.
153. மேலது,காண்.3,பட.4,85-90.
154. மேலது,காண்.3,பட.5,பா:24.
155. மேலது,காண்.4,பட.5,பா:37.
156. மேலது,காண்.1,பட.5,பா:8.
157. மேலது,காண்.3,பட.9,பா:18.
158. மேலது,காண்.4,பட.3,பா:6.
159. மேலது,காண்.4,பட.4,பா:5:1-2.
160. மேலது,காண்.4,பட.3,பா:28,29:1-1.
161. மேலது,காண்.2,பட.2,பா:2.
162. மேலது,காண்.2,பட.4,பா:21.
163. மேலது,காண்.2,பட.7,பா:7.
164. மேலது,பா:13.
165. மேலது,காண்.2,பட.2,பா.3:1-2.
166. மேலது,பா:6.
167. தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், குடிமக்கள் காப்பியம், ப.126.
168. சாலி.மைந்.,காண்.1,பட.7,பா:5.
169. மேலது,பா:29.
170. மேலது,காண்.4,பட.2,பா.18:1-2.
171. மேலது,பா:36:1-3.
172. மேலது,பா:40.
173. மேலது,காண்.4,பட.5,பா.17:2-4.
174. மேலது,காண்.4,பட.3,பா:12.
175. மேலது,பா.29:2-4,30:1-3.

# இயல்-3
# காப்பிய உத்திகள்

கவிஞன் தன்னுடைய படைப்பாற்றலின் உன்னதத்தை வெளிப்படுத்தவும் வாசகர்களைத் தனது படைப்பில் ஒன்றச் செய்யவும் பயன்படுத்தும் ஒப்பற்ற சக்தி உத்தி ஆகும். கவிஞன் என்பவன் கற்பனை உலகில் மிதப்பவன். மேலும் அவன் நுட்பமாக ஒவ்வொன்றையும் உற்றுநோக்கும் திறன் வாய்ந்தவன். எந்த ஒரு சிறு பொருளும் கவிஞனின் கைவண்ணத்தில் உயிர் பெறுகின்றது. இந்த உன்னத உயிர்ப்புத் தன்மை உத்திகளால் உருப்பெறுகின்றது. உயிரோட்டமான காப்பியங்களை உத்திகளின் உதவியுடன் பாவலர்மணி அவர்கள் கருவாக்கிய பாங்கினை வெளிப்படுத்துவது இவ்வியலின் நோக்கமாகும்.

## உத்தி-வரையைறை

கவிஞன் வாசகரின் மனதைத் தூண்டில் போட்டு இழுப்பதற்குப் பயன்படும் கலையே உத்தியாகும். இத்தகைய இலக்கிய உத்திகள் குறித்து தா.ஏ.ஞானமூர்த்தி அவர்கள் “என்னுள்ளத்தில் ஒரு கருத்து தோன்றுமாயின் அக்கருத்து பிறர்க்கு உணர்த்தும் வகையில் இயல்பாகவே என்னுள் அது சொற்களின் வடிவத்தை எய்துகிறது. என்னுள் உணர்ச்சி எழுமாயின் அதை யான் பிறர்க்கு உணர்த்த விரும்பின் கருத்தைப் போலவே இயல்பாகச் சொற்களின் வடிவத்தைப் பெறுவதில்லை. அவ்வுணர்ச்சியைப் பிறர்க்கு உணர்த்துவதற்கு அதனைக் கருத்தாக மாற்றியமைக்க வேண்டும். இங்ஙனம் உணர்ச்சியைக் கருத்தாக மாற்றுவதற்குக் கவிஞன் சில உத்திகளை மேற்கொள்கின்றான். இவ்வுத்திகளே இலக்கிய வடிவங்களாக அமைகின்றன.”[1] என்று கூறுகின்றார்.

## உத்திகளின் அவசியம்

‘‘கவிதையின் நோக்கம் இன்பம் தருவதென்றும் ஒரு கவிதையை பெரிதும் சுவைப்பவர்களுடைய எண்ணிக்கையின் மிகுதியைக் கொண்டு அக்கவிதை மிகச் சிறந்ததென்று கொள்ள வேண்டும்’’[2] என்றும் லார்டு ஜெப்ரே கூறுவதாக தா.ஏ.ஞானமூர்த்தி கூறுகிறார்.

‘‘அழகு மறை பொருளாக உள்ள ஒவ்வொன்றையும் வெளிப்படுத்துகிறது; ஏனென்றால் அது எதனையும் வெளிப்படையாகத் தெரிவிப்பதில்லை’’[3] என்று வில்தே கூறுவதாக தா.ஏ.ஞானமூர்த்தி கூறுகிறார்.

கவிதையானது இனிமையாக அமைதல் வேண்டும் என்பதைக் கவிமணி அவர்கள்,

**“கன்னல் செந்தேன் முக்கனியின்**
**கலந்த இனிய சுவையோடு**
**மன்னும் கவிதை”**[4]

என்றுரைப்பர்.

“காப்பியம், மனித வாழ்வின் ஓவியக்கூடம். காப்பியக் கவிஞன் ஓவியக்கலைஞன். ஓவியம் வரைவோன் உள்ளக் கிழியில் உருவெழுதிப் பார்க்கின்றான். பின் கோடுகள் வரைந்து வண்ணங்கள் தீட்டிக் கண்கவர் ஓவியத்தைப் படைக்கின்றான். காப்பியப் புலவனும் மனத்திரையில் உருவெழுதிக் கொள்கின்றான். பின் சொற்களின் துணை கொண்டு யாப்பாக்கிக் கற்பனையும் உவமையும் கூட்டிச் சிந்தையை அள்ளும் காப்பியத்தைப் படைக்கின்றான்”[5] என்று சோம.இளவரசு கூறுகின்றார்.

இலக்கியம் தன்னைச் சுவைக்கும் வாசகனுக்கு இன்பத்தை அளிக்கும் ஒப்பற்ற பணியினை உத்தி செய்கின்றது. சலிப்பினையும் களைப்பினையும் போக்குவதும் உத்தி புரியும் அரும்பணியாகும். கவிஞர்கள் பொதுவாக சமூகத்தின் பால் அக்கறை கொண்டவர்கள். அதன் விளைவாக பல நீதிகளை வாசகர்களுக்குப் போதிக்க விரும்புவார்கள். அவர்கள் போதிக்கும் நீதி வாசகனின் உள்ளத்தில் தாக்கத்தை ஏற்படுத்த வேண்டுமானால் படைப்பாளன் மீதும் படைப்பின் மீதும் ஈடுபாடு ஏற்பட வேண்டும். அத்தகைய ஈடுபாடு தோன்ற அடித்தளமாகப் பயன்படுவதே உத்தி ஆகும். மேலும் படைப்பாளன் தன்னுடைய படைப்பாளுமையைப் பறைசாற்றும் கருவியாகவும் இது பயன்படுகின்றது. இவ்வாறு இலக்கிய இன்பத்தை நல்குவதற்கும். சலிப்பினைப் போக்குவதற்கும் உதவும் உத்தி எந்தவொரு இலக்கியப் படைப்பிற்கும் இன்றியமையாதது என்பதை நன்கு அறிய இயலும்.

## உத்திகளின் வகைப்பாடு

உணர்ச்சிகளைக் கருத்தாக மாற்றுவதற்குக் கவிஞன் கையாளும் உத்திகளின் வகைப்பாடு குறித்து தா.ஏ.ஞானமூர்த்தி அவர்கள் “குறிப்பு மொழி (Suggestion), ஒலிநயம் அல்லது இசைத்தன்மை (rhythm or musical Quality), சொற்கள் அமைப்புமுறை, கற்பனையாற்றலை மிகுவிக்கும் வண்ணம் முன்னைய

நிகழ்ச்சிகளைச் சான்று காட்டுதல் (analogy), சொற்றொடர்களை மாற்றியமைத்தல் இன்னோரன்னவைகளாகும்.''[6] என்பர்.

## குறிப்பு மொழி

"புலவர் தாம் உணர்த்த விரும்பும் ஒன்றை நேரே வெளிப்படையாக உணர்த்தாமல் மறைத்துப் புலப்படுத்துவது கலைத் திறமையாகும்"[7] என்பர் மு. வரதராசனார்.

பாட்டில் அமைந்துள்ள சொற்கள் அவற்றிற்கு நேரான பொருள்களைக் கொடுப்பதோடு மேலும் நயமான உட்பொருளைக் குறிப்பாக உணர்த்தும் தன்மை உடையதாகும். அங்ஙனம் குறிப்புப் பொருளை உணர்த்தும் வகையில் மொழியைப் பயன்படுத்துவது கவிஞன் தனது உணர்ச்சியை வெளிப்படுத்தக் கையாளும் உத்தி ஆகும். இவ்வாறு கவிஞன் தான் புனைந்த கவிதையின் மூலம் நயமான உட்பொருளைக் குறிப்பாக உணர்த்துவதே குறிப்பு மொழி எனப்படும்.

## ஒலி நயம் அல்லது இசைத்தன்மை

இலக்கிய வடிவத்தில் ஒலிநயம் ஒரு சிறந்த கூறாகும். ஒவ்வொரு இலக்கியமும் முறையான ஒலியமைப்பிலிருந்து பொருளினைத் தரக் கூடியதாகும். ஒவ்வொரு பாடலும் ஓரளவு பொருளுடையதாகவோ அல்லது உணர்ச்சித் தன்மை அமைந்ததாகவோ இருக்க வேண்டும். அசை, சீர், சந்தம் மற்றும் எதுகை, மோனை ஆகிய தொடைகளும் உணர்ச்சிக்கும் பொருளுக்கும் ஏற்ப அமைந்து அவற்றிலிருந்து பிரிக்க முடியாத தன்மையினையே ஒலிநயம் ஆகும்.

## சொற்கள் அமைப்பு முறை

ஒரு பாடலின் உணர்ச்சிக்கும், பொருளுக்கும் பொருத்தமான இலக்கியச் சொற்களைத் தக்க இடங்களில் முறையாக அமைப்பது சொற்கள் அமைப்பு முறையினுள் அடங்கும்.

## கற்பனையாற்றலை மிகுவிக்கும் வண்ணம் முன்னைய நிகழ்ச்சிகளைச் சான்று காட்டுதல்

''கற்பனைத்திறன் என்பது புதிர் நிலை வாய்ந்ததாகவும் விளக்க இயலாததாகவும் உள்ளது. அதனுடைய விளைவுகளைக் கொண்டே அத்திறனை உணர முடிகிறது''[8] என்று இரஸ்கின் கூறுவதாக தா.ஏ.ஞானமூர்த்தி கூறுகிறார். கற்பனை குறித்து க.பாலச்சந்திரன் அவர்கள், "கற்பனையாவது கவிஞன் தான் உணர்ந்த உணர்ச்சியையோ பெற்ற அழகின்ப அனுபவத்தையோ அல்லது கண்ட

காட்சியையோ நாமும் முழுமையாகவும் தெளிவாகவும் உணர்ந்தோ அனுபவித்தோ கண்டோ இன்புறுமாறு அமைத்துக் காட்டும் அரிய கலைத்திறனாகும்”[9] இங்ஙனம் கூறுகின்றார். கற்பனையின் அவசியம் குறித்து ம.பொ.சிவஞானம் அவர்கள், “எப்படி உடலை அலங்கரிக்க உடை அவசியமாகிறதோ, அதுபோலவே கதைக்குச் சிறப்பளிக்க கற்பனை தேவையாகிறது.”[10] இவ்வாறு கூறுகிறார். அங்ஙனம் வாசகனின் கற்பனையாற்றலை மிகுவிக்கும் வண்ணம் முன்னர் நடந்த நிகழ்வுகளைச் சான்று காட்டுதலை இது குறிக்கும்.

## சொற்றொடர் இடமாற்றம்

எழுவாய், பெயரெச்சம், வினையெச்சம் முதலிய அடைச்சொற்கள் செயப்படுபொருள், பயனிலை போன்றவை முறையாக முற்றுத் தொடரில் அமைவதே மொழி மரபு. இம்மொழி மரபுக்கு முரணாக இலக்கியத்தில் சில இடங்களில் சொற்கள் மாறி அமைவது இலக்கிய வடிவ வகைகளுள் ஒன்றாகும். இச்சொற்றொடர் இடமாற்றம் இலக்கியப் படைப்பாளனின் உணர்ச்சியினை ஒட்டி சிறப்புப் பெறுவதாகும்.

இவை தவிர கனவு, முடங்கல், கிளைக் கதைகள், பின்னே நிகழப்போகும் செயல்களை முன்னே அமைத்துக் காட்டுதல், முன்னே நிகழ்ந்த நிகழ்ச்சியினைப் பின்னே சுட்டுதல், நிமித்தம் பார்த்தல் போன்றவையும் காப்பிய உத்திகளில் அடங்கும். இவைகள் அனைத்தும் வாசகனுக்கு அடுத்து நிகழ்வதை அறியும் ஆர்வத்தினையும், விரைவாக படிக்கும் ஆர்வத்தினையும் ஏற்படுத்தும். இந்த உத்திகள் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களை அணி செய்துள்ள பாங்கு பின்வருமாறு.

## குறிப்பு மொழி

இலக்கியங்களில் அமைக்கப்படும் சொற்களுக்கு தனிப்பட்ட ஆற்றல் உண்டு. இதயங்களைப் பிணிக்கும் வல்லமை என்பது இதன் மூலம் இயல்பாகவே ஏற்படக் கூடிய ஒன்று. இந்த ஆற்றலை ஏற்படுத்துவதில் குறிப்பு மொழிக்கு அரும்பங்குண்டு. உவமை, உருவகம், உள்ளுறை உவமம், குறிப்பு, உவமப் போலி, இறைச்சி போன்றவை இதில் அடங்கும்.

### உவமை

கவிஞன் கண்ட காட்சியினை வாசகன் அவனது கற்பனை எல்லைக்குள் மிக நெருங்கிச் சென்று உள்ளபடி கண்டு கொள்ளத் துணை செய்வதாகும். உவமையானது பாட்டிற்குப் புத்துயிரும், புதுமெருகும் அளித்துப் பயில்வோரை

இன்புறச் செய்வதாகும். சு.பாலச் சந்திரன் என்பார் உவமையின் சிறப்பினை ‘‘வைகறைப் போதில் தெளிவாகத் கிடந்த காட்சிகளை விளக்கமுறக் காட்டும் கதிரவன் ஒளியைப் போல், வண்ணம் சற்றே மறைந்திருக்கும் ஓர் ஓவியத்தை மீண்டும் பளிச்சிடத் தீட்டிப் பாங்குறக் காட்டும் ஓவியக் கலைஞன் ஒருவனைப்போல், உவமை அணியானது நமக்கு ஓரளவு புலனாகாமல் இருப்பனவற்றை நன்கு புலப்படுத்திக் காட்ட வல்லது;’’[11] என்று கூறுகின்றார். உவமையின் சிறப்புக் குறித்து எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள், “கவிதைக்கலையின் முக்கியமான அம்சங்களுள் ஒன்று உவமை. செய்யுளின் பொருளும் வடிவும் உவமையைக் காட்டிலும் மிக முக்கியமே. ஆனால் அப்பொருளைப் புஷ்டிபெறச் செய்து நிரப்புவதும், அதனைச் சுவைத்து அனுபவித்தற்குத் தகுதியாக்குவதும் உவமையாகவே உள்ளது.”[12] என்று கூறுகிறார். காரல் மார்க்சு காப்பியத்தில் 7 இடங்களிலும் அனிச்ச அடி காப்பியத்தில் 12 இடங்களிலும் அன்னி மகள் காப்பியத்தில் 6 இடங்களிலும் சாலிமைந்தன் காப்பியத்தில் 35 இடங்களிலும் என 60 இடங்களில் உவமைகள் கையாளப்பட்டுள்ளன.

## மலரும் மழலைகளும்

குழந்தைகள் என்பவர்கள் ஆண்டவன் தோட்டத்தில் பூத்த அரும் மலர்கள். இன்ப ஊற்றினை நல்குபவர்கள். வீட்டிற்கு அழகு சேர்ப்பவர்கள். அத்தகைய குழந்தைகளை வறுமைக்கு இரையாக்கித் தவித்த காரலின் அவலநிலையை உவமை கொண்டு பாங்குறச் சமைக்கின்றார் பாவலர்மணி அவர்கள். இதனைப் பாயிரத்தில் ‘‘சிரித்து நின்று மணம் பரப்பும் மலர் போல பெற்ற மக்களைக் கொடுரநோய் வந்து பிணம் செய்ய இழந்த போது எப்படிப் பேதுற்றானா?’’[13] என்று கூறுவதன் மூலம் இதனை அறியலாம்.

## தூசுறை ஓவியமும் மக்களும்

சுரண்டல் நிறைந்த பூமியில் வாழ்ந்திடும் மக்கள் அவலத்தில் உச்சத்தில் இருப்பர். அவர்களின் துயரம் என்பது ஈடு சொல்ல முடியாத ஒன்று. காரல் மார்க்சு பிறந்த பூமியில் வாழும் மக்கள் வர்க்க பேதத்தினால் வருத்தியிருக்கும் நிலையை ‘‘தூசு உறைகின்ற ஓவியம் போல துலங்கொளி குன்ற வாழ்வார்’’[14] என்னும் உவமையின் மூலம் விளக்குவர்.

## கருமணல் வீழ்ந்த உழுந்தும் செருமனி வாழ்வும்

நல்லது செய்தல் என்பது எளிது. தீயவர்களைக் கடந்து நல்லது செய்தல் கடினமான ஒன்றாகும். துரோகமும் வஞ்சகமும் சுரண்டலும் நிறைந்தவர்களைக் கடந்து மக்களுக்கு நண்மை செய்ய முனைவது எத்தகைய அரிதான செயல் என்பதைப் பாவலர்மணி அவர்கள் ‘‘செருமனிக்குள்ளே வாழ்ந்திடுதல் என்பதும் நற்பணி பற்பல செய்வதும் கருமணற் குவியலில் வீழ்ந்த உழுந்தினைக் கண்டெடுத்திடல் போன்ற தாமென ஒருமனத்தாராக ஆன நம் நட்பினர் உடனிருந்தவர் தம்மோடும் ஆய்ந்தனன்;’’[15] இவ்வாறு அழகான உவமையின் மூலம் சிறப்பாக இயம்புகின்றார்.

## கண்ணிமைக்குள் சிறுதுரும்பும் குழந்தையின் வரவும்

உலகத்தில் பிறந்த ஒவ்வொரு மனிதனையும் முழுமையடையச் செய்வது அவனது முதல் குழந்தையே ஆகும். முதல் குழந்தையை ஈன்றெடுக்கும் தருணம் அவனை இன்பத்தின் எல்லைக்குக் கொண்டு செல்லும் உன்னத மணித்துளிகள் ஆகும். அத்தகைய பொன்னிகர் தருணம் கூட காரல் மார்க்சுக்கு இன்பத்தினை முழுமையாகத் தரவில்லை என்பதைப் பாவலர்மணி அவர்கள் ‘‘பெண்மகளா இல்லையில்லை, பேசரிய சித்திரம் பூம்பொன் மகளே என்று மனம் பூரித்து நின்றாலும் மண்ணுலகில் மேலுமொரு சுமை வந்து வாய்த்தது என்னும் கண்ணிமைக்குள் சிறுதுரும்பு கரிப்பது போல் நினைவெழுமால்’’[16] என்று உணர்த்துகின்றார்.

## குரங்கு கைப் பூமாலை

நாட்டின் ஆள்பவரைக் கொண்டே அந்நாடானது உன்னத நிலையினை அடையும். செல்வந்தர்களின் கைப்பாவையாக ஒரு அரசானது செயல்படுமேயானால் பெரும்பான்மையாக உள்ள எண்ணற்ற உழைப்பாளிகளின் நிலையானது கீழான நிலையினை எய்தும். முதலாளிகள் என்னும் முதலைகளின் வெறியாட்டத்திற்கு இரையிடும் ஆட்சியர் கையில் நாடானது பாழ்படும் நிலையைப் பாவலர்மணி அவர்கள் ‘‘பாரிசு நகரமெங்கும் நெருக்கடி நிலைமைப்பாட்டினைப் பேரிகை முழக்கி ஆட்சியானது பேசிற்று; மக்கள் தொண்டில் சீரியர் வாழ்க்கையெல்லாம் சிதைவுற, அதிகாரத்துக் கீழோர் கையில் நாடானது குரங்கின் கைப் பூப்போல் ஆக’’[17] இருந்தது என்று முதலாளிகளுக்குக் குரங்கும் மக்களுக்குப் பூமாலையும் உவமையாக்கப்பட்டுள்ளது.

## வாள்வெட்டிச் சாய்த்த அரசின் ஆணை

காரல் மார்க்சு காப்பியத்தில் உவமைகள் பொதுவாக மார்க்சு அடைந்த துன்பங்களுக்கும், துயரங்களுக்கும் சான்று பகர்வதாகவே அமைகின்றன. எண்ணற்ற துன்பங்களும், வறுமையின் கோரத் தீயும் மார்க்சின் வாழ்வில் தாண்டவம் ஆடுகின்றது. அத்தகைய அவல நிலையிலும் அரும் மனிதன் குழந்தைகளின் மூலம் தனது துயரினை மறக்கின்றார். பாரிசு நாட்டில் இருந்து இன்னுமோர் நாளைக்குள் இருந்து நீங்க வேண்டும் என்ற அரசின் ஆணை காரல் மார்க்சினை வருத்திய கொடுமையினை ''தேள்கொட்டத் துடிதுடித்துச் செயலறியாத நேரம் வாள்வெட்டிச் சாய்த்தல் போல வந்ததோர் அரசின் ஆணை''[18] என்றுரைப்பர்.

## ஏரலின் கீறலும் காரலின் கையெழுத்தும்

நயமான உவமை என்பது தெளிவாகத் தெரியாதவற்றை நன்கு தெளிவுபடுத்துக் காட்டவும், தெரிந்தவற்றைப் பயில்பவர்களுக்கு இன்பம் பயக்கும் வண்ணம் மேலும் அழகுறக் காட்டவும் பயன்படுவதாகும். இதனை இளம்பூரணர் அவர்கள்,

> **''இதனாற்பயன் என்னை மதிப்பதோ எனின்**
> **புலனல்லாதன புலனாதலும் அலங்காரமாகிக்**
> **கேட்டார்க்கு இன்பம் பயத்தலும்''[19]**

என்று கூறுகின்றார். இவ்வாறு சுவைப்பவனுக்கு இன்பம் தரும் வகையில் பாவலர்மணி அவர்கள் காரல் மார்க்சின் கையெழுத்தை உவமையின் மூலம் வருணிப்பதை ''நத்தை ஊர்ந்து செல்லும் போது தரையில் தோன்றும் கீரலைப் போல விளங்குதற்கு இயலாதது ஆன காரலின் எழுத்தைக் கண்டு கட்டுரை படி எடுத்தல்''[20] என்று சென்னியின் பணிகளில் ஒன்றை வகைப்படுத்துவதன் வழி விளக்குவர்.

இவ்வாறு காரல் மார்க்சு காப்பியத்தில் மார்க்சின் வலிகளை வடிக்கும் உளியாக உவமைகள் கையாளப்பட்டுள.

## பரிதியும் மறையும் பகையும்

வாழ்வியல் விழுமங்கள் என்பது அனைவருக்கும் இன்றியமையாத ஒன்று. எத்தகைய பகையினையும் காலம் என்னும் மருத்துவனால் மாற்றுகின்ற வல்லமை என்பது அத்தகைய விழுமியத்தில் உயர்ந்ததாகும். மகட்கொடை மறுத்ததினால் ஏற்பட்ட மிஞிலியின் பகையுணர்வு தீர வேண்டும் என்ற ஆவலை அணிவளை ''கண்ணறியாத வண்ணம் குளத்தின் நீரை விண்ணெறிப் பரிதியானது விழுங்குதல்

போல கழியருள் மருத்துவன் மிகுதியான துன்பத்தில் சலிப்புறாத வண்ணம் மறதி என்றொரு மருந்தினை நமக்கு அருள் உறவரும் துயரினை ஒழித்ததால் உய்ந்தனம்!”[21] என்று கூறுகின்றாள். காலம் அனைத்தையும் மாற்றும் வல்லமை படைத்தது என்ற உளவியலின் மூலம் உவமையைப் பாவலர்மணி அவர்கள் அழகாகக் கையாண்டுள்ளார்.

## வித்தியாசமான சிந்தனையை வெளிப்படுத்தும் உவமை

மற்றவர்களில் இருந்து மாறுபட்டுச் சிந்திப்பவனே படைப்பாளி. சாதாரண நிகழ்வினையும் அன்றாட நிகழ்வினையும் அழகுற கவிதையில் படைக்கும் பாங்கே அவர்களை உன்னத நிலைக்கு அழைத்துச் செல்கின்றது. வெள்ளணி விழாவினைக் கண்டு இரசிக்கும் அருளாழி “கடலின் திரையும், காற்றினால் அரங்கில் மோதும் திரையும் ஒத்தெழுந்து அசைதல் இரு பேரரங்குகள் எதிரெதிர் வாய்த்தது போல் வருவோரை மருட்டும்”[22] என்பர். இதில் சாதாரண நிகழ்வும் மனத்திரையில் காட்சியாக விரிவதை உணர முடிகிறது. இதே போல் பாரதிதாசன் அவர்கள் தாம் கண்ட தாமரை மலரின் அழகினை,

**“விரிக்கின்ற பச்சைப் பட்டை**
**மேனிபோர்த் துக்கிடந்து**
**வரிக்கின்ற பெண்கள் வான**
**வீதியைப் பார்த்துப் பார்த்துச்**
**சிரிக்கின்ற இதழ்க்கூட்டத்தால்**
**மாணிக்கம் சிதறு தல்போல்**
**இருக்கும் அப் பச்சி லைமேல்**
**அரும்புகள் இதழ்லி ரிக்கும்”[23]**

என்றுரைப்பர். இவ்வாறு பச்சை இலைகள் மீது தாமரை இதழ்விரித்து மலர்ந்திருக்கும் காட்சியினைப் பச்சைப் போர்வையினைப் போர்த்தியிருக்க பெண்கள் வானத்தை நோக்கிச் சிரிப்பதனால் அவர்களின் இதழ்களிலிருந்து மாணிக்கங்கள் சிதறுதல் போல் இருப்பதாகக் கூறுகின்றார்.

## தலைவியின் நிலையைப் பாங்குற எடுத்துரைத்தல்

நன்னனின் வெள்ளணி விழா நிகழ்வின் ஒருபகுதியாகப் பாடினியின் நிகழ்ச்சியில் கடற்கரையில் அரங்கேறுகின்றது. அப்பொழுது இற்செறிக்கப்பட்ட தலைவியின் அவல நிலையைப் பாடினி “முன்னால் நுழைந்த திருடனின் கையில் வலிமையான தேள் கொட்ட தன்னின் பின்னுள்ளான் தனக்கும் கூடப் பேசிட முடியாததைப் போல் என்னுடன் உறைவாள் எனினும் என்னுயிர் போன்ற தோழி

தன்னுடன் பேசித் துன்பம் தவிர்க்க வகையில்லாமல் உள்ளேன்."[24] என உரைக்கின்றாள். இதில் பாவலர்மணி அவர்கள் தலைவியின் அவல நிலையையும் தோழியோடு அவளுக்குள்ள உறவு நிலையினையும் உவமையின் வழி விளக்குகிறார்.

## உளவியலின் வழி உவமை

ஒரு குழந்தையின் பார்வையில் மிக மிக அழகானவள் அன்னை. அத்தகைய அன்னையே அக்குழந்தை எப்பொழுதும் நாடும் உன்னத மனித வடிவம். கருவில் இருக்கும் பொழுதே தன்னை நேசித்தவள் என்பதால் அக்குழந்தைக்கு அவளின் மீது ஏற்படும் ஈடுபாடு இயல்பானதாகும். தன்னுடைய தாயை அங்கும் இங்கும் தேடி அலையும் குழந்தையானது அன்னையைக் கண்டவுடன் அவளிடம் குழைவது என்பது உளவியல். இதனை இயற்கை எழிலோடு பொருத்தி நவிலும் பாங்கானது இனிமையானது. மலையில் நிலைபெற்ற கருமுகில் கூட்டத்தினைப் பாவலர்மணி அவர்கள் "அங்கும் இங்கும் அலைந்த குழந்தை எங்கும் தேடி இறுதியில் அன்னையின் தோளில் கிடந்து துவளுதல் போல காற்று மோத அலைந்த கருமுகிற் கூட்டமானது மலையின் தோளில் நிலைபெற்று உறங்கும் அழகைக் காண இக்கண்கள் போதுமா?"[25] என்று நீராட வந்த பெண்களின் கூற்றாக எடுத்துரைக்கின்றார்.

## உள்ளத் தடுமாற்றத்தினை உரைக்கும் உவமை

மனப்போராட்டம் என்பது மனிதனோடு பிறந்த ஒன்று. ஒவ்வொரு மனிதருக்கும் ஒவ்வொரு சூழ்நிலையிலும் எந்தச் செயலில் தன்னைச் செலுத்துவது என்ற குழப்பத்தின் விளைவால் மனப்போராட்டம் பிறந்து கொண்டே இருக்கும். மிதந்து வந்த மாங்காயைக் கையில் எடுத்து குழலியின் உள்ளத் தடுமாற்றத்தை பாவலர்மணி அவர்கள் சீரிய உவமையின் மூலம் சொல்லோவியமாக வடிக்கின்றார். இதனை "கிணற்றினுள் விழுந்த குழந்தையை எடுப்பதா? கொல்லெரி சூழ்ந்த மழலையை எடுப்பதா? என மயங்கும் ஓர் தாய்போல் வயவுறும் ஆவல் ஒருபால். மன்னவன் ஆணை செய்யாதே எனத் தடுத்துச் சீறுவது ஒருபால்"[26] என்ற பாடலின் மூலம் அறிய இயலும்.

## உலக இயல்பு நவிலும் உவமை

உலக இயல்புகளைத் தனது படைப்பில் இணைப்பது படைப்பின் வலிமையை மேலும் கூட்டுவதாகும். கள்வர்கள் தனது களவுப் பொருளுடன் அகப்பட்டுக் கொண்டால் தலைகுனிவான செயலின் காரணமாக அவர்களின் தலை

நிமிராது என்பது உலக இயற்கை. இந்த உலக இயல்பினை தக்க உவமையின் மூலம் பாவலர்மணி அவர்கள் பாங்குற வடிக்கின்றார். குழலி நன்னனின் அவையில் நிறுத்தப்பட்ட பொழுது மிஞிலி ‘‘கையோடு அகப்பட்டுக் கொண்ட கள்வன் கவிழ்ந்து நெய்யோடு பட்ட நிமிராத திரிபோல் இருப்பது தானே உலகத்து இயற்கை’’[27] என்று உரைப்பதிலிருந்து அறியலாம்.

## மூத்த காளையை இகழும் உழவனும் நார்முடிச் சேரலும்

முதுமையின் காரணமாகத் தாழ்வு மனப்பான்மை பிறப்பது இயல்பு. உள்ளத்தோடு உடல் ஒன்றாத பான்மையினால் விளையும் மன உளைச்சல் இதற்குக் காரணமாக அமையும். இதனைப் பொருத்தமான உவமையின் மூலம் பாவலர்மணி அவர்கள் பாங்குற வடிக்கின்றார். எயினனுக்கு ஓய்வு தேவை என்பதால் படைத் தலைமையினை நார்முடிச்சேரல் அளிக்காமலிருக்க அதற்கு எயினன் ‘‘போர்ச் செயலுக்கு என்னையோர் பொருளெனக் கொள்ளாத ஒருவினையால் உன் உள்ளத்தில் மகிழ்வில்லை; மூத்த காளையானது வலிமை கொண்டு செய்யும் செயலுக்கு ஏற்றதன்று என இகழும் உழவன் போல் ஆண்டில் முதிர்ந்துள்ளான், ஆதலின் போருக்கு இவன் வேண்டியதில்லையென வெறுத்தனை கொல்லோ?’’[28] இங்ஙனம் உரைப்பதிலிருந்து இதனை அறிய இயலும்.

## அடுக்கடுக்கான உவமைகளும் கவிநுட்பமும்

ஒரு இயற்கையை படிப்பவர் வியக்கும் வண்ணம் படைக்கும் ஆற்றல் கவிஞனுக்கு மட்டுமே வாய்ப்பதாகும். இயற்கையோடு ஒன்றி அதனை நுட்பமாகக் கவனிக்கும் கவிஞனுக்கே அக்கலை கைவரப் பெற்ற ஒன்றாகும். கணியன் கீரன் ஆற்றை நோக்கி ‘‘சிறுமியைப் போல குன்றிலிருந்து குதிக்கின்றாய். மங்கையைப் போல கூடுகின்ற சமவெளியில் மடுக்கள் தோறும் நின்று நின்று நடக்கின்றாய். தாயைப் போல நிலத்தில் வளரும் உயிர்க்குலத்தை வாழ வைக்கச் சென்று சென்று வேண்டும் உணவினையூட்டிச் செல்லும் சிறப்பையும் நீ பெற்றாய். எங்களுக்கோர் இறைவனைப் போல சென்று அழித்தல், சேர்ந்தாரைக் காத்தல் என்ற செயல் செய்தாய்’’[29] இங்ஙனம் பாடுகின்றார். இதில் பாவலர்மணி அவர்கள் கவி நுட்பத்தினை நன்கு அறியலாம்.

## உருவத்திற்குப் பொருத்தமான உவமை

ஒத்த பொருளால் உவமிக்கப்படுவதே உவமையின் அடிப்படைப் பண்பாகும். யானையின் மூலம் மாந்தோப்பானது அழிக்கப்படும் நிகழ்வில் கணியன் கீரன் ‘‘மலைகள் எழுந்து மற்போர் இடலென கொலைத் தொழிலில் வல்லமை

பொருந்திய களிறுகள் துதிக்கையினைக் கோர்த்து மண்ணிடைப் புரளலும், மத்தகம் மிதித்தலும் விண்ணிடைத் தேவரின் விழியும் காணாதது''[30] இவ்வாறு உரைப்பதிலிருந்து இதனை அறியலாம்.

## பணியாரமும் இனிப்பான செய்தியும்

தீமை அழியும் பொழுது எல்லையற்ற ஆனந்தம் அனைவருக்கும் தோன்றும். எந்த ஒரு பொருளின் மீதும் எல்லையற்ற ஆசை கொள்ளக் கூடாது. பொருளின் மீது கொள்ளும் நேசமானது வாழ்க்கைப் பொருளின் மீதுள்ள ஈடுபாட்டைக் குறைக்கும். நன்னன் எண்ணற்ற தீய செயல்களைப் புரிந்ததற்கு அடித்தளமாக இருந்த மாந்தோப்பின் அழிவில் மகிழ்ச்சி கொள்வதை, "ஆ ஆ! என்னுள்ளம் நினைத்தது போல நெடுமரம் வீழ்ந்தது! கிளைகள் நிலத்திடையில் வீழ்ந்தன; தழையும் பிஞ்சும் ததைந்து கூழாயின ஒடிகின்ற கிளைமரத்தின் ஒலி தரும் இன்னிசை அரிசிமாவும், தேனும் நன்கு பிசைந்து பண்ணியதாகிய பணியாரம் போல என் செவியில் நண்ணும்!"[31] இங்ஙனம் பாவலர்மணி அவர்கள் உரைப்பதிலிருந்து இதனை அறியலாம்.

## இழப்பின் அவலத்தை உரைக்கும் உவமை

இழப்பின் வலி என்பது இழந்தவர்களுக்கு மட்டும் தான் தெரியும். பொருள் இழப்பு ஈடு செய்யக் கூடிய ஒன்று. பாசத்தினால் கட்டுண்ட ஒரு மனிதன் அன்பிற்குரியவரை இழக்கும் பொழுது ஏற்படும் அவலம் வார்த்தைகளால் சொல்ல முடியாத துயரம் ஆகும். குழலியை இழந்த அணிவளையின் துயரை ''விழுதெல்லாம் அழிய வீழ்வதற்குரிய பழுதுறும் மரம் போல் துன்பம் அடைந்தேன் நான்''[32] இங்ஙனம் அழகிய உவமையின் மூலம் பாவலர்மணி அவர்கள் வடிக்கின்றார். மேலும் மனைவியை இழந்து வாடும் அருளாழியின் மனநிலையையும் ''சாம்பலால் புதைபடும் நெருப்பைப் போன்றுள்ளது என் உள்ளம்.''[33] என்று உவமிப்பர்.

## அழகுணர்வினை வெளிபடுத்தும் உவமை

அழகுணர்வு வெளிப்பாடு என்பது கவிஞனுக்கு இன்றியமையாத ஒன்றாகும். இயற்கையின் எழிலில் மனதைப் பறிகொடுத்த கவிஞன் வாசகனையும் அவ்வுணர்விற்குத் தூண்டுகின்றான். இத்தகைய கலையில் வல்லவராகப் பாவலர்மணி அவர்கள் அமைந்துள்ள பாங்கினை, ''செம்புலம் படரும் செந்நிறப் பூச்சிகள் கார்காலம் வந்தது என உணர்த்துமாம். செந்நீர்த் துளிகள் சிந்திக் கிடப்பது போல் கண்ணை இழுத்து அலைக்கும் அக்கவின்மிக்க பூச்சிகள்; அரிய

வேலைப்பாடு மிகுந்த சந்தனப் பேழையுள் நிறம் விளங்கும் மாணிக்கக் கற்கள் ஒளி உமிழ்ந்தாற் போன்று பருவயிறு உடைந்த பாகற் பழங்கள்''[34] என இயற்கை உவமிக்கப்பட்டுள்ளது.

## பழியினால் ஒழியும் புகழினை உரைக்கும் உவமை

பழிச்செயல் என்பது குலப்பெருமையினையும், புகழினையும் ஒருங்கே அழிக்கக் கூடியதாகும். பிறருக்குச் செய்யும் தீமையானது இருபுறம் தாக்கும் கூர்மையான ஆயுதமாகும். அதன் விலையும் அப்பிழையினைச் செய்தவருக்குக் குறையாது வந்து சேரும். நன்னன் செய்த கொடூரச் செயலினால் விளைந்த தீமை அவனது புகழை அழிக்கும் கருவியாகச் செயல்படுவதை ''எவ்விடம் மருங்கிலிருந்தும் ஒவ்வொருவராகக் கூடிய ஆடல் அரங்கின் கூட்டமானது நாடகம் முடிந்த அந்த நாழிகைப் பொழுதிலேயே நில்லாது ஒழியும் நிகழ்ச்சியைப் போலவும், எண்ணில்லாத் தேனீக்கள் எழில் நிறைந்த மலர்தோறும் பன்னாட்களாக எடுத்துப் பருத்த மரத்துக் கிளையிடத்து ஈட்டிய தேனடையை எடுக்கும் குறவன் கிளையோடு வெட்ட குலைவது போலவும் வழிவழியாக வளர்ந்த புகழெல்லாம் ஒழிவிலதாகி ஒழியும் நாள் வந்ததோ?''[35] என்று நயமான உவமையின் மூலம் நன்னனின் வாய்மொழியாக விளக்குகின்றார்.

இங்ஙனம் அனிச்ச அடி முழுவதிலும் உவமைகள் நிறைந்து அழகு சேர்க்கின்றன. பாவலர்மணி அவர்களின் கற்பனை நயத்தினையும், அழகுணர்வு வெளிப்பாட்டையும் வெளிப்படுத்துகின்றன. உளவியலுக்கும், உள்ளத்தில் எழும் உணர்வுகளுக்கும் பல்வேறு உவமைகளைப் பாங்குடன் கையாண்டுள்ளார். உவமை என்னும் உளி கொண்டு உன்னத சிற்பத்தைப் பாவலர்மணி அவர்கள் வடித்துள்ளார்.

## கருங்கற்பாறையும் பகையழிக்கும் திறமும்

வீரம் என்பது தமிழனின் அடையாளம் என்று கூறுவதை விடத் தமிழனுக்கே உரிய அடையாளம் என்று கூறலாம். அத்தகைய குன்றாத வீரம் பொருத்தமான உவமையின் மூலம் பளிச்சிடுகின்றது. அன்னி மகள் காப்பியத்தில் எவ்வி தன்னுடைய பகைவரை எதிர்த்து நின்ற வீரத்தின் சிறப்பினை ''வெள்ளம் திரண்டு அஞ்சுமாறு பரந்து பள்ளம் நோக்கிப் பாய்கையில் எதிர்த்துப் புனலினை விலக்கும் கருங்கற் பாறை போல் சினங்கெழு முகத்தானாகத் தெவ்வர் படையினை விலக்கியோன்''[36] என்று உவமையின் மூலம் பாங்குற வருணிக்கின்றார்.

## ஒரு வலியின் மூலம் மற்றொரு வலியினை விவரிக்கும் உவமை

அன்னிமகள் காப்பியத்தில் திதியன் வெண்காற் காரியினை அடக்குகின்ற நிகழ்வில் பாவலர்மணி அவர்கள் மிகவும் திறன் வாய்ந்த கவிஞராகப் புலப்படுகின்றார். ஒரு வலியினை விவரிக்க அதற்கு இணையான வேறு ஒன்றை உவமையாகக் கூறுகின்றார். ''ஒரு கை கொம்பினைப் பற்றியும் மறு கை எருதினை வளைத்தும் இன்னல் இழைத்திட இருபுறமும் கூரான இரும்பினால் செய்யப்பட்டு மாட்டின் கழுத்தில் இடப்படும் கழுவினால் எருது கலங்குவது போல முழு வலிமையும் இழந்து முரணும் அவிந்து நிற்பதும் காணியர்;''[37] இங்ஙனம் எருதுக்கு திதியனால் நேர்ந்த துன்பத்தை எருதுவிற்குப் பொதுவாக நேரும் துன்பத்தின் மூலம் விளக்குகின்றார்.

## சூழ்ச்சியினை விளக்கும் உவமை

சூழ்ச்சி என்பது சொல்லால் கூட யாரும் விரும்பத் தகாத ஒன்று. அத்தகைய சூழ்ச்சியினையும் எண்ணிப் பாவலர்மணி அவர்கள் வியக்க வைக்கின்றார். எவ்வியையும், திதியனையும் பிரித்து வளைக்க முயலும் சூழ்ச்சியினை "பேராறு செல்லும் வழியில் பிளவுற்று மீண்டும் சேர்கின்ற நெறி போலத் திதியனும் எவ்வியும் பிரிந்து வளைக்குமேல் ஏதம் பெரிதாகும்"[38] என்று நேர்த்தியுடன் படைப்பதால் அது வாசகர்களின் உள்ளங்களை ஈர்க்கின்றது. இத்தகைய நுட்பம் மிகவும் சிறப்பிற்குரிய ஒன்றாகும்.

## இருதுரும்பினை ஒத்த வல்லவர்கள்

பொதுவாக கதை நாயகர்களுக்கு இணையாக எதிர் தலைமைப் பாத்திரங்களையும் படைப்பது இயல்பாகும். அப்பொழுது தான் கதைத் தலைவன் மிக உயர்ந்தவனாகக் கருதப்படுவான். அதே போல் பாவலர்மணி அவர்கள் எவ்வியும், அகுதையும் போரிடும் காட்சியினைச் சீர்மை பொருந்திய உவமையின் மூலம் பாங்குற வடிக்கின்றார். இதனை ''ஏற்றையும், ஏற்றையும் எதிர் பொருதாலென எவ்வியும் அகுதையும் இருளிடையில் மின்னலென ஒளியுமிழ் வாள் இடவலம் சுழற்றிக் களமெல்லாம் சுழன்று போர்த்திறம் காட்டுதல் சுழல் வழிபடும் இரு துரும்பினை ஒக்கும்''[39] என்ற பாடலின் மூலம் அறியலாம்.

## தீயவர்களின் கனவும் சிறுகுழந்தைகளின் மணல்வீடும்

மனிதன் ஒவ்வொருவரும் எண்ணுகின்ற எண்ணம் ஈடேறும் என்பது உறுதி. ஆனால் எண்ணுகின்ற அனைத்தும் நல்லவையாக இருக்க வேண்டும். நல்லெண்ணங்களே செயல்களின் மூலம் சீரான வடிவம் பெறும். தீயவர்களின்

கனவு தீமைகளின் பிறப்பிடமாக இருப்பதால் அவை மடிந்துவிடும் என்பதை ‘‘சிறு குழந்தைகள் கட்டிய மணல் வீடெனக் கதக்கண்ணா நம் கனா கழிந்ததே அந்தோ!’’[40] என்ற பாடலின் மூலம் அறிய இயலும்.

## பொலிவினை இழந்த எயில்

எயிலுக்குச் சிறப்பு அதனை அணிசெய்யும் படைவீரர்கள் ஆவர். திதியனால் முற்றுகையிடப்பட்ட எயிலானது படைவீரர்கள் இல்லாமல் வெறிச்சோடிக் கிடப்பதை சீர்மிகுந்த உவமையின் மூலம் பாங்குடன் வருணிக்கின்றார். இதனை ‘‘இலையுதிர் கால மரமென எயில் தன் கலையிழந்து எதிரில் கண்பட நின்றது’’[41] என்ற பாடலின் மூலம் அறிய இயலும். இங்ஙனம் பொருத்தமான உவமையின் மூலம் பாவலர்மணி அவர்கள் நெகழ்வுறச் செய்கின்றார்.

## கவினுறும் கங்கையை அணிசெய்யும் உவமைகள்

காட்சியைக் கண்முன் சித்திரமாக வடிப்பதில் தான் பாவலனின் வெற்றியானது பளிச்சிடுகின்றது. கங்கையானது நிலத்தில் புரண்டு வரும் அழகினை வாசகர்களின் மனக்கண்ணில் திரையிடுவதில் பாவலர்மணி வெற்றியை அடைந்துள்ளார். சாலிமைந்தன் காப்பியத்தில் கங்கை நதியின் கம்பீர நடையழகை ‘‘அணிகள் அணிந்த மகளிர் தாம் நடந்ததெனப் போந்தனள் போந்தனள் கங்கை’’[42] என்று வருணிக்கின்றார். மேகம் முகந்த நீர் மழையாய் மாறி ஆறாய் ஓடுவது இயற்கை சுழற்சி. இந்த இயற்கை நிகழ்வானது கவிஞனின் கைவண்ணத்தில் “கொண்டதோர் வழுக்க மரத்திடை ஏறி விழுந்திடும் சிறுவர்கள் மீண்டும் முன்போல் செய்யவே விரைவர். அப்பிள்ளைப் பான்மையைக் கொண்டனள் போலும்’’[43] என்று கங்கை காட்சிப்படுத்தப்படுகின்றது. ஒரு சாதாரண நிகழ்வானது கவிஞனின் கைவண்ணத்தில் கவிதையாக உருப்பெறுகின்றது. இலைகள் ஆற்றில் விழுந்து கிடப்பதும், அதனால் நறுமணம் கமழ்ந்து கிடப்பதும் சாதாரண நிகழ்வு. இதனை ‘‘அகலிலை தொடுத்த ஆடையை அணிந்தும் ஆரமென்னும் நறுமணம் புனைந்தும் பகலென்னும் ஒளியை உமிழ்கின்ற பன்மணி பதித்த பணி பல மேனியில் அணிந்தும் அதிகமில்லாது அளவாய் நோக்குதல் போல மீன்கண்ணால் நோக்கியும் நடந்து தகவுடைக் கணவனின் மனைபுகும் பெண்ணின் தன்மையினை ஒத்து கங்கையின் வெள்ளம் விளங்குமாம்’’[44] என்று வருணிப்பர்

கங்கையின் தொடர்ச்சியான ஓட்டத்தால் நுரைகள் பெருக்கெடுத்து ஓடுவதை, ‘‘ஊர்ந்தவன் உள்ளக் குறிப்பினை அறிந்தே ஓடிய குதிரை தன் வேகம் ஆர்ந்திடும் பொழுது வாயின் புறக்கடையில் அணிநுரை தள்ளுதல் போல நேர்ந்த விண்

முகட்டில் தொடங்கிய ஓட்டம் நின்றிலதாதலால் யாண்டும் சேர்ந்திடாக் கரைவாய் நுரைத்திரள் ஒதுங்கச் செல்லுமாம் கங்கையின் வெள்ளம்''[45] என்று அழகுற வடிப்பர்.

## சாலியின் அழகு நலனை வியக்கும் உவமை

சாலி பேரழகியாகத் திகழ்பவள். எல்லையற்ற அழகு வனப்பினால் ஈர்ப்பவள். அவளது அழகைப் பாவலர்மணி அவர்கள் ‘‘காமனின் படைக் கொட்டில் போல் கதித்தெழும் உறுப்பினாளைத் தாமரை பல பூத்துள்ள தடம் போன்ற உடம்பினாளைத் தூமறை அன்றி வேறோர் சொல்லையும் கூறாத நாவினையுடையவன் மாமறை முழங்கி நிற்ப மணவினை முடித்துக் கொண்டான்''[46] என்று பாங்குற வருணிக்கின்றார்.

## விருந்தெதிர் பார்க்கும் உரவோர் போன்ற மலர்க்கொடிகள்

இயற்கை அளித்த அருங்கொடையினைப் புகழும் போது கவிஞன் குதூகலம் அடைகின்றான். இதற்கு ஏற்ப பாவலர்மணி அவர்கள் இயற்கையழகை வருணிக்கின்றார். சாதாரண நிகழ்வை வாழ்வியலோடு பொருத்தி அவன் உரைக்கும் பாங்கு வாசகனின் உள்ளத்தில் கிளர்ச்சியை ஏற்படுத்துகின்றது. வண்டுகள் மொய்க்கும் மலர்களைக் கண்டு அவனுள்ளத்தில் எழும் கிளர்ச்சிப் பெருக்கினை “வரும் விருந்தின் நலம் பேணி வழியனுப்பி மறுபடியும் ஒரு விருந்தை எதிர்நோக்கும் வள்ளன்மை உரவோர் போல் தேனருந்தி முடித்த வண்டினை முன்னனுப்பப் பின்னுமொரு கரிய நிறச் சிறையளியைக் கண்ணோக்கும் மலர்க் கொடிகள்”[47] என்று இளஞ்சாத்தனின் வாய்மொழியாக இங்ஙனம் வெளிப்படுத்துகிறார்.

## கதிரவனால் தளர்தலுற்ற இளங்கொடியும் சாலியும்

ஒரு பெண்ணின் தவற்றினை ஆராயும் சமூகம் அதன் பின்னனியை அறிவுக் கண் கொண்டு காண்பதில்லை. குற்றம் புரிந்த சாலியைத் தண்டிக்கும் சமூகம் அக்குற்றத்திற்குக் காரணமான அபஞ்சிகனைப் பழிப்பது கூட செய்யவில்லை. இளஞ்சாத்தனோடான அவளது கூடலை உணர்ந்து கொண்ட அபஞ்சிகனாலும், வேதியர்களாலும் சாலி துன்புறுத்தப்படுகின்றாள். தெற்கு நோக்கி அவள் செல்வதை “கல்லினால் பட்ட காயம்; கவலையால் இற்ற நெஞ்சம்; சொல்லினால் உற்ற துன்பம்; துரத்தலால் பெற்ற இளைப்போடு கதிரவானல் தளர்தலுற்ற இளங்கொடி போல சாலி மெல்லடி எடுத்து வைத்துப் போயினாள்”[48] இங்ஙனம் பாவலர்மணி அவர்கள் வடிகின்றார்.

## சௌமினியின் வாழ்வினைச் சித்திரிக்கும் உவமை

சாலியின் காயத்திற்கு மருந்தாக, அடுக்கடுக்கான துன்பங்களினால் அலைக்கழிக்கப்பட்ட சாலியின் சோக வாழ்வை மாற்றும் பொருட்டு சௌமினியின் வரலாறானது புனையப்படுகின்றது. கணவன் இறந்த போது அவளின் கவலை எதைப் பற்றி அமைந்தது என்பதைப் பாவலர்மணி, “கணவன் இறந்தான் என்ற கவலையினும் கலவி இனி நெருங்குதற்கு அரியதானது என்னும் அதற்கே கண்ணீருகுத்தாள்; இணரெரி போல் சுடுங்காமன் எய்த கணைக்காற்றால் கொழுப்பு எரியில் உருகுதல் போல் நெஞ்சுருகித் துயருற்றாள்”[49] என்கிறார். மேலும் தீமைகள் நிரம்பிய அவளின் வாழ்வினையும் “உரையாத பொய் இல்லை. உண்ணாத உயிர் இல்லை. கரைமோதி மீளவும் அக்கரையினையே குறிக்கோளாகக் கொண்டு திரைபோக்கும் கடல்போல அழிசெயலில் தீராதவளாய்த் தரைமீது தீமைகளின் தாதியென வாழ்ந்தாள்”[50] என்று வருணிப்பர்.

## சிறுவர் இட்ட ஓடம்

தவழ்ந்து வரும் வெள்ளத்தில் மிதந்து வரும் பொருட்கள் கவிஞரின் கற்பனையை அகழ்ந்து எடுக்கின்றது. சாலி குமரியாட வருகின்ற போது அதன் வெள்ளத்தின் அழகை, “ஓடிவரும் பெருவெள்ளம் பல வாய்க்காலாகி உருண்டு வரும்; திரண்டு வரும்; வரும் வழியின் கண் நீடுகரையில் வாழும் மரங்கள் உதிர்த்த பூக்கள் நீரின் மிசைச் சிறுவர் இட்ட ஓடம் போல ஆடிவரும்.”[51] என்று உவமிப்பர்.

## குழந்தையின் மீதான அன்பைப் புலப்படுத்தும் உவமை

ஆபுத்திரனிடம் இளம்பூதி. அஞ்சனை தம்பதியர் கொண்ட அன்பின் வெளிப்பாட்டினை “பண்ணின் முறைதேர் இசை வல்லான் யாழைப் பாதுகாப்பதென எண்ணில் கல்விக் கடலானோன் ஏட்டைப் பாதுகாக்கும் முறையென உண்பதற்கு இயலா வறுமையினான் தொகுத்த உணவை ஓம்பலெனக் கண்ணிற்கு இனிய சிறுமகனைக் கண்ணுள் வைத்துக் காத்தனராம்.”[52] என்று அழகான உவமை வழி விளக்குவர்.

## வேள்விச் சாலையை வடிக்கும் உவமைகள்

நிகழ்ச்சியினைக் காட்சிப்படுத்த உதவும் கருவியே உவமை ஆகும். அதனைப் பொருத்தமான உவமைகளின் மூலம் வேள்விச் சாலையைச் சுற்றிப் பாவலர்மணி அவர்கள் வலம் வரச் செய்கின்றார். சாலி மைந்தன் காப்பியத்தில்

ஓம குண்டம் பாங்குற அமைக்கப்பட்டதை, “பன்முனை வடிவம் கொண்ட பசுமகக் குண்டம் மறைநூல் வல்லவர் ஆங்குப் பொன்மலர் பூத்தாற் போலப் புனைந்தனர்”[53]

தோரணங்கள் வேள்விச் சாலையில் தொங்கவிடப்பட்டிருப்பதன் அழகை, “மின்னியல் கொடிகள் மேடையில் அசைதல் போலத் தென்னையின் குருத்தால் செய்த தோரணம் திகழச் செய்தார்.”[54]

ஓமகுண்டத்தினை வளர்ப்பதற்காக நெய் பயன்படுத்தப்படும். அந்த நிகழ்வினை “குடத்தினுள் கிடக்கும் பாம்பைக் கோலினால் தொடுவாராகிப் படத்துடன் கோலை நோக்கிப் பாய்ந்துடன் சீறுதல் போலக் குடத்திலுள்ள நெய்யை வேள்விக் குண்டத்துள் தெளிக்க வேள்வித் தடத்தினுள் இருக்கும் செந்தீ சீற்றத்தால் தாவிப் பாயும்”[55] இங்ஙனம் உவமைகளால் அழகாக வடிக்கின்றார்.

## ஈப்போன்ற புலையர்

கேடுசெய்யும் மனிதர்களைக் கண்டால் சாதாரண மனிதர்களின் உள்ளத்தில் எழும் கோப வெளிப்பாட்டினை எடுத்துரைக்கும் பிரதிநிதியாகப் பாவலர்மணி அவர்கள் திகழ்கின்றார். கேடே உருவான வேதியர்களை விட்டு ஆபுத்திரன் நீங்குமாறு கூறும் இளம்பூதி “கெட்ட புண்ணினைச் சுற்றி மொய்த்திடும் ஈப்போல புலையர் வாழும் ஊரினை நீங்கி விண்ணினில் ஏறி விரி இருள் நீக்க விரைந்திடும் கதிரெனப் போவாயாக”[56] இங்ஙனம் கூறுகின்றான். இதன் மூலம் நயமான உவமையினை வெளிப்படுத்துகிறார்.

## பிரிந்த பறவையும் ஆபுத்திரனும்

அரும்பண்புகளுடன் பூத்த அற்புத மலர் ஆபுத்திரன். அவன் தான் வளர்த்த ஊரை விட்டு நீங்கும் பொழுது தன்னை நினைத்துக் கவலை கொள்ளாமல் வளர்ப்புப் பெற்றோரை நினைத்துக் கவலை கொள்கிறான். இந்த நன்றியுணர்வு வெளிப்பாட்டினை, “ஆம்பலும் நீர்வாழ் கொட்டியும் போல இறுதி நாள் வரை உறையேனாய் வாம் பறவை போல் இடையிலே பிரிய வைத்ததே என் விதி பொறுப்பீர்”[57] என்று உவமையின் வழிப் புலப்படும்.

## மான்மறிக்குத் தோற்றதொரு வயப்புலி

கொடியவர்களுக்குத் தோல்வி என்பது துளியும் பிடிக்காத ஒன்று. ஆபுத்திரனிடம் தனது சூழ்ச்சியானது வெற்றி பெறாத போது இந்திரன் துடிக்கின்றான். அவனது மனநிலையைப் பாவலர்மணி அவர்கள் “மான்குட்டிக்குத்

தோற்றதொரு வலிமைமிக்க புலியென்று திகழுவதை யான் செவியிற் கேட்டிருந்து நலிவதுவோ? என நைந்தான்’’[58] என்று உவமிப்பர்.

## தொடர் உவமைகளால் ஆபுத்திரனைத் தொகுத்துக் கூறும் பாங்கு

ஒரு மனிதனைக் குறித்த நிகழ்வுகளைத் தொகுத்துக் கூற பல உவமைகளைக் கையாள்வது என்பது திறன் வாய்ந்த புலவருக்கு வாய்த்த அருங்கலையாகும். அந்தக் கலை நன்கு கைவரப் பெற்றவர் பாவலர்மணி அவர்கள் என்றால் அது மிகையாகது. உவசரன் ஆபுத்திரனைக் குறித்த நிகழ்வைக் கூறி அவனை வெற்றி கொள்ளத் தேவையான அணுகுமுறையைக் கூறுகின்றான். இதில் உவமைகள் தொடர்ச்சியாக வந்து அணி செய்யும் பாங்கினை, ‘‘நவைபுரியும் ஆன்மகனின் நச்சரவை முன்னாளில் பிளவுள்ள மரத்தினைப் பிடரியிலே கடிதூன்றித் தள்ளுதல் போல் இடித்து விரட்டியதைத் தொகுத்துமொழி செய்தனன். ஆனால் சொல்லாலும் செயலாலும் திருந்தாத சூர்மகனைக் கல்லாலும் கம்பாலும் கடிதோச்சி விரட்டாது புல்வாங்கக் கோடரியைத் தோளேற்றிப் போவது போல் எல்லாரும் ஒருங்கீண்டி எண்ணுவது நகையாகும்’’[59] என்ற பாடல்களால் அறிய முடிகின்றது.

## இடியுறும் மரமும் பயன்படாச் செல்வமும்

ஒரு நிகழ்வின் ஆழத்தை உன்னத உவமைகளின் மூலம் விளக்க முடியும். உவமைகளின் மூலம் விளக்கப்படும் நிகழ்வுகள் வாசகர்களின் உள்ளத்தில் தாக்கத்தை ஏற்படுத்தும். சாலி மைந்தன் காப்பியத்தில் இந்திரன் சூழ்ச்சியினால் தனது அறச்செயலுக்குத் தடை வந்ததை அறிந்து வருந்தும் ஆபுத்திரனின் மனநிலையை ‘‘இடியுறும் மரத்தைப் போல ஆன்மகன் இருக்கச் சோறு முடிவுறுமோ என்றெண்ணி முந்தினராகிச் சென்றார். படியினுள் புதைக்கப்பட்டுப் பயன்படாச் செல்வம் போலப் பிடித்துப் போடப்பட்ட சோறு நிறைந்த பொன்செய் பாத்திரம் பிறங்கிற்று இங்கே’’[60] என்று பாவலர்மணி அவர்கள் நயமாக வடிக்கின்றார்.

## தங்காது பாய்ந்தோடும் ஆறு

ஆபுத்திரன் சென்ற இடங்களிலெல்லாம் இந்திரனின் சூழ்ச்சியினால் அறச்செயலுக்குத் தடை வந்தது. அவன் பல ஊர்களுக்கும் சென்ற இந்தக் காட்சியின் கனமானது பாவலர்மணி அவர்களின் கைவண்ணத்தில் வாசகர்களில் நெஞ்சத்தில் ஏற்படுகின்றது. இதனை ‘‘தங்காது பாய்ந்தோடும் ஆற்றைப் போல தங்காது பல்லூரும் கண்டு கண்டு வெங்கானம் பல நீந்திக் கீழைக்கடல் சேர்கின்ற விலக்கூரைத் தோழரொடு சென்றடைந்தான்.’’[61] என்பர்.

## தேரும் இரவலரும்

சோர்ந்து கிடக்கும் உள்ளம் எழுச்சி பெறுவது நம்பிக்கை மிகுந்த வார்தைகளால் தான் என்றால் அது மிகையாகாது. மனதை வளைக்கும் வல்லமை வாய்ந்தவை வார்த்தை முத்துக்கள். ஆபுத்திரன் தன்னுடைய அறப்பணிக்கு ஊறு விளைந்ததை எண்ணி உள்ளம் வாடுகின்றான். அப்பொழுது இளஞ்சாத்தனின் "பார்கெட்டுப் போகாமல் காக்கும் நின்னைப் பழிதொட்டுப் பார்க்காது; தேரைத் திருப்பத் தச்சனிடும் கட்டையிட்டால் தேர் முட்டித் திரும்புதல் போல் காலத் தச்சன் இரவலரைத் திருப்பிடுவான்"[62] இந்த வாய்மொழியின் மூலம் பாவலர்மணி அவர்களின் கைவண்ணத்தை அறியலாம்.

## கவைமகப் பெற்ற தாயென உள்ளமும் வாளால் வாங்கச் சாயும் மரமும்

நட்பு என்னும் உன்னத உறவை தனது நாடித் துடிப்பாகக் கொண்டவன் ஆபுத்திரன். அறப்பணியின் மீது கொண்ட அளப்பரிய ஆவலாலும், மூலகனின் சூழ்ச்சியாலும் நண்பர்களைப் பிரிந்து சாவகம் செல்கின்றான். அவனது சோகம் ததும்பிய மனநிலையைப் பாவலர்மணி அவர்கள் ‘‘இரட்டைப் பிள்ளை பெற்ற தாயென உள்ளம் கலங்கினேன்.’’[63] இங்ஙனம் ஆபுத்திரனின் வாய்மொழியாக வெளிப்படுத்துகின்றார். மேலும் உன்னத நண்பனைப் பிரிந்த உத்தமர்களின் நெஞ்சமும் துடிதுடிக்கின்றது. ஆபுத்திரன் வடித்த ஓலைக் கண்டு அவர்களின் செயல்பாட்டினை, ‘‘மரங்கொல் தச்சர் துணிவாளான் வாங்கச் சாயும் மரம் போல மண்ணில் வரும் துயரால் ஏங்கிச் சாய்ந்தார்’’[64] இங்ஙனம் உவமைகளை மூலம் பாங்குற வடிக்கின்றார்.

## நல்லவர்களின் உறக்கமும் தீயவனின் விழிப்பும்

நல்ல செயல்களின் மூலம் நன்மையினை நாளும் விளைவிப்பவர்களுக்கு உறக்கம் ஒரு இனிய வரமாகும். தீமையே தனது தேடலாகக் கொண்டவர்கள் உறக்கத்திற்கு விடைகொடுப்பார்கள். சாலிமைந்தன் காப்பியத்தில் நல்லவர்கள் அனைவரும் ஆழ்ந்த நித்திரை கொள்ள தீமையே உருவான மூலகன் விழிப்போடு செயல்படுகின்றான். இந்த காட்சியின் ஆழத்தை பாவலர்மணி அவர்கள் ‘‘ஆடு தொட்டிலில் ஏற்றிய பிள்ளையர் அயர்ந்து உறங்குதல் போலவே அக்காலத்தில் யாவரும் நீடுறங்கினர். காரிருள் நெருங்கும் காட்டினில் காய்பசியால் இரை தேடும் வெம்புலி போவது போலவே தீய நெஞ்சினன் மூலகன் சென்றனன்’’[65] இங்ஙனம் பாத்திரங்களுக்குப் பொருத்தமான உவமைகளின் மூலம் வடிக்கின்றார்.

## ஆலைவாய்க் கரும்பென அவலம்

நண்பர்களால் சூழப்பட்ட வாழ்வினைக் கொண்ட போதும் இளஞ்சாத்தன் முழுமையான இன்பத்தை எய்தவில்லை. இரத்த உறவாக ஆபுத்திரனை அறிந்த பொழுது இன்பத்தின் எல்லைக்கே சென்றான். தீவதிலகை உதிர்த்த தவறான செய்தியின் காரணமாக மகனை இழந்ததாகத் துடிக்கின்றான். தனயனை இழந்த தந்தையின் மனநிலையைப் பாவலர்மணி அவர்கள் "பாலையில் நீரில்லாது படுமரக் கிளையில் ஓர் நாள் காலையில் தளிரரும்பிக் கைகாட்டி அழைத்து நின்று மாலையில் கருகினாற் போல் மைந்தனைப் பெற்று இழந்தோன் ஆலைவாய்க் கரும்பைப் போன்ற அலைத்தால் பிழியப்பட்டான்"[66] இங்ஙனம் அழகாக வடிக்கின்றார்.

## தேளோடு தீவாயும்படுவது போன்ற துயரம்

சாலிமைந்தன் காப்பியத்தில் ஆபத்திரன் இளஞ்சாத்தனைத் தன் தந்தை என்று அறிந்து கொள்ளும் பொழுது அவனால் முழுமையான மகிழ்ச்சியினை அடைய முடியவில்லை. தன்னுடைய முடங்கல் தந்த தகவலால் தந்தைக்கு ஏதேனும் ஏதம் நேர்ந்துவிடுமோ என்று துடித்துப் போகின்றான். அத்துயர மனநிலையோடு மணிபல்லவத்திற்கு கலத்தில் செல்கின்றான். அப்பொழுது அந்தக் கலம் செல்லும் பாங்கிற்குப் பாவலர்மணி அவர்கள் ''மிக்க மது உண்டவர்கள் மேலும் உணின் தன் மதி தான் உய்க்கும் வழி போகாமல் வேறு வழி ஒதுங்குதல் போல் புக்கநெறி மீகாமன் போக்கும் நெறி விலகி வளி உய்க்கும் நெறிதனில் எல்லாம் சிறிய கலம் ஓடியதாம்"[67] என்று வருணிக்கின்றார்.புயல் காற்றின் காரணமாகக் கலம் அலைக்கழிக்கப்படுவதை எண்ணி ஆபுத்திரனின் உள்ளம் வருந்துவதை ''நாளாக நாளாக யாதாகுமோ என உள்ளம் நலியுங்கால் மீளாத துயர்தந்து புயற்காற்றும் மெலிவிக்கும். இதனால் தேளால் தீண்டப்பட்டு உழல்வார் தீவாயும்படுவது போல் மாளாத இருதுயரின் வயமாகி உழன்றான்.''[68] இங்ஙனம் உவமையென்னும் உளி கொண்டு அவனது உள்ளத்தைச் செதுக்குகின்றார்.

## மெய் முன்னர் நிற்காத பொய்

சாலி மைந்தன் காப்பியத்தில் இளஞ்சாத்தான் இறந்ததும் சாலியும் உயிரைத் துறக்கின்றாள். அவளது மரணத்தை மணிமகுடம் போன்ற உவமையால் வருணிக்கின்றார். பாவலர்மணி அவர்கள் "தளராமல் வினை செய்த போதும் உண்மை எதிர் வரும் நாளில் பொய்யோடிப் போவது போல் அவளாவி போயிற்று"[69]

என்று கூறுகின்றார். இளஞ்சாந்தன் மீது அவள் கொண்ட அன்பே பூரணமானது என்பதை மறையாக வெளிப்படுத்துகின்ற பான்மையினை இதில் காண முடிகின்றது.

இங்ஙனம் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் பாத்திரங்களின் பண்பு நலன்களை விவரிக்கவும், நிகழ்ச்சிகளின் ஆழத்தை உணர்த்துவதற்கும் உவமைகள் கையாளப்பட்டுள்ளன. நிகழ்வுகளைக் காட்சிகளாக உருக்கொள்ளச் செய்யும் வகையில் இவர்களின் உவமை வாசகர்களோடு உறவாடுகின்றன. சாலி மைந்தன் காப்பியத்தில் உவமைகள் அதிக அளவில் இடம்பெற்று அணி செய்கின்றன. மனித மன உணர்வுகளைப் பொருத்தமான உவமைகளின் மூலம் பாங்குறச் செதுக்கும் சிற்பியாகப் பாவலர்மணி அவர்கள் திகழ்வதை அறிய முடிகின்றது. சரியான உவமைகளின் மூலம் சிறு நிகழ்வையும் வருணித்து இலக்கிய இன்பம் ஊட்டுகின்றார்.

## உருவகம்

உவமை அணியில் உள்ள அன்ன, போல, போன்ற முதலாக வரும் உவம உருபுகள் இன்றி உவமானத்தையும் உவமேயத்தையும் இரண்டாக அன்றி ஒன்றாக்கிக் காட்டுவது உருவக அணியாகும். இதனைத் தான் தண்டியலங்காரம்,

> **“உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்து**
> **ஒன்றென மாட்டின் அ∴து ருவகமாகும்”[70]**

என்கிறது. இவ்வுருவக அணியினைக் கையாள்வது என்பது உவமை அணியைக் கையாள்வதை விட சற்றுக் கடினமானதாகும். உவமையில் ஒருவிதமான நெகிழ்வுத் தன்மையினை உணர முடியும். அத்தகைய நெகிழ்ச்சி உருவகத்தில் இல்லை. அதனால் “உருவக அணியை அதன் முழு அளவிற்குக் கையாள வல்ல இலக்கியக்கலை வித்தகராக விளங்குவது மிக அரிய செயல்”[71] என்பர்.

## வறுமையினைச் சுடர் முகத்தால் மாற்ற முனைதல்

வறுமை என்பது வாழ்வினை வெறுமையாக மாற்றுவதாகும். வறுமையின் கோரப் பிடியிலும் ஒருவன் இன்பமாக இருக்க முடியுமென்றால் அவன் உன்னத மனிதனாகத் தான் இருக்க முடியும். அவனை மகிழ்விக்கும் அந்த மந்திர உறவினை உருவகத்தின் மூலம் பாவலர்மணி அவர்கள் பாங்குற வருணிப்பதை, “தோளினை முற்றும் குழந்தைச் செல்வ சுடர் முகத்திற்கு முத்தம் தந்து முத்தம் தந்து தன் ஆளுமையை முற்றுகையிடும் துன்பங்களை எல்லாம் அவன் மாற்ற முனையும் காலை”[72] என்ற அடிகளால் அறிய இயலும்.

## கண்ணே பெண்ணாக மாறிய விந்தை

தந்தை மகள் உறவு என்பது வார்த்தைகளால் வடிக்க முடியாத ஒன்றாகும். சொற்களின் கட்டுக்குள் வருணிக்க முடியாத உறவுகளின் ஆழத்தைப் பாவலர்மணி அவர்கள் கோசர்களின் கொடுமையை எண்ணி அன்னி மிஞிலி துடிதுடிக்கின்றாள். அப்பொழுது அன்னி "கண்ணே! நீ என் கண்ணாக இருக்கக் கண்ணில்லாதவன் என்றென்னைக் கருதுவார் உளரோ?"[73] என்று உருவகிப்பது குறிப்பிடத்தக்கது.

## உள்ளுறை உவமம்

**"உள்ளுறுத்து இதனோடு ஒத்துப் பொருள் முடிகென**
**உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்"[74]**

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர், "உள்ளுறுத்துக் கருதிய பொருள் இதனோடு ஒத்து முடிக என உள்ளுறுத்துக் கூறுவதே உள்ளுறை உவமம்" என உரை கூறுகின்றார். பாவலன் ஒரு பொருளைக் குறித்துப் பாடியுள்ள பாட்டில் அப்பொருளுக்கு இணையாக மற்றொரு பொருளும் அதன் பின்னணியில் உறைந்து கிடக்கும். அங்ஙனம் மறைந்திருக்கும் பொருளை ஆராயத் தொடங்கின் பாட்டில் நேரடியாக உள்ள பொருளின் பல பகுதிகளுக்கும் உள்ளுறையின் பொருளுக்கும் இடையே பல ஒற்றுமைகள் காணப்படும். இங்ஙனம் உள்ளுறைந்து உவமை போல ஒன்றோடு ஒன்று பொருந்தி வரும் கவிதைக் கலைத் திறன் 'உள்ளுறை உவமம்' எனத் தொல்காப்பியரால் வரையறுக்கப்பட்டுள்ளது. இத்தகைய உள்ளுறை உவமம் குறித்து ஆ. கந்தசாமி அவர்கள், "தலைவனிடம் அவனது குறையை நேர் சொல்லால் கூறுவது நாகரிகமன்று, நாணுடைய நா அவ்வாறு நவிலாது. நாணில் செயல்களை நாணுடைய மொழிகளால் வெளிப்படுத்துவதே உள்ளுறையாகும்."[75] என்பர். இத்தகைய உள்ளுறை உவமம் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் அமைந்துள்ள பாங்கு பின்வருமாறு.

## முருகனால் நீங்காது தலைவனால் நீங்கும் நோய்

அனிச்ச அடி காப்பியத்தில் உள்ளுறை என்பது நயமாக அமைந்து காப்பியச் சுவையினைக் கூட்டுகின்றது. பாடினியின் மூலம் தலைவன், தலைவியின் அன்பானது ஒரு கதையாக விரிகின்றது. வெறியாட்டு நிகழ்வின் பொழுது தோழி அறத்தோடு நிற்கின்றாள். அப்பொழுது அவள் "கூனல் நுதலியான தலைவியின் நலம் அழிய கூர்வேல் முருகன் முதல்வன் என்போனின் தினைப்புனம் காக்கும் மலைக்குறவனின் எய்த கவண் தன் குறிதப்பி மானின் மருமம் பட்டதனால் மயங்கும் மயக்கத்தை மட்டொழுகும் தூய நல்ல அருவி நீர் போக்கும் மலையும்

கேட்கப் பாடுவையோ!”[76] இங்ஙனம் கூறுகின்றாள். முருகனால் விளைந்தது இவள் நோய் என்று நீ கூறிய குறிதப்பிய சொல்லால் மயங்கி நிற்கும் இவள், நீ மலைநாடன் கேட்கப் பாடுவாயானால், அது கேட்டுத் தலைவன் வர தலைவி மயக்கத்திலிருந்து நீங்குவாள் என்பது உள்ளுறை, இவ்வாறு நயமான உள்ளுறையினை அழகாகப் பாவலர்மணி அவர்கள் அமைந்துள்ளார்.

## கடுவன் கடித்த கிளியின் அலகு

பாடினியின் பாடல் அனிச்ச அடி காப்பியத்தில் உள்ளுறையாக விரிகின்றது. “ஒளியும் நலமும் ஒருங்கே வர ஒளி பொருந்திய வேலினையுடைய முருகன் என்ற முதல்வன் என்போன் குளிர்ச்சி பொருந்திய தேனினை நனி உண்டதால் அறிவு மயங்கிய இருங்கடுவன் கிளியின் அலகைக் கோவையெனக் கிள்ளும்; அலகால் கிளி கொத்தத் தெளியும்; உணரும்; உள்ளம் நாணும் சிலம்பும் கேட்கப் பாடுவையோ!”[77] என்ற பாடலில் கருத்து அழமாக அமையும் வண்ணம் உள்ளுறையானது அமைந்து அணி செய்கின்றது. கிளி கொத்தியதால் கடுவன் தன்னுணர்வு பெற்றதைப் போல நீ சிலம்பு கேட்கப் பாடின், சிலம்பன் வரத் தலைவியானவள் தன்னுணர்வு பெறுவாள் என்பதும் கடுவன் தன்னுடைய செயலுக்கு நாணுதல் போல தலைவனால் விளைந்ததே இவள் நோய் என்பதை அறிந்து நாணுவாய் என்பதும் உள்ளுறையாகும்.

## விண்மீன் என மயங்கிய கூகை

பாவலர்மணி அவர்கள் நுண்ணிய மதிநுட்பம் உடையவர் என்பதை உள்ளுறையானது திண்ணியமாக உணர்த்தும். காட்சியினை எழுத்துகளின் அணி வரிசையின் மூலம் மனத்திரையினில் விரியச் செய்கின்றார். தோழி கூற்றாகப் பாடினி “பிறை போன்ற நுதலில் கவின் அழியப் பெரியோனாகிய முருகனே காணமென்று அறையும் முதுவாய் வேலா நீ அடர்ந்த சோலையின் இருளின் ஊடே தேன் சேர்ந்த பிடவத்தின் இதழ் விரிய நள்ளிருள் விண்மீன் என மயங்கிய சிறைசேர் கூகை குரல் காட்டும் சிலம்பும் கேட்கப் பாடுவையோ!”[78] இங்ஙனம் பாடுகின்றாள். சோலையின் செறிவினால் இருள் ஏற்பட்ட அதனிடையே பிடவம் மலர, அதனை விண்மீன் என மயங்கிய கூகை இரவு வந்துவிட்டது எனக் குரல் எழுப்பினாற் போல இவள் நோய் எதனால் நேர்ந்தது என்பதை ஆராயாது முருகனால் நேர்ந்தது என மயங்கிக் கூறினாய். நீ சிலம்பன் கேட்கப் பாடுவாயானால் அவன் வர உண்மை விளங்கும் என்பது உள்ளுறையாகும்.

உள்ளுறை என்பது மனத்திரையினில் காட்சிகளைத் திரையிடுவதாகும். அதனை நேர்த்தியாகப் பாவலர்மணி அவர்கள் வடித்துள்ளார். அனிச்ச அடி

காப்பியத்தில் அருளாழி, சுரும்பார் குழலி நன்னனின் வெள்ளணி நாள் விழா நிகழ்வாகப் பாடினியின் பாடலை இடம்பெறச் செய்து சுவையூட்டுகின்றார். இயல்போடு பொருந்தி வருவதுடன் கதை வளர்ச்சிக்கும் துணை நிற்கின்றது. உள்ளுறை என்னும் குறிப்பு மொழியானது அனிச்ச அடி காப்பியத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. பிற காப்பியங்களில் இடம்பெறவில்லை.

## குறிப்பு

பாடல்கள் வெளிப்படையாகக் கருத்தினைத் தருவதோடு மறைமுகமாகவும், குறிப்பாகவும் பல பொருள்களைத் தருதல் உண்டு. சாலி மைந்தன் காப்பியத்தில் குறிப்பாகப் பாடல்கள் அமைந்து இலக்கிய இன்பத்தை ஊட்டுவதைக் காணலாம். இளஞ்சாத்தன்-சாலியின் கூடலுக்கு முன் உரையாடல்கள் அனைத்தும் குறிப்பாகவே இடம்பெறுகின்றன. பொதுவாக தீமையான செயல்கள் அனைத்தும் மறைவிலேயே நடத்தப்படும். மனிதர்கள் தாம் செய்யும் செயல்கள் நல்லதா தீயதா என்பதை எளிமையாகத் தெரிந்து கொள்ள முடியும். அடுத்தவர்களுக்குத் தெரியாமல் மறைத்து செய்யும் செயல்கள் அனைத்தும் தீய செயல்கள் ஆகும். இந்த உளவியலை அடிப்படையாகக் கொண்டே சாலி-இளஞ்சாத்தனின் பொருந்தாத கூடலை குறிப்பாகப் பாவலர்மணி அவர்கள் அமைந்திருக்கின்றார்.

## மலர் - வண்டு உணர்த்தும் குறிப்புமொழி

சாலியின் அழகால் ஈர்க்கப்பட்ட இளஞ்சாத்தன் பேரார்வத்தின் காரணமாக ‘‘கொம்புகளால் காவலுறும் கொடிக்குலங்கள் தாழ்பூந்த புதியமலர் தனிலூறும் வனத்தேனை மாந்துதற்கே இம்மெனுமோர் இசைபாடும் இனவண்டை வரவேற்க அம்மலர்சேர் கொடியாடும் ஆர்வத்தைக் காணென்றான்’’[79] இங்ஙனம் கூறுவதாகக் காட்சி விரிகின்றது. இதில் கொம்புகளின் காவலுக்கு உள்ளாகி இருந்தாலும் கொடிகள் தம் மலர்த்தேனைத் தேடிவரும் வண்டுகளுக்கு அளிக்க விரும்புவதில் ஆர்வம் காட்டுதல் போல் நின் கிளையால் காக்கப்படினும் நின்னலமென்னும் தேனை எனக்களிக்க ஆர்வம் காட்டாதது ஏன்? என குறிப்பால் வினவுகின்றான்.

அதற்கு சாலி ‘‘மது ஏறும் மலர்க்கொடிகள் மதிமயக்கம் கொள்வதனால் ஏது காவல் எது காதல் என்பதைனை ஆராயாதே. புதுவோனாம் சிறைவண்டர்ப் புல்லிநலம் துய்ப்பதற்கு விருப்பம் மிகுதியாதல் இயல்பன்றே. விந்தை இதில் என்ன?’’[80] என்று கூறுகின்றாள். இதில் மதுவேந்தியமையால் கொடிகள் மதிமயங்கி அவ்வாறு செய்கின்றன. மதி மயங்காத நானும் அவ்வாறு செய்தல் எவ்வாறு இயலும் என குறிப்பால் பதில் தருகின்றாள். இங்ஙனம் மலர் வண்டினை அடிப்படையாகக் கொண்டு குறிப்பானது அமைக்கப்பட்டுள்ளது.

## ஞாயிறு – மேகம் உணர்த்தும் குறிப்புமொழி

சாலியின் மனதை வளைக்க எண்ணிய இளஞ்சாத்தன் ‘‘செங்கதிரோனின் பொற்சுடரால் செல்லும் மேக விளிம்பெல்லாம் பொன்பதித்தான் எனவாக்கும் புதுமையினைக் கண்ட பின்னும் மின் பதித்த மேகங்கள் ஞாயிற்றை மேவாது முன்னகல்வான் மொய்ப்பதும் ஓர் அறிவின்மை’’[81] என்று மேலும் கூறுகின்றான். கதிரவன் சுடரால் மேகம் அழகு பெற்றாற் போல என்னாற் காப்பாற்றப்பட்ட நீ அழகு பெற்றுத் திகழ்கின்றாய். அழகு செய்த ஞாயிற்றை விரும்பாது மேகம் வறிதே வானகத்திற்றங்கினாற் போல நீ என்னை விரும்பிச் சேராது தனித்து நிற்பது அறிவுடைமை ஆகுமோ? எனக் குறிப்பினால் வினவுகின்றான்.

அப்பொழுது அதனை முறியடிக்க எண்ணிய சாலி ‘‘சில நேர அழகு தரும் - செயலுக்காக ஞாயிற்றின் முன்னேக ஒரு மேகம் விழையுமேயானால் முடிவினிலே என்னாகும்? ஞாயிற்றின் வெப்பத்தால் எரி உண்ணும்’’[82] என்று பதிலளிக்கின்றாள். சிறிது நேர அழகை நம்பி மேகம் ஞாயிற்றை அணுகினால் அழிந்து போகும். அதுபோலக் கணநேர இன்பத்தின் பொருட்டு உன்னை நெருங்கினால் என் பெண்மை அழியுமே! எனக் குறிப்பால் மறுக்கின்றாள்.

## கடுவன் உணர்த்தும் குறிப்புமொழி

சாலியை தொடர் முயற்சியால் வீழ்த்த நினைத்த இளஞ்சாத்தன் ‘‘அடர்கானப் படர்கிளையில் அமர்ந்த இளமந்தியோடு தொடர்காண ஒரு கடுவன் சுளைபலவாய் வரிசையுறும் அடர்மணஞ்சேர் பலாக்கனியை அம்மந்தி கையகத்தில் ஈந்து இடர்களைக எனக் கண்ணால் இசைப்பதனைக் காண்க’’[83] என்றாள். இளமந்தியை நாடிக் கடுவன் பலாக்கனியைக் கொடுத்து இடர்களைக என இரந்தாற்போல என் விருப்பமாகிய கனியை நின்பாற் கொடுத்து இரக்கின்றேனாகவும் நீ அதனை ஏலாதிருத்தல் முறையோ? எனக் குறிப்பால் வினவுகின்றான்.

அதற்கு தனது சொற்களால் பதில் கொடுக்க முனையும் சாலி ‘‘தொங்கும் விழுதினைக் கைப்பற்றி நயந்து ஊசலாட விழைந்தால் விழுது போல் நான்ற அரவத்தைக் கைப்பற்றிக் கால்பதறிக் கைபதறிக் கைப்பிடியை உதறிவிட்டு மேல் பதறியோடும் மந்தி விளையாட்டைக் காண்’’[84] என்று கூறுகின்றாள். பாம்பை விழுதென்று பற்றிய மந்தி விழுதின்மை கண்டு அஞ்சி விலகி ஓடினாற் போல நான் யார் என்பதை அறிந்தால் நீ விட்டு நீங்கி ஓடுவாய் என்பது சாலி குறிப்பால் உணர்த்திய பொருளாகும்.

சாலியின் மனம் சற்று இளஞ்சாத்தன் மீது சாய்வதனை ‘‘இக்கரையில் பசும்புல்லை இனிது அருந்தும் கலைமான்கள் அக்கரையில் வளர்கின்ற புல்லை ஆரவிழைந்து ஓடுங்கால் தொக்கபுனற் பேராறு குறுக்கிடவே சோர்வுற்று மிக்கதுயர் கொண்டவனாய் மீள்வதனைக் காண்’’[85] என்று கூறுவதிலிருந்து அறியலாம். அக்கரைப்புல்லை ஆர விரும்பிய கலைமான்களை ஆறு குறுக்கிட்டுத் தடுத்தாற்போல் நின்னை அடைய விரும்பினேனாயினும் என் நிலையும் என் நாணமும் என்னைத் தடுக்கின்றன என்பது குறிப்புமொழியாகும்.

## ஆண்புறா-உடும்பு வழிக் குறிப்புமொழி

சாலியின் மீது கொண்ட ஆசையானது எல்லையில்லாமல் மேலெழ ‘‘இறைதேடிப் பொழுதோடு கூடு அடைந்து நோயுற்றுக் கிடக்கின்ற ஆண்புறாவின் நோக்கறிந்து வாயுற்றுக்கொடுத்து உவக்கும் வளரிமைப் பேடு அன்பில் தாயுற்றால் எனச் சிறகால் தழுவுவதும் காண்’’[86] என்று கூறுகின்றான். நோயுற்ற ஆண்புறாவை இரையீந்து சிறையால் தழுவிக் கொள்ளுதல் போலக் காம நோய்ப்பட்ட எனக்கு வாயமுதூட்டிக் கைகளால் அணைத்துக் கொள்க என்பது இளஞ்சாத்தனின் குறிப்பு மொழியாகும்.

அதற்கு சாலி தனது இயலாமையினைக் குறித்து ‘‘பற்றுதலில் தப்பாது படர்கின்ற வலிமையான உடும்பு கொலைத் தொழிலில் தப்பாதான் கொடும்பகழி பாய்ந்ததனால் மற்றது தன் வாழ்விடமாம் பொந்து ஏக வலியின்றி இற்றது போல் கிடக்கின்ற இயலாமை காண்’’[87] என்று கூறுகின்றாள். பகழிபாய்ந்த உடும்பு உரிய இடம் செல்ல முடியாது கிடப்பது போல் பல துன்பங்களால் துளைக்கப்பட்ட நான் அசைய முடியாதவளாகக் கிடக்கின்றேன் என்பது குறிப்பாகும்.

## கிளி-கடுவன் வழிக் குறிப்புமொழி

உடன்படாத சாலியை உடன்பட வைக்கும் முயற்சியோடு இளஞ்சாத்தன் ‘‘செம்மையுற இந்த இலவங்காய் சிவக்கும். சிவந்த கனி தம்மை உண்ணலாம் என்று தப்பாமல் வந்த கிளி வெம்மை செய்யும் பசிபோக்கும் விருப்பம் நிறைவேறாமல் இம்மெனவே போகின்ற இதன் துயரைப்பார்’’[88] என்று கூறுகின்றான். காய் கனிந்திருக்கும் உண்ணலாம் என்று நம்பி வந்த கிளி ஏமாற்றமடைந்து பசியோடு திரும்பிப் போவது போல நின்னைக் கூடி மகிழலாம் என்ற என் நம்பிக்கை பாழாக ஏமாற்றம் அடைந்து செல்வேன் என்பது குறிப்புமொழியாகும்.

அப்பொழுது சாலி இளஞ்சாத்தனை மாற்றும் நோக்கத்தோடு ‘‘முள்ளொன்று கால் தைக்க முகஞ்சுளியாத இளங்கடுவன் சுள்ளென்ற வலிபொறுத்துத்

துன்பமொழிக்கப் பெரியதொரு முள்ளாலே முள்நீக்கி முன்சூழ்ந்த வருத்தத்தை எள்ளி நடைபோடுகின்றது. இது காண்க"[89] என்று கூறுகின்றாள். முள் வருத்தினாலும் அதனைப் பொறுத்துக் கடுவன் வேறொரு முள்ளால் அதனை நீக்கித் துன்பொழிந்தாற் போல உனக்குற்ற துன்பத்தைப் பொறுத்து வேறோர் உபாயத்தை நாடினால் துன்பம் நீங்குவாய் என்பது சாலியின் குறிப்பு மொழியாகும்.

## ஆமை – கிளி உணர்த்தும் குறிப்புமொழி

தன்னுடைய முயற்சியில் சிறிதும் தளராத இளஞ்சாத்தன் "ஐந்துறுப்பும் உள்ளடக்கி அயலில் கிடந்த ஆமையினை மைந்துடைய இளங்கடுவன் மண்ணோடு இ∴து எனப்பற்ற ஐந்துறுப்பும் விரித்து ஆமை அசைந்தவுடன் அக்கடுவன் நைந்து அலறி நீங்குவதை நல்லாய் நீ காண்"[90] என்று சாலியிடம் கூறுகின்றான். ஆமையை மண்ஓடு என்று எடுத்த இளங்கடுவன் உண்மை அறிந்து அலறினாற் போல் நீ அன்பு செய்வாய் என நம்பி நின்னை நெருங்க நீயோ விலகியே நிற்கின்றாய். இது கண்டு என்னெஞ்சம் அச்சத்தால் அலறுகின்றது என்பது குறிப்புமொழியாகும்.

சாலி தன் மனமாற்றத்தினை "இனிய மாங்கனியை மாந்தவரும் இளங்கிளிகள் முற்றாத காயாக முன்னிருக்கக் கண்ட பின்னர் எற்றாலும் இது நாளை கனியாகும் என எண்ணி அற்றலில்லா நம்பிக்கை ஆர்வதனைக் காண்"[91] என்றாள். கனியுண்ண வந்த கிளிகள் காய் கண்டு இவை நாளை கனியும் என்று நம்பிச் சென்றாற் போல நீயும் நம்பிக்கையோடு இருந்தால் கனியனைய என்னை நுகர்வாய் என்பது குறிப்புமொழியாகும்.

## நாரை வழி குறிப்பு மொழி

சாலியை எவ்வாறேனும் அடைத்துவிட வேண்டும் என்று முழுமுயற்சியில் ஈடுபடும் இளஞ்சாத்தன், "கயல் வருமா என எண்ணிக் கரையிருந்த ஒருநாரை முயற்சியுடைய பெருந்தவத்து முனிவன் போல் செயல்பட்டும் அயல்வரும் அம்மீன் பற்ற அது தப்பிப் போனதனால் செயலிழந்து நிற்பதனைத் தேன்மொழியே காண்"[92] என்றான். மீன் தப்பியதனால் செயலிழந்து நிற்கும் நாரை போல் பற்றி இன்புறுவோம் என நம்பிய என்னெஞ்சம் அது கிடைக்காமையால் செயலிழந்து நிற்கிறது என்பது குறிப்பு மொழியாகும்.

சாலி தன் முழுமையான மனமாற்றத்தினை "தப்பிய மீன் சென்றாலும் தளர்வில்லா அந்நாரை மெய்யான பொறுமை உடைமையினால் வேறிடத்தை நாடாது பொய்ப்பதுமை போல் நிற்கப் போந்துலவும் அம்மீனை எய்ப்பிலதாய்க்

கொடு பற்றி ஒகுவதும் காண்"[93] என்றாள். மீன் முதலில் தப்பினாலும் பொறுமையுடைய நாரை காலம் பார்த்து அம்மீனைப் பற்றியது போல நீயும் பொறுமையோடு காலம் பார்த்திருந்தால் பற்றி இன்புறுவாய் என்பது குறிப்புமொழி ஆகும்.

இங்ஙனம் இளஞ்சாத்தன்-சாலியின் பொருந்தாப் புணர்ச்சியினை குறிப்பாகவே வெளிப்படுத்தியுள்ளார். அஃறிணை உயிரினங்களையும், பொருட்களையும் கொண்டு பாங்காகவும் நுட்பமாகவும் இதனைக் கையாண்டுள்ளார்.

குறிப்புமொழியினைப் பொறுத்தவரை உவமைகள் தான் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் அணிவகுத்து நிற்கின்றன. காரல் மார்க்சிலும், அன்னி மகள் காப்பியத்திலும் உருவகம் இடம்பெற்றுள்ளது. அனிச்ச அடி காப்பியத்தில் இடம்பெறவில்லை. உள்ளுறை உவமம் என்னும் உத்தி அனிச்ச அடி காப்பியத்தில் மட்டும் இடம்பெறுகின்றது. குறிப்பாக செய்திகளை எடுத்துக் கூறுவது சாலி மைந்தனில் இடம்பெற்றுள்ளது. உவமப் போலியும், இறைச்சியும் இவரது காப்பியங்களில் இடம்பெறவில்லை.

## ஒலிநயம்

கவிதையின் கூறுகளில் முக்கியமானது ஒலிநயமாகும். ஒலிநயம் இல்லாத கவிதை உடல் இல்லாத உயிரைப் போன்றது. ஒரு கவிதையானது ஒலிநயம் இல்லாமல் அமையுமேயாயின் அந்தக் கவிதையில் நல்ல கவிதையில் அமையக் கூடிய ஓசையினிமையோ, ஒலியின் சக்தியோ, மொழி புலன்களை அடங்கச் செய்யும் குண இயல்போ, மனித உள்ளத்திற்கு இன்பத்தைக் கொடுத்துக் கற்பனை முறையில் சுவையுடன் துலங்க வல்ல சிறப்போ இருக்க இயலாது. ஒலிநயம் என்பது நல்ல இலக்கியப் படைப்பின் விதியாக அமைகின்றது. அசை, சீர், தளை, அடி, தொடை என இடம்பெறுவது ஒலிநயத்தின் கூறுகளாகும். அசை, சீர், தளை, அடி போன்றவை பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் அணிசெய்தலை

**"தள்ளரும் கல்வி கற்றோன்**
**தான்இனி வாழ்க்கை யில்மேற்**
**கொள்ளலுக் குரிய தான**
**தொழில்பற்றிக் கூறு கென்ன**
**விள்ளரும் தியாக வாழ்வை**
**மேற்கொளல் என்று ரைத்தான்;**
**பள்ளியில் பயின்ற கல்வி**
**பயனுற நிறைவே நிற்றால்"** (கார.மார்.கா,பா:36)

என்னும் பாடல் வழி அறியலாம்.

காரல் மார்க்சு காப்பியத்தில் இடம்பெற்றுள்ள இப்பாடல் தேமா, புளிமா, கூவிளம், கருவிளம் என ஆசிரிய உரிச்சீர் பெற்றுள்ளது. ஆசிரிய உரிச்சீர் நின்று தன் வரும் சீர் முதலசையோடு நேராய் ஒன்றுவதனால் நேரொன்றாசிரியத் தளையாகும். இது ஆசிரியப்பாவினால் பாடப்பட்டுள்ளது. இங்ஙனம் அசை, சீர், தளை, அடி போன்றவை பாங்குற அமைந்து ஒலிநயத்தினை அளிக்கின்றன. இவை பாவலர்மணியின் காப்பியங்களுக்கு அழகு சேர்க்கின்றன.

## தொடை நயம்

தொடை நயம் என்பது ஒலிச் சிறப்பிற்காகவும், பொருட் சிறப்பிற்காகவும் கையாளப்படுவதாகும். மோனை, இயைபு, எதுகை, முரண், அளபெடை என ஐந்து வகைப்படும். இந்த ஐந்து தொடைகளும் அடி, இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என எட்டு விகற்பங்களாக அமைந்துள்ளன.

## அடி மோனைத் தொடை

அடிதோறும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது அடி மோனைத் தொடை எனப்படும். காரல் மார்க்சு காப்பியத்தில் மோனைத் தொடை சிறப்பாகப் புனையப்பட்டுள்ளதை,

**“சூழ்நிலைதான மனிதனுக்குச் சொல்லரிய**
**அறிவுநலம் துலங்கச் செய்யும்;**
**சூழ்நிலைதான் அன்புமுதல் பண்பீறா**
**விழுமியங்கள் துளிர்க்கச் செய்யும்**
**சூழ்நிலைதான் பொய்களவு வஞ்சனைகள்**
**போன்றனவும் சுரக்கச் செய்யும்**
**சூழ்நிலையின் கைதியடா மனிதகுலம்**
**என்றமொழி தொல்லோர் ஆணை”** (கார.மார்.கா,பா:281)

என்ற பாடலின் மூலம் அறிய இயலும்.

## அடி எதுகைத் தொடை

அடிதோறும் முதற்கண் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது அடி எதுகைத் தொடை எனப்படும். எதுகை என்னும் தொடைநயம் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களைப் பெருமளவில் அலங்கரிக்கின்றன. காரல் மார்க்சு காப்பியத்தில்,

**“போட்டி மிகுந்துவர விற்பனையோ பொன்றிவிடும்;**
**நீட்டி மொழிவதென்ன! நிலத்தில்முத லாளியத்தை**

**ஓட்டி ஒழித்துவிடும் காலம் அதை உணருங்கள்;**
**பாட்டி கதையல்ல, பகுந்தாய்ந்த முடிவாகும்"** (கார.மார்.கா,பா:167)

என்று எதுகைத் தொடைநயம் அமைந்து சிறப்புச் செய்கின்றது.

## அடிஇயைபுத் தொடை

அடிதோறும் இறுதிக் கண்ணின்ற எழுத்தாலும், சொல்லாலும், ஒன்றி வரத் தொடுப்பது அடி இயைபுத் தொடை எனப்படும். அனிச்சஅடி காப்பியதில்,

**"அல்லெடுத்து வைத்தனெனும் கடற்பி றந்தாய்!**
**அருளெடுத்து வைத்ததெனக் குளிர்ச்சி கொண்டாய்!"**
(அனி.அடி,அ.2,க.2,பா.1:1-2)

இங்ஙனம் அடி இயைபுத் தொடை அமைந்துள்ளது.

## அடி முரண் தொடை

அடிதோறும் முதற்கட் சொல்லாலும், பொருளாலும் மறுதலைப்படத் தொடுப்பது அடி முரண் தொடை எனப்படும். பாவலர்மணி அவர்களின் காப்பியத்தில் அடி முரண் தொடை அமைந்து அழகு சேரக்கின்றன. அடி முரண் தொடை காரல் மார்க்சு காப்பியத்தில்,

**"தேங்குமுத லாளியத்தைத் திரண்டதொழி லாளிவர்க்கம்**
**ஓங்குமதன் அடிவேரை உடைத்தெறியும் புரட்சியினால்"**
(கார.மார்,கா,பா.171:1-2)

என்ற அடிகளில் முரண் தொடை அமைந்து அழகு சேர்க்கின்றன.

## அடியளபெடைத் தொடை

அடிதோறும் முதற்கண் உயிராலும், ஒற்றாலும் அளவெடுத்து ஒன்றி வரத் தொடுப்பது அடியளபெடைத் தொடை எனப்படும். இந்த அளபெடைத் தொடையானது அனிச்ச அடி காப்பியத்தில்,

**"அழாஅல் மகளே! அவ்வணம் தீவினை**
**எழாஅ தென்றே என்னுளம் கருதும்;"**
(அனி.அடி,அ-2,க.3.118-119)

இவ்வாறு அமைந்துள்ளது. இங்ஙனம் மோனை, எதுகை, இயைபு, முரண், அளபெடை ஆகிய 'ஐந்து தொடைகளும் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் அணி செய்கின்றன. இங்ஙனம் அசை, சீர், தளை, அடி, தொடை ஆகியவை அணி

செய்யும் வண்ணம் பாவலர்மணி அவர்கள் தனது காப்பியங்களைப் பாங்குறச் சமைத்திருக்கின்றார். இவை பாடல்களில் ஒலிநயம் என்ற சிறப்பினை நல்குகின்றன.

## சொற்கள் அமைப்பு முறை

சொற்களின் அமைப்பு முறை என்பது காப்பிய நடையினைக் குறிப்பதாகும். காப்பியத்தின் நடை தெளிவாகவும், விழுமியதாகவும் இருத்தல் வேண்டும். கருத்துக்களைத் தெளிவுறச் செய்வதற்குக் கவிஞன் அவற்றை மிகவும் தெளிவு வாய்ந்தவையாக இயற்கையான சொற்கள் வாயிலாக வெளியிட வேண்டும். “காப்பியப் பாடலின் மொழி தெளிவாக இருப்பது மட்டும் போதாது; அது விழுமியதாகவும் இருத்தல் வேண்டும். இதற்காக அது சாதாரண சொற்களையும் பேச்சு வழக்குச் சொற்றொடர்களையும் தவிர்த்தல் வேண்டும்”[94] என சொல்லாட்சிக் குறித்து ஜோசப் அடிசன் உரைப்பதாக தா.ஏ.ஞானமூர்த்தி கூறுகின்றார். மேலும் சொல்லாட்சி குறித்து ஆ. கந்தசாமி அவர்கள், “தனித்தனியே வழங்கும் வெவ்வேறு சொற்களைச் செம்மைப்பட செறிவாகக் கோத்துக் கவிதையாக்கும்போது அவை புத்துயிரும் புது ஆற்றலும் பெறுகின்றன”[95] என்று கூறுகிறார்.

## சொல் நயம்

சொற்களை பாங்குறத் தொடுப்பது ஒரு உன்னதக் கலையாகும். சொற்கள் என்னும் கூர்வாள் படைப்பாளர்களின் படைப்புத் திறத்தினைப் புலப்படுத்துவதாகும். வாசகனின் நெஞ்சில் தான் கூற விழையும் உணர்வினைப் பாங்குறத் திரையிடும் வகையில் அமைப்பது தான் ஒரு கவிஞனின் உன்னத வெற்றியாகும். கம்பராமாயணத்தில் ஒரு காட்சி. இராமன் காடேக வேண்டுமெனவும், பரதன் நாடாள வேண்டும் எனவும் கைகேயி வரம் கேட்கின்றாள். இதனால் பேரதிர்ச்சி அடைந்த தயரதன் வரங்களை மாற்றிக் கேட்குமாறு வேண்டுகிறான். ஆனால் அவள் அதற்கு சம்மதிக்கவில்லை. அப்பொழுது அவன் என் கண்ணை வேண்டுமானாலும் பெற்றுக் கொள். என் உயிரை வேண்டுமானலும் இப்போழுதே பெற்றுக் கொள். வள்ளன்மை வாய்ந்த கேகயன் மகளே, நீ விரும்பும் வரத்தைப் பெற வேண்டுமேயானால் இம்மண்ணுலக ஆட்சியை மட்டும் பெற்றுக் கொள்க! மற்றொரு வரத்தை மறந்து விடு என்று கூறுகின்றான். ஒரு தந்தையின் உள்ளத்தில் காணப்படும் உணர்வுப் பெருக்கினை,

**“கண்ணே வேண்டு மென்னினு மீயக் கடவேனென**
**உண்ணே ராவி வேண்டினு மின்றே யுதைன்றோ?**
**பெண்ணே வன்மைக் கேகயன் மானே, பெறுவாயேல்**
**மண்ணே கொண்ணீ மற்றைய தொன்றும் மறவென்றான்”**[96]

என்ற கம்பராமாயணப் பாடல் நமக்கு உணர்த்துகின்றது. இதே போன்று காரல் மார்க்சு காப்பியத்தில் சொற்கள் பாங்குற அமைந்து பொருளை நன்றாக உணர்த்துகின்ற பான்மையினை, ''மருந்துக்குக் காசு இல்லை; மருத்துவர்க்குத் தருதற்கும் மடியில் இல்லை; தெரிந்த மருத்துவர் பாலே செல்ல வண்டித் தேவையதைச் செலுத்துவோர்க்குத் தரும் பணமும் கையில் இல்லை; தன்கையில் உள்ளதெல்லாம் வறுமை ஒன்றே; மருந்துக்கு வறுமையினை மாற்றிக் கொள்ளும் மருத்துவர்கள் மண்மேல் இல்லை''[97] என்ற பாடலின் மூலம் அறியலாம்.

## மணம்படாது பிணம்பட்டவள்

உணர்வுகளை சொல் என்னும் உளியினால் பாங்குறச் செதுக்கும் சிற்பி பாவலர்மணி அவர்கள் ஆவார். ஒவ்வொரு காட்சியும் அது உரைக்க விரும்பும் உணர்வினை சீருற விவரிக்கின்றது. குழலியினைப் பழிவாங்கத் துடிக்கும் மிஞிலி ''மணம்பட விரும்பாமல் மறுத்த நீ இன்று பிணம்பட வந்துள்ளாய்; பிழைப்புக்கு எல்லாம் அறுவடைத் திருநாள் அல்லவோ இன்று! போரிடைத் தோற்றேன்; சிறுமகள் உன்னை மன வைரத்தினால் அழிக்கும் கருத்தினில் தோற்க மாட்டேன்; என்பால் உறவென்னும் இழையை அறுத்தனை; உன்பால் உடல், உயிர், உறவினை அறுப்பேன்!''[98] இவ்வாறு உரைப்பதில் சினம் என்னும் உணர்வானது சொல் நயத்தால் வெளிப்படுகின்றது.

## தொட்டிலில் சேயுறங்கும் முன் உறங்கியவள்

ஒரு படைப்பாளன் அனைத்துப் படைப்பாகவும் உருமாறும் விந்தை சொல் நயத்தால் விளைவதாகும். குழலியை இழந்த அருளாழி சுடுகாட்டில் புலம்புகின்றான். அவன் புலம்பும் தருணத்தில் வாசகர்களின் இதயம் கனக்கின்றது. இதனை ''தொட்டிலில் சேய் உறங்கத் தொடங்கும் முன்னே கால்கழிந்த கட்டிலில் நீயுறங்கும் காலம் வருமென அறியேன்; கட்டிலில் நீயுறங்கும் காலம் வருமென அறியன் செந்நிறமுடைய கொட்டியின் மலர் வாயாய் பகைநாடு அடைய மாட்டேன்''[99] என்ற பாடலால் அறிய இயலும். இதில் பாவலர்மணி அவர்கள் அருளாழியாகவே காட்சி அளிக்கின்றார்.

## ஆறு என்ன அழகி

சொற்கள் என்னும் படையலின் மூலம் வாசகர்களுக்கு விருந்து படைக்கும் நுட்பம் வாய்ந்தவராகப் பாவலர்மணி அவர்கள் காட்சி தருகின்றார். "வெறும் உலகியற் பொருள்களால் அல்லது புலன்களால் பெறும் உணர்ச்சியினும் அவற்றை அடிப்படையாகக் கொண்டு உணர்த்தப் பெறும் நீதி, ஆன்மீகம் ஆகிய

உணர்ச்சிகள் தரத்தில் மிக உயர்ந்தவையாகும்"[100] என வின்செஸ்டர் கூறுவதாக தா.ஏ.ஞானமூர்த்தி கூறுகின்றார். நாவுக்கு சுவை மிக்க உணவுகளைத் தருவதாக இராசமாபுரத்தில் ஒலி கேட்பதாக இப்பாடலானது அமைந்துள்ளது. இதில் மேலும் அவர்களின் விருந்தோம்பல் சிறப்பும் இடம்பெற்றுள்ளது. இத்தகைய ஆற்றல் மிக்க சொற்களின் ஆளுமையைப் பாவலர்மணி அவர்களின் காப்பியத்திலும் காணமுடிகின்றது. ஆற்றின் சிறப்போடு உழவர்களின் அரும் பணியினையினையும் விவரிக்கும் பாங்கினை, "இருளெடுத்து வைத்ததென்னும் கடலில் பிறந்தாய்! அருளெடுத்து வைத்ததெனக் குளிர்ச்சி கொண்டாய்! வில் விடுத்த கணையென வீறு கொண்டு வியனிலத்து மழைக்காலாய்ச் சிதறிப் பாய்ந்து, கல்லறுத்து மண்ணறுத்துக் காடும் மேடும் சிறிய வாய்க்கால் வாய்க்காலைப் பிரிந்து சென்று, நெல்லறுத்து உழவர் களம் குவிக்கவென்று நிலமறுத்து நடந்து வரும் ஆற்றுப் பெண்ணே!"[101] என்ற பாடலால் அறியலாம்.

## கனவில் உண்ட சோறு பசியைப் தணிக்காது

சொற்களின் மூலம் இயல்பின் வடிவத்தினை இயற்றுவதும் கலையாகும். இயல்புக்குப் பறம்பாக எந்தவொரு தனிச்சிறப்பான இலக்கியத்தையும் படைக்க முடியாது. அன்னி மகள் காப்பியத்தில் திதியனை நினைத்து கவலைக்கொண்ட அன்னி மிஞிலிக்கு தோழி ஆறுதல் உரைக்கின்றாள். அதனை ஏற்றுக் கொள்ளாத அன்னி மிஞிலி "கனவில் உண்ட கனத்த வெண்சோறு நினைவில் அலைக்கும் நெடும்பசியினைத் தீர்க்குமோ?"[102] இங்ஙனம் கூறுவதிலிருந்து இதனை அறியலாம்.

## விண்ணகம் புகுந்தானை வினவும் காலிகள்

உயிர்கள் அனைத்திற்கும் அன்பு என்னும் மூன்றெழுத்து மந்திரம் பொதுவானதாகும். அன்பு என்ற ஒன்றே வாழ்வினை அழகாக்கும் அற்புத உணர்வாகும். இதனைப் பாவலர்மணி அவர்கள் தனது காப்பியத்தில் அழகாக வடித்திருக்கின்றார். தத்தனை இழந்த ஆயன் "உன் முகம் காணாது மனம் சுழலும் ஆக்களுக்கு விண்முகம் பட்டாய் என நான் விளம்புவேனோ? விண்முகம் பட்டாய் என விளம்புவேனேயானால் கண்முகம் சோர்ந்து அழுகின்ற மாடுகளைத் தேற்றுவேனோ?"[103] இவ்வாறு துடிக்கின்றான். அன்பின் ஆழத்தை அன்னி மகள் காப்பியத்தில் உள்ள இப்பாடல் மூலம் அறியலாம்

## இயந்திரப் பாவை ஏலங்குழலி

கணவனை இழத்தல் என்பது ஒரு பெண் அடையக் கூடிய எல்லையற்ற துன்பமாகும். அன்பான கணவனைத் துறந்து வாழக் கூடிய ஒவ்வொரு

மணித்துளியும் நரகத்தில் உய்ப்பதாகும். இத்தகைய கொடுமைக்கிடமான வாழ்வினை ஏலங்குழலியின் மூலம் சீர்மை மிகுந்த சொற்களினால் பாவலர்மணி அவர்கள் பதிவு செய்துள்ளார். இதனை வெள்ளெருக்கிலையார் "மேகம் படர்ந்த மதியென ஒளி இழந்தும், ஐம்பொறியும் அடங்கினாளாகியும் இயந்திரப் பாவை இயங்குதல் என உயிர் இல்லாததாகிய உடம்பொடு திரியும் வாழ்க்கையும் நினக்கு வந்ததே மகளே!"[104] இங்ஙனம் வேள் எவ்வியை இழந்த ஏலங்குழலியிடம் கூறுவதிலிருந்து அறியலாம்.

## வளையுள் பதுங்கிய கோசர்

கொடியவர்களின் கோழைத் தனம் நகையுணர்வினை மிகுதியாகத் தூண்டுவதாகும். அன்னி மகள் காப்பியத்தில் திதியனின் வீரத்தினால் வீழ்ந்திட்ட கோசர்களின் இழிநிலையைப் பாவலர்மணி அவர்கள் "பிழைத்திட விரும்பிய பிழைமனக் கோசர் வளையுள் பதுங்கிய எலியாகக் கிடந்ததை இன்று நினைத்தாலும் எத்தனை ஆண்டுகள் சென்று நினைத்தாலும் நகைவரச் செய்யும்"[105] என்று இங்ஙனம் உரைப்பதிலிருந்து அறிய இயலும்.

## அன்னைக்கு இணையான கங்கை

உலகில் பூரணத்தன்மை வாய்ந்த உறவு அன்னையென்றால் அது மிகையாகாது. எதிர்பார்ப்பு இல்லாமல் சகிப்புத்தன்மை நிறைந்த உன்னத உறவாகும். இத்தகைய சிறப்பே உருவான அன்னை என்னும் உறவோடு பாவலர்மணி அவர்கள் கங்கையை ஒப்பிடுகின்றார். சாலி மைந்தன் காப்பியத்தில் கங்கையை வருணிக்குமிடத்து, "இரந்திடும் பிள்ளைக்கு யாவரும் அறிய ஈவதும், சிற்சில பொழுதில் மறைத்தொரு பொருளை வேறொரு மகற்குக் கையளித்திடுதலும் தாயர் பரந்திடும் நெறியாகும். அதேபோல் மாந்தர் தம் உணவுப் பொருளென நீர் தரும் அவளே மரஞ்செடி கொடியாய் பிறந்துள மகர்க்கு மண்ணினுள் மறைந்து அளிப்பவள்"[106] இங்ஙனம் கூறுவதிலிருந்து சொற்களைப் பாங்குற கையாண்டுள்ள பாங்கினை அறியலாம்.

## மங்கையின் நடையினை ஒத்த கங்கை

பொதுவாக நதியின் சீர்மிகு நடைக்கு மங்கையின் நடையை ஒப்பிடுவது கவிஞர் பலரும் பொதுவாகச் செய்வதாகும். வித்தியாசமான கோணத்தினை தனது ஒவ்வொரு சொற்களிலும் புகட்டும் வல்லமை வாய்ந்தவர் பாவலர்மணி அவர்கள் ஆவார். கங்கையின் நடையில் தான் மங்கையரே நடை பழகிக் கொண்டனர் என்று உரைக்கும் "கங்கையின் நடையை மங்கையின் நடையாகக் கவிஞர்கள் கற்பனை

செய்வார்! அங்கையின் உணவை எடுத்து அவள் வருவதால் அன்னநடை என உரைப்போர் பசித்தோர்; கொங்கையின் தோற்றத்தினை குமிழியில் காண்போர் குமரியின் நடையெனக் குறிப்பர்; கங்கையின் நடைதான் இங்குள்ளார் நடைக்குக் காரணம் என்பதை அறியார்''[107] இந்த பாடலில் சொல்நயம் பொதிந்திருப்பதைக் காணலாம்.

## கலை என்ற சொல்லில் வார்த்தை நயம்

அபஞ்சிகளின் சோதிட நம்பிக்கையானது சாலியின் வாழ்வினைச் சிதைக்கின்றது. எந்த ஒரு நம்பிக்கையும் குற்றமாகக் கருதப்படாது.ஆனால் அது எவருக்கும் எந்த ஒரு தீங்கினையும் அளிக்காமல் இருக்க வேண்டும். தீமையைப் பிறருக்கு அளிக்கவல்ல எந்தவொரு நம்பிக்கையும் குற்றமாகக் கருதப்படும். நம்பிக்கை என்னும் பெயரால் பெண்களின் வாழ்வைச் சூறையாடும் ஆண்களை சாலியின் ''சோதிடத்தைக் கலையென்று சொல்வது தான் மிகப் பொருத்தம். சோராத உந்தன் பெரிய உறுதியைக் கலைத்து உந்தன் மனநிலையைக் கலைத்து என் கண் பூக்கும் இன்பக் கனவினையும் கலைத்துப் போட்ட சோதிடத்தைக் கலையென்று சொல்லாமல் எச்சொல்லால் சொல்லக் கூடும்''[108] இத்தகைய வார்த்தை அம்புகளின் மூலம் பாவலர்மணி அவர்கள் துளைத்து எடுக்கின்றார். இங்ஙனம் கலை என்ற சொல்லைக் கொண்டு சமூதாய அவலத்தைப் பாங்காகச் சாடி இருக்கின்றார்.

## ஆபுத்திரன் நின்றதால் அனைத்து நெறியும் நின்றது

குழந்தையின் ஒவ்வொரு செயலும் குதூகலத்தினை ஏற்படுத்துவதாகும். ஒரு குட்டி தேவனின் வரவானது வீட்டிலுள்ள அனைவரின் உளத்திலும் ஒளியை எற்படுத்துவதாகும். எண்ணற்ற அறங்களின் நாயகனான ஆபுத்திரனின் குழந்தைப் பருவ நிகழ்வினையும் பாவலர்மணி அவர்கள் பாங்காக வருணிக்கின்றார். அவன் எழுந்து நின்ற சிறு நிகழ்வினை "அறங்கன் நிற்க, முகம் காட்டும் அன்பும் நிற்க, அருளுணர்வுத் திறங்கள் நிற்க, மேன்மையுறும் செயல்கள் நிற்கப் பாவங்களைக் கொல்லும் ஆற்றல் இப்பெரிய மண்ணில் என்றும் நிலைத்து நிற்கத் தடுமாற்றம் இலாதவனாய் காலூன்றிக் கண்ணன் எழுந்து நின்றான்."[109] இங்ஙனம் சொற்களால் அலங்கரிக்கின்றார்.

## நூலால் அணிசெய்தோனுக்கு முப்புரிநூல் அணிவித்தல்

ஆபுத்திரனுக்கு முப்புரிநூல் அணிவிக்கும் நிகழ்விலும் வார்த்தைகளால் பாவலர்மணி அவர்கள் ஜாலம் செய்கின்றார். நூல் என்ற சொல்லால் பாமாலை தொடுக்கும் பாவலர்மணி அவர்களின் விந்தையினை ''நூலால் உள்ளத்தை

அணிசெய்தோன் நுண்மையான விளைவினையும் நூலால் அளந்து காட்டுதல் போல் நோக்கால் அளந்து காட்டுபவன். நூலாயிரத்தால் அளப்பரிய நுண்ணோனின் மார்பை முப்புரி நூலால் அழகு செய்விக்க இளம்பூதி நோக்கம் கொண்டான்"[110] என்ற பாடலால் அறிய முடிகின்றது.

## இரப்பதை நவிலும் பாங்கு

தொல்லுயிர்க்கெல்லாம் பசித் துன்பத்தினைப் போக்கும் அரிய செயலில் ஆபுத்திரன் ஈடுபடுகின்றான். இரத்தல் என்பது யாருக்கு இழிவாகக் கருதப்பட மாட்டாது என்பதை, "இரந்து கொள்ளுதலென்பது வாழும் மனிதர்கள் யாவருக்கும் போகும் பாதையன்று காண்பாயாக; இரந்து வாழுவதற்கு யாவரும் எண்ணினால் ஈவதற்கு இவ்விடம் யார் இருப்பார் கொலோ? இரந்து வாழுவதற்கு ஏற்றவர் மட்டுமே ஏற்று வாழ்தல் வேண்டுமாம்; மற்றவர் இரந்து வாழுதற்கு எண்ணுதல் போன்றதோர் இழிவு வேறு இல்லை என்றுளங் கொள்வாயாக."[111] என்று வார்த்தை பூக்களால் வண்ணமாலையினைப் பாவலர்மணி அவர்கள் தொடுக்கின்றார்.

## குப்பையில் பிறந்த குருக்கத்தி ஆபுத்திரன்

சாலி மைந்தன் காப்பியத்தில் ஆபுத்திரன் தனது வாழ்க்கை வரலாற்றை இளஞ்சாத்தனிடம் கூறும் போது குலப்பெருமை சிறிதும் இல்லாதவன் என்று வருத்தம் கொள்கிறான். "கொடிப்பிறப்புக் குப்பையிலே என்பதற்காக மாதவிக் கொடியின் மலரினை யார் வெறுத்து விட்டார்?"[112] பாவலர்மணி அவர்கள் இங்ஙனம் கூறுகின்றனர். இதன் மூலம் சமூகத்திற்கு வித்தாகும் நல்லவர்கள் எக்குலத்தில் பிறந்தாலும் கொண்டாடப்படுவர் என்பதை சொல்லோவியத்தால் வரைகின்றார்.

இவ்வாறு பாவலர்மணி அவர்கள் இயல்பாக அமைந்த ஒன்றைப் பாங்குற விவரிக்கவும், இயல்பை இயல்பின் பாணியிலே உரைக்கவும், வீரம், சோகம், பயம் போன்ற உணர்வுகளைச் சொல் உளியினால் வடிக்கவும் சொற்களைப் பாங்குற அமைக்கின்றார். ஒரே சொல் தரும் பல பொருளைக் கொண்டு வண்ணக் கவிதை வடிக்கின்றார். சொல்லோவியத்தினை தனது கற்பனைத் தூரிகையின் மூலம தீட்டுகின்ற ஒப்பற்ற ஓவியராகத் திகழ்கின்றார் என்பதை இவரது காப்பியங்கள் பறைசாற்றுகின்றன.

## பொருள் நயம்

உயர்ந்த கருத்தின்றி நடை மட்டும் ஆற்றல் மிகுந்து இருக்குமேயாயின் அவ்விலக்கியத்தினைத் தரமான இலக்கியம் என மதிக்க இயலாது. பொதுவாக ஒருவருக்கு ஆழ்ந்து சிந்திக்கும் ஆற்றலும், பிழை இல்லாமல் சிந்திக்கும்

வன்மையும் இருந்தால் தான் பொருள் நயம் என்பது திண்ணம் ஆகும். இலக்கியம் என்ற கலையானது உன்னிப்பாகவும், சிந்தித்தும் அமைக்கப்படும் பொழுது தான் அது உன்னத வடிவம். இந்த உன்னத வடிவம் பொருள்நயத்தினால் உருப்பெறுகின்றது. அதனால்தான் சொல்லோடு பொருளும் இன்றியமையாதது என்பதை விளக்கும் வகையில் வ.சுப. மாணிக்கம் "பொருளும் சொல்லும் ஒரு மொழிக்குச் சோறும் நீரும் போல்வன"[113] என்று குறிப்பிடுகிறார். மனித வாழ்கையில் இறப்பும், பிறப்பும், வளர்ச்சியும், கேடும் மாறி மாறி வருவதனைப் புறநானூற்றுப் புலவர் ஒருவர் நன்கு உணர்ந்திருக்கின்றார். தன்னுடைய கருத்திற்கு வானத்துத் திங்கள் அணி சேர்ப்பதனை எண்ணி வியந்த கவிஞன் அது உணர்த்தும் பொருளின் ஆழத்தை,

**"தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்**
**மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்**
**அறியா தோரையும் அறியக் காட்டித்**
**திரிதரும் புத்தேள் திரிதரும்"[114]**

என்ற பாடலின் மூலம் இதனை அறிய இயலும். இத்தகைய பொருள் நயமானது பாவலர்மணி அவர்களின் காப்பியங்களை அழகுபடுத்தும் திறத்தினை இனிக் காணலாம்.

## நோயற்ற நாளே திருநாள்

வறுமை என்பது விவரிக்க முடியாத கொடுமையாகும். வறுமையானது ஒரு வீட்டில் குடி அமர்ந்தால் சந்தோஷம், நிம்மதி, அமைதி உடல் ஆரோக்கியம் போன்ற ஆனந்த திறவுகோல்கள் வெளியேறிவிடும். நோய் ஏற்பட்டால் அதனைப் போக்க முடியாத அளவிற்கு வறுமையின் கோரப்பிடியில் காரல் மார்க்சின் வாழ்க்கை நகருவதை, "வருகின்ற நோயை மருந்தாலே விரட்டியதாக ஒருநாளும் வரலாறு இல்லை. பெரிய மனதுடன் அந்நோய் தான் வருத்தியது போதுமெனப் பெயர்ந்தால் தான் உண்டு. திருநாளாய் அவர் மதித்த நாள் எந்நாள் என தெரிவீரா? நோயே இல்லாத ஒருநாள் தான். அத்தகைய திருநாளை ஒருநாளும் கண்டதில்லை"[115] என்று அழகாக வடித்திருக்கின்றார் பாவலர்மணி அவர்கள்.

## பொய் நன்மை பயப்பதில்லை

பொய் என்பது ஒரு மின்னல் போன்றது. தோன்றிய வேகத்தில் மறைந்து விடக் கூடியது. பொய்யின் ஆயுள் மிக மிகக் குறைவு என்பதால் அதன் மூலம் எந்தவொரு நன்மையையும் கொண்டு வர முடியாது என்பதனை குழலியைப்

பறிகொடுத்த அருளாழி “பொய்யுரைத்தால் ஒன்றும் புரை வருவதில்லை எனும் பொய்யுரையே என்னுயிரைப் போக்கும் என அறியேன்; பொய்யுரையே என்னுயிரைப் போக்கும் என அறியின் பொய்யுரையோம்! பொய்யுரையோம்! பொய்யே உரைக்க மாட்டோம்”[116] இங்ஙனம் உரைப்பதிலிருந்து இதனை அறியலாம்.

## நெஞ்சைத் துளைக்கும் வாளிகள்

சொற்கள் என்பது கவனமாகக் கையாளப்பட வேண்டிய ஒன்று. ஏனென்றால் ஆராய்ந்து வெளியிடப்படும் சொற்கள் மனதை வருடும் வல்லமை வாய்ந்தது. ஆராயாது வெளிப்படும் சொற்கள் இதயத்தைத் துளைக்கும் கொடூரத் தன்மை கொண்டதாகும். அன்னி மகள் காப்பியத்தில் இந்திர விழாவைக் காண வந்த அன்னி மிஞிலி “வில்லினுள் எத்தனை வகையுள்ளன! அன்பில்லாத சொல்லினும் நெஞ்சைத் துளைப்பன அம்புகள்;”[117] இவ்வாறு கூறுவதன் மூலம் இதனை அறியலாம்.

## இன்பமும் துன்பமும்

இன்பமும், துன்பமும் மாறி மாறி ஏற்படுவது இயல்பான ஒன்று. இரண்டும் அதிகமாகும் பொழுது கண்கள் அதனைத் தடையின்றித் தெரிவிக்கும் நுட்பம் வாய்ந்ததாகும். இந்த நுட்பத்தினை திதியனிடம் அன்னி மிஞிலி மணத்திற்கு உடன்படாத தந்தையை நினைத்து “இன்பமும் துன்பமும் எதிரெதிர்ப் பொருள் என்பது பொய்யே! இரண்டும் ஒன்றே! இருமையும் வேறு வேறென இயம்பின் பெருகிய கண்ணீர் ஈரம் புலரும் முன் அவலக் கண்ணீரின் அருவி தோன்றுமோ?”[118] இவ்வாறு கூறுவதிலிருந்து இதனை அறிய இயலும்.

## மக்களின் மாண்பை நவிலும் பாங்கு

கவிஞர்கள் பொதுவாக மக்களின் மாண்பு குறித்துக் கூறும் பொழுது தன்னுடைய உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்துவது இயல்பு. எத்தகைய மக்களால் உலகம் நிரம்ப வேண்டும் என்ற ஆவலை வெளிப்படுத்தும் வண்ணம் இத்தகைய பாடல்களானது அமைவதுண்டு. சாலி மைந்தன் காப்பியத்தில் வாரணாசி நகரின் சிறப்பை “இரத்தல் என்பது காதலில் அல்லது வெளியில் யாங்கணும் புலப்படவில்லை. மறைத்தல் என்பது மறைக்க வேண்டிய உறுப்பு அல்லது வேறான பொருளை மாய்த்திடுதல் பார்த்திலோம். பொருந்தும் கல்வியும் செல்வமும் பூத்ததோர் திருந்திய வாழ்க்கையர். செவ்விய இல்லறத்தில் இருந்து நல்லறம் பேணியே புகழினைக் காணுறும் மாண்புறு வாழ்வினார்.”[119] இங்ஙனம் புகழ்வதில் இருந்து ஆழ்ந்த பொருள் சிறப்பு இலங்குவதை அறியலாம்.

## பொய்யுரைப்போரை விரும்பாத நகரம்

பொய்மை என்னும் இழிகுணம் தான் பல்வேறு கேடுகளுக்குக் காரணமாகும். பொய் என்ற ஒரு இழிகுணத்தை ஒரு மனிதன் துறந்தால் அவனிடமுள்ள அனைத்து தீய குணங்களும் மடிந்து போகும் என்றால் அது மிகையாகாது. அத்தகைய நகரைத் தம் மனக்கண்ணில் காண விரும்பும் பாவலர்மணி அவர்கள் “செய்யை நாள்தோறும் ஓம்பும் உழவரின் மெய்யை நாள்தோறும் விரும்புதல் அன்றி அப்பொய்யை மெய்யெனப் புத்தியுள் மேற்கொள்ளும் சிறுமையைச் செய்பவரைக் காணுதல் இல்லை”[120] என்று ஆழ்ந்த பொருள்நயம் தோன்றப் புனைந்துள்ளதைக் காணலாம்.

## மாற்றுத் திறனாளிகள் ஏற்று உண்ண நாண வேண்டியதில்லை

உழைக்க இயலாதவர்களும், இல்லாதவர்களும் இரந்துண்ண நாண வேண்டியதில்லை. ஆனால் நல்ல நிலையில் உடல்நலம் வாய்க்கப் பெற்றவர்கள் இந்த இழிவான செயலைப் புரிய நாணவேண்டும் என்பது சிறந்த சமூக சிந்தனை. இதனைப் பாவலர்மணி அவர்கள் ‘‘காணக் கண்ணில்லாதவர், கால் முடமாயினோர், மிகுந்த மூப்பினர், பேணுநர் இல்லாதவர் ஏற்று உண்ண நாண வேண்டியதில்லை. நல்லுடல் வளம் வாய்த்திடப் பெற்றவர் பேராசையினால் ஏற்று உண்ணச் செல்வரேயானால் விரிகடல் மருங்கில் ஓங்கிய இந்நிலம் பல் காட்டிச் சிரித்து எள்ளிடும் என்பது வள்ளுவன் மொழி என்பதை நினைமின்’’[121] இங்ஙனம் பொருள் பொதிந்த சொற்களால் அழகாக வெளிப்படுத்துகின்றார்.

## நீரின் மூலம் ஆழ்ந்த தத்துவம்

ஏற்ற இறக்கம் என்பது மானுடத் தத்துவம். எந்தவொரு நிலையும் நிலையானது என்பதை யாரும் நினைத்துவிடக் கூடாது. இதனைப் பாவலர்மணி அவர்கள் நீரின் தன்மையை அடிப்படையாகக் கொண்டு அழகாக உரைக்கின்றார். இதன் பொருள் சிறப்பை “வானிலிருந்து கீழ்வந்தாய், வரும் நாளில் மீண்டும் கீழிலிருந்து மேற் செல்வாய். மேலிருந்து கீழுறுதல், கீழ் மேலாதல் தான் இங்கு வழக்கமென நீ கிளத்தும் பாடத்தை உணரவில்லை.”[122] என்ற பாடலால் அறியலாம்.

இங்ஙனம் பொருள் நயம் தோன்றப் பாவலர்மணி அவர்கள் தனது காப்பியங்களைப் படைத்திருக்கின்றார். சமூக அவலங்களையும், உலகியல் உண்மைகளையும், உணர்வின் ஆழங்களையும் தனது கவிதைகளின் மூலம் பாங்குறப் படைத்திருக்கின்றார். மேலும் தனது கனா உலகம் எத்தகைய

மக்களுடன் விளங்க வேண்டும் என்பதையும் அழகாக வெளிப்படுத்துகின்றார் சிறந்த கருத்துக்களை சீரிய நடையில் சிறப்புடன் வெளிப்படுத்துகின்றார்.

## குறள் கருத்தினை வெளிப்படுத்துதல்

அன்றாட வாழ்வில் இரண்டறக் கலந்தது திருக்குறள் என்றால் மிகையாகாது. அனைத்து உணர்வுகளையும் பதிவு செய்த பொக்கிஷம் என்பதால் பேச்சில் இயல்பாகவே குறளானது கழிநடனம் புரியும். இலக்கியங்களில் திருக்குறளின் கருத்துகள் இடம்பெறுதல் குறித்து தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், "ஒன்றோடொன்று போராடும் சமயங்கள் எல்லாம் ஒரு சேரத் தத்தம் நூல் எனப் பாராட்டும் நூல் திருக்குறளேயாம். மேல்நாட்டில் விவிலியம் போலத் தமிழ்நாட்டில் திருக்குறள் பரவியுள்ளது. அவ்வாறே போற்றப் பெறுகிறது. விவிலியச் சொற்றொடர்கள் பழமொழிகளாக அங்கு வழங்குவது போலத் திருக்குறளின் சொற்றொடர்கள் தமிழ் நூல்களிலும் தமிழர் பேச்சுகளிலும் பெருவாரியாக வழங்கி வருகின்றன."[123] என்று கூறுகிறார். பாமரர்களின் மொழி நடையில் தவழும் குறள் குழந்தை பாவலரின் கைவண்ணத்தில் தளர் நடையிடுவதனைக் காப்பியங்களில் காண முடிகின்றது.

## அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்

அச்சம் என்பது வீரர்களுக்குத் தேவையில்லாத ஒன்று என்பது பொதுவான கருத்தாகும். ஆனால் தேவையான அச்சம் ஒருவனைக் கொண்டு செல்லும் உச்சமென்பது வள்ளுவரின் கருத்தாகும். அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சுவதே அறிவுடையவர்களின் செயல் என்பதை,

**"அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது**
**அஞ்சல் அறிவார் தொழில்"[124]**

இக்குறளின் மூலம் அறியலாம். இந்த கருத்தினைப் பாவலர்மணி அவர்கள் பொருத்தமான இடத்தில் கையாண்டிருக்கின்றார். அன்னி மகள் காப்பியத்தில் அன்னி பழம் பகையினைக் காரணம் காட்டி மறுக்கின்ற பொழுது அமைச்சர் "அஞ்சுவது அஞ்சாமை பேதைமை. அஞ்சுதற்கு அஞ்சல் அறிவுடையவர்களின் தொழிலென்னும் அரசியல் நெறியும் அறிந்தனை அன்றோ!"[125] இங்ஙனம் கூறுவதிலிருந்து இதை அறியலாம்.

## மாற்றான் வலியினை உணர்தல்

தன்னுடைய பலத்துடன் எதிரிகளின் பலத்தையும் அறிந்து வைத்திருப்பதே ஒரு சிறந்த வீரனின் இலக்கணம் ஆகும். செயலின் வலிமை, தன் வலிமை,

மாற்றாரின் வலிமை, துணைப்படை வலிமை ஆகிய நான்கினையும் சீர் தூக்கி பார்த்துப் போரில் ஈடுபட வேண்டும் என்பதை,

**“வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்**
**துணைவலியும் தூக்கிச் செயல்”**[126]

இங்ஙனம் வள்ளுவர் குறிப்பிடுகின்றார். இதனைப் பாவலர்மணி அவர்கள் பொருத்தமான இடத்தில் கையாண்டிருக்கின்றார். கொடுமையே உருவான கோசர்கள் ஆநிரை கவர்ந்து சென்ற பொழுது அன்னி கொதித்து எழுகின்றான். அப்பொழுது அமைச்சர் “சினத்தால் அழிதல் சீர்த்தியோ? அன்று சினத்தை அழித்தலே சீர்த்தியாகும்; மேலும் தன் வலி மாற்றான் தனக்குள்ள வலியோடு எண்ணியும் கால இடத்தினைத் தேர்ந்தும் வினை செய்வது அறிவாம்”[127] என்று கூறுவதிலிருந்து இதனை அறியலாம். இவை போன்று பல இடங்களில் குறள் கருத்தினைப் பாவலர்மணி அவர்கள் பாங்குறக் கையாண்டுள்ளார்.

## பழமொழி மேற்கோள்

பழமொழி என்பதும் வழக்கமான பேச்சில் தடையின்றி இடம்பெறுவதாகும். ஏட்டில் ஏறாமல் வாய்மொழியாகவே வழங்கி வரும் பழமொழிகள் மொழிநடைக்கு மேலும் சிறப்பினைத் தருவதாகும். மூத்தோர் சொல்லும் முழுநெல்லிக்காயும் முன் புளிக்கும்; பின் இனிக்கும் என்ற பழமொழியினைப் பாவலர் மணி அவர்கள் திதியன் எவ்வியின் மரணத்தை நினைத்து சினம் கொள்ளும் பொழுது வெள்ளெருக்கிலையார் “மூத்தோர் சொல்லும் முதிர்ந்த நெல்லியும் முன்னர்ப் புளிப்பினும் பின்னர் இனிக்கும்”[128] என்று கூறுவதிலிருந்து இதனை அறிய இயலும். மேலும் ஒவ்வொருவரின் தகுதியும் உண்மையாக உயரும் பொழுது அமைதி என்ற அரிய பண்பு இயல்பாகவே பிறக்கும் என்பதை ஆயிரம் உடையவர் அமர்ந்திருப்பார்; கந்தை பொறுக்கி தொந்தோம் என்று கூத்தாடுவான் என்ற பழமொழி பறைசாற்றுகின்றது. இப்பழமொழியினை கோசர்களின் அவையில் அன்னி அவமானப்படுத்தப்படும் பொழுது கீரன் “ஆயிரம் உடையவர் அமைதியே காப்பார். கந்தை பொறுக்கி தொந்தோம் என்று ஆடுவான்” என்னும் பழமொழிக்கு இலக்கியம் ஆயினீர்!”[129] என்று கூறுவதாகப் பொருத்தமாகப் படைத்துள்ளார். இங்ஙனம் பாங்குற பல பழமொழிகளைப் பாவலர்மணி அவர்கள் வடித்திருக்கின்றார்.

பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் சொல்நயம், பொருள் நயம் அமைந்து இயல்பான இலக்கிய இன்பத்தினை வழங்குகின்றது. குறள் கருத்துக்களையும், பழமொழிக் கருத்துக்களையும் தேவையான இடங்களில்

சரியான நயத்துடன் கையாண்டிருக்கின்றார். பொருத்தமான இடங்களில் கையாள்வதன் மூலம் இலக்கியம் செழுமை பெறுகின்றது.

## கற்பனையாற்றலை மிகுவிக்கும் வண்ணம் முன்னைய நிகழ்ச்சிகளைச் சான்று காட்டுதல்

ஒரு படைப்பாளன் தான் பெறும் உணர்ச்சியையே மற்றவரும் அடையச் செய்வதற்கு அவன் தன் உணர்ச்சியைத் தூண்டிய காட்சியினைக் கற்பனையாக வடிக்கின்றான். எனவே உணர்ச்சியினைத் தூண்டுவதற்குரிய நெறிகளுள் கற்பனை இலக்கியங்களில் சிறந்த வடிவமாகக் கருதப்படுகின்றது. பொதுவாக இரசனையாளர்கள் ஒரு பொருளைக் காணும் போது மேற்போக்காகக் கண்டு மகிழும் அளவிலேயே நின்றுவிடுகின்றனர். ஆனால் கவிஞர்கள் அதே பொருளைக் காணும் பொழுது அதன் அழகை முழுமையாகவும், நுணுக்கமாகவும் காணுகின்றனர். நிலவின் அழகினைக் கண்டு கவிமணி,

**"பாலாழி மீதுபடர்ந்த வெண்ணெய் - ஒரு**
**பந்தா யுருண்டு திரண்டதுவோ**
**மேலா யுலகில் ஒளிசெயவே - ஈசன்**
**விண்ணகமிட்ட விளக்கிதுவோ?"**[130]

என்று வடித்திருப்பதில் கற்பனையின் ஆழத்தினை அறியலாம். இத்தகைய கற்பனை நயத்தோடு நிகழ்ச்சிகளைப் பாவலர்மணி அவர்கள் நவிலும் பாங்கு பின்வருமாறு.

## கையுறை கொடுக்கும் கடுவன்

பொதுவாக மனிதர்கள் அழகை கண்டு மகிழ்வதுடன் அமைதி அடைந்து விடுவர். ஆனால் கவிஞர்கள் அந்த அழகை மறவாது போற்றி வேறொரு இடத்தில் மற்றொரு அழகைக் காணும் பொழுது இருவகை அழகுணர்ச்சிகளையும் ஒன்றாக்கிப் புதியதோர் அழகின்ப உலகத்தினைப் படைத்துக் காட்டுகின்றார். அத்தகைய நிறம் வாய்ந்த கவிஞராகப் பாவலர்மணி அவர்கள் காட்சி தருகின்றார். சுரும்பார் குழலி நீராடச் செல்லும் பொழுது "அஞ்சிப் பதுங்கும் வெண்முயல் தாவுதல் கலிப் பாட்டோசையைக் காட்டுதல் அறிக! புலிப்பெயர் தாங்கும் வேங்கை மரப்பூவின் பொன்னிறம் காண்க! வெடித்துச் சிரிக்கும் வெண்மலர்க் கொத்தினை ஒடித்துக் கடுவன் உவப்புடன் மந்திக்குக் கையுறை கொடுத்தல் காண்மின்! காண்மின்!"[131] இவ்வாறு பெண்களில் ஒருத்தி இங்ஙனம் கூறுவதிலிருந்து அறியலாம்.

## மாமரத்தினை வீழ்த்திய களிறு

கவிஞன் தன் கற்பனையின் துணைகொண்டு நம்மைப் புதிய உலகத்திற்கு அழைத்துச் செல்பவன். வாசகர்கள் காணாத அழகையெல்லாம் முழுமையாகக் காட்டி இன்புறுத்துவதில் வல்லவன். கவிஞன் தான் கண்ட காட்சியினை உணர்ந்த உணர்வினைப் தனது படைப்பின் வாயிலாக வெளிப்படுத்துகின்றான். அனிச்ச அடி காப்பியத்தில் களிற்றின் மூலம் மாமரத்தை அழித்த போது கற்பனை தாண்டவம் ஆடுவதை ‘‘வெண்மணிக் கோடெல்லாம் வேழத்தின் குருதியினால் செம்மணிக் கோடெனத் திகழுதல் காணியர்!’’[132] என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

## மதியில்லாத மதி

கவிஞன் என்பவன் தனது படைப்புக் கலையில் வெற்றி பெறும் பொழுது தான் கற்பனையானது பிறக்கின்றது. கவிஞன் படைத்த பாடலானது வாசகனின் உள்ளத்தைத் தொட்டு உணர்விற்கு விருந்து படைக்க வேண்டும். படைப்பவனும் பயில்பவனும் பயணிக்கும் கலை உலகில் கவிஞன் வாகை சூடுவதற்கு அடித்தளமாக அமைவது கற்பனை ஆகும். இத்தகைய வெற்றி வாகையினைப் பாவலர்மணி அவர்கள் சூடிக் கொண்ட பாங்கினை “தேய்ந்தாய்! தேய்ந்தாய்! சில நாட்கள் ஒழிந்து போயினாய்! ஆயினும் மதியில்லாது அலையும் நின்னையும் வாய்மை இல்லாதவர் மதியென உரைப்பது என் வஞ்சமோ? பார்வைக் கணையின் மூலம் என் உள்ளப் பறவையினை அழியுமாறு எய்தவன் எவனோ? தேர்கிலேன்;”[133] என அன்னி மகள் காப்பியத்தில் திதியனை எண்ணி வாடும் அன்னி மிஞிலி நிலவினைப் பழிப்பதிலிருந்து அறிய இயலும்.

## வானில் பட்டமும் பொய்க்காற் குதிரையும்

பொருத்தம் நிறைந்த சிந்தனையும், தகுதியான உணர்ச்சியும் கற்பனைக்கு வித்தாக அமையும். புலவரின் உணர்ச்சியானது ஆழமாகவும், உயர்வாகவும் அமையும் பொழுது தான் உன்னத கற்பனையானது உருப்பெறுகின்றது. அன்னி மகள் காப்பியத்தில் போர்க்களக் காட்சியானது பாவலர்மணி அவர்களின் கற்பனைத் திறனுக்குச் சான்று பகர்கின்றது. யானையின் குடலை கழுகானது இழுத்துக் கொண்டு பறக்கும் காட்சியினை ‘‘யானையின் விலாப்புறத்து எ∴கம் பிளந்திட வயிற்றின் நீள்குடல் பிடித்தே கழுகு வானம் ஏறிப் பறந்திட வருகுடல் இடையறாது வளர்வது காணின் சிறுவர் வானிடைப் பட்டம் செலுத்தலை நினைவில் கொணரும்’’[134] இங்ஙனம் பாங்குற வடிக்கின்றார். கால்களற்று புரவி கிடப்பதை ‘‘கத்தரிக்கப்பட்ட பிடரியையுடைய குதிரையின் கால்கள் நான்கும் கொய்திட

பொய்காற் குதிரை போலக் கிடந்ததே!"[135] என்றும் சொல்லுளியினால் செதுக்குகின்றார். இங்ஙனம் போர்க்களக் காட்சியினைப் பாவலர்மணி அவர்கள் உரைப்பதிலிருந்து கற்பனை நயத்தினை நன்கு அறிந்து கொள்ளலாம்.

## யானையின் குடவயிற்றில் நரி

கற்பனை என்பது கவிஞனின் மனச்சித்திரம் ஆகும். மனதில் தோன்றும் சித்திரத்தினை கவியில் புனையும் திறத்தில் தான் உன்னதக் கலை வடிவம் உருப்பெறுகின்றது. போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கும் யானையின் வயிற்றில் உள்ள ஊனை முழுவதுமாக உண்டு மீள்கின்ற நரியின் தோற்றத்தினை வர்ணிக்கும் பாவலர்மணி அவர்கள் கற்பனையின் எல்லையினைத் தொட்டு விடுகின்றார். இதனை "மலையொன்று உருண்டு மண்ணில் கிடந்தாலெனக் கொலைப்பட்டுக் கிடந்த களிற்றின் குடம் போன்ற பெரிய வயிற்றில் நுழைந்த நரியானது உணவை உண்டு மீள்கையில் பொந்தின் வழியே தலையை நீட்டுதல் இருமரப் பொந்தில் உருவினை மறைத்து தலையினைக் காட்டும் ஆந்தையெனத் தோன்றும்"[136] என்ற பாடலின் மூலம் அறிய இயலும்.

## பல்பொருள் அங்காடியை ஒத்த கங்கை

பலபொருள்களைச் சுமந்து கொண்டு வரும் கங்கையின் அழகை கண்டு கற்பனை உள்ளம் பெருக்கெடுக்கின்றது. இதனைக் காட்சிப்படுத்தும் விதம் மிக அழகானது. சாலி மைந்தன் காப்பியத்தில் எண்ணற்ற பொருள்களுடன் வலம் வரும் கங்கையின் வனப்பை "செம்பொன்னை நிறுத்து மணிக்குலம் அளந்து சேரும் மயில் தோகையை விரித்து வெண்கரிக் கோட்டின் தொகையினைப் பரப்பி விரைமிகும் ஆரமும் அகிலும் பொங்கரின் பூவும் வெம்புலிக் குருளை போல்வன ஆயிரம் கொணர்ந்தே இங்கு பல்பொருள் அங்காடியைப் போல இலங்குமாம் கங்கையின் நீத்தம்"[137] இவ்வாறு பாவலர்மணி அவர்கள் கற்பனை நயம் தோன்ற வெளிப்படுத்துகின்றார்.

## ஆய் மகண் நடையுடன் ஒத்த கங்கை

சாதாரண செயலையும் கலைநயத்துடன் வடிக்கும் பாங்கு கவிஞனுக்கே கைவரப் பெற்றதாகும். படகுதனைச் சுமந்து ஆற்றுநீர் செல்வது இயல்பான ஒன்று. இதனைப் பாவலர்மணி அவர்கள் "அகன்று மெல்லென்ற ஒழுக்கினையுடைத்தாய். அலைக்கரம் வீசியும் பரியின் முகன்படும் ஓடம் தலைமிசைச் சுமந்து முறைமுறை நடத்திடும் பொழுது சூரியன் எழும் முன்னர் பால்தயிர்க சுடையைக் கொண்டு விற்க ஆய்மகண் முறை நடக்கும் நடை இஃதென்று மயங்குமோ என் சிறு

நெஞ்சம்.”[138] என்று சாலிமைந்தன் காப்பியத்தில் கற்பனை நயம் தோன்றுப் பாங்காக வடிக்கின்றார்.

## பூமியில் பூத்த வானவில்

நகரின் இயற்கை வனப்பை வருணிக்கும் இடத்தில் பாவலர்மணி அவர்கள் கற்பனையின் எல்லையைத் தொட்டு விடுகின்றார். வானில் தோன்றும் வானவில்லைத் தனது கற்பனைத் தூரிகையின் மூலம் பூமிக்குக் கொண்டு வந்து விடுகின்றார். இதனை ‘‘வெடி மலர்களை வீசியும் பல வண்ணப் பொடிகள் தூவியும் பூவிடையில் ஊறிய மணமிக்க நீர்த்துளி சிந்தலால் அதனைக் காண்பவர் பூமியில் வானவில் பூத்ததைப் பார்ப்பராம்’’[139] என்ற பாடலால் அறிய முடிகின்றது.

## படைமறவர் புகுந்ததெனப் பொழியும் வானம்

சாதாரண நிகழ்வினையும் கண்களுக்கு விருந்தாக்கி அளிப்பது கவிஞனுக்கே கைவரப் பெற்ற ஒன்றாகும். இயற்கையில் இயல்பாக நடைபெறும் ஒவ்வொரு நிகழ்வும் கவிஞரின் கைவண்ணத்தால் காட்சிப்படுத்தப்படுவதே கற்பனை நயமாகும். மழைபொழிவினைப் பாவலர்மணி அவர்கள் ‘‘பகைநாட்டுக் கோட்டையினை நாடிச் செல்லும் பரந்த அடியினையுடைய வேழம் போல் மலைகள் தோறும் தகை மேவும் கருங்கொண்டல் முற்றி நின்று தகதகக்கும்; மின்னலென்னும் வெள்ளிக் கொம்பால் வகைமேவும் கோட்டைக் கதவும் பிளக்க ஆங்கே வலிமை மிகுந்த கோட்டைக் கதவின் குறுக்காக இடும் மரம் முறிந்ததென இடி ஒலிக்கத் திகுதிகெனப் படைமறவர் புகுந்தலென்னத் திடுதிடெனப் பெருமழையை வானம் பொழியும்.’’[140] இவ்வாறு பாங்குற தமது கற்பனை உளியினால் செதுக்குகின்றார்.

இங்ஙனம் அனிச்ச அடி காப்பியத்திலும், அன்னி மகள் காப்பியத்திலும், சாலி மைந்தன் காப்பியத்திலும் கற்பனை நயமானது பாங்குற இடம்பெறுகின்றது. காதலின் ஆழத்தினை உணர்ந்தவும், இயற்கையின் அழகை விவரிக்கவும், போர்க்களத்தின் காட்சியினைப் பதிவு செய்யவும் கையாள்கின்றார். காரல் மார்க்சு காப்பியத்தில் கற்பனை இடம்பெறவில்லை. இயல்பே அழகு என்பதால் எந்தவொரு கற்பனைப் புனைவும் காரல் மார்க்சு காப்பியத்தில் இல்லை. கற்பனை என்ற தூரிகை பாவலர்மணி அவர்களின் கைவண்ணத்தில் இடம்பெறுகின்றது. நுட்பமான மற்றும் அழகியல் வல்லுநராகப் பாவலர்மணி அவர்கள் காட்சியளிப்பதை அவரின் காப்பியங்களில் இடம்பெறும் கற்பனை நயங்களின் மூலம் அறிய முடிகின்றது. கற்பனையாற்றலை மிகுவிக்கும் வண்ணம் நிகழ்ச்சிகளைப் பாங்குற வருணிப்பதில் பாவலர்மணி அவர்கள் தேர்ந்தவராகக் காட்சியளிக்கின்றார் என்பதை இதன் மூலம் அறியலாம்.

## சொற்றொடர் இடமாற்றம்

சொற்றொடர் இடமாற்றம் என்பது மிகவும் நுட்பமான ஒன்றாகும். சொற்களை இடமாற்றி நுட்பமாகப் பொருளை நவில்வது உன்னத படைப்பாளனுக்கே உரிய செயலாகும். சொற்களை ஆளுகின்ற வல்லமை படைத்த படைப்பாளனுக்கே இந்த திறமானது எளிதாக வாய்ப்பதாகும். கம்பன் என்னும் கவியினில் வல்லவன் இந்த திறத்தினை கம்பராமாயணத்தில் பாங்குறக் கையாண்டுள்ளான். இலங்கைக்குச் சென்ற அனுமனின் வரவினை இராமன் ஆவலோடு எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறான். அத்தகைய சூழலில் அனுமன் வருகின்றான். சீதையினைக் கண்டதைக் கூறுகின்றான்.

**“கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்**
**தொண்டிரை யலைகடல் இலங்கைத் தென்னகர்**
**அண்டர் நாயகஇனி துறத்தி ஐயமும்**
**பண்டுள துயருமென் றனுமன் பன்னுவான்”**[141]

என்ற பாடலின் மூலம் அறிய இயலும். இந்தப் பாடலில் ‘நான் தெண்டிரை அலைகடல் இலங்கைத் தென்னகர் கற்பினுக் கணியைக் கண்களால் கண்டனென்’ என்றே மொழி மரபுப்படி சொற்றொடர் அமைதல் வேண்டும். இதில் நான் ‘தோன்றா எழுவாய்’, ‘இலங்கைத் தென்னகர் என்பது இடப்பெயர், தெண்டிரை அலைகடல் ‘இடப்பெயரின் அடைமொழிகள். ‘கற்பினுக் கணியை’ என்பது செயப்படு பொருள்; ‘கண்களால் வினையெச்சம், ‘கண்டனென் பயனிலை ஆனால் இப்பாடலின் முதலிரண்டு அடிகளில் பயனிலை முதலிலும் செயப்படு பொருள் அடுத்தும், வினையெச்சம் அதனைபடுத்தும் இறுதியில் அடைமொழிகளையுடைய இடப்பெயரும் அமைந்துள்ளமையைக் காணலாம். சொற்கள் இடமாற்றம் அடைந்து நயமான பொருளைத் தருவதைக் காரல் மார்க்சு காப்பியத்தில் காண முடிகின்றது. சென்னி போன்ற ஒப்பற்ற மங்கை இந்த உலகம் காணாத விந்தைமிகு நங்கை. அத்தகைய சென்னி என்னும் ஒப்பற்ற தியாகச் சுடர் அணைந்தது. மாதர் குல மாணிக்கம் உயிரை நீங்கிய தருணத்தில் எங்கல்சு துடிப்பதனை,

**“துறந்தாளோ தன்னுடைலை; தொல்லைகளைத் தாங்காமல்**
**பறந்தாளோ? தோழனுமாய்த் தம்பியுமாய்ப் பழகுமெனை**
**மறந்தாளோ? மறந்தாளை மறந்தறியேன்; இவள்போலே**
**பிறந்தாளும் யாரென்றே பேதுற்றான் எங்கல்சு”** (கார.மார்.கா,பா:404)

என்ற பாடலின் மூலம் விளங்குகின்றார். இப்பாடலில் தன் உடலை துறந்தாளோ? என்று தான் சொற்றொடர் இடம்பெற வேண்டும். எல்லையற்றத் துன்பங்களையும்,

ஈடு இணையில்லாத அன்பினையும் தாங்கும் உடலினைத் துறந்தாளோ? என்று இழப்பின் ஆழத்தை உணர்த்துவதற்காக இங்ஙனம் சொற்களை நயமாகப் பாவலர்மணி அவர்கள் மாற்றி அமைந்திருக்கின்றார். சென்னியின் உயிர் பிரிந்த கணத்தின் கனத்தினை விவரிக்கவே சொற்றொடர் இடமாற்றத்தினைப் பாவலர்மணி அவர்கள் பாங்குறப் படைத்திருப்பதனை இதன் மூலம் அறிய இயலும்.

## கனவு

கனவு என்பது ஆழ்மனம் திரையிடும் அற்புதப் படமாகும். ஒரு புள்ளியாக மட்டுமே கனவானது துவங்கும். தனிமனிதனின் எண்ணங்களும், குண நலன்களும், வாழ்க்கையில் ஏற்பட்ட அனுபவங்களும் கனவினை வடிவமைக்கின்றன. கனவுகள் ஒரு மனிதனைப் பிரதிபலிக்கும் சாளரமாகும். அத்தகைய கனவானது அனைத்து மனிதர்களுக்கும் தோன்றுவது இயல்பான ஒன்றாகும். இயல்பான நிகழ்வுகளைப் படைப்பில் புகுத்துவது வாசகனுக்குப் படைப்பின் மீது பிணைப்பினை ஏற்படுத்துவதாகும். இத்தகைய உத்தியினைப் பாவலர்மணி அவர்கள் அனிச்ச அடி காப்பியத்தில் சிறப்பாகக் கையாண்டுள்ளார்.

## அணிவளையின் கனவு

அன்பானது அதிகமாகும் பொழுது நெருங்கிய உறவினர்களுக்கு ஏற்படும் துன்பங்களை உள்ளுணர்வின் மூலம் உணர்ந்து கொள்ள முடியும். உணர்வினால் ஒன்றிய உள்ளங்களுக்கே இத்தகைய அரும்பேறானது வாய்க்கும். எயினனும், அணிவளையும் அன்பினால் பிணிக்கப்பட்டவர்கள். எல்லையற்ற அன்பின் வெளிப்பாட்டை எயினனுக்கு ஊறு நிகழப் போவதனை அணிவளை முன்கூட்டியே தனது கனவின் மூலம் அறிந்து கொள்கின்றாள். “புலமையோரே! முன்னர் அருஞ்செருக்களம் அவர் அடைந்த போதெல்லாம் துன்பக் கனவுகள் தோன்றி நெஞ்சத்தை புண்படச் செய்ததில் புதுவது இந்த நிகழ்ச்சி; அரும்பானது அறுமாறு மலர்ந்த நறும்பூ முல்லையில் வண்டுறும் வேளை, சுடர் வாளெடுத்து முதலோடரிவது போலவும், முடிவும் தூறோடு எரியுணர் போலவும் கண்டேன்”[142] என்று அணிவளை தனக்குத் தோன்றிய கனவினை பரணரிடம் உரைக்கின்றாள். இக்கனவானது ஆழ்ந்த நோக்கத்தில் புனையப்பட்டுள்ளது. எயினனுக்கும், அணிவளைக்கும் இடையே உள்ள உறவு நிலையை உரைக்கின்றது. காப்பிய வளர்ச்சிக்கும், நயத்திற்கும் துணை செய்கின்றது.

## நன்னனுக்குத் தோன்றிய நடுக்குறும் கனவு

மனம் என்னும் மாயக் கண்ணாடி செயலின் விளைவுகளைத் திரையிட்டுக் கொண்டே இருக்கும். நல்ல செயல்களினால் தோன்றும் விளைவானது வெளிப்படையாகவும், உளரீதியாகவும் இன்பத்தைக் கொண்டிலங்கும். தீய செயல்களினால் எந்தவொரு நன்மையும் துலங்குவதில்லை. உள்ளத்தை அணு அணுவாய்ச் சிதைத்து மன வலியைக் கொடுக்கும். இதனை நன்னனுக்குத் தோன்றும் கனவின் மூலம் தெரிவிக்கின்றார் பாவலர்மணி அவர்கள். நன்னன் மிஞிலியிடம் "குழலி என்னும் அக்குலப்பிறப்பாட்டி நிழலின் நுடங்கி என் நேர் வந்தாற் போல் தோன்றலும், எதிரில் நின்று துணைவிழி சோர உமிழ்ந்து எழுகின்ற சினத்தீயினை முகத்தில் காட்டி, 'வினைமுதிர் காலம் விளைந்ததா?' என்று கனைகடல் முழக்கமென ஆரவாரம் செய்தலும் அஞ்சத்தக்க வகையில் உடையதால்; அவள் முகம் நினையின் நெஞ்சம் சுடுவதனால் நிகழ்வதை அறியேன்; புனல்யாற்றின் ஒருகரையில் பொலியும் மாமரத்தில் தின்பதற்குரிய தீம்பழம் செழுங்கிளை வளைத்துத் தொங்கக் கண்டேன். சுவை நிரம்பிய கனிகளை கைகளால் பறிப்பதற்காக கிளையை வளைக்கக் கனியெல்லாம் மனிதத் தலைகளாய் மாறிச் சிரித்தன; முனிவும் நகையும் முழங்க ஆர்த்தன; வடுவெல்லாம் குழந்தையின் வளர்கருவாகியும், கெடுவிலா மலரெல்லாம் கெழுதசை போலவும், தேன் துளி குருதித் துளிகள் போலவும், வான்பருந்தாகி வண்டுகள் சுழலவும், திடுக்குற்று எழுதரத் தீர்ந்தது கனவு"[143] என்று தனக்குற்ற கனவினை விவரிக்கின்றான். இக்கனவானது குற்ற உணர்வு வெளிப்பாடாகவும், தீமையின் அழிவினைப் பறைச்சாற்றுவதாகவும் அமைகின்றது. கதை வளர்ச்சிக்கும், காப்பிய நயத்திற்கும் பயன்படுகிறது.

பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் அனிச்ச அடியில் மட்டும் கனவு என்னும் உத்தியானது கையாளப்பட்டுள்ளது. அன்னி மகள் காப்பியத்திலும், காரல் மார்க்சு காப்பியத்திலும் சாலிமைந்தன் காப்பியத்திலும் இடம்பெறவில்லை. அனிச்ச அடி காப்பியத்தில் அன்பின் ஆழத்தை உணர்தவும், குற்ற உணர்வின் வடிகாலாகவும், தீமையின் காரணமாகப் பிறக்கும் இன்பம் எல்லையற்ற துன்பத்தை வரவழைக்கும் என்பதையும் பறைசாற்றுவதற்காகக் கனவு என்னும் உத்தி கையாளப்பட்டுள்ளது.

## கிளைக் கதைகள்

"படர்ந்து விரிந்து விழுதுகள் ஊன்றி நிற்கும் ஆலமரத்தில் தங்கும் பறவைகள் எத்தனை எத்தனையோ? அம் மர நிழல் அணிதேர்ப் புரவி ஆட்பெரும்

படையோடு மன்னர்க்கு இருக்க இடம் தரும் பெற்றியது. இம்மரம் போன்ற பெருங்காப்பியம் படைப்பவன் காப்பியக் கவிஞன். அக்காவியத்தில் எத்தனை கருத்துக்கள்? கருத்துக்களைத் தாங்கி நிற்கும் கிளைக் கதைகள் எவ்வளவு?"[144] என்று சோம.இளவரசு கிளைக் கதைகளின் சிறப்பினை விவரிக்கின்றார். இத்தகைய கிளைக் கதைகளின் அவசியம் குறித்து தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், "ஒரு மரம் தோப்பாவதில்லை. ஓரறை அரண்மனையாவதில்லை. வாழ்க்கையும் ஒருவர் தனித்து வாழும் வரலாறாவதில்லை. எனவே வாழ்க்கையின் நுட்பத்தினை விளக்கும் காப்பியமும் தனியொருவர்தம் கதையினைக் கூறி முடிப்பதில்லை"[145] என்று கூறுகின்றார். கிளைக் கதைகளின் முதன்மையான நோக்கம் காப்பியத்தின் சீரான போக்கிற்குத் துணை செய்ய வேண்டும். சீரிய நோக்கத்துடன் படைக்கப்படுதல் வேண்டும். இடைச்செருகலாக அமைதல் கூடாது. அத்தகைய கிளைக் கதைகளைப் பாவலர்மணி அவர்கள் தனது காப்பியங்களில் புனைந்துள்ள பாங்கினை இனிக் காணலாம்.

## பேகன் - கண்ணகி கிளைக் கதை

அனிச்ச அடி காப்பியத்தில் பேகன் - கண்ணகியின் வாழ்வில் நடந்த நிகழ்வானது கிளைக் கதையாகப் புனையப்பட்டுள்ளது. வையாவிக்கோப் பேகன் தன் மனைவியான கண்ணகியை நீங்குகின்றான். அவனை அவனுடைய மனையாளின் பால் பரணரும், கபிலரும், அரிசில் கிழாரும், பெருங்குன்றூர் கிழாரும் நன்மையினை எடுத்துக் கூறி சேர்த்து வைக்கின்றனர். இந்த கிளைக் கதையானது அனிச்ச அடி காப்பியத்தில் பாங்குற இடம்பெற்றுள்ளது. தன் மகளை இழந்த அணிவளை தனது கணவனை போர்க்களத்திற்கு அனுப்புகின்றாள். கனவானது தோன்றி அவளது அமைதியைக் குழைக்கின்றது. இதனால் ஆறுதல் வேண்டி பரணரின் இல்லத்திற்கு அணிவளை செல்கின்றாள். அங்கு பரணர் எழுத்தாணி கொண்டு புனைவதாக இக்கிளைக்கதையானது காப்பியத்தில் விரிகின்றது. தொடரல் இழப்புகளால் துவண்ட அணிவளைக்கு ஆறுதல் அளிக்கும் வகையில் இக்கிளைக் கதையானது பாங்குற இடம்பெறுகின்றது. பேகன்-கண்ணகி கதையினைக் கேட்ட அணிவளை தான் கண்ட கனவினைக் கூறி "பிரிந்தாலும் கண்ணகி பேகனைப் பெற்றாள் பெரியீரே! எனக்கும் அந்தப் பேறு கிடைக்குமா?"[146] இவ்வாறு கேட்கின்றான். அதற்குப் பரணர் "கனவு பலத்ததைக் கண்டுள்ளோம்; கண்ட கனவெல்லாம் பலித்ததை காண்கில்லோமாதலின் மூடும் இமைக்குள் மூண்ட கனவுக்கு வாடுதல் ஒழிமதி! வாளால் பகையைப் புறந்தரச் செய்து வெற்றியோடு புகுவான். மறக்குல மகளே துயரை மாற்றுக."[147] இங்ஙனம் கூறுகின்றார். இவ்வாறு

கிளைக் கதையினை ஏற்ற இடத்தில் பொருத்தமாகப் பாவலர்மணி அவர்கள் அமைத்திருக்கின்றார்.

## சௌமினி காஞ்சனன் கிளைக் கதை

சாலி மைந்தன் காப்பியத்தில் சௌமினி – காஞ்சனன் கிளைக் கதையானது இடம்பெறுகின்றது. அந்தணர் குலத்தில் பிறந்த சௌமினி குறையேதும் இல்லாத காஞ்சனனை முறையாகத் திருமணம் செய்து கொண்டாள். எல்லையற்ற இன்பத்தில் மகிழ்வுடன் இருந்தாள். அப்பொழுது காஞ்சனன் இறந்து விட்டான். கணவனை இழந்த துன்பத்தைக் காட்டிலும் கலவியில் இன்புற முடியாதே என்ற துன்பமே சௌமினியை ஆழ்த்தியது. எல்லையற்ற காம நோயின் காரணமாக தீயொழுக்கத்ததின் பாற்பட்டாள். அவள் செய்த தீமையெல்லாம் கருவாகி வெளிப்படவே அவளுடைய தீய செயல்களையெல்லாம் உணர்ந்த ஊரார் சௌமினியை ஊரை விட்டு அடித்துத் துரத்தினார்.

பின்பு அங்கிருந்து நீங்கியவள் ஒரு வேளாளரைச் சேர்ந்தவளாய் கீழ் மக்கள் செயலில் உவந்து வாழ்ந்து வந்தாள். கள் அருந்தி இறைச்சி உண்டு வேளாளனுடன் களித்திருந்தாள். ஒருநாள் வேளாளர் திருவிழா காணச் சென்றான். அப்பொழுது சௌமினி தொழுவில் புகுந்து ஆடென்று நினைத்து பசுங்கன்றை வாளால் வெட்டினாள். பின்னர் இளங்கன்று என்று தெரிந்து வருந்திய போதும் அதனை இனிதென்று மிக உண்டாள். பாவச் சேற்றிலிருந்து அகலாத நெறி கொண்டாள்.

சிலநாள் கழிந்து வந்த வேளாளன் கன்றிற்கு என்ன நேர்ந்தது என்று கேட்டான். இளவேங்கை பசுங்கன்றைத் தனது உணவாகக் கொண்டது என்று பொய்யுரைத்தாள். இவ்வாறு தீமைகளின் இருப்பிடமாக சௌமினி வாழ்ந்து வரும் வேளையில் கூற்றுவன் இவளாவியைக் கொண்டுவரப் பணிப்பிக்க ஏற்றவர் தாம் சௌமினியின் இன்னுயிரைக் கொண்டு செல்ல வந்தனர். அப்பொழுது எல்லையற்ற பாவங்களை இவள் செய்த போதும் பசுங்கன்றின் இன்னுயிரைப் பறிக்கும் பொழுது சிவ சிவ என்று ஒருமுறை கூறியுள்ளதால் இவளுக்கு நரகத்தை அளிக்க முடியாது. எனவே புலைச்சியாய் மணமாகாதவளாய் பாவப்பிறவி கொண்டு வாழக் கூற்றுவன் ஆணையிட்டார்.

புதுப்பிறவி எடுத்த சௌமினி புலைப்பெற்றோர் உண்பிக்க மதுப்புழங்கும் இடமெல்லாம் இவளுடைய வழிதடமாகக் கொண்டு வாழ்ந்தாள். பெற்றவர்களின் உடல் நீங்கிப் பெரும்பிரிவு கொண்டமையால் பசிபோக்க வழியின்றி வீடு தோறும் இரந்து உண்டாள். அப்பொழுது ஒருநாள் சேரநாட்டில் உள்ள கோகருணம் என்னும்

சிவத்தலத்திற்கு செல்லுமொரு கூட்டத்தின் பின்னே சென்றாள். பசிக்கு ஏதேனும் ஈயுமாறு வேண்டினாள். அப்பொழுது அவளுக்கு யாதொன்றும் தரவில்லை. அப்பொழுது அவள் பாகமுடையார் கோயிலில் பசித்து உறக்கமின்றி இரக்கும் பொழுது வில்வ இலையை இட்டனர். அப்பொழுது சினம் கொண்ட அவள் அந்த வில்வ இலையை இலிங்கத்தின் மேல் எறிந்தாள்.

இரவெல்லாம் பசியுடன் குளிரில் காய்ந்து கோயிலை வலம் சுற்றி வந்து வில்வ இலையை எறிந்ததால் முக்தி நிலையை அடைந்தாள். இந்தக் கிளைக் கதையானது துறவியின் வாய்மொழியாக சாலி மைந்தன் காப்பியத்தில் இடம்பெறுகின்றது. இளஞ்சாத்தனுடன் பொருந்தாக் கூடலில் ஈடுபட்ட சாலியின் குற்ற உணர்வினைக் குறைக்கும் வகையில் இக்கதையானது இடம் பெறுகின்றது. தெரியாமல் பிழை செய்த சாலியின் மீட்சிக்கு இக்கதையின் மூலம் துறவி ஆற்றுப்படுத்துகின்றார். சாலியின் மனதை வலிமைப்படுத்த

**"நெஞ்சொருப டாதவளாய் நிகழ்ந்துசெயற் கேயிறைவன்**
**தஞ்சமிக வருளுமெனில் தையால் நின் தவறெண்ணி**
**அஞ்சருவி போற்கண்ணீர் வடிக்கின்றாய் ஆதலினால்**
**செஞ்சடையா னினக்கருளிச் செய்வதொருதலையென்றார்"**
(சாலி.மைந்,காண்.1,ப.7,பா:29)

கதையுடன் இந்த சொற்களும் துணை புரிகின்றன.

இங்ஙனம் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் அனிச்ச அடி காப்பியத்திலும், சாலி மைந்தன் காப்பியத்திலும் கிளைக் கதையானது இடம் பெறுகின்றது. காரல் மார்க்சு காப்பியத்திலும், அன்னி மகள் காப்பியத்திலும் இடம்பெறவில்லை. ஆறுதல் தேடி அலையும் உள்ளங்களை அமைதிப்படுத்த இக்கிளைக் கதைகள் பயன்படுகின்றன. இரு கோடுகள் தத்துவத்தின் அடிப்படையில் பிறருடைய வாழ்க்கையோடு ஒப்பிடும் பொழுது தான் வாழ்க்கையின் உன்னதத்தை உணர்ந்து ஒவ்வொரு மனிதனின் அடுத்த கட்ட நகர்வானது அமைகின்றது. இதனடிப்படையில் கிளைக்கதைகள் பாங்காக அமைக்கப்பட்டு கதை வளர்ச்சிக்குத் துணை செய்கின்றன.

## முடங்கல்

கடிதம் என்பது உள்ளக் கருத்தை உற்றவர்க்குத் தெரிவிக்கப் பயன்படும் ஒப்பற்ற சாதனம் ஆகும். நேரில் சென்றுப் பேசும் பொழுது இருமுனைக் கருத்துப் பகிர்வாக இருப்பதனால் சில வேளையில் பிணக்கில் முடிய வாய்ப்புண்டு. ஆனால் கடிதம் என்பது ஒருமுனைக் கருத்துப் பகிர்வு. அதனால் உணர்ச்சி வசப்படவும்

கொந்தளிக்கவும் வாய்ப்பு இல்லை. எண்ணிய எண்ணத்தைப் பாங்குற வடிக்க முடியும். அத்தகைய கடிதமும் வாழ்வோடு இரண்டறக் கலந்த ஒன்றாகும். அத்தகைய கடிதத்தினை சிறந்த உத்தியாகப் பாவலர்மணி அவர்கள் கையாண்டுள்ளார். அதனை இங்கு காணலாம்.

## மார்க்சு – தார்வின் கடிதம்

மூலதனம் இயற்றிய வித்தகரை தார்வின் பாராட்டிக் கடிதம் வடிக்கின்றார். அக்கடிதத்தால் உளம் நெகிழ்ந்த காரல் மார்க்சு மூலதனம் நூலின் ஒரு பகுதியை தார்வினுக்கு சமர்ப்பணம் செய்ய அனுமதி வேண்டிக் கடிதம் ஒன்றை அனுப்புகின்றார். இந்தக் கடிதத்திற்கு தார்வின் பதில் கடிதம் வரைவதன் மூலம் அவர் சமூகப் பார்வையற்றவர் என்பதைப் பறை சாற்றுகின்றார். இக்கடிதப் பரிமாற்றத்தினைப் பாவலர்மணி அவர்கள் தனது காரல் மார்க்சு அழகாகப் பதிவு செய்துள்ளார். உண்மை நிகழ்வுகளை உயிரோட்டமாக வடித்துப் பாவலர்மணி அவர்கள் சிறப்புப் பெறுகின்றார். இக்கடிதத்தினை வடித்து காரல் மார்க்சின் சம கால மனிதர்களை அடையாளம் காட்டுவதில் சீர்மை அடைகின்றார். கதையின் வளர்ச்சிக்கும், கதை நாயகனின் சிறப்பினை உரைக்கவும் பொருத்தமான இடத்தில் சிறப்பாக அமைத்திருக்கின்றார்.

## முடங்கலின் மூலம் உன்னத தந்திரம்

அனிச்ச அடி காப்பியத்தில் முடங்கலைப் பாவலர்மணி அவர்கள் மிகவும் நுட்பமாகக் கையாண்டிருக்கின்றார். தீமையை தீமையினால் முறியடிக்கக் கணியன் கீரன் மூலம் திட்டம் வகுக்கின்றார். சோழன் மறுத்து அனுப்பிய முடங்கலைக் கொண்டு போலி முடங்கலை உருவாக்கி மிஞிலியை வளைக்கக் கணியன் கீரன் திட்டம் வகுக்கின்றார். இந்த முடங்கல் எதிர்பார்த்த வெற்றியினை அளிக்காமல் அருளாழியினை சிறையில் தள்ளுகின்றது. மற்றொரு முடங்கலின் மூலம் அருளாழி பகைவரிடமிருந்து மீட்கப்படுகின்றான். இங்ஙனம் முடங்கலை காப்பிய வளர்ச்சிக்கு உன்னத உத்தியாகப் பாவலர்மணி அவர்கள் கையாண்டிருப்பதை இதன் மூலம் அறியலாம்.

## நண்பர்களிடம் பயணத்தை நவிலுதல்

சாலி மைந்தன் காப்பியத்தில் முடங்கல் பாங்காகக் கையாளப்பட்டுள்ளது. அருங்குணங்களின் பிறப்பிடமான ஆபுத்திரன் இளஞ்சாத்தனின் அழைப்பின் பேரில் சாவகம் செல்ல விழைகின்றான். நண்பர்களை அழைத்துச் செல்ல முடியாத சூழல். எனவே ‘‘அன்புக்குரியீர்! சாவகம் வாழும் ஆருயிர்கள் துன்பத்தின் குழியில்

வீழ்ந்தனர்; அவர்களின் துன்பம் துடைக்க யான் முன்புக்கனெனால் நாவாய் துணையாக மூலகணும் பின்புக்கனான். எந்தன் பிழையெல்லாம் பொறுப்பீர்."[148] இங்ஙனம் முடங்கலின் மூலம் ஆபுத்திரன் தனது சாவகப் பயணத்தைத் தெரிவிக்கின்றான்.

## ஆவியைப் பறித்த முடங்கல்

சாலி மைந்தன் காப்பியத்தில் முடங்கல் தந்த செய்தியே அனைவரின் முடிவிற்கும் காரணமாக அமைவதைக் காண முடிகின்றது. சாவகம் செல்லும் கலத்தினைக் கைவிட்ட ஆபுத்திரன் மிகுந்த வருத்ததிற்கு ஆட்படுகின்றான். ஆபுத்திரன் "தொண்டுக்கு வாய்ப்பு இல்லாதவனாய் உண்டு நாள்தோறும் சோர்வுறல் வேண்டிலேன். மலைமேல் ஏறி கடலுள் வீழ்குவேன் என்றே விரித்தொரு ஓலையில் எழுதிக் கண்படக் கிடத்தி மலைமிசை ஏற கலம் செல்லக் கண்டனன்"[149] இத்தகைய செயலில் ஈடுபட அவன் சாவகம் சென்ற நிலையில் ஆபுத்திரன் இறந்துவிட்டதாக அனைவரும் தவறாகப் புரிந்து கொள்கின்றனர். இதனால் ஆபுத்திரனைத் தேடிவந்த இளஞ்சாத்தனுடன் நண்பரான செட்டியார் எண்மரும் உயிர் துறக்கின்றனர். இளஞ்சாத்தனின் இறப்பால் சாலியும், ஆபுத்திரனும் உயிர் துறக்கின்றனர். இங்ஙனம் முதல் முடங்கல் ஆபுத்திரனின் பயணத்தினைத் தெரியப்படுத்துவதாகவும், இரண்டாவது முடங்கல் அனைவரின் இறுதிப் பயணத்திற்குக் காரணமாக அமைவதாகவும் கையாளப்பட்டுள்ளது.

இங்ஙனம் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களான காரல் மார்க்சு காப்பியத்திலும், அனிச்ச அடி காப்பியத்திலும், சாலி மைந்தன் காப்பியத்திலும் முடங்கல் என்னும் உத்தியானது கையாளப்பட்டுள்ளது. அன்னி மகள் காப்பியத்தில் கையாளப்படவில்லை. காரல் மார்க்சு காப்பியத்தில் உண்மைப் பதிவாகவும், உன்னத மனிதரின் வாழ்க்கை நிகழ்வாகவும் இடம்பெற்றுள்ளது. அனிச்ச அடி காப்பியத்தில் காப்பிய வளர்ச்சிக்கும், கதை செறிவிற்கும், கதை மாந்தரின் குணநலத்திற்கும் சீருறக் கையாளப்பட்டுள்ளது. சாலி மைந்தன் காப்பியத்தில் கதை வளர்ச்சிக்கும், சோக முடிவிற்குக் காரணமாகவும் முடங்கல் கையாளப்பட்டுள்ளது.

## பின்னே நிகழப்போகும் செயல்களை முன்னே அமைத்துக் காட்டுதல்

பின்னே நிகழப் போகும் செயல்களை முன்னரே அமைத்துக் காட்டுதல் என்பது சிறப்பான உத்தியாகும். இது வாசகனுக்குக் கதையின் மீது ஆர்வத்தைத் தூண்டுவதாகும். பின்னே நிகழப் போகும் செயல்களை முன்னே அமைத்துக் காட்டுதல் காப்பிய மரபாகும். அவ்வாறு அமைக்கும் பொழுது அந்நிகழ்ச்சியை

உவமையாகவும் காட்டுவர், குறிப்பாகவும் சுட்டுவர். கம்பர் இத்திறனில் வல்லவர் என்பதை "மகாகவியான கம்பர், பின்னிகழ்ச்சியை முன்கூறும் இடங்கள் பல.இராமவதாரத்தின் நோக்கம் இராவணவதம். இக்கருவே காப்பியத்தின் முடிநிலைக் கரு. ஆதலால் கம்பர் வாய்ப்பு நேரும் போதெல்லாம் இது பற்றிப் பாடுகின்றார். மனக்கோட்டமும் உடற்கோட்டமும் கொண்ட கூனி தோன்றுகிறாள். அவள் 'இன்னல் செய் இராவணன் இழைத்த தீமைபோல்' தோன்றினாளாம். தாடகை, இராமனின் அம்புபட்டுக் கீழே வீழ்கின்றாள். அக்காட்சி, இராவணன் அழிவைக் காட்டும் தீ நிமித்தமாக அவனுடைய வெற்றிக் கொடி அறுந்து வீழ்ந்தது போல இருந்ததாம். சூரப்பணகையின் மூக்கினை இலக்குவன் நீக்கினான். அது, இராவணன் தலையை வெட்டுதற்கு நாள் கொண்டது போல அமைந்ததாம். சுக்கிரீவன், இராவணின் முடிமணியைப் பறித்தான். இதனைப் பாராட்டும் வீடணன், சுக்கிரீவனைப் பார்த்துச் சொல்கின்றான். "நீ இராவணனின் முடிமணியைப் பறிக்கவில்லை. இராவணனன் வதையாகிய வெற்றிக்கு அடிமணியிட்டாய்."[150] சோம.இளவரசு இங்ஙனம் பாராட்டுகின்றார். இத்தகைய காப்பிய உத்தியினைப் பாவலர்மணி அவர்கள் கையாளும் பாங்கினை இனிக் காணலாம்.

## குழலிக்கு நேரப் போகும் ஏதத்தினை உரைக்கும் பாங்கு

பின்னே நிகழப் போவதை முன்னரே பாங்குற உரைப்பது என்பது உன்னதப் படைப்பாளனுக்கே கைவரப் பெற்றதாகும். குறிப்பாக பின்னே நிகழப் போவதை தனது காப்பியத்தில் பதிவு செய்கின்றார். சுரும்பார் குழலிக்கு நேரப் போகும் எல்லையற்ற துன்பத்தினை ஆற்று வருணனையின் மூலம் பாவலர் அவர்கள் அழகாக வடிக்கின்றார்.

குழலி நீராடச் செல்லும் முன் ஆற்றின் அழகை "மேல் நிலத்தில் எப்பொருளும் நின்னை வந்து மேவுமேயானால் தாழ்நிலத்துக் கொண்டு உய்க்கும் தன்மை கண்டும் வானிலத்து நீரேற்றி மாந்தர் நெறியேற்றலால் ஆறே உன்னை ஊரேற்றி உவந்து பாடும்"[151] என்று வருணிக்கின்றாள். இப்பாடலில் தன்னைச் சேர்ந்த மேல்நிலப் பொருள் எதனையும் தாழ் நிலத்தில் கொண்டு தள்ளும் இயல்புடையது ஆறு ஆதலின், இதில் நீராடும் மேற்குடிப் பிறந்த குழலியையும் பழிவயப்படச் செய்து அழிக்கப் போகிறது என்பதனைக் குறிப்பாக உணர்த்துகின்றார்.

மேலும் குழலி "பேராவலின் காரணமாக கெண்டை கருதிய மீன் கொத்தி சுழி இழுத்துக் கொள்ள உயிர் சோர எழில் தரும் வெள்ள நீரேந்தி விரிந்த பசிப்பிணியைத் தள்ளும் நீ எங்கள் தலை"[152] என்று பாடுகின்றாள். இப்பாடலில்

ஆறானது மீனைக் காட்டி மீன் கொத்தியின் மணத்தில் ஆசையை வளர்க்கச் சுழியிருப்பதை அறியாத மீன்கொத்தி மீனைப் பற்றப்போய்ச் சுழியிற்பட்டு அழிந்தாற் போல மாவின் பசுங்காயைக் காட்டிக் குழலிக்கு ஆசையைத் தோற்றுவித்து அழிவிக்கப் போகிறது என்பது குறிப்பாக உணர்த்தப்படுகிறது.

ஆற்றின் சிறப்பினை மேலும் நயமாகக் கூறும் குழலி, ''கிளையிலிருந்து நீங்கும் தீம்பழத்தைக் கொள்ள வரும் கயலை அயலில் இருக்கும் பாம்பின் வயிற்றுணவாகத் தேடி நிதமும் ஆக்க வரும் நீ அலவோ உயிர்குலத்தைக் காக்க விழைந்தாய் களித்து.''[153] இங்ஙனம் வருணிக்கின்றாள். இப்பாடலில் பழத்தைக் கதவவரும் அவாவினால் கயலானது அயலில் இருக்கும் பாம்பை அறியாது வந்து அதற்கு உணவாகி அழிந்ததைப் போலக் குழலியும் பசுங்காயினை தின்னும் அவாவினால் அண்மையில் உள்ள தீவினையை அறியாது அழியப் போகிறாள் என்பது குறிப்பாக உணர்த்தப்படுகின்றது. இங்ஙனம் பின்னே நிகழப் போகும் செயலினை முன்னை பாங்காகப் பாவலர்மணி அவர்கள் உரைக்கின்றார்.

## கங்கையை ஒத்த மைந்தனை ஈன்றெடுக்கும் சாலி

சாலி மைந்தன் காப்பியத்தில் பின்னது கூட்டல் உத்தியானது பாங்குற கையாளப்பட்டுள்ளது. சாலியின் வாழ்க்கையில் நிகழவுள்ள எண்ணற்ற நிகழ்வுகளை ஆற்று வருணனையில் அழகாகப் பாவலர்மணி அவர்கள் வடிப்பதைக் காண முடிகின்றது. பாவலர்மணி அவர்கள் "கதிரவன் புறத்தார் காணாத வண்ணம் கடல் மகளைப் புணர்ந்ததனால் முதிர்வுறும் நிறை சூல் உற்ற மாமுகில் வானில் மோதியே காலினால் ஏற்றுண்டு அதிர்வுற மழையைப் பயந்ததால் பெருகி ஆறென உருக்கொண்டு நடந்தே எதிர்கொள்ளும் நாட்டில் உறைபவர்களுக்கெல்லாம் இன்னமுது ஊட்டும் கங்கை"[154] இங்ஙனம் கங்கையை வருணிக்கின்றார். கதிரவன் கடல் மகளைப் பிறர் காணாமல் கூடினும் முகிலாகிப் புறத்தார்க்குப் புலப்பட்டாற் போலச் சாலி இளஞ்சாத்தனைக் கூடியது அவள் சூலால் வெளிப்பட்டது. முகில் காற்றால் எற்றுண்டு அலைந்தாற் போலச் சாலி தன் கணவனால் எற்றுண்டலைந்தாள். முகில் பயந்த மழை ஆறாகி உலகத்திற்கு ஊட்டினால் போல சாலி பயந்த மகன் உலகுக்கு ஊட்டுவான் என்ற சாலியின் வாழ்வியல் நிகழ்வுகள் முன்னரே சுட்டப்பட்டுள்ளது.

## அமிழ்தைப் போன்ற மகனை வழங்கிய சாலி

சாலி எண்ணற்ற இழிவு நிலையை எய்திய போதும் அமிழ்தன்ன ஆபுத்திரனை இந்த அகிலத்திற்கு அருள போகின்றாள் என்ற அரிய செய்தியும் பின்னது சுட்டல் உத்தியில் வெளிப்படுத்தப்படுகின்றது. வானிலிருந்து இழிந்திழிந்து

கடலில் உருவழியும் கங்கையைப் போல உயர் குடும்பப் பெண்ணாகிய சாலி இழிந்திழிந்து அழிகின்றாள். அந்த இடைப்பட்ட காலத்தில் கங்கை உலகுக்கு ஊட்ட அமிழ்தை வழங்கினாற் போல ஒரு மைந்தனை வழங்கினாள் என்று பின்னே நிகழப் போகும் நிகழ்வினைப் பாவலர்மணி அவர்கள் ''வானிடத்து இருந்தே மண்ணிடத்து கீழிறங்கி வருபவள் மென்மேலும் தாழ்ந்தே தனக்கு நிகரில்லாத தடங்கடலில் புகுந்து தன்னுருவு அழியினும் கங்கை பானினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பரிவுடன் பல்லுயிரைப் பேணும் தேனினை அமிழ்தைத் தான் செல்லும் எல்லாத் திசையினும் வழங்கிடும் கையாள்''[155] இந்த ஆற்று வருணனையின் மூலம் பான்மையாக வடிக்கின்றார்.

## ஆபுத்திரனின் தியாக வாழ்வைப் பறைசாற்றுதல்

எண்ணற்ற நற்பண்புகளைத் தனக்கே உரித்தாக்கிக் கொண்ட வித்தகன் ஆபுத்திரன் ஆவான். அருங்குணங்களின் சாளரமாகத் திகழும் அவனின் அரிய வாழ்வானது முன்னரே பறைசாற்றப்படுகின்றது. பாவலர்மணி அவர்கள் கங்கையை "காரென எழுந்து நிலங்களைக் கடந்து நெறியினால் உயிர்களுக்கு ஊட்டித் தேரெனச் செல்லும் கங்கையானவள் பாரில் செய்திடத் தொண்டில்லாதப் பொழுதில் காரென்னும் வண்ணக் கடலினுள் மாய்ந்து கழிவதோர் மருட்கையைத் தருவதாகும்"[156] இங்ஙனம் புகழ்கின்றார். நீர் ஆறாகிப் பல நாடுகளுக்கும் சென்று உயிர்களுக்கு ஊட்டி இறுதியில் இனிச் செய்யத் தொண்டில்லை என்ற போது கடலில் விழுந்து மாய்ந்தது யாவர்க்கும் மருட்கையைத் தந்தாற் போல ஆபுத்திரன் பலநாடும் சென்று உயிர்களுக்கு ஊட்டித் தொண்டு செய்ய வாய்ப்பில்லாத போது உயிர்விடல் யாவருக்கும் மருட்கையைத் தரும் என்று பின்னர் நிகழப் போவதை முன்னரே குறிப்பாக உணர்த்துகின்றார்.

இந்த உத்தியானது அனிச்ச அடி காப்பியத்திலும், சாலி மைந்தன் காப்பியத்திலும் இடம்பெற்றுள்ளது. காரல் மார்க்சு காப்பியத்திலும், அன்னி மகள் காப்பியத்திலும் இடம்பெறவில்லை. அனிச்ச அடி காப்பியத்தில் குழலிக்கு நேரப் போகும் ஏதத்தினை குழலி ஆற்றில் நீராடச் செல்லும் பொழுதே பாங்குடன் வடிக்கின்றார். சாலி மைந்தன் காப்பியத்தில் சாலியின் வாழ்வில் ஏற்படப் போகும் ஏதங்களையும், சாலி இன்னல்களுக்கு இடையில் இனிய மைந்தனை ஈன்றெடுப்பாள் என்ற இன்பச் செய்தியினையும், ஆபுத்திரனின் தியாக வாழ்வையும் பாங்காக வடிக்கின்றார். ஒருவித அச்சமும், அதிர்ச்சியும், வாசகனின் உள்ளத்தில் தோன்றச் செய்து அடுத்து நிகழ்வதை விரைந்து அறியும் ஆவலைத் தூண்டுகிறார்.

## முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சியினைப் பின்னே சுட்டுதல்

பிளாஷ் பேக் என்பது ஆழமாக அமையும் பொழுது தான் கதை விறுவிறுப்பாக அமையும். காரணமின்றிக் காரியம் இல்லை என்பது பொதுவான கூற்றாகும். காரியத்திற்காக காரணமாக அமைகின்ற நிகழ்வானது குறுகிய நேரத்தில் முடிந்துவிடினும் அதன் தாக்கமே கதை முழுவதும் களங்களாக விரியும். இத்தகைய பிளாஷ் பேக் என்னும் பின்னோக்கு உத்தியினைப் பாவலர்மணி அவர்கள் தம் காப்பியங்களில் கையாண்டுள்ள பாங்கினை இனிக் காணலாம்.

## மகட்கொடை மறுத்தலும் மணியான மகன் மரித்தலும்

அனிச்ச அடி என்னும் காப்பியம் மிஞிலி என்னும் கொடூரன் குழலியின் மீது கொண்ட ஆவலின் விளைவினால் நிகழ்ந்ததாகும். கதை வளர்ச்சிக்கு அடித்தளமே முன்னர் நடந்த நிகழ்வாகும். நன்னனின் பிறந்த நாள் விழாக் காண குழலி விரும்புகின்ற பொழுது ஆய் எயினன் “மகட்கொடை வேண்டி மறப்புகழ் மிஞிலியோர் பகற்பொழுது நம்மைப் படைகொண்டு சூழ்ந்ததும், சேரநாட்டில் உள்ள வெளியம் என்னும் ஊரினை முற்றிய வேழப் படையினால் புளிய மரங்கள் புடைபெயர்ந்து அழிந்ததும், பருந்தும் நரியும் படுகளம் சுற்றி விருந்தென அருந்தி விலாப் புடைத்ததும், ஆயிடை நிகழ்ந்த அடுபோர்ச் சூழலில் மேய நம் மைந்தன் மிஞிலியின் வேலை மார்பிடைத் தாங்கி மடிந்ததும், மிஞிலியின் சார்புகள் நீக்கித் தணல்படும் மனத்தோடு சுருள் வாளேந்தி நான் கடுகிச் சுழற்ற வலிமை நிறைந்த மிஞ்லியின் இருதோள் புறத்தும் குருதிப் புனல் ஆறானது கொப்பளித்து ஒழுகக் கருதியது பெறானாய் மிஞிலி கழிந்ததும்”[157] இங்ஙனம் முன்னால் நடந்த நிகழ்வினை எடுத்துக் கூறுகின்றான். இந்த நிகழ்வுதான் பின்னால் காப்பியத்தில் நிகழ்ந்த அனைத்து நிகழ்வுகளுக்கும் அச்சாணியாக அமைகின்றது. பின்னோக்கு உத்தியினைப் பாங்குறப் படைத்துப் பாவலர்மணி அவர்கள் பாராட்டுப் பெறுகின்றார்.

## சாலியைத் தேடி அறிந்து கொண்ட இளஞ்சாத்தன்

சாலி மைந்தன் காப்பியத்தில் மணமாகதவள் என்று சாலியைக் கூடிய இளஞ்சாத்தன் உண்மையினைப் பின்னரே உணர்ந்து கொள்கின்றான். அவன் சாலியைத் தேடி வாரணாசி சென்றதும், அவள் மணமானவள் என்பதை அறிந்து தன்னைப் புழுவென உணர்ந்து துடித்ததும் முன்னர் நிகழ்ந்த நிகழ்வினைப் பின்னது சுட்டலாகவே இடம்பெறுகின்றது.

> **“சாலியினைக் கூடியதும் அவளை நீக்கிச்**
> **சாவகத்துச் சென்றதுவும், மீண்டு வந்து**

**சேலியலுங் கண்ணாளைக் காணச் சென்று**
**திரும்பியதும், உசாவுங்கால் அவளோ மாற்றான்**
**தாலிபுனை மனையாவாள் என்று கேட்ட**
**தணல் செவியிற் சுட்டதுவும், வேதி யர்கள்**
**சூலியலும் மகளென்றும் பாரா ராதித்**
**துரத்தியதும் மனக்கண் ணில் தெரியக் கண்டு.''**

(சாலி.மைந்,காண்.3,ப.9,பா:18)

இங்ஙனம் நினைவு கூர்ந்து பார்த்தலின் வழி இதனை அறிய முடிகின்றது. பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் அனிச்ச அடி மற்றும் சாலி மைந்தன் காப்பியங்களில் முன்னே நிகழ்ந்த நிகழ்ச்சியினைப் பின்னே சுட்டுதல் என்கின்ற உத்தி கையாளப்பட்டுள்ளது. இது கதை வளர்ச்சிக்குத் துணை செய்கின்றது. காரல் மார்க்சு காப்பியத்திலும் அன்னி மகள் காப்பியத்திலும் இடம்பெறவில்லை.

## நிமித்தம்

நமது சமூகமானது பல்வேறு நம்பிக்கைகளை வழி வழியாகப் பின்பற்றுகின்ற பான்மையுடையது. மனிதனை ஒழுங்குபடுத்தும் முயற்சியாகவே பல்வேறு நம்பிக்கைகள் பின்பற்றப்படுகின்றன. கால ஓட்டத்தில் அவை மூடநம்பிக்கைகளாக மாற்றப்பட்டுவிட்டன. குளித்து முடித்துவுடன் முதுகையே முதலில் துவட்ட வேண்டும். முகத்தினைப் பிறகு தான் துடைக்க வேண்டும். அவ்வாறு செய்யும் பொழுது தான் மூதேவி விலகி ஸ்ரீதேவி குடியேறுவதாகக் கூறப்படுகின்றது. இதற்கு அறிவியல் ரீதியான தெளிவான காரணம் உண்டு. முதுகில் தண்டுவட இணைப்பு இருப்பதனால் அதில் குளிர்ந்த நீர் தேங்கக் கூடாது என்பதற்காக தான் இத்தகைய நம்பிக்கை காலங் காலமாக சொல்லப்பட்டு வந்தது. இதற்கு இணையாக இலக்கியத்தில் இடம்பெறுகின்ற ஒரு நம்பிக்கையானது நிமித்தம் ஆகும். இத்தகைய நிமித்தம் பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் இடம்பெற்ற பாங்கு பின்வருமாறு.

### வலக்கண் துடித்தல்

'அன்னி மகள்' காப்பியத்தில் தந்தை-மகள் உறவானது ஒரு மெல்லிய பூங்காற்றாய் வருடுகின்றது. உணர்வின் விளைவாய்த் தோன்றும் உள்ளுணர்வின் வெளிப்பாடாகப் பாவலர்மணி அவர்கள் பதிவு செய்துள்ளார். கோசர்களினால் தத்தன் கொல்லப்பட்டு ஆநிரை கவர்ந்து செல்லப்பட்ட போது அன்னிமிஞிலி மாதரியிடம் ''கனிவுறும் சொல்லாய்? வலக்கண் துடித்தது; வருமே நமக்கோர் தனிமையென்று அஞ்சி அலமரும் நெஞ்சம்; உடலிலுள்ள மயிர் சிலிர்க்கும்; மேனி

வியர்க்கும்! கொய்படும் பிணையல்! குறிப்பதொன்றுண்டு; புதுமணல் விரிந்த பொழிலகத்தில் இருந்தும் திடீரென நடுங்கி நெஞ்சம் கலக்குறும்; நன்றெனத் தீதென நாடுதல் இன்றி ஒன்றினும் நில்லாது ஒருவும் என் மனனே! புதுவது இவ்வுணர்ச்சி; புரையிலாய்! துன்பம் கதுவும் கொல்லோ?"[158] இங்ஙனம் வருந்துகின்றாள். இந்த நிமித்தமானது முன்பு நேர்ந்த ஏதத்துடன் அன்னிக்கு நேரப் போகும் ஏதத்தினையும் உணர்ந்துவதாகப் படைக்கப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

- இலக்கியத்தைச் சுவைக்கும் வாசகனுக்கு இன்பத்தை நல்குவது படைப்பில் இடம்பெறும் உத்திகளாகும். இவ்வுத்திகள் பல திறத்தனவாகும்.
- பாவலர்மணியின் காப்பியங்களில் அறுபது இடங்களில் உவமைகள் அமைந்து அழகு சேர்க்கின்றன.
- காரல் மார்க்சு, அன்னி மகள் காப்பியங்களில் உருவகம் இடம்பெற்றுள்ளது.
- அனிச்ச அடி, சாலி மைந்தன் காப்பியங்களில் உருவகம் இடம்பெறவில்லை.
- உள்ளுறை உவமம் அனிச்ச அடி காப்பியத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. பிற காப்பியங்களில் இடம்பெறவில்லை.
- சாலி, இளஞ்சாத்தனின் கூடலானது குறிப்பு மொழி வாயிலாக நயமாகப் புனையப்பட்டுள்ளது.
- அசை, சீர், தளை, அடி போன்றவை பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் நிறைந்து ஒலி நயத்தைக் கூட்டுகின்றன.
- அடி மோனைத் தொடை, அடி எதுகைத் தொடை, அடி இயைபுத் தொடை, அடி முரண் தொடை, அடி அளபெடைத் தொடை ஆகிய அனைத்துத் தொடை நயங்களும் அமைந்து காப்பியங்களுக்கு அழகு சேர்க்கின்றன.
- அடி எதுகைத் தொடை இவரது காப்பியங்களில் ஆதிக்கம் செலுத்துகின்றது.
- கற்பனையாற்றலை மிகுவிக்கும் வண்ணம் முன்னைய நிகழ்ச்சிகளைச் சான்று காட்டுதல் என்னும் உத்தியானது அனிச்ச அடி, அன்னி மகள், சாலி மைந்தன் ஆகிய காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது.
- வாழ்ந்த ஒரு மனிதரைப் பற்றிப் புனையப் பெற்றது காரல் மார்க்சு காப்பியமாதலால் இதில் எந்தவொரு கற்பனைப் புனைவும் இல்லை.
- சொற்றொடர் இடமாற்றம் காரல் மார்க்சு காப்பியத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. பிற காப்பியங்களில் இடம்பெறவில்லை.
- கனவு என்னும் உத்தியானது அனிச்ச அடி காப்பியத்தில் கையாளப்பட்டுள்ளது.

- கிளைக் கதைகள் என்னும் உத்தியானது அனிச்ச அடி, சாலி மைந்தன் காப்பியங்களில் சரியான காரணத்திற்காகப் பொருத்தமாகப் புனையப்பட்டுள்ளது.
- கடிதம் என்னும் உத்தியானது காரல் மார்க்சு, அனிச்ச அடி, சாலி மைந்தன் ஆகிய மூன்று காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது.
- முன்னோக்கு உத்தி, பின்னோக்கு உத்தி ஆகிய இரண்டும் அனிச்ச அடி, சாலிமைந்தன் காப்பியங்களில் இடம்பெற்றுள.
- நிமித்தம் என்னும் உத்தியானது அன்னி மகள் காப்பியத்தில் உள்ளுணர்வு வெளிப்பாடாக அமைந்துள்ளது.
- பாவலர்மணியின் காப்பியங்களில் உத்திகள் சிறப்புற அமைந்து காப்பியங்களுக்கு அழகு சேர்க்கின்றன.

## சான்றெண் விளக்கம்

1. டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.180.
2. மேலது,ப.40.
3. மேலது,ப.217.
4. டாக்டர் ஆ.கந்தசாமி, இலக்கியப் பார்வைகள்,ப.66.
5. சோம.இளவரசு, காப்பியத்திறன், ப.110.
6. டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.180.
7. டாக்டர் மு.வரதராசனார், இலக்கிய மரபு, ப. 182.
8. டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.121.
9. டாக்டர் சு.பாலச்சந்திரன், இலக்கியத் திறனாய்வு, ப.92.
10. ம.பொ.சிவஞானம், சிலப்பதிகாரமும் தமிழரும்,ப.16.
11. டாக்டர் சு.பாலச்சந்திரன், இலக்கியத் திறனாய்வு,ப.167.
12. எஸ்.வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள், ப.85.
13. கார.மார்.கா,பா.7:2-4.
14. மேலது,பா.17:4-4.
15. மேலது,பா.79:1-3.
16. மேலது,பா:105.
17. மேலது,பா:230.
18. மேலது,பா.235:3-4.
19. தொல்.பொருளதிகாரம், உவமையியல், இளம்பூரணர், ப.6
20. கார.மார்.கா,பா.321:1-2.
21. அனி.அடி.,அ.1,க.1,86-91.
22. மேலது,அ.1,க.2,41-44.
23. பாரதிதாசன், அழகின் சிரிப்பு, செந்தாமரை, பா:4.
24. அனி.அடி.,அ.1,க.2,பக்.22-23.
25. மேலது,அ.1.க.3,1-6.
26. மேலது,77-81.
27. மேலது,அ.1,க.4,124-126.
28. மேலது,அ.2,க.1,98-103.
29. மேலது,அ.2,க.2,பா:2.
30. மேலது,அ.2,க.2,87-90.
31. மேலது,107-114.
32. மேலது,அ.2,க.3,93-94.
33. மேலது,அ.2,க.4,37-38.
34. மேலது,164-170.
35. அனி.அடி.,அ.5,க.3,61-70.
36. அன்.மக,அ.1,க.2,103-107.
37. மேலது,அ.1,க.4,47-51.
38. மேலது,அ.2,க.4,129-131.
39. மேலது,அ.2,க.6,116-120.
40. மேலது,அ.5,க.1,90-91.

41. மேலது,அ.5,க.2,71-72.
42. சாலி.மைந்.,காண்.1,பட.1,பா.4:3-4.
43. மேலது,பா.15:3-4.
44. மேலது,பா:16.
45. மேலது,பா:17.
46. மேலது,காண்.1,பட.3,பா:11.
47. சாலி.மைந்.,காண்.1,பட.5,பா:4.
48. மேலது,காண்.1,பட.6,பா:39.
49. மேலது,காண்.1,பட.7,பா:14.
50. மேலது,பா:21.
51. மேலது,காண்.2,பட.1,பா.2:1-3.
52. மேலது,காண்.2,பட.3,பா:1.
53. மேலது,காண்.2,பட.5,பா.7:3-4.
54. மேலது,பா.8:3-4.
55. மேலது,பா:14.
56. மேலது,பா.12:2-4.
57. மேலது,பா.15:1-2.
58. மேலது,காண்.3,பட.7,பா.1:3-4.
59. மேலது,பா.8:2-4,9.
60. மேலது,காண்.3,பட.8,பா:6.
61. மேலது,காண்.3,பட.9,பா.3:3-4.
62. மேலது,பா.20:3-4.
63. மேலது,காண்.3,பட.10,பா.3:1-1.
64. மேலது,காண்.3,பட.11,பா.7:2-4.
65. மேலது,காண்.4,பட.1,பா.10:1-3.
66. மேலது,காண்.4,பட.3,பா:24.
67. மேலது,காண்.4,பட.5,பா:7.
68. மேலது,பா:9.
69. மேலது,பா.37:3-4.
70. தண்டி,36.
71. டாக்டர் சு.பாலச்சந்திரன், இலக்கியத் திறனாய்வு,ப.170.
72. கார.மார்.கா,பா.235:1-2.
73. அன்.மக.,அ.3,க.4,68-69.
74. தொல்.பொருளதிகாரம்,51.
75. டாக்டர் ஆ. கந்தசாமி, இலக்கியப் பார்வைகள், ப.98.
76. அனி.அடி.,அ.1,க.2,ப.28.
77. மேலது,ப.29.
78. மேலது,ப.29.
79. சாலி.மைந்.,காண்.1,பட.5,பா:26.
80. மேலது,பா:27.
81. மேலது,பா:28.

82. மேலது,பா.29:1-3.
83. மேலது,பா:30.
84. மேலது,பா:31.
85. மேலது,பா:33.
86. மேலது,பா:34.
87. மேலது,பா:35.
88. மேலது,பா:36.
89. மேலது,பா:37.
90. மேலது,பா:38.
91. மேலது,பா:39.
92. மேலது,பா:40.
93. மேலது,பா:41.
94. டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல்,ப:277.
95. டாக்டர் ஆ. கந்தசாமி, இலக்கியப் பார்வைகள்,ப:78.
96. கம்பராமாயணம், பா:1522.
97. காரா.மார்.கா,பா:274.
98. அனி.அடி.,அ.1,க.4,29-35.
99. மேலது,அ.1,க.5,பா:5.
100. டாக்டர் தா.ஏ.கிருஷ்ணமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.114.
101. அனி.அடி.,அ.2,க.2,பா:1.
102. அன்.மக.,அ.2,க.5,51-52.
103. மேலது,அ.3,க.1,பா:4.
104. மேலது,அ.4,க.1,7-11.
105. மேலது,அ.5,க.2,37-40.
106. சாலி.மைந்.,காண்.1,பட.1,பா:6.
107. மேலது,பா:8.
108. மேலது,காண்.1,பட.4,பா:30.
109. மேலது,காண்.2,பட.3,பா:9.
110. மேலது,பா:18.
111. மேலது,காண்.3,பட.3,பா.8.
112. மேலது,காண்.3,பட.9,பா.12:3-3.
113. டாக்டர் வ.சுப.மாணிக்கம், எந்தச் சிலம்பு,ப.88.
114. புறநா.பா.27:11-14.
115. காரா.மார்.கா,பா:273.
116. அனி.அடி.,அ.1,க.5,பா:6.
117. அன்.மக.,அ.1,க.1,163-164.
118. மேலது,அ.2,க.5,118-122.
119. சாலி.மைந்.,காண்.1,பட.2,பா:16-17.
120. மேலது,பா:23.
121. மேலது,காண்.3,பட.3,பா:9.
122. மேலது,காண்.3,பட.1,பா:7.

123. தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், குடிமக்கள் காப்பியம், ப.-138.
124. திருக்.,428.
125. அன்.மக.அ.2,க.2,60-62.
126. திருக்.,471.
127. அன்.மக.,அ.3,க.2,134-138.
128. மேலது,அ.2,க.3,76-77.
129. மேலது,அ.3,க.3,113-115.
130. சி.தேசிக விநாயகம்பிள்ளை, மலரும் மாலையும், பா:312.
131. அனி.அடி.,அ.1,க.3,10-15.
132. மேலது,அ.2,க.2,93-94.
133. அன்.மக.,அ.1,க.3,16-20.
134. மேலது,அ.2,க.6,84-89.
135. மேலது,99-100.
136. மேலது,101-106.
137. சாலி.மைந்.,காண்.1,பட.1,பா:10.
138. மேலது,பா:13.
139. மேலது,காண்.1,பட.2,பா:22.
140. மேலது,காண்.2,பட.1,பா:1.
141. கம்பராமாயணம்,பா:6031.
142. அனி.அடி.,அ.2,க.3,108-115.
143. மேலது,அ.3,க.3,21-39.
144. சோம.இளவரசு, காப்பியத் திறன்,ப.125.
145. தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், குடிமக்கள் காப்பியம், ப.138.
146. அனி.அடி.,அ.2,க.3,116-117.
147. மேலது,122-127.
148. சாலி.மைந்.,காண்.3,பட.11,பா:8.
149. மேலது,காண்.4,பட.2,பா.44:1-3.
150. சோம.இளவரசு, காப்பியத்திறன், ப.127.
151. அனி.அடி.,அ.1,க.3,ப.33.
152. மேலது,ப.34.
153. மேலது,ப.34.
154. சாலி.மைந்.,காண்.1,பட.1,பா:1(அ).
155. மேலது,பா:2(ஆ).
156. மேலது,பா:3(அ).
157. அனி.அடி.,அ.1,க.1,56-69.
158. அன்.மக.,அ.3,க.2,2-12.

# இயல்-4
# மார்க்சிய, சமூகவியல் சிந்தனைகள்

காரல் மார்க்சு என்பவர் சமுதாயத்தை வேறு ஒரு புதிய கோணத்தில் கண்டு, அதன் அவலங்களை உற்றுநோக்கி அந்த அவலங்களுக்குச் சிறந்த தீர்வினையும் பகன்ற மாமனிதர் ஆவார். அத்தகைய மாமனிதரின் வாழ்க்கையைக் காவியமாகப் படைக்கும் பொழுது அவர் மொழிந்த சீர்மிகு கருத்துகளையும் இயம்ப வேண்டியது படைப்பாசிரியராகிய கவிஞனின் தலையாய கடமை ஆகும். அதேபோல் படைப்பாளி என்பவன் சமூகத்தைத் தனது படைப்பில் வடித்து அதன்மூலம் புதுமையான சமூகத்தைப் படைக்கும் சிற்பி ஆவான். சமூகத்தின் சீர்கேடுகளையும், அதன் இருண்ட பகுதிகளையும் வாசகர்களுக்கு அறிமுகம் செய்யும் பொழுதுதான் ஓர் உன்னதப் படைப்பானது உருப்பெறுகின்றது. அந்த வகையில் பாவலர்மணி அவர்கள் தமது காப்பியங்களில் மார்க்சிய, சமூகவியல் சிந்தனைகளை வெளிப்படுத்திய பாங்கினை இவ்வியல் விளக்குகின்றது.

## மார்க்சியத்தின் அடிப்படைக் கொள்கைகள்

“திறனாய்வு அணுகுமுறைகள்” என்ற நூலில் மு.வளர்மதி அவர்கள் மார்க்சியத்தின் அடிப்படைக் கொள்கைகளை

1. மனிதப் பெருமையை மதித்து உறுதி செய்தல்.
2. எந்த மதிப்பும் மனிதத்தைக் காட்டிலும் பெரியது அல்ல என்று புரிந்து கொண்டு, மனித அறிவையும், மனித வாழ்வின் தொடர் வளர்ச்சியில் உரிமையையும் அங்கீகரித்தல்.
3. உழைக்கும் மக்களை உதவியற்றுப் போகச் செய்யும் சுரண்டல் பொருளாதார, சமூக அமைப்பினை முற்றிலுமாக அழித்தொழித்து மாற்றி அமைத்தல்.
4. எதிர்காலத்தையும், வாழ்வையும், ஐயப்பாட்டிற்கு இடமாக்கும் அனைத்தையும் மாற்றி அமைக்க, பெருவாரியான மக்களை எழுச்சியுடன் அதில் பங்கு கொள்ளப் பயிற்றுவிக்கவும் அவர்கள் அதில் ஈடுபாடு கொள்ளவும் வழிமுறைகளை அமைத்தல்.
5. பாட்டாளி வர்க்கப் போராட்டத்தின் மூலமாக தனியுடைமை அமைப்பினைத் தூக்கி எறிந்து ஆட்சி அதிகாரத்தைப் பாட்டாளி வர்க்கம் வென்று பெற, கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளை உணர்த்துதல்.

6. சுரண்டப்படும் வர்க்கம், பிரச்சினைகளின் பாதிப்பையோ தீர்வையோ புரிந்து கொள்ளாத வகையில் மயக்க நிலையில் வைத்திருப்பவை எனவயெவை என்று உணரச் செய்தல்.

7. முரணற்ற இயங்கியல் பொருள் முதல்வாதத்தை அடிப்படையாகக் கொண்டு வர்க்க முரண்பாட்டுச் சிக்கல்களுக்குத் தீர்வு கூறல்.

8. 'அறிய முடியாதவை அல்ல; அறியப்படாதவை'. 'மாறுவது ஒன்றே மாறாதது' என்ற விதிகளை அறிவுப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளுதல்.

9. ஒடுக்கப்பட்ட பெண்ணினம், தொழிலாளிகள், உழைக்கும் விவசாயிகள் சுதந்திரமும் சமத்துவமும் பெறப் பாடுபடுதல்

10. ஒடுக்குபவர்களுக்கு எதிராக, முதலாளிகளுக்கு எதிராக இலாப வேட்டைக்காரர்களுக்கு எதிராகப் போராட்டம் நடத்துதல்.

11. உழைப்பு-கூலி-மூலதனம்-பங்கீடு ஆகிய பொருளாதாரக் கூறுகளை அறிவியல் பயன்பாட்டு அடிப்படையில் ஆய்வு செய்தல்"[1] என்று வரையறுக்கின்றார். மார்க்சியத்தின் அடிப்படைக் கொள்கைகளை அறியலாம். இத்தகைய மிக உயர்ந்த மார்க்சியக் கருத்துகளைப் பாவலர்மணி கையாண்டிருக்கும் பாங்கினை இனிக் காணலாம்.

## நாயகன் பிறந்தது வர்க்க பேத பூமி

'காரல் மார்க்ஸ்' என்னும் அசாதாரண மனிதர் வர்க்க பேதம் நிலவும் 'திரியர்' மண்ணில் பிறந்தவர். அவ்வூரை வருணிக்கும் விதத்தில் மார்க்சிய சிந்தனையைப் பாவலர்மணி அவர்கள் நயமாகக் கூறுகின்றார். அத்தகைய மண்ணில் பிறந்ததால் தான் சுதந்திர வேட்கை காரல் மார்க்சிற்கு மிகுதியாகத் தோன்றியிருக்கலாம். பிறந்த ஊரினை வருணிக்கும் விதத்தில் மார்க்சிய சிந்தனையைப் பாவலர்மணி அவர்கள் வெளிப்படுத்திய பாங்கினை "மோசலி ஆறு பாய்வதால் முப்போகம் விளையும் திரியர் மண்ணில் குற்றமில்லார் உழைப்பையெல்லாம் குற்றமுள்ளோர் சுரண்டுவதாலே; பேசரும் வறுமை பேதம் பெரிதாக வளர்ந்திருக்கும். தூசு படிந்த ஓவியர் போல் துலங்கொளி குன்ற வாழ்வார்"[2] என்றுரைப்பர்.

## புரட்சி பூமியின் புது விடியல் காரல் மார்க்சு

'புரட்சி' என்பது கண நேரத்தில் தோன்றுவது அன்று. அது படிப்படியாகத் தோன்றுவது; பல படிநிலைகளில் தோன்றுவது எனலாம். காரல் மார்க்சு பிறந்த மண்ணில் புரட்சி நோக்கத்தோடு எண்ணற்ற புரட்சியாளர்கள் புது விடியலுக்காகக் காத்திருந்ததை "விதி இஃது என்று நம்பி நாள்தோறும் விம்மிச் சாவோர் கதியினை

என்னவென்று சொல்ல! கனல் துண்டினை நெஞ்சுள் வைத்தோர் புதியதொரு சமூகம் காணப் புரட்சியினை விதையாகத் தூவிப் பதியனிட்டு உரமும் வைத்துக் காலத்தைப் பார்த்திருந்தார்''[3] என்னும் கூற்று இதனை விளக்கும்.

## முதலாளித்துவமும் முதலாளியும்

சமூகம் என்னும் வண்டி முதலாளி, தொழிலாளி என்னும் இருபெரும் சக்கரங்களைக் கொண்டு சுழல்கின்றது. முதலாளிகள்; தொழிலாளிகளின் உழைப்பினை உறிஞ்சிக் கொழுக்கின்றனர். தொழிலாளிகளோ வறுமையில் வாடுகின்றனர். இதனை காரல் மார்க்சு "செல்வந்தன் ஒரு ஏழைக்கு எதைச் செய்தாலும் அவை அனைத்தையும் நிச்சயம் திரும்பப் பெற்றுக் கொள்கிறான்."[4] என்று இடித்துரைப்பதை ஜா.மாதவராஜ் இவ்வாறு கூறுகிறார். மேலும் அவர், "முதலாளித்துவம் அட்டையைப் போல் வாழும் உழைப்பாளிகளை உறிஞ்சியே வாழ்கிறது. அதிகமாக உறிஞ்ச உறிஞ்ச அது அதிகமாக வாழ்கிறது"[5] என்ற காரல்மார்க்சின் தத்துவத்தையும் எடுத்தியம்புகின்றார். உழைப்பாளிகளின் உழைப்பு முதலாளிகளால் உறிஞ்சப்படுவதை அறிவியல் பயன்பாட்டு முறையில் காரல் மார்க்சு அழகாக விளக்கி இருக்கின்றார். முதலாளிகளின் சுரண்டல் கொடுமை குறித்த காரல்மார்க்சின் சரியான பார்வையினை பாவலர்மணி அவர்கள் "முதலாளி என்றொரு முதன்மையான வர்க்கம் முதன்முதலில் தோன்ற முதன்மையான காரணம் மிஞ்சிய மதிப்பே என்றனன் மார்க்சு; உபரி மதிப்பென உரைத்தலும் உண்டு; தொழிலாளிக்குத் தினக்கூலியாக ஐம்பது ரூபாய் அளிப்பதாகக் கொள்வோம்; பத்துமணி நேரப் பணியவன் செய்கிறான்; முதல் ஐந்துமணி நேரப் பணியில் முடித்த பொருள் மீதே ஐம்பது ரூபாயை விலையில் அமைத்துச் சேர்த்து விற்பனை செய்யும் முதலாளியம்; எஞ்சிய ஐந்துமணி நேர உழைப்பும் மிஞ்சிய மதிப்பாய் முதலாளி மேலுற வழி செய்கின்றது, வற்றாத இந்தச் சுரண்டல்தான் முதலாளி திரண்ட வரலாறு"[6] என்று பதிவு செய்துள்ளார்.

## மதத்தின் வழி மறைமுகச் சுரண்டல்

'மதம்' என்பது மனிதனைப் பக்குவப்படுத்துவதாகும். அது அவனுக்கு அருங்குணங்களை அறிமுகப்படுத்த கடவுள் அளித்த அருங்கொடை என்றெல்லாம் சொல்லப்பட்ட வார்த்தைகளை எல்லாம் உடைத்தெறிகின்றது காரல் மார்க்சின் வீறுகொண்ட சிந்தனை. பாகுபாடுகள் நிறைந்த சமூகத்தைப் பாதுகாக்கும் கேடயமாக மதம் செயல்படுவதாகக் காரல்மார்க்சு சாடுகின்றார். மனிதனின் போராட்டக் குணத்தை அழிக்கும் கருவியாக மதம் செயல்படுவதாகக் காரல் மார்க்சு இடித்துரைக்கின்றார். இறைவன் தான் ஏற்ற இறக்கம் நிறைந்த வாழ்வினையும்; உயர்வு தாழ்வான சமூகத்தையும் படைத்ததாக நம்ப வைக்கும்

மதத்தை வாழும் மக்களை மயக்கும் அபினி என்று சீறுகின்றார். பாவலர்மணி அவர்கள் மதம் குறித்த மார்க்சின் கொந்தளிப்பை,

**“மதமென்ப தென்ன? மனம்ஒடுக் குண்ட**
**ஒற்றைப் பிராணியின் உள்முகப் புலம்பல்;**
**மனமிலா உலக உணர்ச்சியின் வடிவம்;**
**உயிரிலா நிலைகளின் உயிர்அம் மதந்தான்;**
**பொறுமை அடக்கம் நிறைவு இவை புனிதம்**
**நிறைந்தவை என்றோர் நெடுங்கதைக் கட்டிப்**
**போராட்டக் குணத்தைப் பொசுக்கிய திம்மதம்;**
**பொருளில்லா தாருக் கவ்வுலகம் காட்டும்;**
**பொருள்உள் ளவர்க்கோ இவ்வுலகம் காட்டும்;**
**இதுதான் மதத்தின் இரட்டைமுகத் தோற்றம்;**
**வாழும் மக்களை மயக்கும் அபினி;**
**போலி மகிழ்ச்சியைப் புகட்டுவ தாச்சொல்லும்**
**மதத்தை ஒழிப்பதே உண்மையில் மக்களின்**
**மகிழ்ச்சியைக் கோரும் மனிதனின் கடமை;”**[7] (கார.மார்.கா,156-169)

என்று பதிவு செய்கின்றார்.

## மனித உழைப்பினைப் போற்றும் பாங்கு:

உழைப்பாளர்களின் உற்ற நண்பன் காரல்மார்க்சு என்றால் அது மிகையாகாது. உழைப்பாளிகளின் துயர்களையும், வேதனைகளையும் அணுவணுவாக உணர்ந்த காரல் மார்க்சு அதனைச் சமூகத்திற்கும் எடுத்தியம்புகின்றார். மனிதன் அணியும் ஆடையின் பின்னால் அதனை அணியக் காரணமான கைகள் ஆயிரம் என்பதை காரல் மார்க்சு எடுத்துரைப்பதன் வழி உழைப்பினைப் போற்றும் மார்க்சிய சிந்தனையை அறியலாம். அணியும் ஆடைக்குப் பின்னால் உள்ள உழைப்பின் வலி குறித்த மார்க்சின் சிந்தனையைப் பாவலர்மணி அவர்கள்,

**“இன்றைய ஆடையின் நிலைமை எப்படி?**
**நிலம்உழு கருவியை எவனோ செய்தான்;**
**நிலத்தை உழுதவன் எவனோ அறியோம்;**
**பருத்தி எடுத்தவர் யாரோ? அதனைத்**
**திரித்துநூ லாக்கியது எந்தத் தேயமோ?**
**வண்ணம் கண்டு பிடித்தவர் யாரோ?**
**வாங்கிச் சாயம் ஏற்றினோன் எவனோ?**

**ஆடையா மாற்றும் ஆலையின் அகத்தும்**
**எத்தனைக் கைகளோ இணைந்து பணியாற்ற**
**வந்த தல்லவோ இந்த ஆடை?"** (கார.மார்.கா,180-189)

என்றுரைப்பர்.

## பாட்டாளியின் பாடுகளை விரித்துரைக்கும் பாங்கு

தொழிலாளி வர்க்கத்தின் தோழனாகக் காரல் மார்க்சு திகழ்ந்திருக்கின்றார். அவரது வாழ்வானது அர்த்தமுள்ளதாக அமைந்திருக்கின்றது. இ.எம்.எஸ் நம்பூதிரிபாட் அவர்கள் "மார்க்சுக்கு முன்னாலும் வரலாற்றாசிரியர்கள் இருந்துள்ளனர். பலரின் நூல்கள் மிகச் சிறப்பானவை. அதுபோன்ற கம்பீரமான நூல்கள் எதையும் மார்க்ஸ் எழுதவில்லை. ஆனால் வரலாற்றின் வளர்ச்சி எவ்வாறு நடைபெறுகிறது, அதனைக் கட்டுப்படுத்துகிற விதிகள் எவை என்பதையெல்லாம் கண்டறிய மார்க்சுக்கு முந்தைய வரலாற்றாசிரியர்களால் முடியவில்லை"[7] என்று மார்க்ஸ் குறித்துக் கூறுகின்றார். இந்த கருத்திற்கு பாட்டாளி, முதலாளி எவ்வாறு வேறுபாடு அடைந்தனர் என்ற காரல்மார்க்சின் பொதுவுடைமைக் கட்சி அறிக்கை அணி சேர்க்கின்றது. இக்கருத்தை பாவலர்மணி அவர்கள் காரல் மார்க்சு காப்பியத்தில்,

**"பாட்டாளி முதலாளி என்னுமிரு பகுதியரும்**
**கூட்டாளி போற்சேர்ந்தார்; கொள்ளைமன முதலாளி**
**காட்டாளி யாய்மாறக் கண்சிவந்த பாட்டாளி**
**வேட்டாளி யாகிவிட வீழுமுத லாளியமே**
**தங்கழுத்தைச் சுருக்கவரும் தாம்பைமுத லாளியர்கள்**
**இங்கெழுந்து வளருவதற் கேற்றவெலாம் செய்துவிட்டார்;**
**பொங்கிவரும் செல்வவெறிப் புயலிலகப் பட்டுலகம்**
**எங்குமுள உழைப்பினரை இணைத்தொன்றா வாக்கிவிடும்"**
(கார.மார்.கா,பா.162-163)

என்றுரைப்பர்.

## காரல் மார்க்சும் சோசலிசமும்

காரல் மார்க்சின் தத்துவங்களில் அடிநாதமாகத் திகழ்வது சோசலிசச் சிந்தனை ஆகும். சமூக வளர்ச்சியின் 5 கட்டங்களைக் காரல் மார்க்சு அவர்கள் வரையறை செய்வதனை எஸ்.ஏ.பெருமாள்.

**"1. ஆதி பொதுவுடைமைச் சமூகம்**

உற்பத்திச் சாதனங்கள் (இயற்கை) மற்றும் கருவிகள் அனைத்தும் சமூகத்தின் பொதுச் சொத்தாக இருந்தது. கல் ஆயுதங்கள் முதல் வில் அம்பு வரை பொதுவிலிருந்து. சுரண்டலற்ற, வர்க்கங்களற்ற சமூக அமைப்பாக அது இருந்தது. இக்கால நிலையைப் புராதன காலச் சமூகம் என்பர்.

**2. அடிமைச் சமூகம்**

வரலாற்றுப் போக்கில் அடுத்து அமைந்த சமூகம் அடிமைச் சமூகம் எனப்பட்டது. இதில் உற்பத்திச் சாதனங்கள் அடிமை எஜமானர்களுக்குச் (ஆண்டை) சொந்தம். அடிமையும் ஆண்டையின் உடமை தான். அடிமைகளின் உழைப்பை நிர்பந்தமாய் சுரண்டி ஆண்டைகள் கொழுத்தனர். தனியுடைமை, அரசு, குடும்பம் தோன்றின.

**3. நிலபிரபுத்துவச் சமூகம்**

உற்பத்திச் சாதனங்களனைத்தும் இதில் நிலப்பிரவுக்குச் சொந்தம். ஆனால் உழைப்பாளி நிலப்பிரபுவின் அடிமையல்ல. முன்பு அடிமையாக இருந்தோர் தற்போது சொந்த வேளாண்மை, கைத்தொழில் செய்யலாம். ஆனால் நிலப்பிரவுக்காக உழைக்க வேண்டும். சாகுபடி செய்து அறுவடையில் பங்குதர வேண்டும். இந்த முறையில் சுரண்டல் கொடுமை நெடுங்காலம் நீடித்தது.

**4. முதலாளித்துவ சமூகம்**

இதில் உற்பத்திச் சாதனங்களான தொழிற்சாலைகளும் கருவிகளும் முதலாளிக்குச் சொந்தம். உற்பத்திக் கருவிகள் உழைப்பாளிகளிடமிருந்து பறிக்கப்பட்டுவிட்டன. தொழிலாளி தனது உழைப்பை விற்று வாழவேண்டிய நிலை ஏற்பட்டது.

**5. சோசலிச சமூகம்**

உற்பத்திச் சாதனங்களும், கருவிகளும் இதில் சமுதாய உடைமை யாகின்றன. உழைப்புக்கேற்ற பங்கீடு கிடைக்கும். உழைக்காதனுக்குச் சோறில்லை."[8] என்று பாகுபடுத்தியுரைப்பர்.

இவற்றிலிருந்து படிப்படியான வளர்ச்சியின் காரணமாக சமூக மாற்றம் நிகழ்ந்து கொண்டே இருப்பதனை அறிய முடிகின்றது. சோசலிச சமூகம் உருவாக புரட்சியே அடிப்படை ஆகும். சோசலிச சமூகம் எவ்வாறு அமைய வேண்டுமென்ற காரல்மார்க்சின் உளக்கருத்திற்கு பாவலர்மணி அவர்கள் "உற்பத்திக் கருவியெல்லாம் சமுதாயத்தின் உடைமையென மாற்றுவதும் நாட்டில் உள்ள

அற்பத்தின் அற்பமெனும் உடைமை கூட யாருக்கும் தனியுரிமை ஆகாதென்றும் மெய்ப்படுமோர் உழைப்புக்கும் மூளை சார்ந்த வேலைக்கும் வேறுபாடில்லை என்றும் பொய்ப்படுமோர் ஒற்றுமையை ஒழித்துக் கட்டிப் புதுமைமிகும் ஒற்றுமையை வளர்ப்பதென்றும் எந்தவொரு வர்க்கமுமே பிறிதொன்றின் மேல் ஏறி மிதித்து ஆதிக்கம் செலுத்தாதென்றும், இந்தவகை நிகழ்வுகளை எதிர்ப்போர் தங்கட்கு இங்கரசு துணைபோதல் இல்லை என்றும், அந்தமிகும் நாட்டுநகர்ப் புறங்களின் ஊடே அணு அளவும் பேதமிராது என்றும், தத்தம் சொந்த அகத் தூண்டலினால் மட்டுமே உழைப்பர்; வேறு தூண்டலினால் உழைத்தல் இலர்"[9] என்று உருவு தந்திருக்கின்றார். மேலும் சோசலிச சமூகம் என்பது எளிதில் வாய்ப்பதன்று. புரட்சி ஒன்றே சோசலிச சமூகத்தின் திறவுகோல் ஆகும். அத்தகைய புரட்சி உருவாகத் தூண்டல் என்பது இன்றியமையாத ஒன்று என்ற மார்க்சின் கருத்து பாவலர்மணி அவர்களின் கைவண்ணத்தில்,

**"வேண்டுதல்கள் செபதபங்கள் செய்வதனால் இங்கே**
**மூண்டுவிடும் ஓர்புரட்சி என்பதெலாம் மாயை;**
**தூண்டுதல்கள் அதன்விளைவாத் துலங்குதல்கள் நேர்ந்தால்**
**ஈண்டுமொரு புரட்சிவரும் என்பதனை யோர்மின்"** (கார.மார்.கா.பா:64)

என்று வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

## பொதுவுடைமையற்ற சமூகமே கள்ளத்தனத்திற்கு அடிப்படை

காரல் மார்க்சு சமூக அவலங்களுக்கான காரணங்களைக் கண்டறியும் ஒரு மருத்துவர் போலச் செயல்படுகின்றார். இத்தகைய சிறந்த சமூகப் போராளியாகத் திகழ்ந்ததால் தான் அவர் மாற்றத்திற்கு வித்தாக அமைந்திருக்கின்றார். பொதுவுடைமை எங்கு நிராகரிக்கப்படுகின்றதோ அங்கு அத்தனை கள்ளத் தனங்களும் மேலோங்கி இருக்கும் என்பதை அறிய முடிகின்றது. சமூகத்தின் நோயை அடையாளம் கண்ட காரல் மார்க்சு அதற்கான சிகிச்சை முறையையும் அழகாகப் பரிந்துரை செய்கின்றார். பொதுவுடைமைச் சமூகம் எவ்வாறு உருவாகும் என்ற காரல் மார்க்சின் கருத்தினை,

**"ஒருபுறம் பார்த்தால் வளமையின் சிகரம்;**
**மறுபுறம் பார்த்தால் வறுமையின் பள்ளம்;**
**இரண்டு பிரிவாய் இறுகிடும் சமூகம்;**
**இல்லாத வர்களின் எரிச்சலும் சினமும்**
**உள்ளாரை நோக்கி உறுத்துப் பார்த்திடும்;**
**உற்பத்திச் சாதனம் ஒருசில ரிடத்தில்**
**இருப்பதால் தானே இந்தத் தொல்லைகள்!**
**என்ற கருத்தின் ஏறுமுக வளர்ச்சி**

**புரட்சியாய் வெடித்துப் பொங்கும் ஒருநாள்**
**தனிச்சொத் துரிமைக்குச் சாவுமணி அடிக்கும்.**
**உரிமையைப் பறித்தோர் உரிமையை இழப்பர்.**
**உரிமையை இழந்தோர் உரிமையைப் பெறுவர்;"** (கார.மார்.கா.230-241)

என்று பாவலர்மணி அவர்கள் தமது காப்பியத்தில் அழகாகப் பதிவு செய்திருக்கின்றார்.

## எழுத்தினால் மாறும் தலையெழுத்து

பேனாமுனை கத்தி முனையைக் காட்டிலும் வலிமை வாய்ந்தது என்பது அனைவரும் அறிந்த ஒன்றாகும். மிகப் பெரிய சாம்ராஜ்யங்களையும் அசைத்துப் பார்த்த பெருமை பேனா முனைக்கு உண்டு. எண்ணற்ற சமூக மாற்றத்தின் திறவுகோலாகப் பேனா முனை திகழ்ந்தது என்பது திண்ணம். நேர்மையான திறம் வாய்ந்த எழுத்து மனித மனத்தை மாற்றும் மந்திரச் சாவி போன்றது. அத்தகைய வீறு கொண்ட எழுத்தினைக் கொண்டு தொழிலாளிகளை ஏற்றம் பெறச் செய்து பொதுவுடைமையை மலரச் செய்ய முடியும் என்ற காரல் மார்க்சின் சிந்தனை,

**"உதயமுறும் பொதுவுடைமை ஓங்குறவே வேண்டின்**
**நிதியமென உதவுவது பத்திரிகை ஒன்றே!**
**மதியுறலே இதுசமயம் தொழிலாளர்த் தேவை;**
**புதியரெயின் லாந்தெனுமோர் புதியஇதழ் கண்டான்"** (கார.மார்.கா,பா:201)

என்ற பாவலர்மணி அவர்களின் கைவண்ணத்தில் மிளிர்கின்றது.

## செயலால் மட்டுமே விளையும் நன்மை

சமூக மாற்றம் என்பது சிந்தனையாலும், பேச்சாலும் விளைவது அன்று. அது செயலால் மட்டுமே விளையக் கூடியது ஆகும். இது காரல்மார்க்சின் அடிநாதமான கொள்கை எனலாம். இவ்வனல் பறக்கும் கருத்தினை பாவலர்மணி அவர்கள் தமது காப்பியத்தில்,

**"புலம்புவதால், கலங்குவதால், புகழுரையால், வாயை**
**அலம்புவதால்** சுதந்**திரத்தை அடைந்திடுதல் இல்லை;**
**சிலம்புவதால்: வாளெடுத்துச் செங்களத்தை நோக்கிக்**
**கிளம்புவதால் அல்லாமல் கிட்டிடுமோ சொல்வீர்!"** (கார.மார்.கா,பா:65)

என்று சிறப்புற எடுத்துரைப்பர்.

## மாற்றம் ஒன்றே மாறாதது

மாற்றம் ஒன்றே மாறாதது என்பது காரல் மார்க்சின் அடிப்படைக் கொள்கை ஆகும். சுரண்டலிலிருந்து மீண்டு பொதுவுடைமைச் சமூகம் மலர்வதற்கு இந்தக் கொள்கையே அடிப்படையானதாகும். சமூகம் பற்பல மாற்றங்களிலிருந்து புதுமையானதாக உருவெடுப்பதற்கு காரல்மார்க்ஸின் இந்தக் கூற்றே அருந்துணை செய்கின்றது. இந்த கருத்தினை பாவலர்மணி அவர்கள் தமது காரல்மார்க்சு காப்பியத்தில் நயமாகக் கையாண்டிருக்கும் பாங்கினை,

**“பழையன கழிதலும் புதியன புகுதலும்**
**வழுவல கால வகையெனும் இலக்கணம்;**
**இயல்பாக் கழிவது எது? அது பழைமை;**
**இயல்பாய் முளைப்ப தெதுஅது புதுமை;**
**பழைமையாய்ப் போன விதையுள் ளிருந்தே**
**புதுமைத் தளிர்கள் புன்னகை காட்டும்;**
**பிளந்த விதையின் சிதைந்த பகுதிகள்**
**மண்ணுள் பழைமையாய் மட்கி மடியும்;**
**விதையுள் ளிருந்து செடிமுளைப் பதுதான்**
**புதுமையும் பழைமையும் ஆமெனப் புகன்றான்.”** (கார.மார்.கா,88-96)

என்ற பாடலின் வழி அறியலாம்.

## நாயகனும் முதலாளித்துவ சமூகமும்

காரல் மார்க்சு தொழிலாளி உலகம் முழுவதும் உய்வதற்கு அரிய வழிகளைக் காட்டிய அரும் மனிதர். ஆனால் அவரது வாழ்வானது பொதுவுடைமையற்ற முதலாளித்துவ சமூகத்தினால் நொறுங்கிப் போனது. பேராசை கொண்ட மனிதர்கள் சூழ்ந்த உலகமாக இருந்ததினால் காரல் மார்க்சு தனது நியாயமான ஆசைகளைக் கூட நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லை. இந்த அவலமான வாழ்க்கைச் சூழ்நிலையை முழுமையாக உள்வாங்கிய பாவலர்மணி அவர்கள் மார்க்சிய சிந்தனையைத் தாங்கிய மாண்புமிகு கவிதையைப் படைத்துள்ளார்.

இதனை,

**“வறுமைக்கு வறுமையினை வழங்கிவிட**
**வழிகண்ட காரல் வாழ்க்கை**
**வறுமைக்கே இலக்காகி வற்றியதை**
**என்சொல்ல! மனிதப் பண்பில்**

**வறுமைக்கே உறவான மனிதர்களின்**
**பேராசை மிக்க வாழ்க்கை**
**வறுமைக்கிவ் வுலகமிசை வாழ்க்கையினைத்**
**தருவதுமோர் வஞ்சம் அன்றோ!"** (கார.மார்.கா,பா:278)

என்னும் பாடல் புலப்படுத்தும். காரல் மார்க்சு அவர்கள் அர்த்தமுள்ள வாழ்க்கையை வாழ்ந்தவர். அவரது கொள்கைகள் நிலைத்த உண்மையினைக் கூறுவதால் என்றென்றும் நிலைத்திருக்கும் தன்மை வாய்ந்தது. சேகுவேரா அவர்கள் "மார்க்ஸ் அவரது காலத்தில் அதிகமாக வெறுக்கப்பட்டவராகவும், மிகவும் அவதூறு செய்யப்பட்ட மனிதராகவும் இருந்தார். எதேச்சதிகார அரசாங்கங்கள், குடியாட்சி அரசாங்கங்கள் ஆகிய இரண்டுமே அவரைத் தம்முடைய நாடுகளிலிருந்து வெளியேற்றின. முதலாளி வர்க்கத்தினர்- அவர்கள் பழமைவாதிகளோ அல்லது அதிதீவிர ஜனநாயகவாதிகளோ- மார்க்ஸ் மீது அவதூறுகளைக் குவிப்பதில் ஒருவருக்கொருவர் போட்டியிட்டனர். இவை அனைத்தையும் அவர் ஒட்டடையைத் தட்டுவதைப் போல ஒதுக்கித் தள்ளினார். அவற்றைப் புறக்கணித்தார்; இன்றியமையாத நிலையில் மட்டுமே அவற்றுக்குப் பதிலளித்தார். சைபீரியாவின் சுரங்கங்களிலிருந்து ஐரோப்பா மற்றும் அமெரிக்கக் கண்டங்களின் எல்லாப் பகுதிகளிலும் கலிபோர்னியா கடற்கரைகள் வரை லட்சக்கணக்கான புரட்சிகர தொழிலாளர்கள் தங்களுடைய அன்புக்கும் மரியாதைக்கும் உரியவரான அவர் மரணமடைந்த பொழுது துக்கித்தனர். அவருக்குப் பல எதிராளிகள் இருந்திருக்கலாம். ஆனால் ஒரு தனிப்பட்ட விரோதிகூட இருந்ததில்லை என்று நான் துணிந்து கூறுவேன். அவர் பெயர் யுகங்களுக்கும் நிலைத்திருக்கும். அவருடைய பணியும் நிலைத்திருக்கும்."[10] என்று காரல் மார்க்சு குறித்துக் கூறுகின்றார். மேலும் காரல் மார்க்சின் மருமகனும், பிரெஞ்சு சோஷலிஸ்டுமான போல் லபார்க் மார்க்சைப் பற்றி நினைவுகூரும் பொழுது,

**"அவன் ஒரு மனிதன்**
**அவனை முழுமையாக**
**ஏற்றுக் கொள்வீர்.**
**அவனைப் போன்ற ஒருவனை**
**இனி நான் சந்திக்கப்**
**போவதில்லை"**[11]

என்று ஷேக்ஸ்பியரின் கவிதை வரிகளைக் கையாண்டிருப்பதாக அருணன் கூறுகின்றார். இதிலிருந்து காரல் மார்க்சின் இலட்சிய வாழ்வினை அறிய முடிகின்றது. அவருடைய கருத்துக்கள் சாகாவரம் பெற்றவை. அச்சிந்தனை

முத்துக்கள் தொடுக்கப்பட்ட மாலையாக காரல் மார்க்சு காப்பியத்தினைப் பாவலர்மணி படைத்திருப்பதை இதன் வழி அறிய முடிகின்றது.

## இயங்கியல் முறையும் பொருள் முதல் வாதமும்

“பொருள்தான் மூலமானதென்ற அடிப்படையில் மார்க்சியத் தத்துவம் உருவானதால், இது பொருள் முதல்வாதத் தத்துவமாகும். ஆனால், இது முந்தைய காலங்களில் யாந்திரீக பொருள்வாதத்திற்கும் யூகம் மற்றும் அனுமானிப்பு பொருள்வாதத்திற்கும் மாறுபட்டதாகும், தனித்தன்மை கொண்டதாகும். ஏனெனில் (மார்க்சியம்) பொருட்களை அவற்றின் இயங்கும் தன்மையை வைத்து ஆராய்கிறது. தெரிந்துகொள்கிறது. இயங்கும் தன்மையையும் பொருளையும் பிரித்துப் பார்க்கக் கூடாது. பிரிக்கவும் முடியாது. இரண்டையும் பிரிக்க முடியாததன் முழுமையே இயக்கவியல் பொருளாதார முதல்வாதமாகும்.”[12] என்று ‘மாக்சிய தத்துவமும் அரசியல் பொருளாதாரமும்’ என்ற நூல் இயக்கவியல் பொருள்முதல்வாதம் குறித்து விளக்கம் அளிக்கின்றது. இத்தகைய பொருள் முதல் வாதத்தினை காரல் மார்க்சு காப்பியத்தில் பாவலர்மணி அவர்கள்

**“கருத்து முதலா? புலனாரக்**
**காணும் பொருள்தான் முதலா?**
**நருத்தி யுடனே தேடுகையில்**
**அறிஞன் பாயர் பாகென்பான்**
**‘இருத்தல் கொண்ட பொருள்கொண்டே**
**எண்ணம் தோன்றும் மாறாகக்**
**கருத்துள் இருந்தோர் பொருள்தோன்றக்**
**கண்டா ரில்லை’ எனல் தேர்ந்தான்”** (கார.மார்.கா,பா:94)

என்று பதிவு செய்துள்ளார்.

## இயக்கவியலின் அடிப்படை அம்சங்கள்

இயக்கவியலின் அடிப்படை அம்சங்களைக் குறித்து ‘மார்க்சிய தத்துவமும், அரசியல் பொருளாதாரமும்’ என்ற நூல் சிறப்பாக விளக்குகின்றது. அதில்,

“பொருள், இயங்கும் நிலையிலேயே உள்ளது. பொருள் இல்லாமல் இயக்கமில்லை. ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு நகர்வதை மட்டும் இயக்கமெனக் கருதிவிடக்கூடாது. பொருளின் எல்லாவித நடவடிக்கைகளையும் இயக்கமாகவே கருத வேண்டும். ஒரு பொருள் இயங்குவதால் சக்தி தோன்றுகிறது. எண்ணங்களும், கருத்துக்களும் இயக்கத்தால்தான் (மூளையின் நடவடிக்கைகளால்) உண்டாகின்றன.

ஏற்கனவே தயாரித்து வைக்கப்பட்ட பலவித காட்சிப் பொருட்கள் மற்றும் பொருட்களின் ஒட்டுமொத்தக் கூட்டாக உலகைப் புரிந்துகொள்ளக்கூடாது. பலவித செயலாக்கங்களின் ஒட்டுமொத்தமாகவே உலகைப் பார்க்க வேண்டும்.

நாம் பார்க்கும் எல்லா பொருட்களும், செயல்களும் மாறிக் கொண்டே இருக்கின்றன. மாறும் என்ற விதியைத் தவிர மற்றவையெல்லாம் மாறிக்கொண்டே இருக்கின்றன என காரல் மார்க்ஸ் கூறியுள்ளார். எதுவும் நிலையானதல்ல, முடிவானதுமல்ல, ஒவ்வொன்றும் தோன்றுகிறது வளர்கிறது, முன்னேறுகிறது. பின்னர் மடிந்து விடுகிறது. இது ஒரு தொடர்ச்சியான செயல்பாட்டின் விளைவாகும்.”[13] போன்ற இவை ஆகும். இத்தகைய இயங்கியல் முறையினை காரல் மார்க்சு காப்பியத்தில் பாவலர்மணி அவர்கள்,

**“பொருள்உற் பத்தி முறையினுள் நடந்துள**
**மருள்கொள வைக்கும் வளர்ச்சியும் மாற்றமும்,**
**தொழில்முத லாளர்க்கும், தூணென விளங்கும்**
**தொழிலா ளர்க்கும் உளதாம் தொடர்பும்,**
**உற்பத்தி யான பொருளை எங்கும்**
**விற்பனை செய்ய விரிந்த களங்களும்,**
**நாணய மாற்றில் நடக்கும் நிகழ்வுகளும்,**
**ஆக்குவோர், நுகர்வோர் ஆமிவர் திறத்துப்**
**போக்கும், அதனால் போந்த நிலைமையும்**
**முதலா ளியமென முகிழ்ந்ததோர் தீமை**
**முதலை இழக்கும் முடிவுரை நிகழ்ச்சியும்,**
**ஆக்கும் தொழிலாளி வர்க்கஆ திக்கம்**
**வர்க்கமே இல்லா வாழ்நிலை நோக்கிக்**
**கொண்டு செலுத்தும் குறிக்கோள் வரைவும்**
**என்று பலவும் இயங்கியல் முறையில்**
**நின்று நிலையுறும்..........................”** (கார.மார்.கா,37-52)

என்று மூலதனத்தில் காரல்மார்க்சு உதிர்த்த முத்துக்களை எடுத்துரைப்பதன் வழி நயமாகக் கையாண்டிருக்கின்றார்.

## சமூகவியல் சிந்தனை

படைப்பாளி என்பவன் ஒரு சமூகத்தின் ஆணிவேர் ஆவான். ஒரு சமூகத்தின் இழிந்த நிலைகளை எடுத்துக் கூறுவதோடு, ஒரு சிறப்பான சமூகம் எத்தகைய நல்ல செயல்களை உள்ளடக்கியதாக இருக்க வேண்டும் என்பதையும் இலக்கியத்தின் வாயிலாகப் பகரும் அரும்பணி அவனுடையதாகும். சமூகத்தின்

ஆணிவேரை அசைத்துப் பார்க்கும் தீய சக்திகளை அறிமுகம் செய்யும் இலக்கியமே சமூகப் பயன்பாட்டிற்கு வித்தாக அமையும். இலக்கியத்தில் வாசகனின் உள்ளத்தைக் கவர எண்ணற்ற அழகுணர்ச்சிகள் இடம் பெற்றிருக்கும். அழகுணர்ச்சி என்னும் வலையின் வழியாக வாசகனின் மனசாட்சியினை கிளர்ந்தெழச் செய்வது தான் ஒரு சிறந்த இலக்கியம் ஆகும். சமூகத்திற்கு பெரிய பயன் விளைவதற்கு அது துணைசெய்யும் என்பது திண்ணம். ஒரு சிறந்த இலக்கியத்தைப் படித்த ஒரு வாசகன், அவ்விலக்கியம் உணர்த்தும் நற்போதனைகளில் திளைக்கும் பொழுது அவன் தீமையை விட்டு வெகுதூரம் விலகி நிற்பதற்கு அது துணைசெய்யும். தரமான இலக்கியத்தைக் கற்ற ஒரு வாசகன் எண்ணற்ற நற்செயல்களை சமுதாயத்திற்கு ஆற்றாவிட்டாலும் ஒரு சிறு தீமையைக் கூட செய்யாமல் இருப்பானாயின் அது சமுதாயம் நல்ல முறையில் உய்வதற்குத் துணை செய்யும். அத்தகைய இலக்கியங்களே காலத்திற்கும் நிலைபெறக் கூடிய தகுதி வாய்ந்தவை ஆகும். வாசகர்களின் உள்ளத்தில் எண்ணற்ற நல்ல மனவெழுச்சிகளைத் தூண்டும் வகையில் பாவலர்மணி அவர்கள் தமது காப்பியங்களில் படைத்த சமூகவியல் சிந்தனைகள் பின்வருமாறு:

### சமூகம்-வரையறை

“சமூகம் என்பது, தனித்துவமான பண்பாடு, நிறுவனம் சார்ந்த தனிப்பட்டவர்களிடையே உள்ள தொடர்புகளை அடிப்படையாகக் கொண்டமைந்த ஒரு மனிதர் கூட்டத்தைக் குறிக்கும். விரிந்த அளவில் நோக்கும்போது இது பல்வேறுபட்ட மக்களை அல்லது மக்கள் கூட்டத்தை உள்ளடக்கிய ஒரு பொருளியல், சமூக மற்றும் தொழில்துறை உட்கட்டமைப்பு எனலாம். சமூகம் என்பது “தமிழர்” என்பது போல ஒரு குறிப்பிட்ட மக்களையோ, இலங்கை என்பதுபோல ஒரு நாட்டையோ அல்லது “மேல்நாட்டுச் சமூகம்” என்பதுபோல ஒரு பரந்த பண்பாட்டுக் குழுவையோ குறிக்கக் கூடும்”[14] என்று பிரிக்ஸ் அவர்கள் சமூகம் குறித்துக் குறிப்பிடுகின்றார். காட்லியர் சமூகம் குறித்து “அரசறிவியலில், சமூகம் என்பது மனிதத் தொடர்புகள் முழுமையையும் குறிக்கப் பயன்படுகிறது.[15]

## சமூக நடப்பியல் இலக்கிய வகையின் இயல்புகள்

சமூக நடப்பியல் இலக்கிய வகையின் இயல்புகள் குறித்து திறனாய்வு அணுகுமுறைகள் என்ற நூலில் மு.வளர்மதி அவர்கள் பின்வரும் கருத்துக்களை எடுத்துரைக்கின்றார். அவை

1. “மனித சமுதாயத்திற்கு அடிப்படையானதும் பொதுவானதுமான பொருளைப் புறக்கணித்துவிட்டு, வாழ்தலுக்குத் தேவையற்றவைகளின் நுட்பங்களை மிகைப்படுத்திக் கூறுகின்ற போக்கு, சமூக நடப்பியல் இலக்கிய வகையில் இடம்பெறுவதில்லை.

2. புகழ்ச்சி சொற்களும் உண்மையற்ற, போலி அலங்கார வருணனைகளும் இவ்வகை இலக்கியத்தில் இடம்பெறுவதில்லை.

3. நிகழ்கால வரலாற்றை மட்டும் கூறிவிட்டு அதன் தொடர்ச்சியான வருங்காலத்தைப் பற்றிய உறுதியான சமுதாயப் போக்குகளைக் கூறாமல் விட்டுவிடுவதைச் சமூக நடப்பியல் இலக்கிய வகை ஏற்றுக்கொள்வதில்லை.

4. நிகழ்காலச் சமுதாயம் கடந்தகால சமுதாயத்தின் பிரதிபலிப்பு என்ற வரலாற்று வளர்ச்சியைப் பார்க்க மறுக்கின்ற போக்குகளைச் 'சமூக இலக்கிய வகை' சுட்டிக்காட்டுகிறது.

5. மக்கள் பெயரால், மக்களுக்காக, மக்கள் சார்பில் எடுத்துக் கூறுகின்ற கருத்துக்களுக்கு மதிப்பளிக்க வேண்டும் என்பது சமூக நடப்பியல் இலக்கிய வகையின் தன்மையாகும்.

6. வாழ்க்கையை உள்ளது உள்ளவாறே அதனுடைய இயக்கத்தில் வைத்து, பழமைக்கும், புதுமைக்கும் இடையே நடைபெறும் போராட்டத்தை வெளிப்படுத்தி, விளக்கிக் கூறுகின்ற பொழுது, அனைத்து வேறுபாடுகளையும் அந்தந்த இலக்கியப் பாத்திரப் படைப்புகளின் வழியே உணர்த்த வேண்டும்.

மனித நேயம் (Humanism) என்ற அடிப்படையில் மானுடத்தை உயர்த்திக் காட்டும் வாழ்வின் சிறப்பிற்கு அழுத்தம் கொடுத்துச் சித்திரித்தல் வேண்டும் என்பது இந்த வகை இலக்கியத்தின் இயல்பாக அமைகிறது"[16] என்பனவாகும்.

## பணத்தினை ஈட்டான் பிணத்தினை ஒப்பான்

சமூகம் ஒரு மனிதனை அவனுடைய பணத்தை வைத்தே மதிப்பீடு செய்கின்றது. அவனது உயர்ந்த பண்புகள் அம்மதிப்பீட்டில் இடம்பெறுவதில்லை. பணம் பாதாளம் வரை பாயும் தன்மையுடையது என்ற கருத்தினை பாவலர்மணி அவர்களின் 'கருப்புப் பணம்' என்னும் கவிதை

**"ஆண்டவோர் கட்சி தன்னை**
**எதிர்க்கட்சி ஆக்கி வைப்பேன்;**
**தீண்டுவார் ஆரும் இன்றித்**
**தேய்ந்தவோர் கட்சி தன்னை**
**மீண்டும் நான் ஏற்றி வைப்பேன்**
**மேல்வரும் இயல்பை எல்லாம்**
**ஈண்டுநீர் தெளிவீ ராயின்**
**என்னலால் அரசொன் றுண்டோ?"[17]**

என்று மெய்ப்பிக்கின்றது. பணம் மனித மனங்களில் இங்ஙனம் ஆட்சி செலுத்துகின்றது. காரல் மார்க்சு என்னும் மாமனிதனின் அருமையை அவரது தாயே உணரவில்லை என்னும் அவலநிலையை தமது காரல் மார்க்சு காப்பியத்தில் பாவலர்மணி அவர்கள்,

**“பணத்தினைப் பற்றி மட்டும்**
**எழுதினால் பயனொன் றில்லை;**
**உணத்தின உடுத்த எல்லாம்**
**உதவிடும் பணத்தை ஈட்டான்**
**பிணத்தினை ஒப்பான்’ என்னும்**
**கொள்கையில் பிறங்கும் தாய்மேல்**
**மனத்தினை வைக்கக் காரல்**
**மார்க்சுக்கு தயக்கம் போலும்”** (கார.மார்.கா,35)

என்பர். தாய், மகன் உறவுநிலையை நிர்ணயிக்கும் சக்தி வாய்ந்த ஆயுதமாக பணம் செயல்படும் சமுதாய அமைப்பினை இதன் மூலம் அறிய முடிகின்றது.

## வறுமை என்னும் கொடிய நோய்

வறுமை என்பது மனிதனை நிலைகுலையச் செய்வது மட்டுமன்று. அவரது மாண்பினையும் நிலைகுலையச் செய்வதாகும். ஒரு சமுதாயத்தினை இழிந்ததாக மாற்றும் அத்தனை சக்திகளும் வறுமைக்கு உண்டு. சமுதாயத்தின் அனைத்து வளர்ச்சியினையும் தடை செய்யும் விடச் செடி வறுமையாகும். நுரையீரல் தொற்று நோய் காரல் மார்க்சைத் துளைத்து வந்த நாளில், அதற்குரிய சிகிச்சையினை எடுக்க முடியாத அளவிற்கு வறுமையால் அவர் வாடினார். வறுமையின் கோர முகத்தை “மருந்துக்குக் காசு இல்லை. மருத்துவர்களுக்கு தருவதற்கும் மடியில் இல்லை. தெரிந்த மருத்துவரிடம் செல்வதற்கு வண்டியினைச் செலுத்துபவருக்குத் தரும் பணமும் கையில் இல்லை; தன்னுடைய கையில் உள்ளதெல்லாம் ‘வறுமை’ ஒன்றே ஆகும். மருந்துக்கு வறுமையினை மாற்றிக் கொள்ளும் மருத்துவர்கள் எவரும் மண் மேல் இல்லை”[18] என்றுரைப்பர்.

## அரசியல்வாதிகளும் இரட்டை முகமும்

அரசியல்வாதிகள் நிஜ உலகின் வேடதாரிகளாகச் செயல்படுகின்றனர். தங்களது எண்ணம் ஈடேறுவதற்காகப் பன்முகம் காட்டும் வித்தகர்களாக இயங்குகின்றனர். சுயநலம், சுய இலாபத்திற்காக எந்தவொரு இழிச் செயலையும் செய்வதற்கு அவர்கள் தயங்குவதில்லை. மு.மேத்தா அவர்கள் தேசப்பிதா பற்றிப் பாடும் பொழுது,

**“அணைக் கட்டுகளில்**
**திறக்கப்படும் தண்ணீர்**
**பள்ளங்களை ஏமாற்றிவிட்டு**
**மேட்டை நோக்கியே**
**பாய்கிறது**
**சேரிகளில் மட்டுமே நீ**
**யாத்திரை**
**செய்வாய் என்பதைத்**
**தெரிந்து கொண்டதால்**
**உன்னை நேசித்தவர்கள்**
**தேசத்தையே சேரியாக மாற்றிவிட்டார்கள்!”**[19]

என்று பாடும் பொழுது அரசியல்வாதிகளின் தன்மை குறியீடாக வெளிப்படுகின்றது. அத்தகைய கீழான அரசியல்வாதிகளின் மறுமுகத்தைப் பாவலர்மணி அவர்கள் அழகாகப் பதிவு செய்வதை, “கூட்டமிகக் காட்டுவதற்கும், கொடி பிடிப்பதற்காகவும் பாட்டாளிக் கூட்டத்தினைப் பயன்படுத்திக் கொண்டார். வாட்டம் ஏதும் தீரவில்லை; என்றாலும் நாளை விருப்பம் நிறைவேறுமென்றுக் கோட்டை கட்டலானார். பாம்புகளும் நோகாமல் பாம்படித்த கம்பும் தீங்கடைய விரும்பாத தேர்ந்த அரசியலார் பெரிய முதலாளிகளுக்கு அகம் காட்டலானார்; சாகும் பருவத்தில் உள்ள ஏழையர்க்கோ முகம் காட்டலானார்”[20] என்றுரைப்பர்.

## உழைப்பாளி வர்க்கத்தின் நிலை

உழைப்பாளிகள் ஒரு நாட்டின் முதுகெலும்பென வருணிக்கப்பட்டாலும், அவ்வெலும்புகள் உடைக்கப்படுவதிலேயே முதலாளிகள் சுகம் காணுகின்றனர். உழைக்கும் வர்க்கம் அடிமை வர்க்கமாக பெரும் முதலாளிகளால் நிர்வகிக்கப்பட்டு வருகின்றது. இது ஆரோக்கியமான சமுதாயத்திற்கு அழகு அல்ல. தொழிலாளிகளின் நிலையை பாரதிதாசன் அவர்கள் புரட்சிக்கவியில் அழகாகப் புனைத்திருப்பதை,

**“பேரன்பு கொண்டவரே, பெரியோ ரேஎன்**
**பெற்றதாய் மாரே, நல் இளஞ்சிங் கங்காள்!**
**நீரோடை நிலங்கிழிக்க, நெடும ரங்கள்**
**நிறைந்துபெருங் காடாக்க, பெருவி லங்கு**
**நேரோடி வாழ்ந்திருக்கப் பருக்கைக் கல்லின்**
**நெடுங்குன்றில் பிலஞ்சேர, பாம்புக் கூட்டம்**

**போராடும் பாழ்நிலத்தை அந்த நாளில்**
**புதுக்கியவர் யார், அழகு நகருண் டாக்கி!**

**‘சிற்றூரும், வரப்பெடுத்த வயலும், ஆறு**
**தேக்கியநல் வாய்க்காலும், வகைப் படுத்தி**
**நெற்சேர உழுதுழுது பயன்வி ளைக்கும்**
**நிறையுழைப்புத் தோள்களெல்லாம் எவரின் தோள்கள்?**
**கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்**
**கருவியெலாம் செய்துதந்த கைதான் யார்கை?**
**பொற்றுகளைக் கடல்முத்தை மணிக்கு லத்தைப்**
**போய்எடுக்க அடக்கியமூச் செவரின் மூச்சு?”**[21]

என்ற அடிகள் உணர்த்தும். அத்தகைய அருமைமிகு உழைப்பாளிகளின் அவல நிலையைப் பாவலர்மணி அவர்கள், “உழைப்பவர்கள் படிப்படியாக இளைப்பவர்களாய் மாறப் பிழை செய்பவர்கள் செல்வந்தர்களாய் நிலைபெறவே, குற்றம் இழைப்பவர் யார் என்பதையும் முறைப்படவே காண முடியாத உள்ளீடற்ற அறிவினராக உழைப்பவர்கள் தேய்ந்தார்.”[22] என்று காரல்மார்க்சு காப்பியத்தில் வடித்துள்ளார்.

## மகான்களைப் பலிகொண்ட ஆட்சியும் மதமும்

மதத்தின் பெயரால் ஆட்சியாளர்கள் அரும்மனிதர்களையும், மனிதத்தையும் கொன்ற வரலாறு உலகில் உண்டு என்பது அனைவரும் அறிந்த ஒன்று. கலிலியோ என்னும் அரும்பெரும் கண்டுபிடிப்பாளரை; அவர் பகன்ற கருத்து மதவாதத்திற்கு எதிரானது என்பதனால் கொன்ற நிகழ்வு அதற்குச் சான்று பகர்கின்றது. பூமி உருண்டையானது என்கின்ற நிலைத்த உண்மையினை அவர் மொழிந்தார். அது புனித நூலின் புனிதத்தை அவமதிப்பதாகக் குற்றம் சுமத்தப்பட்டு அவருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. ஆட்சியும், மதமும் கைகோர்த்து அரும் மனிதரைப் பலிகொண்ட சமூக அவலத்தை பாவலர்மணி அவர்கள் “ஆட்சியும், மதமும் நீள்கரம் கோர்த்து ஆடிய ஆட்டம் இம்மண்ணில் மீட்சியே இல்லாத துயரினுள் மனிதத்தை வீழ்த்திய கதைகளோ கோடி; சிலுவைக் காட்சி கருணை என்றெல்லாம் பேசிடுவார். அவர் செய்யும் சூழ்ச்சியில் அறிஞர் கலிலியோ போன்றோர் தொலைந்ததனைப் பார்த்துள்ளோம் அன்றே.”[23] என்று காரல் மார்க்சு காப்பியத்தில் பதிவு செய்துள்ளார்.

## சமூகப் பொறுப்பிலிருந்து விலகி நிற்கும் அரும் மனிதர்கள்

சமூகத்திற்கு மறைமுகமாகத் தனது அருட்கொடையினை அளிக்கும் மனிதர்கள் நேரடியாக சமுதாயத்திற்கு தனது பங்களிப்பினைச் செலுத்துவதில்லை என்பது நிதர்சனமான உண்மையாகும். இந்த சமூகசிந்தனையைப் பாவலர்மணி அவர்கள் தமது காரல் மார்க்சு காப்பியத்தில் அழகாகப் பதிவு செய்துள்ளார். 'மூலதனம்' என்னும் நூலின் முதற் தொகுதியை காரல் மார்க்சு அவர்கள் சார்லஸ் டார்வினுக்கு அனுப்பி வைக்கின்றார். அதற்கு டார்வின் நன்றி தெரிவித்து மடல் அனுப்ப, அதனால் மனம் உவந்த காரல் மார்க்சு தனது 'மூலதனம்' நூலின் இரண்டாவது தொகுதிக்கு ஒப்புதல் அளிக்குமாறு சார்லஸ் டார்வினை வேண்டுகின்றார். அதற்கு டார்வின் வரைந்த பதில் மடல் சமூகப் பொறுப்பிலிருந்து அவர் ஒதுங்கி இருப்பதை நமக்குப் பறைசாற்றுகின்றது. எண்ணற்ற கண்டுபிடிப்புகளை உலகிற்கு வழங்கி அரும் பயனை சமூகத்திற்கு வழங்கிய டார்வினின் சமூகம் குறித்த குறுகிய மனப்பான்மையை, "உடன்படும் கடிதம் வரும்வரும் என்றே மகிழ்ச்சியுடன் அவன் இருந்தான்; திடீரென்று ஒரு நாள் வந்த தார்வினின் கடிதம் திகைப்பினை அளித்தது; நண்பரே! மடலினுக்கு இசைந்து ஒப்புதல் அளிப்பதற்கு எனக்கு மனமில்லை; பொறுத்தருள் செய்வீராக; துன்பம் தரும் எதற்கும் விலகி நின்றிடுதல் என் இயல்பு என்பதை அறிக, 'நூலினுள் உரைத்துள்ள செய்திகள் பற்றி நுண்துளி அறிவும் எனக்கில்லை; அதுமட்டுமல்லாது அந்நூலில் கடவுளை, மதத்தை சாடுறும் செய்திகள் உள்ளதால்; நான் இதற்கு ஒப்புதல் அளித்தால் என் உறவினர் மிகவும் வெறுப்பினை வெளிப்படுத்துவர்; எனவே ஒப்புதல் தர யான் கருதவில்லை; என்பது கண்டான்."[24] என்னும் நிகழ்வில் பதிவு செய்துள்ளார்.

## தமிழர்களின் நிலையைப் பறைசாற்றும் சமூக சிந்தனை

அடைக்கலம் தந்து காத்த தமிழர்கள் மீதே படைக்கலம் ஏந்திய வரலாறு நாம் அனைவரும் அறிந்த ஒன்றாகும். இன ஒற்றுமை குறைந்து, நாடி பிழைக்க வந்த பேடிகளிடம் உள்ள பணத்தின் காரணமாக ஒற்றுமை மேலோங்கியதால் வந்த அவல நிலையே அடிமை நிலையாகும். இதனை பாவலர்மணி அவர்கள் 'அன்னி மகள்' காப்பியத்தில் அழகாகப் பதிவு செய்துள்ளார். கூடலில் வாழ்ந்த கோசர் தலைவன் அகுதையை அரிமணவாயிலில் எவ்வி வெற்றி கொள்கின்றான். அந்த வெற்றி விழா நிகழ்வின் போது, அமைச்சரின் வாழ்த்துரை வாயிலாகத் தமிழர் நிலை பாங்குற வெளிப்படுவதை, "அடைக்கலம் நாடி வந்தவர் படைக்கலம். ஏந்தினர்; வாழ்ந்தவர் எல்லாம் வந்தாரை ஏற்றுத் தாழ்ந்தவராகித் தமிழின ஒற்றுமை அழிந்திடச் செய்தனர்; வருந்தத்தக்க செயலை வென்றிட உயரத்தும் நின் வேற்றிறம் வாழ்கவே;"[25] என்ற பாடலின் வழி அறியலாம்.

## போரற்ற பூமியே புண்ணிய பூமி

போர் என்பது மனித உயிர்களோடு மனிதத்தையும், ஒற்றுமையையும் பலி கொள்வதாகும். போரினை வெறுக்கும் நாடே எண்ணற்ற வளர்ச்சியினைப் பெறக் கூடிய நாடாக அமையும். போர் வேண்டாம் என்று போர்க்கொடி தூக்கும் நாளே புனித நாள் ஆகும். போர் மூளும் நாடு மனித வளங்களோடு மற்ற வளங்களையும் இழந்து சுடுகாடாக மாறும். அத்தகைய போர் அற்ற புண்ணிய பூமியை பாவலர்மணி அவர்கள் கவினுற கற்பனை செய்கின்றார். 'அன்னி மகள்' காப்பியத்தில் எவ்வி அகுதையை அரிமணவாயிலில் வென்று வெற்றிக் களிப்படைந்தாலும், எண்ணற்ற வீரர்களின் இழப்பை எண்ணி வருந்துகின்றான். 'மூதாட்டி ஒருவரின் இரண்டு மகன்களும் களத்தில் மாண்ட கதை எவ்வியைக் களக்கமுறச் செய்கின்றது. அப்பொழுது எவ்வி நிகழ்த்தும் பேருரை, "போரும், பூசலும், பொறுமையற்ற செருக்கும் தீரும் நாள் உண்டுகொல்! பகையென்னும் ஒரு சொல் உலகை விட்டொழியும் ஒருநாள் வருங்கொலோ! பேயாக மாந்தர் அலைதலும் தீருமோ? கொல்லுலைக் களமெல்லாம் கொல்வதற்குரிய படைக் கருவிகள் செய்யாது; நெல்லும், கூலமும் விளைகின்ற நிலம் திருத்தக் கருவிகள் செய்யும் காலம் ஒன்று கணியுமேல் பெரியீர்! அந்த நாளைக் காணும் பேற்றினைப் பெற்றவர் அலரோ பேறெல்லாம் பெற்றவர்;"[26] இங்ஙனம் பாவலர்மணி அவர்களின் போரற்ற புண்ணிய பூமி கனவினை மனத்திரையில் படம்பிடித்துக் காட்டுகின்றது. போரின் கொடுமையிலிருந்து சமூகத்தை விடுவிக்கப் போராடும் படைப்பாளியின் சமூக சிந்தனை இதன் வழி புலப்படுகின்றது.

## கதனும் மதனும் போரின் அடிப்படை

'போர்' என்னும் கொடிய அரக்கன் பிறக்கக் கதனாகிய சினமும், மதனாகிய செருக்கும் தான் காரணம் என்கின்றார் பாவலர்மணி அவர்கள். மனிதனின் 'தான்' என்கின்ற அகந்தை, யானே பெரியவன் என்கின்ற கருத்தை நிலை நிறுத்தப் போராடுகின்ற பொழுது தான் போரானது பிறக்கின்றது. போரின் ஜனனம் எண்ணற்ற மனிதர்களின் மரணத்திற்குக் காரணமாக அமைகின்றது. போர் தொடக்கத்தின் பொழுது ஒலிக்கும் சங்கொலி, எண்ணற்ற மனிதர்களின் இறுதி அஞ்சலியை மறைமுகமாகப் பறைசாற்றுகின்றது. மனிதன் தனது உள்ளுணர்வின் காரணமாக எழும் பேராசை மற்றும் நான் என்கின்ற அகந்தையை மரணிக்கும் பொழுது தான் போரின் ஜனனத்தைத் தடுக்க முடியும். 'அன்னி மகள்' காப்பியத்தில் வெள்ளெருக்கிலையாரின் வாய்மொழியாக, "மறத்தினைத் தோளிலும் அறத்தினை மனத்திலும் சிறப்புறத் தாங்கும் நின் செங்கோல் வாழியர்; அலையும் கொலையும் உலகிடையே அழிந்து கலையும் அமைதியும் அரும்பிக் கனிந்திடும் காலத்தைக்

காண விரும்பினாய்! நின்போல் ஞாலம் புரக்குநர் அனைவரும் நன்கனம் இதனை எண்ணுவார்களானால் ஏன் நடக்காது? சினமும் செருக்கும் கருத்தினை அழிக்க 'யானே பெரியவன்! என்சொல்லே ஆணை! வானும், மண்ணும் அனைத்தும் என் ஆட்சிக்குரியன' என்னும் கொள்கையை விலக்கி அறத்தினை நிறுத்தவே அரசுகள், தத்தம் மறத்தினை அளக்கும் வழியன்று அரசியல் என்பதை அரசுகள் இனியேனும் எண்ணினால் நன்னய உலகம் கண் முன்னர் காண்போம்; வலிமையைக் காட்டவே வாளென்று கருதாது அழிவுகள் களையவே அரும்படை என்னும் ஓர் நின்னெறி உலகிடை நிலைத்து வென்னெறியாகி விளங்குக சிறந்தே!"[27] என எவ்வியிடம் உரைப்பதின் வழி அறியலாம்.

## இன ஒற்றுமையும் சமூக சிந்தனையும்

இன ஒற்றுமை என்பது ஒரு குறிப்பிட்ட இனத்தை, அதன் அடையாளத்தைப் பாதுகாக்கும் கேடயம் ஆகும். உலகில் பல இனங்கள் தோன்றி இருந்தாலும், தனது தனித்தன்மையால் மறையாமல் நிலைபெற்று வாழும் இனங்கள் மிகச் சிலவே ஆகும். தமிழ் மொழியின் தொன்மையினைப் பாரதியார்,

**"தொன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடு**
**சூழ்கலை வாணர்களும் - இவள்**
**என்று பிறந்தவள் என்றுண ராத**
**இயல்பின ளாம்எங்கள் தாய்"**[28]

என எடுத்துரைக்கின்றார். அத்தகைய தொன்மை வாய்ந்த தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழினத்தின் ஒற்றுமையை,

**"முப்பதுகோடி முகமுடை யாள் உயிர்**
**மொய்ம்புற வொன்றுடையாள் - இவள்**
**செப்பு மொழிபதி னெட்டுடை யாள் எனிற்**
**சிந்தனை ஒன்றுடை யாள்."**[29]

என்று பாரதியார் அவர்கள் பறைசாற்றுகின்றார். அத்தகைய போற்றத்தக்க தமிழக ஒற்றுமையைப் பாவலர்மணி அவர்கள் தமது 'அன்னி மகள்' காப்பியத்தில் அழகாகக் கையாண்டிருக்கின்றார். 'அன்னி மகள்' காப்பியத்தில் காப்பியத்தலைவி அன்னி மிஞிலி திதியன் மீது காதல் கொள்கின்றாள். அப்பொழுது அவளது தந்தை அன்னி; வேளிர் குலத்திற்கும், ஆயர் குலத்திற்கும் உள்ள பழம் பகையை மனதில் கொண்டு மகட்கொடை மறுக்கின்றான். அப்பொழுது முதியவர் ஒருவர் பழம்பகைக்கு, "பழம்பகை என்கின்றாய்! எண்ணிப் பார்த்தால் பகையைப்

பேணுதலும், உறவினை வெறுத்தலும் நகையைத் தருவதே அல்லாமல் நன்மைகள் என்ன தந்திடும்."[30] என்றும் "பகையென்னும் கனலால் பைங்கொடி மிஞிலியின் நகையினை எரிக்க நண்ணினை கொல்லோ? பகையினை ஒழித்தலே பண்பும் அறிவுமாகும்; பகைக்கு வாழ்வினைப் பலியிடுதல் மடமையாகும்;"[31] என்றும் கூறி சாவுமணி அடிக்கின்றார். மேலும் அவர் தமிழின ஒற்றுமையை அழகாக வலியுறுத்துகின்றார். ஆயரும், வேளிரும் தமிழினம் என்னும் ஒரு குடையின் கீழ் வசிப்பவர் என்பதை, "குலம்குலம் என்கின்றாய்? வேளிரும் ஆயரும் நிலத்திற்குரியவராக நீண்ட பெருங்காலமாக வந்தவர் அலரோ? வரலாறு காணின் செந்தமிழ்க் குலமென்னும் ஒருகிளைச் சேர்ந்தவர் அல்லரோ? ஆமெனின் ஆயிரம் பிளவுகள் நல்லவோ கூறுக! நலிவு செய்யும் பகை தான் தூர்த்திட முடியாதக் கடலும் இல்லை! போர்த்திட முடியாதப் பெருங்குன்றும் இல்லை! எண்ணம் மாறினால் யாவையும் மாறுதல் உறுதி ஆதலின் நீண்ட காலமாகக் கொண்டுள்ள சினத்தை விடுவாயாக!"[32] இவ்வாறு முதியவரின் வாய்மொழியாகப் பாவலர்மணி அவர்கள் கூறுவதிலிருந்து இன ஒற்றுமையை அவர் வலியுறுத்துவதை அறிய இயலும்.

## ஒற்றுமையே வலிமை

ஒரு நாட்டினை மேலும் மேலும் உயரச் செய்யும் உன்னத சக்தி ஒற்றுமை ஆகும். அதனால் தான் ஒற்றுமையே வலிமை என்கின்றனர். எந்த ஒரு சிறு பொருளும் உருப்பெற உன்னதக் கைகள் ஆயிரம் ஒன்று சேர்ந்து பாடுபட வேண்டும். எந்த ஒரு சூழ்ச்சிக்கும் ஒற்றுமை குலைவதே அடிப்படையாக அமையும். ஒற்றுமை ஓங்கும் இடத்தில் தீய சக்திகள் துளிர்விட முடியாது. அத்தகைய ஒற்றுமையின் இன்றியமையாமையைப் பாவலர்மணி அவர்கள் உரைக்கும் பாங்கு உன்னதமானதாகும். 'அன்னி மகள்' காப்பியத்தில் களமருக்கும், பரதவருக்கும் இடையே ஏற்படும் பூசலை எவ்வி களையும் பாங்கு அழகானது. களமர் தூற்றிய காய்நெல் பிரிந்து காற்றினால், பரதவரின் உப்பினில் கலந்து அதனைப் பாழ்படுத்தியது. அதனால் கோபமுற்ற பரதவர் களமரிடம் நீதி கேட்க அதற்கு மன்னிப்பு கேட்காமல், ஆறுதலாகப் பேசாமல் எள்ளி நகையாட பரதவரின் சினம் அதிகமானது. கோபமுற்ற பரதவர் சேற்றைக் களமர் மீது வீசியெறிந்து முதியவரின் வலிமை மிகு கைகளை கயிற்றால் பிணித்தனர். இவ்வழக்கானது எவ்வியிடம் வர, "உப்பில்லாத உணவினை உண்பவர் ஆர்வம் சப்பென்றாதலும், சலிப்பினை அடைத்தலும் கண்டுள்ளோம் அன்றே! களமரின் உணவுக்குச் சுவையினைத் தருகின்ற வெண்கல் உப்பினை குளிர்ந்த கடலில் விளைவிப்பவர் பரதவர் ஆவர். உப்பும், உணவும் முரணுமேயானால் பண்டத்தினை குப்பையில் எறிவதல்லாமல் கொள்கிலார்; ஆக்கமும் சுவையுமாக அமைந்தீர் இருவரும் நோக்கம் முரண்பட்டால் நோய்மைக்கு இடமாகும்; அன்பிற் சிறந்தோரே! அரும்பும் இந்த மகிழ்ச்சி என்றும்

அறாது இனிது நிலைபெறுமாக;"[33] இவ்வாறு இருவரது தொழிலும் ஒன்றையொன்று சார்ந்திருப்பதையும், சார்ந்திருப்பதின் அழகையும் எடுத்துக் கூறி ஒற்றுமையை வலியுறுத்துவது நயமானதாகும்.

## நாட்டுப்பற்றே பிறர் நாட்டமுறும் பற்று

நாட்டுப்பற்று என்பது ஒரு மனிதனின் உள்ளத்தில் இயல்பாகக் கிளர்ந்தெழுவதாகும். நாட்டுப்பற்று இல்லாத மனிதன் எவ்விதப் பற்றும் இல்லாத மனிதனுக்கு ஒப்பாவான். நாட்டுப்பற்று ஒருவனது உள்ளத்தில் குடிகொள்ளும் பொழுது எண்ணற்ற அறங்கள் அவனுக்கு இயல்பாகவே அமையும். அத்தகைய உயர்ந்த நாட்டுப்பற்றினை பாவலர்மணி அவர்கள் 'அன்னி மகள்' காப்பியத்தின் வழி அழகாகப் போதிக்கின்றார். நீடூரில் கோசருக்கும், எவ்வி மற்றும் திதியனுக்கும் இடையே கடும்போர் நிகழ்கின்றது. அப்போரில் எவ்வியின் சூளுரையின் வழி நாட்டுப்பற்றைக் கவிஞர் நயமாக போதிப்பதை, "பிறந்தவர் தமக்கெல்லாம் பெருமை சாருமோ! இறந்தவருக்கும் தான் அப்புகழ் எய்துமோ! பிறந்த நாட்டுக்குப் பெரும் பணியாற்றி இறந்தவர்க்கு அன்றோ அப்புகழ் எய்தும்!"[34] என்ற பாடலின் வழி அறியலாம். நாட்டிற்காகப் போராடும் துணிவே நிலைத்த புகழில் நம்மை நாளும் திளைக்கச் செய்யும் என்பதனை, "நிலையில்லாத உடம்பால் நிலைத்த புகழ்கொள்ளும் கலையினைக் காட்டுவோம்; கடும் சூறாவளிக்கு அசையாத மலையென நிற்போம்; பகைமுள்ளினை முரிக்கும் செருப்பென மதிப்போம்; வெற்றி சேருமேயானால் பகைவர் எய்தும் தகவெல்லாம் பெறுவோம்; இறுதி தான் வருமெனில் ஈகவாழ்வு எய்துவோம்!"[35] என்ற பாடலால் அறியலாம். இங்ஙனம் நாட்டிற்குப் போராடும் வீரர்களுக்குத் தான் இத்தகைய நிலைத்த புகழ் கிட்டும் என்பதனை பாவலர்மணி அவர்கள் நயமாக எடுத்துரைக்கின்றார்.

## தமிழினச் சிந்தனை

தமிழ் மீதும், தமிழர் மீதும் ஆழ்ந்த பற்றுக் கொண்டவர் பாவலர்மணி அவர்கள் என்பது அவரது காப்பியங்கள் வழி அறிய முடிகின்றது. 'அன்னி மகள்' காப்பியத்தில் அன்னி மிஞிலியின் வெண்காற் காரி கோசர்களுடைய புன்புலத்தில் உள்ள பயிரை மேய்கின்றது. அதனைப் பற்றிக் கட்ட வந்த இருவரை அவ்வெண்காற்காரி குற்றிக் கொன்றுவிடுகின்றது. இதனால் சினமுற்ற கோசர்கள் அன்னியின் ஆக்காப்பாளன் தத்தனைக் கொன்று ஆநிரையைக் கவர்ந்து செல்கின்றனர். அச்சூழ்நிலையால் வெகுண்ட அன்னியின் நண்பர் கீரன் சினந்தெழுகின்றார். அவரது வாய்மொழியாகப் பாவலர்மணி அவர்கள் தமிழினச் சிந்தனையினை வெளிப்படுத்துவதை,

**"தமிழரை மதியாத் தருக்கர் தலைகளை**
**உமியெனக் களத்திடை ஊதித் தூற்றுவோம்;**
**ஊரெலாம் கூட்டி ஒன்று படுத்துவோம்;**
**காரெலாம் பொழியும் கடுமழை இடியெனத்**
**தாக்குவம் கோசரைத் தங்கிய பழியெலாம்**
**போக்குவெம்; இனியென் புகல்வது?"** (அன்.மக.அ-3,க-2,119-124)

என்ற வரிகளால் அறியலாம்.

## பெரிய மனிதர்களின் சிறுமைக் குணம்

சமூகத்தில் தங்களைப் பெரிய மனிதர்களாகவும், பெருந்தன்மை மிக்கவர்களாகவும் காட்டிக் கொள்ளும் பலர் வீட்டில் அற்ப மனிதர்களாகக் காட்சி தருவர். பல முகங்களைத் தரித்துக் கொள்ளும் அத்தகைய மனிதர்கள் அற்பமான புழுக்களிலும் கீழானோர் ஆவர். அத்தகையவர்களை பாவலர்மணி அவர்கள் தமது 'அனிச்ச அடி' காப்பயத்தில் அழகாகத் தோல் உறித்துக் காட்டுகின்றார். மயிலுக்குப் போர்வை கொடுத்த வள்ளல் பேகன் தனது மனைவிக்குத் துரோகம் செய்த வரலாற்றை அழகாகப் பதிவு செய்திருக்கின்றார். 'அனிச்ச அடி' காப்பியத்தில் பரணர்; வையாவிக்கோப் பேகன் வரலாற்றைப் பாடுகின்றார். அப்பொழுது கண்ணகி அடைந்த துயரையும், பேகனின் செயலையும் பாடுகின்றார். "காட்டு மயிலின் நடுக்கத்தைக் களைந்தாய் என்பர்; என்ன கருதி கலங்கும் நின் வீட்டு மயிலின் நடுக்கத்தினை விலக்காது இருக்கின்றாய்?"[36] என்ற பாடலின் வழி பாவலர்மணி அவர்கள் பெரிய மனிதர்களின் அற்ப குணங்களை வாசகர்களுக்கு அறிமுகம் செய்கின்றார்.

## பிறந்த பொன்னாட்டைப் போற்றுவோம்

பிறந்த பொன்னாட்டினைப் போற்றாதவர் இந்த பூமியில் எவரும் இல்லை. மகாகவி பாரதியார் எங்கள் நாடு என்னும் கவிதையில்,

**"மன்னும் இமயமலை யெங்கள் மலையே**
**மாநில மீதிது போற்பிறி திலையே!**
**இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே**
**இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே?**
**பன்னரும் உபநிட நூலெங்கள் நூலே**
**பார்மிசை யேதொரு நூல் இதுபோலே?**
**பொன்னொளிர் பாரதநா டெங்கள் நாடே**
**போற்றுவம் இஃதை எமக்கிலை ஈடே"**[37]

என்று ஆனந்த களிப்பு அடைகின்றார். 'அனிச்ச அடி' காப்பியத்தில் நன்னன் மற்றும் மிஞிலிக்கு எதிராக அருளாழியின் தலைமையில் நடத்தப்படும் கூட்டத்தில் அருளாழியின் உரை நாட்டுப்பற்றின் இன்றியமையாமையை உணர்த்துவதை "பிறந்த மண்ணின் பெரும்பழியினைத் துடைக்காதவர் இறந்தவர் என்பதே இந்த பெரிய நிலத்தின் வழக்கெனக் கொண்ட மறக்குல மைந்தர் நிலத்திற்குச் சுமையென நிற்க விரும்பமாட்டார்"[38] என்ற பாடலால் அறியலாம்.

## கள்வன் ஒருபோதும் உள்ளம் கவர் கள்வனாக முடியாது

'திருடுதல்' என்பது சமூகம் ஏற்றுக் கொள்ளாத நெறிபிறழ் நடத்தையாகும். கள்ள குணம் எண்ணற்ற தீய குணங்களுக்குக் காரணமாக அமையும். உழைத்து சேர்த்த ஒருவரின் பொருளை எவ்வித முயற்சியும் இன்றி 'கவர்தல்' என்பது இழிவான செயலாகும். அத்தகைய கள்வர்கள் எத்தகைய விலை உயர்ந்த பொருளைக் கவர்ந்தாலும் அவர்களால் கவர முடியாத ஒரு அரும்பொருள் உள்ளது. அது சீர்மிகு சிறப்புடைய மங்கையரின் மனம் ஆகும். இதனை பாவலர்மணி அவர்கள் 'அனிச்ச அடி' காப்பியத்தில் அழகாகப் பதிவு செய்திருக்கின்றார். அனிச்ச அடியின் மீது காதல் கொள்ளும் கோட்புலி அவளைக் கவர்ந்து செல்கின்றான். அப்பொழுது அனிச்ச அடி, "குப்பையில் முளைத்த கொழுவிய தண்டு கப்பல் பாய்மரம் ஆதல் எப்போது? சமைக்கப் படைக்கத் தெரியாதவன் எனினும் உடைக்கக் கவிழ்க்க உறுதி கொண்டனையோ? குலப்பிறப்பாட்டியாகிய யான் குன்றாத ஒழுக்கம் தலைப்படும் ஒருவனின் தாள்நிழல் வாழ்தலையே வேண்டுவேன்; ஆதலின் விரும்பேன்; அவாவுதலை இவ்விடம் நீ விடுமதி!"[39] இவ்வாறு கூறுகின்றாள். இதிலிருந்து ஊரை அடித்துக் கொள்ளையிடும் கள்வன், உள்ளம் கவர் கள்வனாக ஒருபோதும் ஆக முடியாது என்கின்ற சமூக சிந்தனை வெளிப்படுகின்றது.

## சமூகப் போராளிகளே நிலைத்த புகழுடையோர்

சமூகப் போராளிகள் வாழும் பொழுது வறுமையற்ற ஓர் இன்பமான வாழ்வினை வாழ்வதில்லை. எண்ணற்ற போராட்டங்களுக்கு இடையில் தான் அவர்களின் வாழ்க்கைப் பயணமானது அமைகின்றது. அத்தகைய அருந்துயர்களினால் பெற்ற அனுபவங்களின் மூலமாக துயரற்ற வாழ்விற்கு மனிதர்களைக் கொண்டு செல்ல கொள்கைகளை வகுகின்றனர். அதனால் தான் காரல் மார்க்சு மரணத்திற்குப் பிறகும் மக்கள் மனதில் மரணிக்காத பெருவாழ்வு வாழ்கின்றார். இதனை அருணன் அவர்கள் "பி.பி.சி செய்தி நிறுவனம் நடத்திய கருத்துக் கணிப்பின் முடிவு. "இந்த ஆயிரம் ஆண்டின் மகத்தான சிந்தனையாளர்கள்" காரல் மார்க்ஸ் என்று அது 1999 அக்டோபர் அன்று

அறிவித்தது. “டாப் டென்” சிந்தனையாளர்கள் பட்டியலில் ஐன்ஸ்டின், நியூட்டன்,டார்வின்,இம்மானுவேல்கான்ட், டெஸ்கார்ட்ஸ் போன்றோரையெல்லாம் பின்னுக்குத் தள்ளி முதலாக வந்தார் மார்க்ஸ். சோவியத் ஒன்றியத்தின் சிதைவுக்குப் பிறகும் சிந்தனை உலகின் முதலிடத்தைப் பிடித்தாள். இது கம்யூனிஸ்டுகள் மட்டும் தந்த தீர்ப்பல்ல. உலக நடப்புகளைக் கவனித்து வரும் பலதரப்பட்டவர்கள் தந்த நியாயத் தீர்ப்பு. மார்க்ஸ் மறைந்து சுமார் 20 ஆண்டுகளுக்குப் பிறகும் இப்படியொரு தீர்ப்பு வருகிறது என்றால் அதுதான் மரணத்திற்குப் பிறகும் வாழ்வு என்பது. அந்த அர்த்தத்தில் மார்க்ஸ் மரணமிலாப் பெருவாழ்வு கண்டார்”[40] இவ்வாறு கூறியுள்ளார். இக்கருத்திற்கு வலுசேர்க்கும் விதமாக பாவலர்மணி அவர்கள் தனது காரல் மார்க்சு காப்பியத்தில் “முகங்களைத் திருப்பிக் கொண்டவர் எல்லாம் முகவரி இழந்தவரானார்; சுகங்களே வாழ்க்கை என்றிருந்தவர்கள் சூழலினுள் சிக்கியே மாண்டார்; அகங்களைக் கடந்த காரலோ உலகின் எல்லைகள் அனைத்தையும் கடந்தும் யுகங்களைக் கடந்தும் வானில் ஒளிவிடும் ஞாயிறு போன்று வாழ்வான்;”[41] இங்ஙனம் கூறியுள்ளார். பகுத்தறிவு பகலவன் மறைவின் போது இதனை வெளிப்படுத்துகின்றார். சமூகம் காக்கப் போராடும் அரும் மனிதர்களின் வாழ்வானது அர்த்தமுடையது என்பதை இதன் மூலம் அறியலாம்.

## பசியென்னும் கொடிய பாவி

பசி என்பது சமூகத்தைப் பற்றியுள்ள கொடிய பாவியாகும். சுமூகத்தின் நலங்களையெல்லாம் பறித்துக் கொள்கின்ற கொடூர அரக்கன் பசியென்றால் அது மிகையாகாது. மானிட மதிப்புக்களையெல்லாம் விழுங்கும் பேராற்றலை அது கொண்டு இலங்குகின்றது. இதன் கோர முகத்தைப் பாவலர்மணி அவர்கள் சாலி மைந்தன் காப்பியத்தில் அழகாகப் பதிவு செய்துள்ளார். வேதியர்களின் வஞ்சனையால் இளம்பூதியின் வீட்டிலிருந்து அனுப்பப்பட்ட ஆபுத்திரன் பசியின் கொடுமையினை நன்கு உணர்கிறான். அவன் “சோறென்பது உண்பொருளாகும் எனச் சொல்வார் சிலர். வேறொன்றும் அறிய மாட்டார்; கொடிய கொலை, களவு முளையென்றும் தோன்றவிடாது அழித்து நறுங்கலையின் வீறெங்கும் செழித்திடவே விளைகருவி அ∴தாகும். ஊரினுள்ளே அமைதியென்னும் ஒருமலர் தான் பூத்துத் தேன் தர வேண்டுமென விழைபவர்கள் யாரும் சேரும் நெறி பசிப்பிணியைத் தீர்க்கும் நெறியல்லால் ஒருநெறி வேறுளதென்றுரைக்க நெறி உண்டோ?”[42] இவ்வாறு கூறுகின்றான். இதன் மூலம் பசித்துன்பத்தினை ஒழித்தால் சமூகமானது செழுமை பெறும் என்ற அரிய கருத்தினைப் பதிவு செய்கின்றார்.

## பசிப் பகையை விரட்டுவதே சிறந்த போர்

எண்ணற்ற பெரிய நிலங்களைக் குறி வைத்து நிகழ்த்தப்படும் போரினால் சமூகத்திற்கு எந்தவொரு நன்மையும் விளையாது. நிலங்களை விரிவுபடுத்தாமல் மனித மனங்களை விரிவுபடுத்தும் ஓர் அற்புதப் போரினைப் பாவலர்மணி அவர்கள் பகர்கின்றார். சமூகத்தினை உயர்த்தும் உன்னதத் தன்மையுடைய போரினை சாலி மைந்தன் காப்பியத்தில் ‘‘போரினை விரும்பி இவ்வுலகில் வீரர்களைக் கூட்டிப் புறப்பட்டவர் பலராவார். அவர்கள் வெற்றி மாலையினை நாடி அலைந்தவரே யல்லால் அன்னார் தம்மால் இவ்வுலகத்திற்கு என்ன நன்மை? கார் கூடி வளம் செய்யும் இந்த மண்ணில் கடிய பசிப் பகையுளதோ காட்டீர் என்று நேர் தேடிப் புறங்காண ஆவின் மைந்தன் நீள்படையில் முன் நடந்து செல்லுகின்றான்’’[43] பாவலர்மணி இங்ஙனம் அழகாக எடுத்துரைக்கின்றார்.

## இயலாதவர்களே இரந்துண்ண வேண்டியவர்கள்

பிறரிடம் இரந்து உண்பது என்பது இழிவான ஒன்றாகக் கருதப்படுகின்றது. அத்தகைய இழிவான செயலை இயலாதவர்கள் செய்யும் பொழுது அது அங்கீகரிக்கப்பட்ட ஒன்றாகவே கருதப்படும். ஆனால் நல்ல உடல் வலிமையுடையவர்கள் இந்த செயலைச் செய்வது மேலும் இழிவைத் தரும் என்ற சமூக சிந்தனையை சாலி மைந்தன் காப்பியத்தில் பாவலர்மணி அவர்கள் அழகாக வெளிப்படுத்துகின்றார். இதனை ஆபுத்திரன் தனது நண்பர்களிடம் “காணக் கண்ணிலர், கால் முடமாயினர், மிகுந்த மூப்பினர், பேணுநர் இல்லவர் ஏற்று உண்ண நாண வேண்டுவதில்லை. நல்லுடல் வளம் வாய்த்திடப் பெற்றவர் பேராசையால் ஏற்றுண்ணச் செல்வாரேயானால் விரிகடல் மருங்கில் ஓங்கிய இந்நிலம் பல் காட்டிச் சிரித்து எள்ளிடும் என்பது வள்ளுவன் மொழி என்பதை நினைமின்”[44] இவ்வாறு கூறுவதிலிருந்து இதனை அறியலாம்.

## புராண மகளிரும் பெண்ணியச் சிந்தனையும்

பொதுவாக நேரில் காணாத புராண மகளிரை உயர்வாக எண்ணும் மனநிலை சமூகத்தில் உள்ளது. அவர்களின் கற்பின் பெருமையை நினைத்துப் பார்க்கும் ஆண்கள் சக மனுஷியாக இருந்து அனைத்துத் துன்பங்களையும் போராடிச் சாதிக்கும் மனைவியர்களை உயர்வானவர்களாக எண்ணுவதில்லை. அதேபோல் புராண கதைகளில் இடம்பெறும் மகளிர் இயற்கைக்கு முரணான விதத்தில் புனையப்பட்டாலும் அவர்களை தெய்வங்களின் அம்சங்களாகக் கருதுகின்றனர். ஆனால் சூழலின் காரணமாக விளைந்த குற்றத்தினை மன்னிக்கும் மனோபாவம் அவர்களிடம் இல்லை. இத்தகைய குறுகிய மனப்பான்மையினைப் பாவலர்மணி அவர்கள் அழகாகச் சாடியிருக்கின்றார். சூழலின் காரணமாக இளஞ்சாத்தனோடு சேர்ந்து செய்த பிழையினால் தண்டிக்கப்படுகின்றாள் சாலி.

அப்பொழுது அவள் “முனிவரின் சாபத்திற்கு அஞ்சிப் பாண்டு முன்மொழிய இனிமை தருபவரான தேவர் மூவரைக் கூடி இவ்வுலகில் தனியன் தருமன், தடந்தோள் வீமன், தனுவிசயன் நடுக்கமில்லாச் செயலையுடைய குந்தி பெற்றாள் என்பதைப் படித்ததில்லையோ?”[45] என்று புராண நிகழ்வினைச் சுட்டிக்காட்டி மன்றாடுகின்றாள். இங்ஙனம் சமூகச் சூழலை அழகாகப் பாவலர்மணி அவர்கள் படம்பிடித்துக் காட்டுகின்றார்.

## மூடநம்பிக்கையின் பெயரால் உயிர்களை வதைக்காமை

மூடநம்பிக்கையின் பெயரால் உயிர்களை வதைத்தல் என்பது ஏற்றுக் கொள்ள முடியாத ஒன்று. வேள்வி என்னும் கொடுமையான செயலால் வாயில்லாத உயிர்களை வதைப்பது மனிதத் தன்மைக்கு முரணானதாகும். இந்த சமூக அவலத்தைப் பாவலர்மணி அவர்கள் பாங்குறச் சாடியிருக்கின்றார். சாலி மைந்தன் காப்பியத்தில் பசுவை வைத்து வேள்வி நடத்த ஏற்பாடு செய்யப்படுகின்றது. அப்பொழுது ஆபுத்திரன் ஆவைக் காப்பாற்றி “சேயினுக்கு உளதாகிய தன்னுடைய தீம்பாலினைத் தாயினும் பரிவார்ந்திடத் தந்திடும் செயலுக்கோ நோயினைச் செய்யக் கருதினீர். அதனால் ஏற்படும் பாவம் ஆயிரம் பிறப்பெய்தினும் அழியாது நீக்குவதற்கு அரியதாகும்.”[46] என்று கூறுவதிலிருந்து இதனை அறியலாம்.

# தொகுப்புரை

- காரல் மார்க்சு என்னும் காப்பியம் வாழ்ந்த மனிதரின் வாழ்க்கையைப் பேசுவதால் அவர்தம் மார்க்சியச் சிந்தனைகள் முழுமையாக இடம்பெற்றுள்ளன.
- பாட்டாளி வர்க்கம் போராட்டத்தின் மூலமாகத் தனியுடைமைச் சமூகத்தினைத் தூக்கி எறிந்து ஆட்சி அதிகாரத்தைப் பெறுவதற்கான காரல் மார்க்சின் வழிமுறைகள் சிறப்புற எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.
- மாற்றம் ஒன்றே மாறாதது என்ற காரல்மார்க்சின் அடிநாதமான கொள்கை எடுத்தாளப்பட்டுள்ளது.
- பொருள் முதல்வாதத்தை அடிப்படையாகக் கொண்டு வர்க்க முரண்பாட்டுச் சிக்கல்களுக்கு காரல் மார்க்சு அளிக்கும் தீர்வுகள் இடம்பெற்றுள்ளன.
- உழைப்பு, கூலி, மூலதனம், பங்கீடு ஆகிய பொருளாதாரக் கூறுகளை அறிவியல் முறையில் ஆய்வு செய்து காரல் மார்க்சு அளித்த தீர்வுகள் சுட்டப் பெற்றுள்ளன.
- பொதுவுடைமைச் சிந்தனை, சுரண்டலுக்கு எதிரான புரட்சி, உழைப்பாளிகள் குறித்த உன்னத சிந்தனை, மதத்தினால் வளர்க்கப்படும் முதலாளித்துவம் ஆகியவை நயமாகப் படைக்கப்பட்டுள்ளன.
- சோசலிச சமூகம் உதயம் பெற உன்னத வழிமுறைகள், சுரண்டலில் இருந்து உழைப்பாளிகள் விடுபடுவதற்கான தீர்வுகள் ஆகியவை அழகாக எடுத்தாளப்பட்டுள்ளன.
- குற்றம் இழைப்பவரை இனம் கண்டுகொள்ள முடியாத உள்ளீடற்ற அறிவினராக உழைப்பாளிகள் இருப்பதாகப் பாவலர்மணி அவர்கள் தமது சிந்தனையாக வெளிப்படுத்துகின்றார்.
- சமூகவியல் சிந்தனைகளைப் பொறுத்தவரை பணம் என்னும் கொடிய அரக்கன் மனித மனங்களை வசப்படுத்தியுள்ள அவலநிலையையும் வறுமையின் கோர முகத்தையும் பதிவு செய்துள்ளார்.
- அரசியல்வாதிகளின் வஞ்சக குணம், மதத்தின் பெயரால் மகான்களைப் பலி கொடுத்த கொடூரம் ஆகியவற்றை விவரித்துள்ளார்.
- சமூகப் பொறுப்பிலிருந்து விலகி நிற்கும் அரும் மனிதர்களைப் பற்றியும் காரல் மார்க்சு காப்பியத்தில் பதிவு செய்துள்ளார்.

- போரின் அவலத்தை எடுத்துக் கூறி போரற்ற வாழ்வின் உன்னதத்தை அன்னி மகள் காப்பியத்தில் பதிவு செய்துள்ளார்.
- இன ஒற்றுமை, ஒற்றுமையின் வலிமை, நாட்டுப் பற்று, தமிழினச் சிந்தனை ஆகியற்றை அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் பதிவு செய்துள்ளார்.
- பெரிய மனிதர்களின் சிறுமை குணம், கள்வர்களை விரும்பாத குலக்கொடிகளின் மாண்பு போன்ற சமூகச் சிந்தனைகள் அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.
- பசி என்னும் கொடிய நோய் சமூகத்தின் நலத்தை அழிக்கும் தன்மை சாலி மைந்தன் காப்பியத்தில் எடுத்தாளப்பட்டுள்ளது.
- புராண மகளிர் எவ்வாறு புனையப்பட்டாலும் அவர்களைத் தெய்வமாகக் கருதும் மனித மனங்கள் உடன் வாழும் மனைவியரை வெறுத்து ஒதுக்கும் அவலநிலை பதிவு செய்யப்பட்டுள்ளது.
- மூடநம்பிக்கையின் பெயரால் நிகழ்த்தப்படும் உயிர்க்கொலையையும் சாலிமைந்தன் காப்பியத்தில் பாவலர்மணி அவர்கள் சாடுகின்றார்.

## சான்றெண் விளக்கம்

1. செல்வி மு. வளர்மதி, மார்க்சிய அணுகுமுறை, பக்.287-288.
2. கார.மார்.கா,பா:17.
3. மேலது,பா:21.
4. ஜா.மாதவராஜ், என்றென்றும் மார்க்ஸ், ப.17.
5. மேலது,ப.28.
6. கார.மார்.கா,136-149.
7. இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட், காரல்மார்க்ஸ் புதுயுகத்தின் வழிகாட்டி, ப.27.
8. எஸ்.ஏ.பெருமாள், மார்க்சிய தத்துவம் ஓர் அறிமுகம், பக்.31-32.
9. கார.மார்.கா,பா:135-136.
10. சேகுவேரா, மார்க்ஸ் வாழ்வும் பணியும், ப.41.
11. அருணன், மார்க்சிய அழகியல், ப.15.
12. எப்.எம்.குத்புதீன், மார்க்சிய தத்துவமும் அரசியல் பொருளாதாரமும், பக்.3-4.
13. மேலது,பக்.7-8.
14. Briggs, The Age of Improvement,ப.9.
15. Maurice Godelier, Metamorphoses de la parente,ப.6
16. மு.வளர்மதி, மார்க்சிய அணுகுமுறை, பக்.293-294.
17. புலவர் ஆ. பழநி, களம் கண்ட கவிதைகள், ப.48.
18. கார.மார்.கா,பா:274.
19. மு.மேத்தா, கண்ணீர்ப் பூக்கள், ப.35.
20. கார.மார்.கா,பா:346.
21. புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் கவிதைகள், ப.29-30.
22. கார.மார்.கா,பா:343.
23. மேலது,பா:378.
24. மேலது,பா.373:2-4,374.
25. அன்.மக.,அ.1,க.2,.49-53.
26. மேலது,188-196.
27. மேலது,200-218.
28. பாரதியார் கவிதைகள், எங்கள் தாய்,1-4.
29. மேலது,9-12.
30. அன்.மக.,அ.1,க.4,135-138.
31. மேலது,170-173.
32. மேலது,156-165.
33. மேலது,அ.2,க.1,92-102.
34. மேலது,அ.2,க.6,46-49.
35. மேலது,66-71.

36. அனி.அடி.,அ.2,க.3,பா:48.
37. பாரதியார் கவிதைகள், எங்கள் நாடு,1-8.
38. அனி.அடி.,அ.4,க.4,86-89.
39. மேலது,அ.5,க.1,114-121.
40. அருணன், காரல்மார்க்ஸ் வாழ்வும் சிந்தனையும், ப.394.
41. கார.மார்.கா,பா:447.
42. சாலி.மைந்.,காண்.3,பட.1,பா:13-14.
43. மேலது,காண்.3,பட.9,பா:1.
44. மேலது,காண்.3,பட.3,பா:9.
45. மேலது,காண்.1,பட.6,பா:16.
46. மேலது,காண்.2,பட.6,பா:18

# முடிவுரை

பாவலர்மணி ஆ. பழநி அவர்கள் படைத்த காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள், சாலி மைந்தன் ஆகிய நான்கு காப்பியங்களும் தமிழ்த்தாய் வாழ்த்து, வருபொருள் உரைத்தல் மற்றும் பாயிரத்துடன் தொடங்குகின்றன. அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று நெறிகளை எடுத்துரைக்கின்றன. வீடுபேறு குறித்து இயம்பவில்லை. பாவலர்மணி அவர்களின் திராவிட இயக்கச் சார்பு இதற்குக் காரணமாகும்.

காரல் மார்க்சு, அருளாழி, திதியன், ஆபுத்திரன் போன்ற தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தன்னிகரற்ற தலைவர்கள் கதை நாயகர்களாக அமைந்துள்ளதால் இவர்தம் காப்பியங்கள் காப்பியம் என்கின்ற முழுமையைப் பெற்று விளங்குகின்றன.

மலை, கடல், ஆறு முதலான வருணனைகள் அனிச்ச அடி காப்பியத்திலும் நாடு, நகர் வருணனைகள் காரல் மார்க்சு, அன்னி மகள் காப்பியங்களிலும் நாடு, நகர், ஆறு குறித்த வருணனைகள் சாலி மைந்தன் காப்பியத்திலும் இடம்பெற்றுள்ளன. மணம் புரிதல் என்னும் நிகழ்வு இருமனம் ஒன்றிய திருமணம் என்ற விதத்தில் காரல் மார்க்சு, அன்னி மகள் காப்பியங்களிலும் இருமனம் ஒன்றாத திருமணம் சாலி மைந்தன் காப்பியத்திலும் இடம்பெற்றுள்ளன.

புனல் விளையாட்டு அனிச்ச அடி காப்பியத்தில் அமைந்து அணி செய்கிறது. சிறுவரைப் பெறுதல் என்னும் நிகழ்வு காரல் மார்க்சு, சாலி மைந்தன் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது. ஊடலில் முனிதல் என்பது அனிச்ச அடி காப்பியத்தில் காதல் வெளிப்பாடாக அமைந்துள்ளது. கூடலில் களித்தல் என்பது காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது. இது புறக்கூடலாக இல்லாமல் மனங்களின் சங்கமமான அகக்கூடலாக இருப்பது சிறப்பு வாய்ந்ததாகும்.

நீதி வெற்றி பெறுவதற்கு அடித்தளமாக அமையும் அமைச்சருடன் ஆய்தலும் தூதும் அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் அமைந்துள்ளன. பயணம் நான்கு காப்பியங்களிலும் இடம்பெற்றுள்ளன. ஒற்றறிதல், ஆலோசனைக் கூட்டம், அரசு ஆணை, நோய், வாழ்வியல் அவலம், தொண்டு, பாசம் ஆகியவற்றின் காரணமாக பயணமானது நிகழ்கின்றது.

போர் புரிதலும் வெற்றி பெறுதலும் காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் ஆகிய காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. போர் இவருடைய படைப்புகளில் ஆக்கப்பூர்வமாக அமைந்துள்ளது. வெற்றி காரல் மார்க்சு காப்பியத்தில் சுரண்டலுக்கு எதிரான வெற்றியாகவும் அனிச்ச அடி காப்பியத்தில் சூழ்ச்சிக்கு எதிரான வெற்றியாகவும் அன்னி மகள் காப்பியத்தில் அநீதிக்கு எதிரான வெற்றியாகவும் அமைந்துள்ளது.

எண்வகைச் சுவைகளில் அறுசுவைகள் இவரது காப்பியங்களை அணி செய்கின்றன. அவலச் சுவையின் ஆதிக்கம் இவரது காப்பியங்களில் மேலோங்கிக் காணப்படுகின்றது. காரல் மார்க்சு காப்பியத்தில் குழந்தைகளைப் பறிகொடுக்கும் பொழுதும் அனிச்ச அடி காப்பியத்தில் சுரும்பார் குழலி கொலையுண்ட போதும் அன்னி மகள் காப்பியத்தில் வேள் எவ்வியின் மரணமும் அன்னியின் கண் களையப்பட்ட நிகழ்வும் அவலத்தின் உச்சத்தைத் தொடுகின்றன.

இளிவரல் சுவை அன்னி மகள் காப்பியத்தில் அன்னி கோசர்களால் அவமானப்படுத்தப்படும் பொழுது வெளிப்படுகின்றது. அன்னி மகள் காப்பியத்தின் போர்க்கள நிகழ்வில் மருட்கைச் சுவை இடம்பெற்றுள்ளது. அச்சச் சுவையானது அனிச்ச அடி காப்பியத்தில் நன்னனது கனவில் சுரும்பார் குழலி தோன்றும் பொழுது வெளிப்படுகின்றது. பெருமிதச் சுவையானது அன்னி மகள் காப்பியத்தில் வேள் எவ்வியைப் புகழும்போது வெளிப்படுகின்றது. வெகுளிச் சுவை அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் இடம்பெறுகின்றது. நகை, உவகைச் சுவைகள் இவரது காப்பியங்களில் இடம்பெறவில்லை.

கதை மாந்தர்கள் காப்பியத்தின் உயிர்நாடி ஆவர். கதை மாந்தர்களின் தோற்றம், வளர்ச்சி, போராட்டம், வெற்றி அல்லது வீழ்ச்சி இவையே காப்பியமாகிறது. அந்த வகையில் பாவலர்மணியின் கதை மாந்தர்கள் நேர்த்தியாகவும், உயர்வாகவும் படைக்கப்பட்டுள்ளனர்.

'காரல் மார்க்சு' காப்பியத்தில் காரல் மார்க்சு, சென்னி ஆகிய தலைமைக் கதை மாந்தர்களும் அர்னால்டு ரூசு என்ற எதிர்த் தலைமைக் கதை மாந்தரும் என்ரிகு, என்ரிட்டே, பிரடெரிக் எங்கல்சு, வெட்பாலன், இலாசலே, எலன்டெமூது, எட்கார், பிரான்சிக்க, தார்வின் போன்ற துணைமைக் கதை மாந்தர்களும் எனப் பன்னிருவர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

‘அனிச்ச அடி’ காப்பியத்தில் அருளாழி, அனிச்ச அடி போன்ற தலைமைக் கதை மாந்தர்களும் மிஞிலி, நன்னன், வேங்கைமுகன், கோட்புலி போன்ற எதிர்த் தலைமைக் கதை மாந்தர்களும் சுரும்பார் குழலி, ஆய் எயினன், அணிவளை, மோசிகீரனார், கணியன் கீரன், நார்முடிச் சேரல், செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், பரணர், ஒற்றர் தலைவன் போன்ற துணைமைக் கதைமாந்தர்களும் எனப் பதினாறு பேர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

‘அன்னி மகள்’ காப்பியத்தில் திதியன், அன்னி மிஞிலி ஆகிய தலைமைக் கதை மாந்தர்களும் அகுதை, சினவாழி, கதக்கண்ணன் ஆகிய எதிர்த் தலைமைக் கதை மாந்தர்களும் வேள் எவ்வி, அன்னி, தத்தன், கீரன், மாதரி, ஏலங்குழலி, வெள்ளெருக்கிலையார், குடவாயிற் கீரத்தனார், இளஞ்சேட் சென்னி போன்ற துணைமைக் கதை மாந்தர்களும் எனப் பதினான்கு பேர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

‘சாலி மைந்தன்’ காப்பியத்தில் ஆபுத்திரன் என்ற தலைமைக் கதை மாந்தரும் அபஞ்சிகன், அதமயன், உவசரன், இந்திரன், மூலகன் ஆகிய எதிர்த் தலைமைக் கதை மாந்தரும் சாலி, இளஞ்சாத்தன், இளம்பூதி, அஞ்சனை, துறவி, தீவதிலகை, செட்டியார் எண்மர் போன்ற துணைமைக் கதை மாந்தர்களும் என இருபது பேர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

பாவலர்மணி புறவருணனைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கவில்லை. காரல் மார்க்சு காப்பியத்தில் காரல் மார்க்சு, சென்னி ஆகிய இரண்டு கதை மாந்தர்களுக்கும் அனிச்ச அடி காப்பியத்தில் அனிச்ச அடி, சுரும்பார் குழலி ஆகிய இரண்டு கதை மாந்தர்களுக்கும் அன்னி மகள் காப்பியத்தில் திதியன், அன்னி மிஞிலி ஆகிய இரண்டு கதை மாந்தர்களுக்கும் சாலி மைந்தன் காப்பியத்தில் ஆபுத்திரன், சாலி, இளஞ்சாத்தன், துறவி ஆகிய நான்கு கதை மாந்தர்களுக்கும் எனப் பத்து மாந்தர்களுக்கு மட்டும் புறவருணனை இடம்பெற்றுள்ளது.

தலைமைக் கதை மாந்தர்களின் மீது ஈர்ப்பும் எதிர்த் தலைமைக் கதை மாந்தர்களின் மீது எதிர்ப்பும் தோன்றக் கூடிய வகையில் மாந்தர்கள் படைக்கப்பட்டுள்ளனர்.

அன்பு, வீரம், தியாகம், காதல், நட்பு, வாழ்வியற் சிந்தனை, வாழும் கலை, சிறியன சிந்தியாத தன்மை முதலான எண்ணற்ற நற்பண்புகளுடன் தலைமைக்

கதை மாந்தர்கள் படைக்கப்பட்டுள்ளனர். எதிர்த்தலைமை மாந்தர்கள் சமூகத்தின் கொடூரத்தையும் வக்கிரத்தையும் வெளிப்படுத்துபவர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

துணைமைக் கதை மாந்தர்கள் பல இடங்களில் தலைமைக் கதை மாந்தர்களுக்கு இணையாகப் படைக்கப்பட்டுள்ளனர். காரல் மார்க்சு காப்பியத்தில் பிரடெரிக் எங்கல்சு, அனிச்ச அடி காப்பியத்தில் கணியன் கீரன், அன்னி மகள் காப்பியத்தில் வேள் எவ்வி, சாலி மைந்தன் காப்பியத்தில் சாலி போன்றோர் தலைமைக் கதை மாந்தர்களுக்கு இணையாகப் படைக்கப்பட்டுள்ளனர். வாசகர்களுடன் உரையாடும் ஊடகமாகவும் துணைமைக் கதை மாந்தர்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பெண் கதை மாந்தர்கள் புரட்சிகரமாகப் படைக்கப்பட்டுள்ளனர். அனிச்ச அடி காப்பியத்தில் அனிச்ச அடி அருளாழியைக் காப்பாற்ற வரும்பொழுதும் அன்னி மகள் காப்பியத்தில் அன்னி மிஞிலி மக்கள் அனைவரையும் அநீதிக்கு எதிராக ஒன்று திரட்டும் பொழுதும் சாலி மைந்தன் காப்பியத்தில் சாலி தொண்டிற்குத் துணை நிற்கும் பொழுதும் இது வெளிப்படுத்துகின்றது.

கதை மாந்தர்கள் அனைவரும் முன்னுக்குப் பின் முரணின்றிப் படைக்கப்பட்டுள்ளனர். கதை மாந்தர்களின் பேச்சும் செயலும் அவர்களின் இயல்புக்கு ஏற்றதாகவும் நம்பத் தகுந்ததாகவும் அமைந்துள்ளன. கதை மாந்தர்கள் அனைவரும் கதை வளர்ச்சிக்கு உதவுகின்றனர்.

கவிஞன் வாசகனின் மனதைத் தூண்டில் போட்டு இழுப்பதற்குப் பயன்படும் கலையே உத்தி ஆகும். இலக்கியம் தன்னைச் சுவைக்கும் வாசகனுக்கு இன்பத்தை ஊட்டவும் வாசகர்களுக்கு ஏற்படும் சலிப்பினையும் களைப்பினையும் போக்கவும் உத்தி பயன்படுகிறது.

பாவலர்மணியின் காப்பியங்களில் அறுபது இடங்களில் உவமைகள் அமைந்து அழகு சேர்க்கின்றன. அனிச்ச அடி, சாலி மைந்தன் காப்பியங்களில் உருவகம் இடம்பெறவில்லை.

உள்ளுறை உவமம் அனிச்ச அடி காப்பியத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. பிற காப்பியங்களில் இடம்பெறவில்லை. சாலி, இளஞ்சாத்தனின் கூடலானது குறிப்பு மொழி வாயிலாக நலமாகப் புனையப்பட்டுள்ளது.

அசை, சீர், தளை, அடி போன்றவை பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் நிறைந்து ஒலி நயத்தைக் கூட்டுகின்றன. அடி மோனைத் தொடை,

அடி எதுகைத் தொடை, அடி இயைபுத் தொடை, அடி முரண் தொடை, அடி அளபெடைத் தொடை ஆகிய அனைத்துத் தொடை நயங்களும் அமைந்து காப்பியங்களுக்கு அழகு சேர்க்கின்றன. அடி எதுகைத் தொடை இவரது காப்பியங்களில் ஆதிக்கம் செலுத்துகின்றது.

கற்பனையாற்றலை மிகுவிக்கும் வண்ணம் முன்னைய நிகழ்ச்சிகளைச் சான்று காட்டுதல் என்னும் உத்தியானது காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் ஆகிய காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது. வாழந்த ஒரு மனிதரைப் பற்றிப் புனையப் பெற்றது காரல் மார்க்சு காப்பியமாதலால் இதில் எந்தவொரு கற்பனைப் புனைவும் இல்லை.

சொற்றொடர் இடமாற்றம் காரல் மார்க்சு காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது. சென்னியின் இழப்பை எண்ணி பிரடெரிக் எங்கல்சு துடிக்கும் தருணத்தில் இவ்வுத்தியானது கையாளப்பட்டுள்ளது.

கனவு என்னும் உத்தியானது அனிச்ச அடி காப்பியத்தில் கையாளப்பட்டுள்ளது. அன்பின் ஆழத்தை உணர்த்தவும் குற்ற உணர்வு வெளிப்பாடாகவும் தீமையின் காரணமாகப் பிறக்கும் இன்பம் எல்லையற்ற துன்பத்தில் கொண்டு சேர்க்கும் என்ற நீதியினைப் போதிக்கவும் இவ்வுத்தியானது எடுத்தாளப்பட்டுள்ளது.

கிளைக் கதைகள் என்னும் உத்தியானது அனிச்ச அடி, சாலி மைந்தன் காப்பியங்களில் பொருத்தமான காரணத்திற்காகச் சரியாகப் புனையப்பட்டுள்ளன. பேகன்-கண்ணகியின் வாழ்க்கை நிகழ்வானது அனிச்ச அடி காப்பியத்தில் கிளைக்கதையாக அமைந்துள்ளது. அணிவளைக்கு ஆறுதல் கூறும் விதமாகவும் பெண்களின் அவல வாழ்வைச் சித்திரிக்கும் விதமாகவும் இது புனையப்பட்டுள்ளது. சாலி மைந்தன் காப்பியத்தில் சௌமினி-காஞ்சனன் கிளைக் கதையானது இடம்பெற்றுள்ளது. இது சாலியின் வாழ்வில் தெரியாமல் நேர்ந்த பிழைக்கு ஆறுதல் அளிக்கவும் மன மீட்சிக்காகவும் மனக் காயத்திற்கு மருந்தாகவும் கையாளப்பட்டுள்ளது.

கடிதம் என்னும் உத்தியானது காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது. காரல் மார்க்சு காப்பியத்தில் உண்மைப் பதிவாகவும் உன்னத மனிதர்களின் வாழ்க்கை நிகழ்வாகவும் இடம்பெற்றுள்ளது. அனிச்ச அடி காப்பியத்தில் காப்பிய மாந்தர்களின் குணநலத்திற்காகவும் காப்பிய

வளர்ச்சிக்காகவும் கையாளப்பட்டுள்ளது. சாலி மைந்தன் காப்பியத்தில் பயணத்தை அறிவிக்கவும் இளஞ்சாத்தன், செட்டியார் எண்மரின் முடிவிற்குக் காரணமாகவும் அமைந்துள்ளது.

முன்னோக்கு உத்தியானது அனிச்ச அடி, சாலி மைந்தன் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது. அனிச்ச அடி காப்பியத்தில் குழலிக்கு நேரப் போகும் ஏதமானது ஆற்று நீர் வருணனையின் மூலம் முன்னோக்கு உத்தியாகக் கையாளப்பட்டுள்ளது. சாலி மைந்தன் காப்பியத்தில் சாலியின் அவல வாழ்வும் ஆபுத்திரனின் அருள் வாழ்வும் முன்னோக்கு உத்தியின் மூலம் உரைக்கப்பட்டுள்ளது.

அனிச்ச அடி, சாலி மைந்தன் காப்பியங்களில் பின்னோக்கு உத்தியானது இடம்பெற்றுள்ளது. அனிச்ச அடி காப்பியத்தில் மிஞிலி குறித்த செய்தியும் சாலி மைந்தன் காப்பியத்தில் இளஞ்சாத்தன் சாவகப் பயணம் முடிந்து வந்த போது நிகழ்ந்த நிகழ்வும் பின்னோக்கு உத்தியின் மூலம் இயம்பப்பட்டுள்ளது.

நிமித்தம் என்னும் உத்தியானது உள்ளுணர்வு வெளிப்பாடாக அன்னி மகள் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது. தத்தன் கொலையுண்ட அவலமும் அன்னிக்கு கோசர்கள் மூலம் நிகழப் போகும் தீங்கும் விவரிக்கும் வகையில் நிமித்தம் என்னும் உத்தியானது கையாளப்பட்டுள்ளது.

காரல் மார்க்சு என்னும் காப்பியம் வாழ்ந்த மனிதரின் வாழ்க்கையைப் பேசுவதால் அவர்தம் மார்க்சியச் சிந்தனைகள் முழுமையாக இடம்பெற்றுள்ளன.

பாட்டாளி வர்க்கம் போராட்டத்தின் மூலம் தனியுடைமைச் சமூகத்தினைத் தூக்கி எறிந்து ஆட்சி அதிகாரத்தைப் பெறுவதற்கான காரல் மார்க்சின் வழிமுறைகள் சிறப்புற எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. மாற்றம் ஒன்றே மாறாதது என்ற காரல் மார்க்சின் அடிநாதமான கொள்கை இதில் இடம்பெற்றுள்ளது.

பொருள் முதல்வாதத்தை அடிப்படையாகக் கொண்டு வர்க்க முரண்பாட்டுச் சிக்கல்களுக்கு காரல் மார்க்சு அளிக்கும் தீர்வுகள் இடம்பெற்றுள்ளன. உழைப்பு, கூலி, மூலதனம், பங்கீடு ஆகிய பொருளாதாரக் கூறுகளை அறிவியல் முறையில் ஆய்வு செய்து காரல் மார்க்சு அளித்த தீர்வுகள் சுட்டப்பெற்றுள்ளன.

பொதுவுடைமைச் சிந்தனை, சுரண்டலுக்கு எதிரான புரட்சி, உழைப்பாளிகள் குறித்த சிந்தனை, மதத்தினால் வளர்க்கப்படும் முதலாளித்துவம் ஆகியவை நயமாகப் படைக்கப்பட்டுள்ளன. சோசலிசச் சமூகம் உதயம் பெற உன்னத

வழிமுறைகள், சுரண்டலில் இருந்து உழைப்பாளிகள் விடுபடுவதற்கான தீர்வுகள் போன்றவை நயமாக எடுத்தாளப்பட்டுள்ளன.

குற்றம் இழைப்பவர் யார் என்பதைக் காண முடியாத உள்ளீடற்ற அறிவினராக உழைப்பாளிகள் தேய்வதாக பாவலர்மணி அவர்கள் தமது சிந்தனையாக வெளிப்படுத்தியுள்ளார்.

சமூகவியல் சிந்தனைகளைப் பொறுத்தவரை பணம் என்னும் கொடிய அரக்கன் சமூகத்தில் பெற்றுள்ள வரவேற்பு, வறுமையின் கோர முகம், முதலாளிகளுக்கு சாமரம் வீசும் அரசியல்வாதிகளின் இழிகுணம், உழைப்பாளிகளின் துயர நிலை, மதத்தின் பெயரால் மகான்களைப் பலிகொடுத்த கொடூரம், சமூகப் பொறுப்பிலிருந்து விலகி நிற்கும் உயர்ந்த மனிதர்கள் ஆகிய அனைத்துக் கூறுகளும் காரல் மார்க்சு காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

தமிழரின் அவல நிலை, போரின் கொடூரம், போரற்ற வாழ்வே புனித வாழ்வு என்னும் சமூகச் சிந்தனைகளை அன்னி மகள் காப்பியம் எடுத்தியம்புகின்றது. ஒற்றுமையின் வலிமை, இன ஒற்றுமை, நாட்டுப் பற்று, தமிழினச் சிந்தனை, பெரிய மனிதர்களின் சிறுமைக் குணம், கள்வர்களை விரும்பாத குலக்கொடிகளின் மாண்பு போன்ற சமூகச் சிந்தனைகள் அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.

பசி என்னும் கொடிய நோய் சமூகத்தின் நலத்தை அழிக்கும் தன்மை சாலி மைந்தன் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது. புராண மகளிர் எவ்வாறு புனையப்பட்டாலும் அவர்களைத் தெய்வமாகக் கருதும் ஆடவர் தமது மனைவியரை வெறுத்து ஒதுக்குதல், மூடநம்பிக்கையின் பெயரால் உயிர்க்கொலை செய்தல் ஆகியவை சமூகக் கேடு என்பது இவர்தம் சமூகச் சிந்தனையாகும்.

மார்க்சியச் சிந்தனையும் சமூகவியல் சிந்தனையும் இவரது காப்பியங்களில் வலிந்து திணிக்கப்படவில்லை. இயல்பாகக் கதையின் போக்கிலேயே அமைந்துள்ளமை சுட்டத்தக்கது.

## மேலாய்வுக் களங்கள்

1. ஆ. பழநி அவர்களின் காப்பியங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக ஆய்வு மேற்கொள்ளலாம்.
2. சாலி மைந்தன் காப்பியத்தில் இடம்பெற்றுள்ள ஆபுத்திரன் கதையை மணிமேகலைக் காப்பியத்தின் ஆபுத்திரன் கதையோடு ஒப்பிட்டு ஆய்வு செய்ய இயலும்.
3. அனிச்ச அடி காப்பியத்தை மயிலை சீனி வேங்கடசாமி எழுதிய துளு நாட்டு வரலாற்றோடு ஒப்பாய்வு மேற்கொள்ளலாம்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்


| | | |
|---|---|---|
| 1. | பழநி ஆ. பாவலர்மணி | அன்னி மகள்,<br>எழில் வெளியீட்டகம்<br>48, அம்பலக்காரர் தெரு,<br>காட்டுத்தலைவாயில்,<br>காரைக்குடி-623 001<br>1978 |
| 2. | மேலது | அனிச்ச அடி,<br>திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>திருநெல்வேலி-6,<br>1973 |
| 3. | மேலது | காரல் மார்க்சு காப்பியம்,<br>தமிழினி,<br>67, பீட்டர்ஸ் சாலை,<br>இராயப்பேட்டை,<br>சென்னை-14,<br>2005 |
| 4. | மேலது | சாலிமைந்தன்,<br>தி சௌத் இந்தியா பிரஸ்,<br>காரைக்குடி,<br>1985 |

## துணைமைச் சான்றாதாரங்கள்

## இலக்கியம்


1. சோமசுந்தரனார் அரசு (உ.ஆ) சீவக சிந்தாமணி மூலமும் உரையும், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி-6 1959

2. ஞானசம்பந்தன் அ.ச. கம்பராமாயணம், கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தியாகராய நகர், சென்னை-600 017 2002

3. தண்டபாணி துரை. (உ.ஆ.) மணிமேகலை, உமா பதிப்பகம், 18 (பழைய எண்: 171), பவளக்காரத் தெரு, மண்ணடி, சென்னை-600 001 2001

4. தமிழ் வேட்பன் (ப.ஆ) புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் கவிதைகள், ஸ்ரீ செண்பகா பதிப்பகம், ப.எண்: 24, கிருஷ்ணா தெரு, பாண்டி பஜார், தியாகராய நகர், சென்னை-600 017 1995

5. துரைசாமிப்பிள்ளை சு. ஔவை, (உ.ஆ) — புறநானூறு, பகுதி-1
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை-1
2002

6. தேசிக விநாயகம் பிள்ளை கவிமணி — மலரும் மாலையும்
முல்லை நிலையம்,
9, பாரதி நகர் முதல் தெரு,
தி.நகர்,
சென்னை-17.
2000

7. பழநி.ஆ. பாவலர்மணி — களம் கண்ட கவிதைகள்,
எழில் வெளியீட்டகம்,
48, அம்பலக்காரர் தெரு,
காட்டுத்தலைவாயில்,
காரைக்குடி-623 001.
1993

8. பாரதிதாசன் — அழகின் சிரிப்பு,
அருணா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை,
2016

9. புன்னைவனநாதன் பு.சி. (உ.ஆ.) — ஆசாரக்கோவை
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.,
522, டி.டி.கே. சாலை,
ஆழ்வார்ப்பேட்டை,
சென்னை-18
2007

10. முத்துசிவன் ஆ. (உ.ஆ.) கலிங்கத்துப்பரணி, புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிட்., 135, பவளக்காரத் தெரு, சென்னை-1 1958

11. முத்துப்பிள்ளை புலவர் (உ.ஆ) நந்திக் கலம்பகம் மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை-600 108 2000

12. மேத்தா மு. கண்ணீர்ப் பூக்கள் திருமகள் நிலையம், 55, வெங்கட் நாராயணா சாலை, தி.நகர், சென்னை-600 017 1974

13. இராமகிருட்டிணன் ஆ. (உ.ஆ.) திருக்குறள் குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, (பாலாஜி கல்யாண மண்டபம் அருகில்) தி.நகர், சென்னை-600 017 2014

14. இராமசாமி பிள்ளை செ.ரெ. (உ.ஆ.) நளவெண்பா திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, 1954

15. இராமநாதன் கரு. (ப.ஆ) மகாகவி பாரதியார் கவிதைகள்,
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்
40, பிஞ்சால சுப்பிரமணியம் தெரு,
தியாகராயர் நகர்,
சென்னை-600 017
2002

16. இராம லெட்சுமணன் (ப.ஆ.) பட்டினத்தார் பாடல்கள்,
உமா பதிப்பகம்,
18(171), பவளக்காரத் தெரு,
மண்ணடி,
சென்னை-600 001
1996

17. வேங்கடசாமி நாட்டார் ந.மு. (உ.ஆ.) சிலப்பதிகாரம்
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
154, டி.டி.கே. சாலை,
சென்னை-600 018
1999

18. ஸ்ரீவத்ஸன் (ப.ஆ) நாலாயிர திவ்வியப் பிரபந்தம்
(பாகம்-1)
தி லிட்டில் பிளவர் கம்பெனி
தியாகராயநகர்,
சென்னை-600 017
1984

## இலக்கணம்


| | |
|---|---|
| 19. இளம்பூரணர் (உ.ஆ) | தொல்காப்பியம் பொருளதிகாரம்<br>முல்லை நிலையம்<br>9, பாரதி நகர் முதல் தெரு,<br>தி.நகர்,<br>சென்னை-600 017<br>1997 |
| 20. சண்முகம்பிள்ளை மு. (ப.ஆ.) | தொல்காப்பியம்-உவமவியல்<br>முல்லை நிலையம்,<br>9, பாரதி நகர் முதல் தெரு,<br>தி.நகர்,<br>சென்னை-600 017<br>1999 |
| 21. தமிழண்ணல் (உ.ஆ.) | தொல்காப்பியம்<br>மீனாட்சி புத்தக நிலையம்,<br>48, தானப்ப முதலி தெரு,<br>மதுரை-625 001<br>2008 |
| 22. இராமலிங்கத் தம்பிரான் கொ. (உ.ஆ.) | தண்டியலங்காரம்<br>கழக வெளியீடு,<br>சென்னை-108<br>1938 |

## திறனாய்வு நூல்கள்


23. அருணன் — காரல் மார்க்ஸ் வாழ்வும் சிந்தனையும்
வசந்தம் வெளியீட்டகம்,
69/24ஏ, அனுமார் கோவில் படித்துறை,
சிம்மக்கல்,
மதுரை - 625 001.
2004

24. மேலது — மார்க்சிய அழகியல்
வசந்தம் வெளியீட்டகம்,
69/24ஏ, அனுமார் கோவில் படித்துறை,
சிம்மக்கல்,
மதுரை - 625 001.
1992

25. இளவரசு சோம. — காப்பியத்திறன்
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத் தெரு,
சிதம்பரம் - 608 001.
2010

26. கந்தசாமி ஆ. — இலக்கியப் பார்வைகள்
எழில் முருகன் பதிப்பகம்
2, மேட்டுத் தெரு,
சென்னை-600 001.
1986

27. குத்புதீன் எப்.எம். (தமிழாக்கம்) — மார்க்சிய தத்துவமும் அரசியல் பொருளாதாரமும்
வைகை வெளியீடு,
6/16, பைபாஸ் ரோடு,
மதுரை - 625 018.
(ஆ.இ.)

28. குருசாமி ம.ரா.போ.
முதற் காப்பியச் சிந்தனை
நரேந்திர சிவம் பதிப்பகம்
'செந்தில்' தாமு நகர்,
கோவை-641 018.
1981

29. வெ. சாமிநாத சர்மா
காரல் மார்க்ஸ்,
பாரதி புத்தகாலயம்,
421, அண்ணா சாலை, தேனாம்பேட்டை,
சென்னை-600 018.
2007

30. மேலது
காரல் மார்க்ஸ்,
பாரதி புத்தகாலயம்,
421, அண்ணா சாலை, தேனாம்பேட்டை,
சென்னை-600 018.
2007

31. சிவஞானம் ம.பொ.
சிலப்பதிகாரமும் தமிழரும்,
இன்ப நிலையம்,
மயிலாப்பூர், சென்னை-600 004.
1950

32. சீனிசாமி.து
தமிழில் காப்பியக் கொள்கை
முதல் தொகுதி,
தமிழ்ப் பல்கலைக்கழக அச்சகம்,
தஞ்சாவூர்.
1994

33. சேகுவேரா
மார்க்ஸ் எங்கெல்ஸ் வாழ்வும் பணியும்,
பாரதி புத்தகாலயம்,
421, அண்ணா சாலை, தேனாம்பேட்டை,
சென்னை-600 018.
2011

34. ஞானமூர்த்தி தா.ஏ. இலக்கியத் திறனாய்வியல்,
ஐந்திணைப் பதிப்பகம்,
279, பாரதி சாலை மாடியில்,
திருவல்லிக்கேணி, சென்னை-600 005.
2011

35. தாசன் ஜே.ஜி.என். சிலம்பில் மெய்ப்பாடுகள்,
கிருஷ்ணா அச்சகம்,
நாகர்கோவில்.
1973

36. நம்பூதிரிபாட் இ.எம்.எஸ். காரல் மார்க்ஸ் புது யுகத்தின் வழிகாட்டி
தமிழில்: பாரதி புத்தகாலயம்
பரமேஸ்வரன் பி.ஆர். 421, அண்ணா சாலை, தேனாம்பேட்டை,
சென்னை-600 018
2005

37. நன்மாறன் ந. மார்க்ஸ் வாழ்க்கை வரலாறு
பாவை பப்ளிகேஷன்ஸ்
142, ஜானி ஜான் கான் சாலை,
இராயப்பேட்டை, சென்னை-600 014.
2006

38. பழநி ஆ. பாவலர்மணி சிலப்பதிகாரக் காப்பியக் கட்டமைப்பு,
தமிழினி,
67, பீட்டர் சாலை, ராயப்பேட்டை,
சென்னை-600 014.
2007

39. பாலச்சந்திரன் சு. இலக்கியத் திறனாய்வு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
பிரைவேட் லிமிடெட்,
41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 098.
1976

40. பெருமாள் எஸ்.ஏ. மார்க்சிய தத்துவம் ஓர் அறிமுகம்,
பாரதி புத்தகாலயம்,
421, அண்ணா சாலை, தேனாம்பேட்டை,
சென்னை-600 018.
2007

41. மாணிக்கம் வ.சுப. எந்தச் சிலம்பு,
பேகன் பதிப்பகம்,
காரைக்குடி - 630 002.
1978

42. மாதவராஜ் ஜா. என்றென்றும் மார்க்ஸ்,
பாரதி புத்தகாலயம்,
421, அண்ணா சாலை, தேனாம்பேட்டை,
சென்னை-600 018.
2004

43. மீனாட்சிசுந்தரம் க. சிலம்பில் துணைப் பாத்திரங்கள்,
மெர்க்குரி புத்தகக் கம்பெனி,
இளங்கோ வெளியீடு (பழனி),
கோயம்புத்தூர்.
1973

44. மீனாட்சிசுந்தரனார் தெ.பொ. குடிமக்கள் காப்பியம்,
தொல்காப்பியர் நூலகம்,
202, ஜானி ஜான் தெரு,
சென்னை-600 014.
1961

45. இராமகிருஷ்ணன் என். தியாக தீபம் பிரடெரிக் எங்கல்ஸ்,
கஸ்தூரி பதிப்பகம்,
566, காந்திபுரம் 2வது வீதி விரிவு,
100 அடி சாலை, கோவை - 641 012.
2010

46. இலட்சுமணசாமி கொ.
சிலப்பதிகாரம் - மணிமேகலை,
காப்பிய மரபு,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
சிதம்பரம்.
1977

47. வரதராசன் மு.
இலக்கிய மரபு,
பாரி நிலையம்,
59, பிராட்வே,
சென்னை-600 001.
1960

48. மேலது
கண்ணகி,
பாரி நிலையம்,
59, பிராட்வே,
சென்னை-600 001.
1951

49. வையாபுரிப்பிள்ளை எஸ்.
இலக்கியச் சிந்தனைகள்,
நூற் களஞ்சியம், தொகுதி-1
பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை,
நினைவு மன்றம்,
'வையகம்',
2, 4-வது குறுக்குச் சாலை,
இராஜா அண்ணாமலைபுரம்,
சென்னை-600 028.
1989

## ஆய்வேடு

50. இரஞ்சனா செ. — கம்பராமாயணத்தில் எதிர்நிலை,
மாந்தர்கள்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி.
மார்ச் 2001.

## கட்டுரை

51. செல்வி மு. வளர்மதி (க.ஆ.) — மார்க்சிய அணுகுமுறை,
திறனாய்வு அணுகுமுறைகள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்,
தரமணி,
சென்னை-600 113.
மார்ச் 1989.

## இணையதளம்

52. https://ta.wikipedia.org/s/lbg — Briggs,
Asa (2000), 2nd Edition,
The Age of improvement Longman
P. 9, ISBN No: 582-36959-2

53. மேலது — Maurice Godelier,
Metamorphoses de la,
Parente, 2004

# பாவலர்மணி ஆ. பழநி அவர்களின் வாழ்க்கைக் குறிப்புகள்

பாவலர் மணி ஆ. பழநி அவர்கள் 7.11.1931ஆம் ஆண்டு காரைக்குடியில் பிறந்தார். இவரின் தந்தையார் ஆண்டியப்பன். தாயார் உமையாள் ஆவார். இவருடன் உடன் பிறந்தவர் எண்மர். இருவர் பெண்கள்; அறுவர் ஆண்கள். இவர் இவருடைய பெற்றோருக்கு ஒன்பதாவது குழந்தையாகப் பிறந்தார்.

இவரது குடும்பத் தொழில் வேளாண்மை ஆகும். ஐந்தாம் வகுப்புடன் இவர் தம் பள்ளிப் படிப்பை நிறுத்திவிட்டார். வட்டிக்கடையில் இரண்டாண்டுகள், துணிக்கடையில் இரண்டாண்டுகள், பெட்ரோல் விற்பனை நிலையத்தில் இரண்டாண்டுகள், பல்பொருள் அங்காடியில் ஓராண்டு என ஏழாண்டுகாலம் கழிந்தது. பின்னர் குடும்பத் தொழிலான வேளாண் தொழிலையும் எட்டாண்டுகள் செய்தார்.

## ஆண்டுகளும் அரிய நிகழ்வுகளும்:

1950: திராவிடர் இயக்கத்தில் பங்கேற்றதால், மீண்டும் கல்வி கற்கவும், தமிழ் மீதும், இனத்தின் மீதும், இலக்கியங்களின் மீதும் ஈடுபாடு தோன்றியது. இது ஏற்படுத்திய தாக்கத்தால் மேலைச்சிவபுரி, கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் பின்னர் மாணாக்கரானார்.

1959: கல்லூரியில் இறுதி ஆண்டு படித்துக்கொண்டிருக்கும் பொழுது கடுமையான நோய்வாய்ப்பட்டார். வால்குடல் அழற்சி நோய் சரிசெய்யப்பட்ட நிலையில் நுரையீரலில் கட்டி தோன்றி ஒரு பக்க நுரையீரலையே இழந்தார்.

1962: புலவர் பட்டம் பெற்றார்.

1964: காரைக்குடி மீ.சு.உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியில் சேர்ந்தார்.

1968: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் திருவள்ளுவர் ஈராயிரமாவது ஆண்டினை ஒட்டி நடத்திய திருக்குறள் புத்துரைப் போட்டியில் பரிசு பெற்றார்.

1973: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் நடத்திய போட்டியில் இவரது அனிச்ச அடி காப்பியம் முதல் பரிசினைப் பெற்றது. மேலும் தமிழாசிரியர் கழகம் நடத்திய போட்டியில் அன்னி மகள் காப்பியம் மூன்றாம் பரிசைப் பெற்றது.

1974: நெல்லை தனித்தமிழ் இலக்கியக் கழகம் 'அனிச்ச அடி' காப்பியத்திற்கு ஒரு திறனாய்வு அரங்கு நடத்திப் 'பாவலர்மணி' என்னும் பட்டம் வழங்கியது.

1983: 'பண்டித மணியின் நாடகத் தமிழ்' என்னும் இவரது திறன் நூல் வெளிவந்தது.

1989: 'பாரதிதாசன் பாரதிக்குத் தாசனா?' என்னும் ஒப்பீட்டு நூலை வெளியிட்டார்.

1990: பாவலர் மணி அவர்களின் "கானல் வரியா? கண்ணீர் வரியா?' என்ற திறன் நூல் வெளிவந்தது.

1991: 'இளங்கோவடிகளின் காப்பியக் கலைத்திறன்' மற்றும் 'கோவலன் வீழ்ச்சியும் இளங்கோ மாட்சியும்' என்ற இரு நூல்கள் வெளியாயின.

29.04.1991: தமிழக அரசு பாவேந்தர் நூற்றாண்டு நிறைவு விழாவில் 'பாவேந்தர் விருது' வழங்கிச் சிறப்பித்தது.

1997: கோவில்பட்டி திருவள்ளுவர் கழகம் திருவள்ளுவர் விருதினைப் பாவலர் மணி அவர்களுக்கு வழங்கியது.
தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் பேரவை உறுப்பினராக ஆ. பழநி அவர்கள் நியமனம் செய்யப்பெற்றார்.

1999: காரைக்குடி சுழற்குழு 'புலவர் மாமணி' விருது வழங்கிச் சிறப்பித்தது.

2002: பாரதிதாசன் தமிழ்ப் பேரவை 'தமிழ்நெறிச் செம்மல்' விருது வழங்கியது.

2003: மதுரை மீனாட்சி அருள் தமிழ் மன்றம், பொற்கிழி வழங்கியது.

2004: 'கம்பன் காட்டும் போரற்ற உலகம்' என்ற திறன் நூலை வெளியிட்டார்.

2005: பாவலர் மணி அவர்களின் "காரல் மார்க்சு காப்பியம்' வெளியானது.

2007: மதுரை காமராஜ் பல்கலைக்கழகம் தமிழ்ப் பேரவைச் செம்மல் பட்டமும் பொற்பதக்கமும் பொற்கிழியும் வழங்கிச் சிறப்பித்தது.

2009: இராசபாளையம் மணிமேகலை மன்றத்தின் சார்பில் காரல் மார்க்சு காப்பியம் அறிமுகம் செய்யப்பட்டுப் பொற்கிழியும் வழங்கப்பட்டது.

2016: 'கம்பரின் மறுபக்கம்' என்ற இவரது ஆய்வு நூல் வெளியானது.

2017: 'மாணிக்கனாரின் கவிதைத் தமிழ்' என்ற இவரது திறனாய்வு நூல் வெளியானது.

2018: ‘அனிச்ச அடி’ நூலின் மறுபதிப்பு அன்னம் பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டது.

# பாவலர்மணி ஆ. பழநி அவர்களின் நேர்காணல்

## 1. விடுபட்ட கல்வி தொடர்ந்தது பற்றிக் கூறுங்கள்

வட்டிக்கடை முதல் வயல்வெளித் தொழில் வரை ஈடுபட்டிருந்த காலகட்டத்தில் கண்டது கற்கும் தொழிலையும், கற்றவற்றைச் சிந்திக்கும் இயல்பையும் நான் கைவிடாமல் பற்றிக் கொண்டிருந்தேன். 1950ஆம் ஆண்டு திராவிடர் இயக்கம் வேர் மட்டும் பரப்பவில்லை. விழுதையும் இறக்கியது. கற்பதையும், சிந்திப்பதையும் இரு கண்ணெனக் கொண்ட இவ்வியக்கம் என்னைத் தன்வயப்படுத்திக் கொண்டது. இவ்வியக்கம் என் சிந்தனையைக் கூர்மைப்படுத்திச் செழுமைப்படுத்தியது. இன்னும் படி, இன்னும் படி என்று பின்னும் படிக்கத் தூண்டியது.

## 2. தமிழின் மீது ஈடுபாடு எப்போது தோன்றியது?

திராவிட நாடு, போர் வாள், திராவிடன் இவ்வேடுகளை நான் ஏடுகளாக எண்ணியதில்லை. வேதப் புத்தகங்களாகவே கருதினேன். இவ்வேடுகளும் என்னை மீட்டுருவாக்கம் செய்ததில் கணிசமான பங்காற்றின. இதன் விளைவாகத் தமிழ் மீது, தமிழ் இனத்தின் மீது, தமிழ் இலக்கியங்களின் மீது ஆராக் காதல் தோன்றியது.

## 3. திராவிட இயக்கத்தில் ஈடுபாடு கொண்ட நீங்கள் காரல் மார்க்சு காப்பியத்தைப் புனைந்தது ஏன்? எவ்வாறு புனைந்தீர்கள்?

திராவிட இயக்கத்தைச் சேர்ந்த திருமாறன் அவர்களின் விருப்பத்தை நிறைவு செய்வதற்காகப் பிறந்தது காரல் மார்க்சு காப்பியம் ஆகும். எனக்கும் காரல் மார்க்சின் வரலாற்றைப் படைப்பதில் ஆர்வம் இருந்தது. அவரைப் பற்றி நானும் படித்திருந்தேன். இருப்பினும் அவரைப் பற்றிய முழு வரலாறு எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்த கம்யூனிச நண்பர் ஒருவர் இருந்தார். அவரின் மகள் தமிழ்ச்செல்வி. அரக்கோணத்தைச் சேர்ந்தவர். காரல் மாா்க்சு அவர்களின் நூல்களை வைத்து முனைவர் பட்டம் பெற்றவர். அவர் என்னுடன் தொடர்ச்சியான கடிதப் போக்குவரத்தில் இருந்தார். அவரது தங்கை கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகத்தில் பணிபுரிந்து வந்தார். அவரிடம் இருந்து தமிழ்ச்செல்வி அவர்கள் காரல் மார்க்சு குறித்த செய்திகளை ஆயிரம் பக்கங்களுக்கு நகலெடுத்து அனுப்பினார்கள். அது காரல் மாா்க்சு காப்பியத்தை வடிக்க எனக்குப் பெரிதும் துணை புரிந்தது.

## 4. அனிச்ச அடி காப்பியம் எவ்வாறு பிறந்தது?

அந்நாளில் தாமரைச் செல்வன் வ.சுப்பையா பிள்ளை கழகத்தின் உயிர்த் துடிப்பாக இருந்தார். அவரின் மனதில் தோன்றியது செய்யுள் நாடகப் போட்டி ஆகும். அதில் கலந்து கொண்டு நான் அனிச்ச அடி காப்பியத்தை இயற்றினேன். அதனை எழுத மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் எழுதிய துளு நாட்டு வரலாறு துணைபுரிந்தது. சங்க காலத்தையும், அக்கால நிகழ்ச்சிகளையும் விவரிப்பது இந்நூல். இதற்காக ஆயிரம் வெண்பொண் பரிசு கிடைத்தது.

## 5. அன்னி மகள் காப்பியம் எவ்வாறு புனையப்பட்டது?

மாநில தமிழாசிரியர் கழகம் நடத்திய செய்யுள் போட்டிக்காக எழுதப் பெற்றது 'அன்னி மகள்' காப்பியம் ஆகும். சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் கோசர், அன்னியின் கண் களைந்த நிகழ்ச்சியினையும், அது தொடர்பான பிற நிகழ்ச்சிகளையும் இணைத்து காரண காரிய அடிப்படையில் விளைந்தது அன்னி மகள் காப்பியம் ஆகும். தமிழர் கோசர் இனப் போராட்டத்தைச் சுட்டுவது இக்காப்பியம் ஆகும். போட்டியில் மூன்றாம் பரிசினை இக்காப்பியம் வென்றது.

## 6. சாலி மைந்தன் காப்பியம் பற்றிக் கூறுங்கள்.

பேராசிரியர் டாக்டர் ஆறு. அழகப்பன் அவர்களின் 'தமிழ்ச்சுரங்கம்' என்ற அமைப்பு மணிமேகலை காப்பியத்திலிருந்து ஒரு புதிய காப்பியம் தோற்றுவிக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு காப்பியப் போட்டியினை நடத்தியது. அதன் விளைவாக எழுதப்பட்டது 'சாலி மைந்தன்' காப்பியம் ஆகும். மணிமேகலை பாத்திரம் அதில் இடம்பெற வேண்டும் என்று கோரிக்கை வைத்தனர். கால வேறுபாடு அதிகம் என்பதால் நான் அதற்கு உடன்படவில்லை. போட்டியிலிருந்து விலகிக்கொண்டேன்.

## 7. போட்டியில் இருந்து விலகியது குறித்து தாங்கள் வருத்தம் அடைந்தது உண்டா?

வருத்தம் ஒன்றும் இல்லை. அப்போட்டிக்காக அறிவிக்கப்பட்ட பரிசுத் தொகை ரூபாய் ஐயாயிரம். அதனை நான் காப்பியம் வெளியிட்டதிலேயே பெற்றுவிட்டேன்.

## 8. தாங்கள் வடித்த காப்பியங்களில் தங்களுக்கு மிகவும் பிடித்த காப்பியம் எது?

அனைத்துக் காப்பியங்களையும் மிகவும் பிடிக்கும். குழந்தையைப் போலத் தான் பாவித்து ஒவ்வொரு காப்பியத்தையும் வடித்தேன். இருப்பினும் சாலி மைந்தன் காப்பியம் மீது எனக்கு தனி ஈடுபாடு உண்டு. அறிஞர் வ.சுப. மாணிக்கனார் அவர்களே சாலி மைந்தன் நூலின் மதிப்புரையில் 'அனிச்ச அடி தமிழ்த்தாயின் சிற்றாடையெனின் சாலிமைந்தன் காப்பியம் தாயின் காஞ்சிப்பட்டு ஆகும்' என்று புகழ்கின்றார். அதனால் சாலி மைந்தன் காப்பியத்தை விருப்பமான காப்பியம் என்று சொல்லலாம்.

## 9. அன்னி மகள் காப்பியத்தின் பெயர்க் காரணம் யாது?

அன்னி மகள் காப்பியத்திற்கு 'அன்னி மிஞிலி' என்று தான் முதலில் பெயர் வைத்தேன். 'அன்னி மிஞிலி' என்ற பெயரில் தான் மாநில தமிழாசிரியர் கழகப் பரிசும் கிடைத்தது. மதுரை செந்தமிழ்க் கல்லூரியைச் சேர்ந்த உலகநாதன் என்பவர் 'அன்னி மிஞிலி' என்ற பெயரில் எனக்குப் பின்னரே நூல் எழுதினார். ஆனால் நான் எனது புத்தகத்தை வெளியிடும் முன்னரே அவர் வெளியிட்டு விட்டார். அன்னி மிஞிலி-2 என்று வெளியிட முடியாததால் நான் 'அன்னி மகள்' என்ற பெயரில் வெளியிட்டேன்.

## 10. உங்கள் படைப்பில் நீங்கள் விரும்பும் கதை மாந்தர்

அனைத்துக் கதை மாந்தர்களையும் பிடிக்கும். ஏனென்றால் பிடிக்காதவர்களைப் பற்றி எழுத முடியாது. 'அன்னி மகள்' காப்பியத்தில் இடம்பெறும் தத்தன் சிறிய பாத்திரம்தான். இருந்தாலும் எனக்கு அவனைக்கூட மிகவும் பிடிக்கும்.

## 12. தங்களின் குறிக்கோளை நிறைவு செய்யும் பாத்திரம் என்று எதைக் கூறுவீர்கள்?

வேள் எவ்வி பாத்திரம் தான் எனது குறிக்கோளை நிறைவு செய்யும் பாத்திரம் ஆகும். ஏனென்றால் தமிழர்-கோசர்களின் பூசலைப் பாங்காக எடுத்துரைக்கும் காப்பியம் 'அன்னி மகள்'. வேள் எவ்வி பாத்திரத்தின் மூலம் தான் தமிழினச் சிந்தனையையும், தமிழ் உணர்வையும் விதைக்க முடியும். அதுபோன்று எல்லாக் காப்பியங்களிலும் இருக்கும் என்று சொல்ல முடியாது.

## 13. வித்தியாசமான கதைமாந்தர் என்று யாரைக் கூறுவீர்கள்?

'அனிச்ச அடி' காப்பியத்தில் இடம்பெறும் அனிச்ச அடியை வித்தியாசமான கதை மாந்தர் என்று கூறுவேன். அனிச்ச அடியிடம் இருக்கும் சில குணநலன்கள் என்னிடம் இருக்கும். அப்பெண் எந்த மாதிரியெல்லாம் பேசுவாளோ அதுபோன்ற உணர்வுகள் என்னிடம் இருக்கும்.

## 14. அவலச் சுவையை வடிக்கும்பொழுது தங்களின் தூரிகை பன்மடங்கு மிளிர்வதை உணர்ந்துள்ளீர்களா? ஏன்?

ஆம்; உணர்ந்துள்ளேன். வாழ்க்கை முழுவதுமே சோகம். கடுமையான உடல்நிலை பாதிப்பு, தீராத மன வேதனையைத் தந்தது. அதுமட்டுமின்றி ஒரு படைப்பாளன் அவலச் சுவையை வடிக்கும்பொழுது தான் வாசகனின் இதயத்தைத் தொட முடியும். கவிஞன் தனது படைப்பாளுமையையும் வெளிப்படுத்த முடியும். அதனால்தான் அவலச் சுவையினை வடிப்பது எனக்கு கைவரப் பெற்ற ஒன்றாகிவிட்டது.

## 15. தங்களது சோகத்தின் பின்னணியில் ஒரு பெண் இருந்தது உண்டா?

கண்டிப்பாக இல்லை.

## 16. மரபுக் கவிதை - புதுக்கவிதை இரண்டில் எதன் மீது தங்களுக்கு ஈடுபாடு அதிகம்?

மரபுக் கவிதையின் மீது தான் எனக்கு ஈடுபாடு அதிகம். நான் புதுக்கவிதையே எழுதியது இல்லை.

## 17. இந்தக் காப்பியத்தினை இன்னும் சிறப்பாகப் புனைந்திருக்கலாம் என்று தாங்கள் எப்பொழுதாவது நினைத்தது உண்டா?

எழுதி முடித்த பிறகு திருத்தம் செய்ய முடியும். அச்சான பிறகு தான் திருத்தம் செய்ய முடியாது. பெரும்பாலும் நான் எழுதிய உடனே அச்சிற்குக் கொடுப்பது இல்லை. ஒரு முறைக்கு நான்கு முறை படிப்பேன். ஒரு மாத காலம் கூட அச்சிற்குக் கொடுக்காமல் வைத்திருப்பேன். பின்னர் ஏதேனும் புதிய எண்ணங்கள் தோன்றலாம் என்று அவ்வாறு செய்வது உண்டு. அதனால் எந்தவொரு காப்பியத்தினையும் இன்னும் சிறப்பாகப் புனைந்திருக்கலாம் என்று தோன்றியது இல்லை.

## 18. எந்த வகையான நூல்களைப் படிப்பதில் தங்களுக்கு ஆர்வம் அதிகம்?

எல்லா வகையான நூல்களையும் படிப்பேன். அதனால் எல்லா வகையான நூல்களின் தாக்கமும் என்னிடம் இருக்கும். நிறைய சிறுகதைகள், பிரெஞ்சு நாவல்கள், மாப்பசான் கதைகள் ஆகிய அனைத்தும் படிப்பேன்.

## 19. இளம் படைப்பாளிகளுக்கு தங்களின் அறிவுரை யாது?

நிறைய படிக்க வேண்டும். படித்தால் தான் அறிவு பெருகும். ஒரு கதையில் மனிதன் பெற்ற அறிவினை இன்னொரு கதையில் வடிக்க முடியும். இலக்கியங்களை நுணுகிக் கற்று புதிய தகவல்களை வாசகர்களுக்கு அறிமுகம் செய்ய வேண்டும்.

# அன்னிமிஞிலி



"பாவலர்மணி"

புலவர். ஆ. பழநி 

# பன்னோக்குப் பார்வையில் தமிழர் பண்பாடு

ஆய்வுக் கோவை
மூன்றாம் தொகுதி - 2016



பதிப்பாசிரியர்கள்
பேரா.சே. செந்தமிழ்ப்பாவை
முனைவர். கா. கணநாதன்
முனைவர்.வெ.திருவேணி



தமிழ்ப்பண்பாட்டு மையம்
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி - 3

# 164. திருக்குறள் காட்டும் பண்பாடு

**பேரா. சே.செந்தமிழ்ப்பாவை**
*இயக்குநர், தமிழ்ப் பண்பாட்டு மையம்*
*அழகப்பா பல்கலைக்கழகம்*
*காரைக்குடி*

**பா. ஸ்ரீவித்யாபாரதி**
*உதவிப் பேராசிரியர்*
*இராமசாமி தமிழ்க் கல்லூரி*
*காரைக்குடி*

### திருக்குறள் காட்டும் பண்பாடு

பண்பாடு என்பது ஒரு இனத்தின் உண்மையான அடையாளம் ஆகும். அது அந்த இனத்தை அழியாமல் பாதுகாக்கக் கூடியது. தமிழரின் பண்பாடு நீண்ட நெடிய வரலாற்றினை உள்ளடக்கியதாகும். அதனைப் பல்வேறு இலக்கியங்கள் பாங்குற விளக்கி நிற்கின்றன.

**"ஓதற்கு எளிதாய் உணர்தற்கு அரிதாகி**
**வேதப் பொருளாய் மிகவிளங்கித் - தீதற்றோர்**
**உள்ளுதொறு உள்ளுதொறு உள்ளம் உருக்குமே**
**வள்ளுவர் வாய்மொழி மாண்பு"**

என்று மாங்குடிமருதனாரால் புகழப்பட்ட திருக்குறள் காட்டும் பண்பாட்டினை எடுத்துரைப்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### பண்பாட்டின் இலக்கணம்

நற்பண்புகளின் சங்கமமே பண்பாடு ஆகும். எனவே பண்புடைமை ஒவ்வொரு மனிதர்கட்கும் இன்றியமையாதது ஆகும். நம்மிடம் உதவி கேட்டு வரும் அனைவரிடமும் எளிமை கலந்த முகமலர்ச்சியுடன் அணுகுவதன் மூலம் பண்புடைமை என்னும் உயர்ந்த நெறியை அடையலாம் என்பதை வள்ளுவர்,

**"எண்பதத்தால் எய்தல் எளிதுஎன்ப யார்மாட்டும்**
**பண்புஉடைமை என்னும் வழக்கு"** **(திருக்-991)**

என்றுரைப்பர். மேலும் அன்புடைமையும் நல்ல பண்பு அமைந்த குடியில் பிறப்பதும் பண்பாட்டிற்குக் களம் அமைக்கும் பண்புகளாகும் என்பதை,

**"அன்புஉடைமை ஆன்ற குடிபிறத்தல் இவ்விரண்டும்**
**பண்புஉடைமை என்னும் வழக்கு"** **(திருக்-992)**

என்ற குறளின் வழி அறிய இயலும்.

**பயனுள்ள வாழ்வே பண்பாட்டிற்கு அடிப்படை**

ஒரு மனிதனின் வாழ்வானது தனக்கும் பிறருக்கும் பயனுள்ள வகையில் அமையும்பொழுது தான் முழுமை பெறுகின்றது. அத்தகைய வாழும் கலையே பண்பாடாக மலர்கின்றது. பிறரால் மதிக்கப்படும் ஒழுக்கத்துடன் நல்லறமும் பொருத்திப் பயனுள்ள வாழ்க்கை வாழ்பவரது பண்பை உலகத்தவர் அனைவரும் பாராட்டும் நிலையை,

**"நயனொடு நன்றி புரிந்த பயன்உடையார்**
**பண்புபா ராட்டும் உலகு" (திருக் - 994)**

என்னும் குறளில் வெளிப்படுத்துவார்.

**பகைவரையும் நேசிக்கும் பண்பாடு**

அன்பிற்குரியவரை நேசிப்பது இனிமையானது. ஆனால் பகைவரையும் நேசிப்பதே உன்னதமானது, பகை என்பது இருபுறமும் தாக்கும் கூர்மையான ஆயுதம் போன்றதாகும். ஆகையால் பகையென்ற ஒன்று இல்லாத போது மன அமைதியின் காரணமாகப் பேரின்பமானது பிறக்கும் என்பதை,

**"நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்**
**பண்புஉள பாடுஅறிவார் மாட்டு" (திருக் - 995)**

என்ற குறள் வழிப் புலப்படுத்துவார்.

**உலகம் நிலைபெற பண்பாடே அடிப்படை**

பண்பாடு என்னும் அச்சாணியில் தான் இந்த உலகம் இன்றும் சுழன்று கொண்டு இருக்கின்றது. பண்புடையவர்கள் வழியில் செல்வதால் தான் உலகம் நிலைபெற்று நிற்கிறது. இல்லையேல் இவ்வுலகம் எப்போதோ மண்ணில் புகுந்து மாய்ந்து போயிருக்கும் என்று பண்பாட்டின் சிறப்பினை,

**"பண்புஉடையார்ப் பட்டுஉண்டு உலகம் அதுஇன்றேல்**
**மண்புக்கு மாய்வது மன்" (திருக் - 996)**

என்றுரைப்பர் வள்ளுவர்.

**மனிதப் பண்பே பண்பாட்டிற்கு அடிப்படை**

மனிதப் பண்பு தான் அனைத்து நற்பண்புகளுக்கும் அடிப்படையாகும். உலகம் புகழும் அறிவுடையவராக இருந்த போதும் மனிதப் பண்பு இல்லாதவர்களால் எந்தவொரு பயனும் விளையாது. சீரிய மனிதப் பண்பில்லாதவர்கள் எந்தவொரு அன்பான இதயத்திற்கும்

சொந்தக்காரராக முடியாது. எனவே தான் வள்ளுவர் மக்கட் பண்பு இல்லாதவரைக் கூர்மையான அறிவு உடையவராக இருந்தபோதும் உணர்வில்லாத மரத்திற்கு ஒப்பாக உரைப்பர். (திருக் - 997)

**பழகும் கலையும் பண்பாடும்**

மனிதர்களில் பலருக்கு பழகும் கலை என்பது எளிதில் கைவரப் பெறாத ஒன்றாக உள்ளது. பிறருடன் பழகும் கலை நம்மைப் பக்குவப்படுத்துவதோடு பரவசப்படுத்தவும் செய்வதாகும். பிறருடன் இனிமையாகப் பழகும்போது விருந்தோம்பலும், உபசரிப்பும் இயல்பாகவே அமைந்துவிடும். அதனால் தான் வள்ளுவர் பண்புடன் பிறரோடு பழகி உறவாடி மகிழ இயலாதவர்க்கு இம்மாபெரும் உலகம் பகற்பொழுதில் கூட இன்பமாகிய ஒளியை இழந்து இருண்டு கிடக்கும் என்று வருணிக்கின்றார். இதனை,

**"நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்**
**பகலும்பாற் பட்டன்று இருள்" (திருக் - 999)**

என்னும் குறள் புலப்படுத்தும்.

**முடிவுரை**

பண்பாடு என்பது எண்ணற்ற நற்பண்புகளின் தொகுப்பாக அமைகின்றது. தமிழ் கூறு நல்லுலகம் இன்றும் வளமையோடும் செழுமையோடும் நிலைபெற்று இருக்க இப்பண்பாடே ஆதாரமாக அமைகின்றது. தனிமனிதன் தனக்கும் பிறருக்கும் பயன் தரக்கூடிய வகையில் வாழ்தல் பண்பாட்டிற்கு அடிப்படை என்பதையும், உலகம் நிலைபெற்றுத் திகழ்வதற்கு அடிநாதமாகப் பண்பாடு அமைவதையும் திருக்குறளில் சிறப்புற எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. பிறருடன் இனிமையாகப் பழகும் கலையையும் பண்பாட்டின் ஒரு கூறாகத் திருக்குறள் எடுத்துரைக்கின்றது. இவ்வாறு பண்பாடு என்னும் அழியாச் செல்வத்தைப் பாதுகாக்கும் பெட்டகமாகத் திருக்குறள் திகழ்வது குறிப்பிடத்தக்கது,

# பொருளடக்கம்

## CONTENTS

# பாவலர்மணியின் படைப்புகளில் சமூக சிந்தனைகள்

***பா.ஸ்ரீவித்யாபாரதி,** *உதவிப் பேராசிரியர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி.*

***பேரா.சே.செந்தமிழ்ப்பாவை,** *இயக்குநர், தமிழ்ப்பண்பாட்டு மையம், அழகப்பா பல்கலைக் கழகம், காரைக்குடி.*

**முன்னுரை**

படைப்பாளி என்பவன் ஒரு சமூகத்தின் ஆணிவேர் ஆவான். ஒரு சமூகத்தின் இழிந்த நிலைகளை எடுத்துக் கூறுவதோடு, ஒரு சிறப்பான சமூகம் எததகைய நல்ல செயல்களை உள்ளடக்கியதாக இருக்க வேண்டும் என்பதையும் இலக்கியத்தின் வாயிலாகப் பகரும் அரும்பணி அவனுடையதாகும். ஒரு சிறந்த இலக்கியத்தைப் படித்த ஒரு வாசகன் அவ்விலக்கியம் உணரத்தும் நற்போதனைகளில் திளைக்கும் பொழுது அவன் தீமைகளை விட்டு வெகுதூரம் விலகி நிற்கின்றான். தரமான இலக்கியத்தைக் கற்ற ஒரு வாசகன் எண்ணற்ற நற்செயல்களை சமூகத்திற்கு ஆற்றாவிட்டாலும் ஒரு சிறு தீமையைக் கூட செய்யாமல் இருப்பானாயின் அது சமுதாயம் நல்ல முறையில் உய்வதற்குத் துணை செய்யும் அந்த வகையில் வாசகர்களின் உள்ளத்தில் நல்ல மனவெழுச்சிகளைத் தூண்டுகின்ற வகையில் பாவலர்மணி ஆ. பழநி அவர்கள் படைத்த சமூக சிந்தனைகளை இங்கு காணலாம்.

**பணத்தின் ஆதிக்கம்**

சமூகம் ஒரு மனிதனை பணத்தை வைத்தே மதிப்பீடு செய்கின்றது. அவனது உயர்ந்த பண்புகள் அம்மதிப்பீட்டில் இடம் பெறுவதில்லை. காரல் மார்க்சு என்னும் மாமனிதரின் அருமையை அவரது தாயே உணரவில்லை என்னும் அவலநிலையைப் பாவலர்மணி அவர்கள் காரல் மார்க்சு காப்பியத்தில் அழகாகப் பதிவு செய்துள்ளார். தாய், மகனின் உறவைக் கூட நிர்ணயிக்கும் சக்தி வாய்ந்த ஆயுதமாகப் பணம் செயல்படும் சமுதாய அமைப்பினை,

**"பணத்தினைப் பற்றி மட்டும்**
**எழுதினால் பயனொன் றில்லை,**
**உணத்தின உடுத்த எல்லாம்**
**உதவிடும் பணத்தை ஈட்டான்**
**பிணத்தினை ஒப்பான் என்னும்**
**கொள்கையில் பிறங்கும் தாய்மேல்**
**மனத்தினை வைக்கக் காரல்**
**மார்க்சுக்குத் தயக்கம் போலும்."**

(காரல் மார்க்சு பா : 35)

என்னும் பாடலின் மூலம் அறியலாம்

**வறுமை என்னும் நோய்**

வறுமை என்பது மனிதனை நிலைகுலையச் செய்வதோடு அவனது மாண்பினையும் நிலைகுலையச் செய்வதாகும். ஒரு சமுதாயத்தை இழிந்ததாக மாற்றும் அத்தனை சக்திகளும் வறுமைக்கு உண்டு. ஒரு சமூகத்தின் அனைத்து வளர்ச்சிகளையும் தடை செய்யும் விடச் செடி வறுமையாகும். நுரையீரல் தொற்று நோய் காரல் மார்க்சைத் துளைத்து வந்த நாளில் அதற்குரிய சிகிச்சையினை எடுக்க முடியாத அளவிற்கு வறுமையால் அவர் வாடினார் இத்தகைய வறுமையின் கோரமுகத்தைப் பாவலர்மணி அவர்கள்,

**"மருந்துக்குக் காசில்லை, மருந்துவர்க்குத்**
**தருதற்கும் மடியில் இல்லை**
**தெரிந்தமருத் துவர்பாலே செல்லவண்டி**
**தேவையதைச் செலுத்து வோற்குத்**
**தரும்பணமும் கையிலில்லை, தன்கையில்**
**உளதெல்லாம் வறுமை ஒன்றே,**
**மருந்துக்கு வறுமையினை மாற்றிக்கொள்**
**மருத்துவர்கள் மண்மேல் இல்லை."**

(காரல் மார்க்சு, பா : 274)

இங்ஙனம் பதிவு செய்கின்றார்.

**அரசியல்வாதிகளின் இரட்டை முகம்**

அரசியல்வாதிகள் நிஜ உலகின் வேடதாரிகளாகச் செயல்படுகின்றனர். தங்களது எண்ணம் ஈடேறுவதற்காகப் பன்முகம் காட்டும் வித்தகர்களாகச் செயல்படுகின்றனர். சுய நலம், சுய இலாபத்திற்காக எந்தவொரு இழிச்செயலையும் செய்வதற்கு அவர்கள் தயங்குவதில்லை. அத்தகைய கீழான அரசியல்வாதிகளின் இரட்டை முகத்தைப் பாவலர்மணி அவர்கள்,

**"கூட்டமிகக் காட்டுவதற்கும் கொடிபிடிப்ப தற்கும்**
**பாட்டாளிக் கூட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டார்,**
**வாட்டமெதும் தீரவிலை, என்றாலும் நாளை**
**நாட்டம்நிறை வேறுமெனக் கோட்டைகட்ட லானார்."**

(காரல் மார்க்சு, பா : 346)

இங்ஙனம் பதிவு செய்கின்றார்.

**உழைப்பாளிகளின் அவல நிலை**

உழைப்பாளிகள் ஒரு நாட்டின் முதுகெலும்பென வருணிக்கப்பட்டாலும், அவ்வெலும்புகள் உடைக்கப்படுவதிலேயே முதலாளிகள் சுகம் காணுகின்றனர். உழைக்கும் வர்க்கம் அடிமை வர்க்கமாக முதலாளிகளால் நிர்வகிக்கப்பட்டு வருகின்றது. இது ஆரோக்கியமான சமுதாயத்திற்கு அழகு அல்ல. அருமைமிகு உழைப்பாளிகளின் அவல நிலையைப் பாவலர் மணி அவர்கள்,

**"உழைப்பவர்கள் படிப்படியா இளைப்பவராய் மாறப்**
**பிழைப்பவர்கள் செல்வர்களாய் நிலைப்படவே குற்றம்**
**இழைப்பவரார் என்பதையும் முறைப்படவே காணாப்**
**புழைப்படுமோர் அறிவினராய் உழைப்பவர்கள் தேய்ந்தார்."**

(காரல் மார்க்சு, பா : 343)

இங்ஙனம் பதிவு செய்துள்ளார்.

**மகான்களைப் பலிகொண்ட ஆட்சியும் மதமும்**

மதத்தின் பெயரால் ஆட்சியாளர்கள் அரும்மனிதர்களையும், மனிதத்தையும் கொன்ற வரலாறு உலகில் உண்டு அரும்பெரும் கண்டுபிடிப்பாளரை, அவர் பகன்ற கருத்து மதவாதத்திற்கு எதிரானது என்பதால் கொன்ற நிகழ்வு அதற்குச் சான்று பகர்கின்றது - பூமி உருண்டையானது என்கின்ற நிலைத்த உண்மையினை அவர் மொழிந்தார். அது புனித நூலின் புனிதத்தை அவமதிப்பதாகக் குற்றம் சுமத்தப்பட்டு அவருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. ஆட்சியும், மதமும் கைகோர்த்து அரும் மனிதரைப் பலிகொண்ட சமூக அவலத்தைப் பாவலர்மணி அவர்கள்,

**"ஆட்சியும் மதமும் நீள்கரம் கோத்தே**
**ஆடிய ஆட்டமிம் மண்ணில்**
**மீட்சியே இல்லாத் துயரினுள் மனிதம்**
**வீழ்த்திய கதைகளோ கோடி,**
**காட்சியில் சிலுவை கருணைஎன் றெல்லாம்**
**கதைத்திடு வாரவர் செய்யும்**
**சூழ்ச்சியுள் அறிஞர் கலிலியோ போன்றோர்**
**தொலைந்ததைப் பார்த்துளேம் அன்றே."**

(காரல் மார்க்சு, பா : 378)

இங்ஙனம் சாடுகின்றார்.

**போரற்ற பூமியே புண்ணிய பூமி**

போர் என்பது மனித உயிர்களோடு மனிதத்தையும் பலி கொள்வதாகும். போரினை வெறுக்கும் நாடே எண்ணற்ற வளர்ச்சியினைப் பெறக் கூடிய நாடாக அமையும். போர் வேண்டாம் என்று போர்க்கொடி தூக்கும் நாளே புனித நாள் ஆகும். போர் மூளும் நாடு மனித உயிர்களோடு மற்ற வளங்களையும் இழந்து சுடுகாடாக மாறும் என்பது வரலாறு கண்ட உண்மை ஆகும். பாவலர்மணியின் அன்னி மகள் காப்பியத்தில் எவ்வி, அகுதையை அரிமண வாயிலில் வென்று வெற்றிக் களிப்படைந்தாலும் எண்ணற்ற வீரர்களின் இழப்பை எண்ணி வருந்துகின்றான் மூதாட்டி ஒருவரின் இரண்டு மகன்களும் களத்தில் மாண்ட கதை எவ்வியைக் களக்கமடையக் செய்கின்றது. அப்பொழுது எவ்வியின் பேருரையாகப் பாவலர்மணி அவர்கள்,

**"போரும் பூசலும் பொறையிலாச் செருக்கும்**
**தீருநாள் உண்டுகொல் தெவ்வெனும் ஒரு சொல்**
**உலகைவிட் டொழியும் ஒருநாள் வருங்கொலோ**
**அலகையா மாந்தன் அலைதலும் தீருமோ?**
**கொல்லுலைக் களமெலாம் கொல்படை செயாது**
**நெல்லும் கூலமும் விளைநிலம் திருந்தக்**
**கருவிசெய் காலம் ஒன்று கனியுமேல்**
**பெரியீர்! அந்நாள் காணும் பேற்றினைப்**
**பெற்றவர் அலரோ பேறெலாம் பெற்றவர்."**

(அன்னி மகள், அங் 1,கள-2, 188-196)

தனது கனவான போரற்ற பூமியை இங்ஙனம் கற்பனை செய்கின்றார்.

**நாட்டுப்பற்றே பிறர் நாட்டமுறும் பற்று**

நாட்டுப்பற்று என்பது ஒரு மனிதனின் உள்ளத்தில் இயல்பாகக் கிளர்ந்தெழுவதாகும். நாட்டுப்பற்று ஒருவனது உள்ளத்தில் குடியேறும் பொழுது எண்ணற்ற அறங்கள் அவனுக்கு இயல்பாகவே அமையும். இந்த நாட்டுப்பற்றினைப் பாவலர் மணி அவர்கள் அழகாகப் பதிவு செய்துள்ளார். அன்னி மகள் காப்பியத்தில் கோசருக்கு எதிரான போரில் வேள் எவ்வி,

**"நிலையிலா உடம்பால் நிலைத்த புகழ்கொள்ளும்**
**கலையினைக் காட்டுவம், கடுவளிக் கசையாப்**
**பொருப்பென நிற்போம்; பகைமுள் முரிக்கும்**
**செருப்பென மதிப்போம்; வென்றி சேருமேல்**
**தறுகணர் எய்தும் தகவெலாம் பெறுகுவம்,**
**இறுதிநாள் வருமெனின் ஈகவாழ் வெய்துவம்!"**

(அன்னி மகள், அங்-2, கள-6, 66-71)

இங்ஙனம் சூளுரை செய்கின்றான். இங்ஙனம் நாட்டிற்காகப் போராடும் வீரர்களுக்குத் தான் நிலைத்த புகழ் கிட்டும் என்று பாவலர்மணி அவர்கள் கூறி நாட்டுப்பற்றின் மேன்மையை உணர்த்துகின்றார்.

**தமிழினச் சிந்தனை**

தமிழ் மீதும், தமிழர் மீதும் ஆழ்ந்த பற்றுக் கொண்டவர் பாவலர்மணி அவர்கள் என்பது அவரது காப்பியங்கள் வழி அறிய முடிகின்றது. அன்னி மகள் காப்பியத்தில் அன்னி மிஞிலியின் காளையான வெண்காற் காரி கோசர்களுடைய புலத்தில் சென்று அவர்களின் பயிரை மேய்கின்றது. அதனைப் பற்றிக் கட்ட வந்த இருவரை அவ்வெண்காற்காரி குற்றிக் கொன்றுவிடுகின்றது. இதனால் சினமுற்ற கோசர்கள் அன்னியின் ஆக்காப்பாளன் தத்தனைக் கொன்று ஆநிரையைக் கவர்ந்து செல்கின்றனர். அச்சூழ்நிலையால் வெகுண்ட அன்னியின் நண்பர் கீரனின் வாய்மொழியாகப் பாவலர்மணி அவர்கள்,

**"தமிழரை மதியாத் தருக்கர் தலைகளை**
**உமியெனக் களத்திடை ஊதித் தூற்றுவோம்,**
**ஊரெலாம் கூட்டி ஒன்று படுத்துவோம்,**
**காரெலாம் பொழியும் கடுமழை இடியெனத்**
**தாக்குவம் கோசரைத் தங்கிய பழியெலாம்**
**போக்குவெம், இனியென் புகல்வது?"**

(அன்னி மகள், அங்-3, கள-2,119-124)

இங்ஙனம் தமிழினச் சிந்தனையை வெளிப்படுத்துகின்றார்.

**பசியெனும் கொடிய பாவி**

சமூகத்தின் நலங்களையெல்லாம் பறித்துக் கொள்கின்ற கொடூர அரக்கன் பசி என்றால் அது மிகையாகாது. மானிட மதிப்புகளை எல்லாம் அது தனது கொடூரப் பசிக்கு இரையாக்கிக் கொள்ளும். அதன் கோர முகத்தைப் பாவலர்மணி அவர்கள் சாலி மைந்தன் காப்பியத்தில் அழகாகப் பதிவு செய்கின்றார். வேதியர்களின் வஞ்சனையால் இளம்பூதியின் வீட்டிலிருந்து அனுப்பட்ட ஆபுத்திரன் பசியின் கொடுமையை நன்கு உணர்கின்றான். அவன்

**"சோறென்ப துண்பொருளா மெனச்சொல்வார் சில்லோர்**
**வேறொன்று மறியகிலார், வெய்யகொலை களவு**
**நாறென்றுந் தோன்றவிடா தழித்துநறுங் கலையின்**

**வீறெங்குஞ் செழித்திடவே விளைகருவி ய.்.தால்**
**ஊரினுளே அமைதியெனு மொருமலர்தான் பூத்து**
**வேரிதர வேண்டுமென விழைபவர்கள் யாரும்**
**சேருநெறி பசிப்பிணியைத் தீர்க்குநெறி யல்லால்**
**ஓருநெறி வேறுளதென் றுரைக்கநெறி உண்டோ?"**

(சாலி மைந்தன், காண்-3, பட-1, பா:13-14)

கூறுகின்றான் இதன் மூலம் பசித்துன்பத்தினை ஒழித்தால் சமூகமானது செழுமை பெறும் என்றும் கருத்தினைப் பாவலர்மணி அவர்கள் பதிவு செய்கின்றார்.

**முடிவுரை**

கவிஞன் என்பவன் ஒட்டுமொத்த சமூகத்தின் பிரதிநிதி ஆவான். அத்தகைய கவிஞனுக்கு சமூகம் குறித்த சரியான பார்வையும், சமூகச்சீர்கேடுகள் குறித்த சரியான கண்ணோட்டமும் அமைய வேண்டியது அவசியமான ஒன்றாகும். அந்த வகையில் பாவலர் மணி அவர்கள் சிறந்த சமூகவாதியாகச் செயல்படுகின்றார். பணத்தின் ஆதிக்கம், வறுமையின் கோரமுகம், அரசியல்வாதிகளின் இரட்டை முகம், உழைப்பாளிகளின் அவல நிலை, ஆட்சியும் மதமும் மகான்களைப் பலிகொண்ட கொடூரம், போரற்ற புண்ணிய பூமி, நாட்டுப்பற்று, தமிழினச் சிந்தனை, பசியினால் சமூகம் சந்திக்கும் அவலம் முதலான பல சமூகசிந்தனைகளைப் பாவலர் மணி அவர்கள் தமது காப்பியங்களில் பதிவு செய்து தமது படைப்புகளுக்கு மெருகு சேர்க்கின்றார்.

# பாவலர்மணி ஆ.பழநியின் காப்பியப் புனைதிறன்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph,D.,) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**பா.ஸ்ரீவித்யாபாரதி**

(பதிவு எண்: 0353)

நெறியாளர்

பேராசிரியர். **சே.செந்தமிழ்ப்பாவை**






தமிழ்ப்பண்பாட்டு மையம்

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+ (CGPA: 3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது.)

காரைக்குடி – 630 003.
தமிழ்நாடு – இந்தியா


**செப்டம்பர் - 2019**

# முடிவுரை

பாவலர்மணி ஆ. பழநி அவர்கள் படைத்த காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள், சாலி மைந்தன் ஆகிய நான்கு காப்பியங்களும் தமிழ்த்தாய் வாழ்த்து, வருபொருள் உரைத்தல் மற்றும் பாயிரத்துடன் தொடங்குகின்றன. அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று நெறிகளை எடுத்துரைக்கின்றன. வீடுபேறு குறித்து இயம்பவில்லை. பாவலர்மணி அவர்களின் திராவிட இயக்கச் சார்பு இதற்குக் காரணமாகும்.

காரல் மார்க்சு, அருளாழி, திதியன், ஆபுத்திரன் போன்ற தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தன்னிகரற்ற தலைவர்கள் கதை நாயகர்களாக அமைந்துள்ளதால் இவர்தம் காப்பியங்கள் காப்பியம் என்கின்ற முழுமையைப் பெற்று விளங்குகின்றன.

மலை, கடல், ஆறு முதலான வருணனைகள் அனிச்ச அடி காப்பியத்திலும் நாடு, நகர் வருணனைகள் காரல் மார்க்சு, அன்னி மகள் காப்பியங்களிலும் நாடு, நகர், ஆறு குறித்த வருணனைகள் சாலி மைந்தன் காப்பியத்திலும் இடம்பெற்றுள்ளன. மணம் புரிதல் என்னும் நிகழ்வு இருமனம் ஒன்றிய திருமணம் என்ற விதத்தில் காரல் மார்க்சு, அன்னி மகள் காப்பியங்களிலும் இருமனம் ஒன்றாத திருமணம் சாலி மைந்தன் காப்பியத்திலும் இடம்பெற்றுள்ளன.

புனல் விளையாட்டு அனிச்ச அடி காப்பியத்தில் அமைந்து அணி செய்கிறது. சிறுவரைப் பெறுதல் என்னும் நிகழ்வு காரல் மார்க்சு, சாலி மைந்தன் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது. ஊடலில் முனிதல் என்பது அனிச்ச அடி காப்பியத்தில் காதல் வெளிப்பாடாக அமைந்துள்ளது. கூடலில் களித்தல் என்பது காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது. இது புறக்கூடலாக இல்லாமல் மனங்களின் சங்கமமான அகக்கூடலாக இருப்பது சிறப்பு வாய்ந்ததாகும்.

நீதி வெற்றி பெறுவதற்கு அடித்தளமாக அமையும் அமைச்சருடன் ஆய்தலும் தூதும் அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் அமைந்துள்ளன. பயணம் நான்கு காப்பியங்களிலும் இடம்பெற்றுள்ளன. ஒற்றறிதல், ஆலோசனைக் கூட்டம், அரசு ஆணை, நோய், வாழ்வியல் அவலம், தொண்டு, பாசம் ஆகியவற்றின் காரணமாக பயணமானது நிகழ்கின்றது.

போர் புரிதலும் வெற்றி பெறுதலும் காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் ஆகிய காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன. போர் இவருடைய படைப்புகளில் ஆக்கப்பூர்வமாக அமைந்துள்ளது. வெற்றி காரல் மார்க்சு காப்பியத்தில் சுரண்டலுக்கு எதிரான வெற்றியாகவும் அனிச்ச அடி காப்பியத்தில் சூழ்ச்சிக்கு எதிரான வெற்றியாகவும் அன்னி மகள் காப்பியத்தில் அநீதிக்கு எதிரான வெற்றியாகவும் அமைந்துள்ளது.

எண்வகைச் சுவைகளில் அறுசுவைகள் இவரது காப்பியங்களை அணி செய்கின்றன. அவலச் சுவையின் ஆதிக்கம் இவரது காப்பியங்களில் மேலோங்கிக் காணப்படுகின்றது. காரல் மார்க்சு காப்பியத்தில் குழந்தைகளைப் பறிகொடுக்கும் பொழுதும் அனிச்ச அடி காப்பியத்தில் சுரும்பார் குழலி கொலையுண்ட போதும் அன்னி மகள் காப்பியத்தில் வேள் எவ்வியின் மரணமும் அன்னியின் கண் களையப்பட்ட நிகழ்வும் அவலத்தின் உச்சத்தைத் தொடுகின்றன.

இளிவரல் சுவை அன்னி மகள் காப்பியத்தில் அன்னி கோசர்களால் அவமானப்படுத்தப்படும் பொழுது வெளிப்படுகின்றது. அன்னி மகள் காப்பியத்தின் போர்க்கள நிகழ்வில் மருட்கைச் சுவை இடம்பெற்றுள்ளது. அச்சச் சுவையானது அனிச்ச அடி காப்பியத்தில் நன்னனது கனவில் சுரும்பார் குழலி தோன்றும் பொழுது வெளிப்படுகின்றது. பெருமிதச் சுவையானது அன்னி மகள் காப்பியத்தில் வேள் எவ்வியைப் புகழும்போது வெளிப்படுகின்றது. வெகுளிச் சுவை அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் இடம்பெறுகின்றது. நகை, உவகைச் சுவைகள் இவரது காப்பியங்களில் இடம்பெறவில்லை.

கதை மாந்தர்கள் காப்பியத்தின் உயிர்நாடி ஆவர். கதை மாந்தர்களின் தோற்றம், வளர்ச்சி, போராட்டம், வெற்றி அல்லது வீழ்ச்சி இவையே காப்பியமாகிறது. அந்த வகையில் பாவலர்மணியின் கதை மாந்தர்கள் நேர்த்தியாகவும், உயர்வாகவும் படைக்கப்பட்டுள்ளனர்.

‘காரல் மார்க்சு’ காப்பியத்தில் காரல் மார்க்சு, சென்னி ஆகிய தலைமைக் கதை மாந்தர்களும் அர்னால்டு ரூசு என்ற எதிர்த் தலைமைக் கதை மாந்தரும் என்ரிகு, என்ரிட்டே, பிரடெரிக் எங்கல்சு, வெட்பாலன், இலாசலே, எலன்டெமூது, எட்கார், பிரான்சிக்க, தார்வின் போன்ற துணைமைக் கதை மாந்தர்களும் எனப் பன்னிருவர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

‘அனிச்ச அடி’ காப்பியத்தில் அருளாழி, அனிச்ச அடி போன்ற தலைமைக் கதை மாந்தர்களும் மிஞிலி, நன்னன், வேங்கைமுகன், கோட்புலி போன்ற எதிர்த் தலைமைக் கதை மாந்தர்களும் சுரும்பார் குழலி, ஆய் எயினன், அணிவளை, மோசிகீரனார், கணியன் கீரன், நார்முடிச் சேரல், செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், பரணர், ஒற்றர் தலைவன் போன்ற துணைமைக் கதைமாந்தர்களும் எனப் பதினாறு பேர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

‘அன்னி மகள்’ காப்பியத்தில் திதியன், அன்னி மிஞிலி ஆகிய தலைமைக் கதை மாந்தர்களும் அகுதை, சினவாழி, கதக்கண்ணன் ஆகிய எதிர்த் தலைமைக் கதை மாந்தர்களும் வேள் எவ்வி, அன்னி, தத்தன், கீரன், மாதரி, ஏலங்குழலி, வெள்ளெருக்கிலையார், குடவாயிற் கீரத்தனார், இளஞ்சேட் சென்னி போன்ற துணைமைக் கதை மாந்தர்களும் எனப் பதினான்கு பேர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

‘சாலி மைந்தன்’ காப்பியத்தில் ஆபுத்திரன் என்ற தலைமைக் கதை மாந்தரும் அபஞ்சிகன், அதமயன், உவசரன், இந்திரன், மூலகன் ஆகிய எதிர்த் தலைமைக் கதை மாந்தரும் சாலி, இளஞ்சாத்தன், இளம்பூதி, அஞ்சனை, துறவி, தீவதிலகை, செட்டியார் எண்மர் போன்ற துணைமைக் கதை மாந்தர்களும் என இருபது பேர் கதை மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

பாவலர்மணி புறவருணனைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கவில்லை. காரல் மார்க்சு காப்பியத்தில் காரல் மார்க்சு, சென்னி ஆகிய இரண்டு கதை மாந்தர்களுக்கும் அனிச்ச அடி காப்பியத்தில் அனிச்ச அடி, சுரும்பார் குழலி ஆகிய இரண்டு கதை மாந்தர்களுக்கும் அன்னி மகள் காப்பியத்தில் திதியன், அன்னி மிஞிலி ஆகிய இரண்டு கதை மாந்தர்களுக்கும் சாலி மைந்தன் காப்பியத்தில் ஆபுத்திரன், சாலி, இளஞ்சாத்தன், துறவி ஆகிய நான்கு கதை மாந்தர்களுக்கும் எனப் பத்து மாந்தர்களுக்கு மட்டும் புறவருணனை இடம்பெற்றுள்ளது.

தலைமைக் கதை மாந்தர்களின் மீது ஈர்ப்பும் எதிர்த் தலைமைக் கதை மாந்தர்களின் மீது எதிர்ப்பும் தோன்றக் கூடிய வகையில் மாந்தர்கள் படைக்கப்பட்டுள்ளனர்.

அன்பு, வீரம், தியாகம், காதல், நட்பு, வாழ்வியற் சிந்தனை, வாழும் கலை, சிறியன சிந்தியாத தன்மை முதலான எண்ணற்ற நற்பண்புகளுடன் தலைமைக்

கதை மாந்தர்கள் படைக்கப்பட்டுள்ளனர். எதிர்த்தலைமை மாந்தர்கள் சமூகத்தின் கொடூரத்தையும் வக்கிரத்தையும் வெளிப்படுத்துபவர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

துணைமைக் கதை மாந்தர்கள் பல இடங்களில் தலைமைக் கதை மாந்தர்களுக்கு இணையாகப் படைக்கப்பட்டுள்ளனர். காரல் மார்க்சு காப்பியத்தில் பிரடெரிக் எங்கல்சு, அனிச்ச அடி காப்பியத்தில் கணியன் கீரன், அன்னி மகள் காப்பியத்தில் வேள் எவ்வி, சாலி மைந்தன் காப்பியத்தில் சாலி போன்றோர் தலைமைக் கதை மாந்தர்களுக்கு இணையாகப் படைக்கப்பட்டுள்ளனர். வாசகர்களுடன் உரையாடும் ஊடகமாகவும் துணைமைக் கதை மாந்தர்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பெண் கதை மாந்தர்கள் புரட்சிகரமாகப் படைக்கப்பட்டுள்ளனர். அனிச்ச அடி காப்பியத்தில் அனிச்ச அடி அருளாழியைக் காப்பாற்ற வரும்பொழுதும் அன்னி மகள் காப்பியத்தில் அன்னி மிஞிலி மக்கள் அனைவரையும் அநீதிக்கு எதிராக ஒன்று திரட்டும் பொழுதும் சாலி மைந்தன் காப்பியத்தில் சாலி தொண்டிற்குத் துணை நிற்கும் பொழுதும் இது வெளிப்படுத்துகின்றது.

கதை மாந்தர்கள் அனைவரும் முன்னுக்குப் பின் முரணின்றிப் படைக்கப்பட்டுள்ளனர். கதை மாந்தர்களின் பேச்சும் செயலும் அவர்களின் இயல்புக்கு ஏற்றதாகவும் நம்பத் தகுந்ததாகவும் அமைந்துள்ளன. கதை மாந்தர்கள் அனைவரும் கதை வளர்ச்சிக்கு உதவுகின்றனர்.

கவிஞன் வாசகனின் மனதைத் தூண்டில் போட்டு இழுப்பதற்குப் பயன்படும் கலையே உத்தி ஆகும். இலக்கியம் தன்னைச் சுவைக்கும் வாசகனுக்கு இன்பத்தை ஊட்டவும் வாசகர்களுக்கு ஏற்படும் சலிப்பினையும் களைப்பினையும் போக்கவும் உத்தி பயன்படுகிறது.

பாவலர்மணியின் காப்பியங்களில் அறுபது இடங்களில் உவமைகள் அமைந்து அழகு சேர்க்கின்றன. அனிச்ச அடி, சாலி மைந்தன் காப்பியங்களில் உருவகம் இடம்பெறவில்லை.

உள்ளுறை உவமம் அனிச்ச அடி காப்பியத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. பிற காப்பியங்களில் இடம்பெறவில்லை. சாலி, இளஞ்சாத்தனின் கூடலானது குறிப்பு மொழி வாயிலாக நலமாகப் புனையப்பட்டுள்ளது.

அசை, சீர், தளை, அடி போன்றவை பாவலர்மணி அவர்களின் காப்பியங்களில் நிறைந்து ஒலி நயத்தைக் கூட்டுகின்றன. அடி மோனைத் தொடை,

அடி எதுகைத் தொடை, அடி இயைபுத் தொடை, அடி முரண் தொடை, அடி அளபெடைத் தொடை ஆகிய அனைத்துத் தொடை நயங்களும் அமைந்து காப்பியங்களுக்கு அழகு சேர்க்கின்றன. அடி எதுகைத் தொடை இவரது காப்பியங்களில் ஆதிக்கம் செலுத்துகின்றது.

கற்பனையாற்றலை மிகுவிக்கும் வண்ணம் முன்னைய நிகழ்ச்சிகளைச் சான்று காட்டுதல் என்னும் உத்தியானது காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் ஆகிய காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது. வாழந்த ஒரு மனிதரைப் பற்றிப் புனையப் பெற்றது காரல் மார்க்சு காப்பியமாதலால் இதில் எந்தவொரு கற்பனைப் புனைவும் இல்லை.

சொற்றொடர் இடமாற்றம் காரல் மார்க்சு காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது. சென்னியின் இழப்பை எண்ணி பிரடெரிக் எங்கல்சு துடிக்கும் தருணத்தில் இவ்வுத்தியானது கையாளப்பட்டுள்ளது.

கனவு என்னும் உத்தியானது அனிச்ச அடி காப்பியத்தில் கையாளப்பட்டுள்ளது. அன்பின் ஆழத்தை உணர்த்தவும் குற்ற உணர்வு வெளிப்பாடாகவும் தீமையின் காரணமாகப் பிறக்கும் இன்பம் எல்லையற்ற துன்பத்தில் கொண்டு சேர்க்கும் என்ற நீதியினைப் போதிக்கவும் இவ்வுத்தியானது எடுத்தாளப்பட்டுள்ளது.

கிளைக் கதைகள் என்னும் உத்தியானது அனிச்ச அடி, சாலி மைந்தன் காப்பியங்களில் பொருத்தமான காரணத்திற்காகச் சரியாகப் புனையப்பட்டுள்ளன. பேகன்-கண்ணகியின் வாழ்க்கை நிகழ்வானது அனிச்ச அடி காப்பியத்தில் கிளைக்கதையாக அமைந்துள்ளது. அணிவளைக்கு ஆறுதல் கூறும் விதமாகவும் பெண்களின் அவல வாழ்வைச் சித்திரிக்கும் விதமாகவும் இது புனையப்பட்டுள்ளது. சாலி மைந்தன் காப்பியத்தில் சௌமினி-காஞ்சனன் கிளைக் கதையானது இடம்பெற்றுள்ளது. இது சாலியின் வாழ்வில் தெரியாமல் நேர்ந்த பிழைக்கு ஆறுதல் அளிக்கவும் மன மீட்சிக்காகவும் மனக் காயத்திற்கு மருந்தாகவும் கையாளப்பட்டுள்ளது.

கடிதம் என்னும் உத்தியானது காரல் மார்க்சு, அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது. காரல் மார்க்சு காப்பியத்தில் உண்மைப் பதிவாகவும் உன்னத மனிதர்களின் வாழ்க்கை நிகழ்வாகவும் இடம்பெற்றுள்ளது. அனிச்ச அடி காப்பியத்தில் காப்பிய மாந்தர்களின் குணநலத்திற்காகவும் காப்பிய

வளர்ச்சிக்காகவும் கையாளப்பட்டுள்ளது. சாலி மைந்தன் காப்பியத்தில் பயணத்தை அறிவிக்கவும் இளஞ்சாத்தன், செட்டியார் எண்மரின் முடிவிற்குக் காரணமாகவும் அமைந்துள்ளது.

முன்னோக்கு உத்தியானது அனிச்ச அடி, சாலி மைந்தன் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது. அனிச்ச அடி காப்பியத்தில் குழலிக்கு நேரப் போகும் ஏதமானது ஆற்று நீர் வருணனையின் மூலம் முன்னோக்கு உத்தியாகக் கையாளப்பட்டுள்ளது. சாலி மைந்தன் காப்பியத்தில் சாலியின் அவல வாழ்வும் ஆபுத்திரனின் அருள் வாழ்வும் முன்னோக்கு உத்தியின் மூலம் உரைக்கப்பட்டுள்ளது.

அனிச்ச அடி, சாலி மைந்தன் காப்பியங்களில் பின்னோக்கு உத்தியானது இடம்பெற்றுள்ளது. அனிச்ச அடி காப்பியத்தில் மிஞிலி குறித்த செய்தியும் சாலி மைந்தன் காப்பியத்தில் இளஞ்சாத்தன் சாவகப் பயணம் முடிந்து வந்த போது நிகழ்ந்த நிகழ்வும் பின்னோக்கு உத்தியின் மூலம் இயம்பப்பட்டுள்ளது.

நிமித்தம் என்னும் உத்தியானது உள்ளுணர்வு வெளிப்பாடாக அன்னி மகள் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது. தத்தன் கொலையுண்ட அவலமும் அன்னிக்கு கோசர்கள் மூலம் நிகழப் போகும் தீங்கும் விவரிக்கும் வகையில் நிமித்தம் என்னும் உத்தியானது கையாளப்பட்டுள்ளது.

காரல் மார்க்சு என்னும் காப்பியம் வாழ்ந்த மனிதரின் வாழ்க்கையைப் பேசுவதால் அவர்தம் மார்க்சியச் சிந்தனைகள் முழுமையாக இடம்பெற்றுள்ளன.

பாட்டாளி வர்க்கம் போராட்டத்தின் மூலம் தனியுடைமைச் சமூகத்தினைத் தூக்கி எறிந்து ஆட்சி அதிகாரத்தைப் பெறுவதற்கான காரல் மார்க்சின் வழிமுறைகள் சிறப்புற எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. மாற்றம் ஒன்றே மாறாதது என்ற காரல் மார்க்சின் அடிநாதமான கொள்கை இதில் இடம்பெற்றுள்ளது.

பொருள் முதல்வாதத்தை அடிப்படையாகக் கொண்டு வர்க்க முரண்பாட்டுச் சிக்கல்களுக்கு காரல் மார்க்சு அளிக்கும் தீர்வுகள் இடம்பெற்றுள்ளன. உழைப்பு, கூலி, மூலதனம், பங்கீடு ஆகிய பொருளாதாரக் கூறுகளை அறிவியல் முறையில் ஆய்வு செய்து காரல் மார்க்சு அளித்த தீர்வுகள் சுட்டப்பெற்றுள்ளன.

பொதுவுடைமைச் சிந்தனை, சுரண்டலுக்கு எதிரான புரட்சி, உழைப்பாளிகள் குறித்த சிந்தனை, மதத்தினால் வளர்க்கப்படும் முதலாளித்துவம் ஆகியவை நயமாகப் படைக்கப்பட்டுள்ளன. சோசலிசச் சமூகம் உதயம் பெற உன்னத

வழிமுறைகள், சுரண்டலில் இருந்து உழைப்பாளிகள் விடுபடுவதற்கான தீர்வுகள் போன்றவை நயமாக எடுத்தாளப்பட்டுள்ளன.

குற்றம் இழைப்பவர் யார் என்பதைக் காண முடியாத உள்ளீடற்ற அறிவினராக உழைப்பாளிகள் தேய்வதாக பாவலர்மணி அவர்கள் தமது சிந்தனையாக வெளிப்படுத்தியுள்ளார்.

சமூகவியல் சிந்தனைகளைப் பொறுத்தவரை பணம் என்னும் கொடிய அரக்கன் சமூகத்தில் பெற்றுள்ள வரவேற்பு, வறுமையின் கோர முகம், முதலாளிகளுக்கு சாமரம் வீசும் அரசியல்வாதிகளின் இழிகுணம், உழைப்பாளிகளின் துயர நிலை, மதத்தின் பெயரால் மகான்களைப் பலிகொடுத்த கொடூரம், சமூகப் பொறுப்பிலிருந்து விலகி நிற்கும் உயர்ந்த மனிதர்கள் ஆகிய அனைத்துக் கூறுகளும் காரல் மார்க்சு காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

தமிழரின் அவல நிலை, போரின் கொடூரம், போரற்ற வாழ்வே புனித வாழ்வு என்னும் சமூகச் சிந்தனைகளை அன்னி மகள் காப்பியம் எடுத்தியம்புகின்றது. ஒற்றுமையின் வலிமை, இன ஒற்றுமை, நாட்டுப் பற்று, தமிழினச் சிந்தனை, பெரிய மனிதர்களின் சிறுமைக் குணம், கள்வர்களை விரும்பாத குலக்கொடிகளின் மாண்பு போன்ற சமூகச் சிந்தனைகள் அனிச்ச அடி, அன்னி மகள் காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன.

பசி என்னும் கொடிய நோய் சமூகத்தின் நலத்தை அழிக்கும் தன்மை சாலி மைந்தன் காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது. புராண மகளிர் எவ்வாறு புனையப்பட்டாலும் அவர்களைத் தெய்வமாகக் கருதும் ஆடவர் தமது மனைவியரை வெறுத்து ஒதுக்குதல், மூடநம்பிக்கையின் பெயரால் உயிர்க்கொலை செய்தல் ஆகியவை சமூகக் கேடு என்பது இவர்தம் சமூகச் சிந்தனையாகும்.

மார்க்சியச் சிந்தனையும் சமூகவியல் சிந்தனையும் இவரது காப்பியங்களில் வலிந்து திணிக்கப்படவில்லை. இயல்பாகக் கதையின் போக்கிலேயே அமைந்துள்ளமை சுட்டத்தக்கது.

## மேலாய்வுக் களங்கள்

1. ஆ. பழநி அவர்களின் காப்பியங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக ஆய்வு மேற்கொள்ளலாம்.
2. சாலி மைந்தன் காப்பியத்தில் இடம்பெற்றுள்ள ஆபுத்திரன் கதையை மணிமேகலைக் காப்பியத்தின் ஆபுத்திரன் கதையோடு ஒப்பிட்டு ஆய்வு செய்ய இயலும்.
3. அனிச்ச அடி காப்பியத்தை மயிலை சீனி வேங்கடசாமி எழுதிய துளு நாட்டு வரலாற்றோடு ஒப்பாய்வு மேற்கொள்ளலாம்.